அநாதிநம.

—o—

# தேம்பாவணி

## இரண்டாங்காண்டம்.

—***—

வீரமாமுனிவர்

அருளிச்செய்த

# இக்காப்பியம்

அவரது கையெழுத்துப் பிரதிக்கொப்ப
மூன்றாவது பதிப்பிக்கப்பட்டது.



புதுவை,

மாதாக் கோவில் அச்சுக்கூடம்.

Mission Press, Pondicherry.

—o—

1927.

Im

IMPRIMATUR :

† ELIAS -JOSEPHUS,

*Archiepiscopus*

Pudicherii, 22 Nov. 1927.




PONDICHÉRY,
Imprimerie de la Mission Catholique.



# தேம்பாவணி



## பதின்மூன்றாவது
## பைதிர நீங்குபடலம்.



### I. வேறு.

1. களிமுகத்தினிவையாகிப்பைம்பூமேய்ந்த கனலொப்பச்
சுளிமுகத்தினுற்றதுயருள்ளம்வாட்டித் துகைத்தன்றோர்
வளிமுகத்தின்விளக்கன்னமயங்கியேங்க வந்தவையான்
கிளிமுகத்தின்கிளவியொடுவிரும்பியிங்கண் கிளக்குகிற்பேன்.

உரை.—முற்சொன்னதெல்லா மகிழ்ச்சியோடு நடந்தபின்பு பைம்பூந்தாதைச் செந்தீயுண்டாற்போல வெகுண்டுவந்த துயர் மரியுஞ் சூசையுமென்றிருவருள்ளத்தை வாட்டிவருந்தும்படி யவர் காற்றின்முன் வைத்தவிளக்குப்போல மயங்கியேங்கும்படி யங்கேயான செய்தியை நானிங்கேமடக்கிளிச் சொல்லாகவிரும்பிச் சொல்லுவேனென்க.

2. பூந்தாமக்கொம்பனையாள்பூத்தபைம்பூ முகைமுகத்திற்
றேந்தாமத்திருமகனேர்ந்தின்னுமெண்ணாள் செலவன்னார்
தாந்தாமக்கடிநகர்கண்டங்குளுள்ளி நாடொறும்பொற்
காந்தாமக்கோயில்விழாவணியின்வெஃகிக் கனிசேர்வார்.

உரை.—பூங்கொம்போடொத்தாள் பூத்த பூவரும்பினொத்த முகத்தையுடைய வாசமாலையாகிய திருக்குமாரனை நேர்ந்தபின் பின்னமெட்டு நாளுமங்கேசெல்லும்படி மரியுஞ் சூசையுந் தாமே யந்நகரிடத்துத் தரித்தற் காசைவைத்திருந்து நாடோறும் பொற்கோயிலுக்குத் திருநாளாக விரும்பிப்போவாரென்க.

3. நெஞ்சுபதிகொண்டவருளெஞ்சாநீரார் நிறைந்தைந்நாண்
மஞ்சுபதிகொண்டமலையொத்தபைம்பூ மணிப்புகைசூழ்
விஞ்சுபதிகொண்டமார்வைகுங்கோயில் மேவியபின்
னஞ்சுபதிகொண்டவுரைத்தூதுவாேனா னவின்றடைந்தான்.

உரை.—தன்பதியென்று தயையே குடியாய்நிற்கு நெஞ்சினையுடைய நீராராகிய மரியுஞ்சூசையுஞ் சொன்னபடி மேகங்கள் பதியாய் நிற்குமலைபோல வகின்முதலிய நற்புகைகள் மண்டிச்சூழ வானவர்குடியாய்நிற்கு மக்கோயிலுக் கைகந்துநாளும்போனபின்பு நஞ்சினை நிறைந்த வுரைகளைச்சொல்லி யொருவானவன் றூதாகவந்தானென்க.

4. கான்வயிமுர்பூங்கொடியோ னுறங்குங்காலை கதிர்தும்மி
மீன்வயிருருருக்காட்டிவிண்ணேனெய்தி விரைக்கொடியோ
யூன்வயிமுர்வேல்வேந்தனிளவற்கோற வுள்ளினனீ
தேன்வயிமுரிப்பதிநீத்தெசித்துநாட்டைச் செல்கவென்ருன்.

உரை.—வாசனைநிறைந்த பூங்கொடியை யுயர்த்தசூசை யுறங்கின பொழுது கதிர்விட்டு மீனுருவாக வந்தவானவன் சொல்லுவான்: வாசபூங்கொடியேந்தியவனே யூனிறைந்த கொடியவேலையுடைய வேந்தனுகிய வெரோதன் றேவகுழந்தையைக் கொல்லும்படி நினைவெடுத்தானுதலா னீயுடனே தேனைப்பொழிந்த வித்தேசத்தைவிட் டெசித்துநாட்டிற்குப் போவாயாக வென்ருனென்க.

5. அழற்குளித்தபைந்தாதோகண்பாய்வேலோவகல்வாய்ப்புட்
புழற்குளித்தசெந்தீயோவுருமோகூற்ருே பொருவின்றி
நிழற்குளித்தவுருவானேன்கொடுஞ்சொற்கேட்டு நெடுங்கடனீர்ச்
சுழற்குளித்தமனஞ்சோர்ந்துவளனப்பணியைத் தொழுதுளைந்
தான்.

உரை.—பைம்பூந்தாது தீந்துகெடும்படி குளித்ததீயோ கண்ணிலே பாய்ந்த வெறிவேலோ வகன்றபுண்வாயிலே குளித்தசெந்தீயோ விடியோ கூற்றனே விவையெல்லா நிகராதபடி விளங்கியவடிவோடு வந்த வானவன் சொன்னசொல் கொடியதாய்த் தோன்றி யதைக்கேட்ட சூசை நெடுங்கடலிலே சுழலப்பட்டமிழ்ந்தித் தன் மனஞ்சோரும்படி நொந்து பின்னையு மத்தேவபணியை வணங்கினனென்க.

6. மலிநிழற்பட்டலர்மலரின்றெய்யஞ்சேயின் மழவினையும்
பொலிநிழற்பட்டலர்பூங்கொம்பொத்தாணுய்வும் புரைவினையா
லலிநிழற்பட்டெரியெசித்தார்நாட்டின்சேணு மாய்ந்தவளன்
புலிநிழற்பட்டேங்கியமான்போலவேங்கிப் புலம்பினனுல்.

உரை.— வளனுகிய சூசை யப்பணியைக் கேட்டவளவிலே மிக்க நிழலிலே மலர்ந்த பூவின் றன்மைத்தாகிய திருக்குமாரனுடைய விளமையு நிழலிலே மலர்ந்த பூங்கொம்பனையதாயி னெய்மையும் பாவவினையாலழற்பட்டெரியு மெசித்தார் நாட்டின் றூரமு மென்று மிவையெல்லா வற்றையு மாராய்ந்ததனுற் புவியினிழற்பட்ட வளவிலே மான்குழைந் தேங்கினற்போலத் தானுமேங்கிப் புலம்பா நின்ருனென்க.

7. அறிவின்மையுறவின்மையறத்தினின்மை யங்கட்சென்
னெறியின்மைநெறிதுலக்குமுறுதியின்மை நெறிதன்னிற்
பறியின்மைசார்பின்மைதன்பாலின்மை பரிசல்லாற்
பிறிவின்மையோர்ந்துளைந்தானுளைந்துமீண்டே பிரிவுற்ருன்.

உரை.—மீளவு மந்நாட்டிற் றம்மையறிந்தாருமின்றி யுறவோருமின்றி யறத்தினை விரும்பினருமின்றி யங்கேபோம்வழி யறிதலுமின்றி வழிதுலையும்படி யுதவியுமின்றி வழியிலூருமின்றிச் சார்புமின்றித் தனக்குத் தரித்திரமல்லது வேருென்றுமின்றி யாயவித்தன்மையெல்லாமோர்ந்து மிகவும் வருந்தினன், வருந்தினுந் தாமதமின்றித் தேவகட்டளையின்படி யுடனே போதலுற்ருனென்க.

## II. வேறு.

8. வேரியந்தாரினன் விரைந்தெழுந்தனன்
மாரியந்தாரையின் வளர்கண்டாரைநீர்
நேரியந்துணைவியை நேடிநாயகன்
றேரியங்கேவிய பணியைச்செப்பினன்.

உரை. — வாசபூங்கொடியோனுகிய சூசை விரைந்தெழுந்து மாரியின்ருரையாகக் கண்ணீரைவிட்டழுது தன்னற்றுணைவியைத் தேடியாண்டவன்றெளிந்து செய்தகட்டளை யின்னதென்று சொன்னனென்க.

9. செய்யிதட்டாமரை பழித்தசீறடித்
துய்யிதட்டுப்பவிழ் சுருதிவாயினு
ளையிதட்டாரினு னறையத்தீமுனர்
நொய்யிதட்டாதென நொந்துவாடினுள்.

உரை.—சிவந்ததாமரையைப்பழித்த சீறடியையுந் தூயபவளநிறத்தலர்ந்து வேதத்தைவிரித்துரைக்கும் வாயினையுமுடைய மரியென்பவளழகிய பூங்கொடியோன்சூசை யச்செய்தியைச் சொன்னவளவிலே தானெய்ய பூந்தாது தீயிலேவாடினற்போல வாடிநொந்தாளென்க.

10. எதிரிலான்பகையிலா னிணையெலாமிலா
னுதிரிலாமதுகையா னுணர்வின்மேனின்ருன்
விதிரிலாவிதியிதென் றிறைஞ்சிவேண்டினர்
பிதிரிலாத்திருவுளம் பேணித்தேரினர்.

14. ஏர்வளரடிபணிந் திளவலேந்தலி
னீர்வளர்குவளைதேன் றுளித்தனேரவன்
சீர்வளர்விழிமலர் சிறந் துமுத்துகச்
சூர்வளர்மனத்தவர் துகைத்துளேங்கினார்.

உரை.—அழகிய பாதமலரை வணங்கித் தாய் திருக்குமாரனையெ டுத் தேந்தியபோது நீரில்வளருங்குவளை தேனைத்துளித்தாற்போல வவ னுந் தன்றிருவிழிமலரைத் திறந்து முத்தாகக் கண்ணீரைவிட்டழுதா னதைக்கண்ட மரியுஞ்சூசையு மிகுந்த துக்கத்தோடு வருந்தி யேங்கினா ரென்க.

15. கதிர்தருங்காதலன் கன்னித்தாயுரத்
தெதிர்தரும்விழிகலந் தினிதிற்சாய்ந்தனன்
முதிர்தருமமிர்துக முறுவற்கொட்டலாற்
பொதிர்தருமின்பமுற் றிருவர்பொங்கினார்.

உரை.—ஒளியைச் செய்யாநின்ற திருக்குமாரனவர்கொண்ட துய ரத்தைக்கண்டு தன் கன்னியாகிய தாயின் மார்பிலே தன்கண்ணு மவள் கண்ணுமெதிர்பட்டுக் கலந்தபார்வையாகும்படி சாய்ந்தனனு யவர்க் கமிர் தத்தை யூட்டின தன்மைபோல வொருபுன்னகையைக் காட்டினான், காட்டினவளவிலே யிருவர்மிகக் களிகூர்ந் தின்பத்தினாற் பொங்கினாரெ ன்க.

16. பொங்கியவருத்தியாற் பொலிந்தகன்னியுந்
தங்கியகொடியோடுட் டளிர்த்தசூசையும்
பங்கயமலரடி பணிந்துபாலனை
யங்கிவர்கனுதற் காசிகேட்டனர்.

உரை.—அங்ஙனம் பொங்கியவாசையோடு கன்னித்தாயுந் தானுயர் த்த பூங்கொடியைப்போல வுள்ளே மலர்ந்து தளிர்த்த சூசையுந் தாம ரைப்பாதத்தை வணங்கிப்போதற் காசீர்வாதத்தைத் திருக்குமாரனைக் கேட்டாரென்க.

17. மருந்தடக்கனிமுக மகிழ்ந்துநாயக
னருந்தடத்தவர்க்குநல் லருளோடாசியைத்
தருந்தடத்திவர்திருட் புதைத்தசாமத்தாங்
கிருந்தடத்தேகுதற் கெழுந்துபோயினார்.

உரை.—அப்பொழு தயிரைத் தருமருந்தினு மினியமுகத்தைக் காட்டி மகிழ்ந்த நாதனு மரியமாட்சிமையோ டிருவருக் கருளைப்பொழி ந்த வாசீர்வாதத்தைத் தந்தான், தந்த நன்மையா லிவருயர்ந் திருண்ட நடுச்சாமத்தில் நெடும்வழிநடப்பதற்கெழுந்துபோகத் துடங்கினாரென்க.

18. இருச்சுடரோன்பட வீரையாயிரங்
குருச்சுடர்மேனியைக் கொண்டவானவர்
திருச்சுடரோனெனச் சிறுவற்றாளிணை
பருச்சுடர்பாய்ந்துறப் பணிந்துதோன்றினார்.

உரை.—முன் னருபியாய் நின்ற பதினாயிர வானவரத்தரவாயிலே சூரியன் வடிவுமறைப்பதற்குப் பெருங்கதிரை வீசியவுடலையெடுத்துக் காட்டித் திருச்சுடரோனாகிய வத்தேவகுமாரன் றிருப்பாதத்திற் சுடர் பாயும்படி விழுந்து வணங்கித் தோன்றினாரென்க.

19. எல்லியல்படச்சுட ரிரவிதோற்றினார்
பல்லியங்கடலொலி படமுழக்கினா
ரல்லியங்குழவியை யளவில்வாழ்த்தினார்
கல்லியம்பாத்தொடை கனியப்பாடினார்.

உரை.—அத்தன்மையாய்த் தோன்றினவானவர் பகலினு மவ்விரா விளங்கும்படி யொளியைத் தோற்றினார், பலவாத்தியங்களைக்கொண்டு கடலினு முழங்கினார், ஆம்பலின் வடிவாக நின்ற குமாரனை யளவி ன்றி வாழ்த்தினார், மதுவினு மினிய பாவின் றொடைகளைப் பாடினாரெ ன்க.

## III. வேறு.

20. வார்வளர்முரசுமாரா வரிவளர்வளையுமூதா
தேர்வளருருளுஞ்செல்லா தெருவளரரவுந்தோன்றா
வூர்வளரசைவுமில்லா வுறங்கியசாமத்தேகிச்
சீர்வளருயிர்போயவ்வூர் செத்துடம்பொத்ததன்றே.

உரை.—அவர்போன நடுச்சாமத்தி லெல்லாரு முறங்காநிற்ப முர சுஞ் சங்குமுழங்காமற் றேர்கள் நடவாமற் றெருக்களி லாட்புழக்கந்தோ ன்றாம லூரிலே யசைவில்லாம லிருந்ததனா லந்நகர் தன்னுயிர்போய்ச் செத்த பிணத்தின் றன்மைபோல நின்றதென்க.

21. நல்வினையுலந்தபோழ்தின் னலமெலாமகலும்போலக்
கொல்வினையறுப்பவந்த குணத்தொகையிறைவன்போக
வல்வினைமருளிற்பொங்கு மல்லவையுயிரைவாட்டப்
புல்வினைமல்கிச்சீலம் புரிநலம்போயிற்றன்றே.

உரை.—நல்வினையின்றி நன்மையில்லையென்றதுபோல வுயிரைக் கொல்லுந் தீவினையையறுக்கும்படி மனிதனாயவதரித்துவந்த நற்குணத் தொகையோனாகிய கடவு ளவ்விடத்து நீங்கிப்போனதினா லறிவிருட்டு மயக்கத்தாற் பொங்கிவரும் பாவங்க ளுயிரைவாட்டும்படி புல்வினையா

கிய தீவினை யங்கேமலியப்பெருகி நல்லொழுக்கத்தோடுவரும் நன்மை யெல்லாம் போயிற்றென்க.

22. இருள்புரிகங்குனுப்ப ணிரிந்தறக்கடலோன்போக
வருள்புரிவுணர்வுகாட்சி யறந்தவஞ்சுருதிதானந்
தெருள்பொறைநீதிவீரஞ் சீர்தகையுறுதிஞானம்
பொருள்புகழ்புலமைமற்றப் பொலிநலம்போயிற்றன்றே.

உரை.—இருண்டவிரா நடுவிலே யறக்கடலோன்போ யவனோடன் றுகூட வருள்முதற் பத்தொன்பதுமன்றி மற்றுள்ள நன்மையெல்லாம் போயிற்றென்க.

23. அலைபுறங்கொண்டஞாலத் தடரிருள்சீக்கயாக்கை
நிலைபுறங்கொண்டஞான நெடுஞ்சுடரனையான்போகக்
கொலைபுறங்கொண்டவேந்தன் குணத்துரிநகருநாடும்
வலைபுறங்கொண்டபாவ மலிந்திருள்மொய்த்ததன்றே.

உரை.—கடல்சூழ்ந்த பூவுலகி லடர்ந்த பாவவிருளை நீக்க வுடலைக் கொண்டுதித்த ஞானசுடரோன் போனதினு லிவனைக்கொல்ல நினைத்த கொடிய வேந்தற்கிணையாக நகருநாடு மெங்கு மன்றுயிரை யகப்படுத் தும்படி சூழவலைவைத்த பாவமலிந்து மயக்குவிக்கு மிருளே மொய்த்த தென்க.

24. கதிதள்ளியுயர்வானேற்றுங் கனிந்ததம்வேந்தனேடும்
பதிதள்ளியமரர்போகப் பகையுநீண்பசியுநோயு
நிதிதள்ளிமிடியுங்கேடு நிசிதமுந்தீயயாவு
மதிதள்ளிமருட்டும்பேயு மறுகுடியாயிற்றன்றே.

உரை.—முடிவின்றி வானுலகில் வணங்கப்பட்ட தந்நல்லிராசா வோடுகூட வவ்விடத்து நீங்கி வானவரெல்லாரும் போய் மறுகுடியாகப் பகை பசி நோய் தரித்திரங் கேடு பொய்யன்றி மற்றக் கொடியதெல் லாமு மறிவினைமயக்குவிக்கும் பேயும் வந்தனவென்க.

25. மணிவளர்முகிற்றண்ணூர்தி வானுடுக்கொடிதண்டிங்க
ளணிவளர்குடைகொண்டெங்கு மருணிழன்மன்னன்போகப்
பணிவளர்நகருநாடும் பனிப்புறப்பகைத்துவாட்டிப்
பிணிவளர்வினையின்செந்தீப் பிரிவிலாமேய்ந்ததன்றே.

உரை.— ஊர்தியாக மணிமேகத்தையுங் கொடியாக வான்மீனையுங் குடையாகக் குளிர்ந்த திங்களையுங்கொண் டெங்கு முயிர்குளிரும்படி யருளினிழலைச்செய்யு மன்னனுகிய வவதரித்த நாதனகன்றதினு லழகிய நகருநாடு நடுங்கும்படி பகைத்துயிரை வாட்டிப் பிணிவளர்தற்குக் காரண மாயவினையாகிய செந்தீயோயாம லெல்லாவற்றையு மேய்ந்ததென்க,

## IV. வேறு.

26. கண்ணகன்றவகழிகலங்கலிற்
றண்ணகன்றதரங்கந்தளம்பலே
யெண்ணகன்றகுணத்திவர்நின்மினென்
றெண்ணகன்றகைநீட்டினதொத்தவே.

உரை.—அங்ஙனம் போய்நகரைவிட்டுக் கண்ணுக்ககன்றவகிளிடத்துச் சேர்ந்தார், சேர்ந்தவிடத்தவ்வகிள் கலங்காநிற்கவலைகளுந்தளம்பாநிற்க வெண்ணிறந்த நற்குணங்களையுடைய விவர்போகாமற்றடுத்து நில்லுங் களென்று விளங்கிய தன்கைகளை நீட்டினதன்மைபோலத் தோன்றிற் றென்க.

27. அலையலைந்தலர்கூப்பியதாமரை
யிலையலைந்தலைமீதெழுந்தாடலந்
நிலையடைந்தனர்நீங்கிலிர்நின்மினென்
றுலைவடைந்துகைகூப்பியதொத்தவே.

உரை. — திரைகளலைவிஞற்குவிந்ததாமரையு மலைந்து திரைமேற் ருேன்றியாடலே யங்கேவந்த விம்மூவரைப்பார்த்துப் போகாதேயுங்கள் நில்லுங்களென்று கலங்கிவருந்திக் கையைக்கூப்பித் தொழுததன்மை போலத் தோன்றிற்றென்க.

28. நாகநெற்றியினன்மணியோடைபோ
ஞகநெற்றியினன்மணியாறுபாய்
நாகநெற்றியினன்மலர்க்காவப்பா
ஞகநெற்றியினன்மதிதோன்றிற்றே.

உரை.—யானைநெற்றியிலே தூங்குமணியாற்செய்த பட்டம்போல மலையினுச்சியிலே தூங்கிவிழு மணிகளைக்கொழித்தவாறுவந்துபாயும் புன்னைமரங்களுச்சியிலேபூத்த சோலையைக்கடந்தவளவிலே வானத்தி னுச்சியிலே தேய்ந்தபிறைதோன்றும்படி யெழுந்ததென்க.

29. உறைகிடந்தவிண்வேந்துயிருண்பலென்
றுறைகிடந்தயிலோங்கரசைப்பகைத்
துறைகிடந்தகடற்பறைக்கோர்குணி
லுறைகிடந்தனவொண்பிறைதோற்றமே.

உரை.—அன்றுமூளைத்தபிறை யெப்படிதோன்றிற்றென்னில் மழையைப்பொழியும் வானத்தின்மேலாளு மரசனுகிய வத்தேவருழைந்த யுயிரை நானேயுண்பேனென் றுறையினுட் கிடந்த வேலையெடுத் தோங்கின கொடியமன்னனைப் பகைத் தவன்மேற்படையைக் கூட்டும்படி யுவர்க்கடலை முரசாகக்கொண் டதையடித்த குறுந்தடியாக வப்பிறை தோன்றிற்றென்க.

30. சிதமிடைந்தலர்ச்சேடனையாட்கையிற்
சிதமிடைந்தலர்சேடனைநோக்குபச்
சிதமிடைந்தலர்சேடெனத்தாங்குபற்
சிதமிடைந்தலர்சேடுகண்ணொத்தவே.

உரை.—மாருத்தன் கன்னிமையாற் றூயவெண்மையுள்ள பூவனையதாய்கையிலே ஞானவடிவாய் மலர்ந்த வத்தேவகுழந்தையைக்காணவாசையினால் வானத்தினெருங்கிப் பூத்த பூவடிவாய்ப் பலமீன்களே நிறையமலர்ந்தவழகிய வானத்தின் கண்போலத் தோன்றிற்றென்க.

31. மனவணங்குவணங்கடிநாயகன்
மனவணங்குவணங்கில்வருந்தினர்
மனவணங்குவணங்கலிலாளனு
மனவணங்குவணங்குமணங்குமே.

உரை.—நவமணிகள் தம்மிலுமழகியதென்று வணங்கிய திருப்பாதத்தையுடைய நாதனுக்கு நிலைபெற்றுவந்த துன்பமாறுமைகண்டு வருந்தினர் மனத்திற்கொண்ட துயர்மாறுத சூசையும் பைம்பொன்னினுமழகிய வணங்காகிய மரியென்பவளுமென்க.

32. ஆரணந்தருமாண்டகையாகுலக்
காரணந்தருங்கட்புணல்கண்டிடர்
பூரணந்தருமார்புபுடைத்தெலா
வாரணந்தரும்வானுறக்கூக்குரல்.

உரை.—வேதத்தினுகமத்தைத் திருவுளம்பற்றித் தந்த நாதனுகிய வத்திருக்குழந்தை யடைந்த துன்பத்தினு லிவர்வருந்தி யழுங்கண்ணீரைக்கண்டு பூரணமாய்த் துயரையடைந்து தம்மார்பினையடித்துக் கோழிகளெல்லாம் வானமட்டுஞ் சேரும்படி கூக்குரலிட்டனவென்க.

33. பேர்ந்ததன்பெருமானடைபீழைவா
னோர்ந்ததன்மையுளைந்தழுதாலென
வார்ந்ததண்பனிதாரையின்மல்கியன்
றூர்ந்தபைந்தழைக்காவழுதாயதே.

உரை.—வானமூந் தன்னிடத்தினின்று பேர்ந் தவதரித்த தன் மன்னவனுகிய வித்திருக்குமார னுற்றதுன்பங்களையாராய்ந்து வருந்திக் கண்ணீர்விட்டழுதாற்போலக் குளிர்ந்த பனியைப்பெய்தது, மழைத் தாரைப்போலப் பனிபெய்தமிகுதியாலன்று பசியதழைகள் பனித்துளி விட்டொழுகிக் காவுமழுத தன்மைபோலத் தோன்றிற்றென்க.

34. கருகருவெனக்காடைகளுழ்ந்தன
ஞருஞருவெனத்தோகைகளைந்தழும்
புருகுருவுதலோடிவர்போதலா
லருநருப்பொழிலாரழுமோதையே.

உரை—காடைகள் கருகருவென்றழவும் மயில்கள் ஞருஞருவென்று நைந்தழவும் புருக்கள் குருவிநைந்தழவு மிம்மூவர்போனதினால் வாசனைநிறைந்த சோலைகளெங்கு மழுமோசை தோன்றிற்றென்க.

35. கிளியழக்குயில்கேட்டழத்தேனுண
தளியழச்சிறைநைந்தழவாவென
வளியழத்துயர்மல்கிவனத்தெலா
வுளியழத்தகவோரழவேகினர்.

உரை.—கிளியுங் குயிலுந் தேனுண்ணுமற் கிடந்தவண்டு மன்னமு மழாநிற்க வையோவென்றிரங்கிக் காற்றழுதுவீசத் துயர்மிகுதியால் வனத்தினிடங்களெல்லா மழாநிற்க விவருமழுதுகொண்டு போனாரென்க.

36. கான்மறந்தனகாமலரன்னதே
தேன்மறந்தனதேனினமன்னதே
பான்மறந்தனமான்பறழன்னதே
யான்மறந்தனதம்பிள்ளையன்னதே.

உரை.—அன்றுகாவிலுள்ளமலர் வாசனைவிட மறந்தன, வண்டுகள் தேனையுண்ண மறந்தன, மான்குட்டிகள் பாலையுண்ணமறந்தன, பசுக்கள் தங்குட்டிகளை மறந்தனவென்க.

37. சுருதியேந்துசுதற்றுமிப்பேனெனக்
கருதியேந்துகுரோதங்கதித்தெனப்
பருதியேந்துபடம்படாமுனர்
குருதியேந்துகுணக்குசிவந்ததே.

உரை—அப்பொழுது விடியக்காலமாகிக் கீழ்த்திசை சிவந்ததெப்படி தோன்றிற்றென்னில் வேதநாயகனாகிய வத்திருக்குமாரனைக் கொல்லும்படி யெரோதனாகிய மன்னனினைத்த கொடுமையைக்கண்டு வானங்கோபித்தாற்போலச் சூரியனுதயத்து முன்னே யிரத்த முகத்திலே பாய்ந்ததன்மைத்துக் கீழ்த்திசை சிவந்ததென்க.

38. முழவெழுந்தொனியொப்பமுந்நீரொலி
யெழவெழுந்துபொரக்கதிரொய்சரம்
விழவெழுந்தவெய்யோன்சிவந்தெய்திவா
னழவெழுந்துயராற்றிலதோன்றிற்றே.

உரை.—போர்முரசின் முழக்கம்போலக் கடல்முழங்கா நிற்கச் சூரி யனெழுந்து கொடிய வரசன்மேற் போர்செய்யும்படி கதிர்களையம்புக ளாக விட்டுச் சிவந்தமுகத்தோடு தோன்றி வானுலகு மழும்படி யிம்மூ வர்க்கு வந்ததுன்பங்களைத் தான் பொறுக்கமாட்டாத தன்மையெனறு தோன்றிற்றென்க.

39. பானும்பாரொடுபாசறைபட்டழும்
வானும்வாரொடுமண்ணுமிரங்கின
தேனுமேதுமுணர்கிலமாக்களுங்
கோனுங்கோடணைகொண்டிரங்காயினர்.

உரை.—இங்ஙனஞ் சூரியனுஞ் சூரியனோடு வருந்தியழுத வானுல குமண்ணுலகு மிம்மூவர்க்கிரங்கினாலு மிவராரொன்று மிவர்பிரிந்துபோகி றாரென்று மொன்றுமறியாத மற்றமனிதரு மெரோதனாகிய மன்னவனுங் கொடுமையாக விரங்காதிருந்தாரென்க.

பைதிரநீங்குபடல முற்றும்.

ஆகப்படலம்–13–க்கு–விருத்தம்

1264.





## பதிமூன்காவது

# இளவன்மாட்சிப்படலம்.



### I. வேறு.

1. இரங்குபடர்கானெனவையுநைந்தழுதிரைக்குந்
தரங்குபடர்வேலையிறளம்பியலேநெஞ்சா
ரரங்குபடர்வான்றொழுமருட்குழவியேந்திக்
குரங்குபடர்காட்டுநெறிகொள்ளவலமுற்றார்.

உரை.—சொன்னதன்மையிற் காட்டிலுள்ளதெல்லா மிவர்க்கிரங்கியழாநிற்க விரைத்தலைந்த கடலைப்போல வலையாநிற்கு நெஞ்சினையுடைய மரியுஞ்சூசையு மகன்றவானுலகத்தோர் வணங்குங்கருணையையுடைய திருக்குமாரனையேந்தி யொளித்துப்போகும்படி மனிதர்சந்தடியில்லாமையால் விலங்கினம் படர்ந்தகாட்டுவழியே போதற்கு வலத்தே போனாரென்க.

2. பிழைக்குலமளிப்பவர்பிழைப்பிடமிலார்போ
லுழைக்குலநடுக்கமெனவுட்குலையநைந்து
மழைக்குலமிடத்துநுழைமின்மருளமல்குந்
தழைக்குலமிடத்துநுழையச்சடுதிபோனார்.

உரை.—பாவிகளைப் பிழைப்பிக்கவந்தவர் தாம் பிழைக்கும்படி யிடமில்லவரைப்போல மான்கள் வெருவின தன்மைத்துத் தாமுள்ளஞ்சி நைந்து மேகங்களிடத்து நுழையு மின்களோவென்று மயங்கும்படி தாந் தழைத்த காட்டிலே நுழைதற்கு விரைந்துபோனாரென்க.

3. இருத்தியெழுவானரசனீரடிநணைப்ப
வருத்தியெழுதுன்பமுகிலார்த்துமிழ்கண்மாரி
திருத்தியெழுமாதவனுளைந்துளையுடேற்றாக்
கருத்திலெழுமார்ந்ததுயர்கான்றினையசொன்னான்.

உரை.—செல்வவானரசனாகிய திருக்குமார னிருபாதத்தையு நனைக்கும்படி தன்னன்பினாலெழுந்த துன்பமென்னு' மேகமிடித்துப்பெய்த கண்ணீரென்னு மாரியைப் பொழிந்த மாதவனாகிய சூசை வருந்தி வருந்தியமனத்திற் றேறுதலின்றிக் கொண்டதுயரைக் கொப்புளித்தாற்போல விவற்றைச் சொன்னானென்க.

4. விண்முழுதுமேற்று தனிவீரமுதலோனே
புண்முழுதுமேற்றியபுலாலயிலனேடு
மண்முழுதுமொன்றுபடமல்கியமர்செய்தா
லெண்முழுதுநீத்தநினதாண்மையெதிருண்டோ.

உரை.—வானுலகத்தோரெல்லாரு மொருப்பட்டுவணங்கும் நிகராத வல்லமையையுடைய முதலோனே! தமக்குவிருந் தமருமென்று கழுகு முதலிய புள்ளெல்லாம் வணங்கும் புலாலினு ளுறும்வேலையுடைய வெரோதனேடு மற்றவுலகமெல்லாங் கூடிப்போர்செய்யவந்தாலு மட்டொன்றில்லாத வுன்னுடைய வல்லமைக்கெதிருண்டோவென்றுனென்க.

5 புல்வினையுளேந்தழவுதித்தருள்புரிந்து
நல்வினைதளிர்ப்பநலம்யார்க்குமிடுநல்லோய்
கொல்வினையுணர்ந்துனுயிர்கோறறனதாண்மைக்
கொல்வினையெனக்கருதுமிவ்வுலகிலுண்டோ.

உரை.—தீவினைகளுளேந்தழும்படி நீமனிதனுய்ப்பிறந்து நமக்கருளைச்செய்து நல்வினைகள் வளர்ந்துதளிர்க்கும்படி யெவர்க்கு நன்மைசெய்யும் நாதனே! கொலைத்தொழிலை நினைத் துன்னுயிரைக்கொல்லும்படி தம்வல்லமையினு லாகுந்தன்மையென் றிவ்வுலகினினைப்பாருண்டோ வென்றுனென்க.

6. தொல்லையுளநம்வினை துடைத்துநமைவீட்டில்
வல்லையுளவன்பொடுபுகுப்பமனுவந்தோ
யொல்லையுளநந்துயரொழித்திடநினக்கே
யெல்லையுளதொன்றுமிலவேண்டுமிடர்கொல்லோ.

உரை.—நமக்குள்ள பழம்வினைகளைத் துடைத்து வல்லமையுள்ள தயையைக்கொண்டு நம்மைப் பரம வீட்டிலே சேர்க்கும்படி மனிதனுய்ப்பிறந்த நாதனே! பிறந்தவுடனே நம்முடைய துயர்களைத்தீர்க்கும்படி யுனக்கு மட்டில்லாத துன்பங்களடையவேண்டுமோ வென்றுனென்க.

7. முற்றுமுதலாயுலகமூன்றுதொழவான்மேற்
பெற்றுமுதலீறிலபெருந்தகையைமண்மே
லுற்றுமுதல்வீடிலவிலங்குறையுள்வந்தா
யிற்றுமுதனுடகலல்வேண்டுமினிக்கொல்லோ.

உரை.—நீயெல்லாத்துக்கு முதலாகி யுன்னை மூவுலகமும் வணங்கா நிற்க வான்மேல் வீற்றிருந்து ஆதியந்தமின்றிப் பெருந்தகைமையுடையோனே! நீ யவதரித்துப் பூவுலகில்வந்திருக்கும்படி மனையுமுதலாயின்றி விலங்கின மொதுங்குமிடத்திலே பிறந்தா யிதுமுதற்கொண்டினி நாடுமகன்றுபோதல் வேண்டுமோவென்றுனென்க,

8. ஞானமுறுசீலமிலநட்புறவுமில்லா
வானமுறுவேதமிலமாண்பருளுமில்லா
கானமுறுகாய்ந்தசுரமக்கடைகிடந்தா
ரீனமுறுநாடடைதல்வேண்டுமினிக்கொல்லோ.

உரை.—ஞானமுஞ் சீலமும் நட்புமுறவும் வான்கதியைப் பெறுத ற்கு வழியாகிய வேதமு மாட்சிமையுந் தயையுமென்னு மிவையெல்லா மின்றி யழற்காய்ந்த கானச்சுரத்தி னடங் தப்பாற்கிடந்த வீனநிறைந்த நாட்டிற் கினிப்போதல் வேண்டுமோவென்றானென்க.

9. வெவ்வினைவிளைத்தடுமிவ்வாழ்வுவிடமென்று
மைவ்வினைமறுப்பவிவண்வந்துதுயர்வேண்டின்
மொவ்வினைமுதிர்ந்தமுழுதென்மிடிமையல்லா
லெவ்வினைதுலைக்கடைதல்வேண்டுமினியையா.

உரை.—இவ்வுலகின் வாழ்வுகள் தீவினையை விளைத்துக்கொல்லும் நஞ்சென்று பாவத்தின் வினைகளை மறுத்தழிக்கும்படி நீ யிங்கேபிறந்து துன்பங்களையடைதற் காசையுண்டாயினதற்குத் துயர்நிறைந்த வென் றுரித்திரந்தரும் துன்பங்களல்லாதே துலைக்குப்போ யெத்துயரைத் தேடல் வேண்டுமினியையாவென்றானென்க.

10. விஞ்சியதிறஞ்செறியுவிஞ்சைமலிவல்லோய்
துஞ்சியநிலத்திலுயிர்தோன்றிவினைநீக்கி
யெஞ்சியநலத்தருவையென்றறிவர்யாரோ
யஞ்சியதோர்தன்மையிதுவென்றறைவனென்றான்.

உரை.—மிக்கவல்லமையையு மறிவையுமுடைய வல்லோனே! பா வத்தாற் பிணமாய்க்கிடந்த பூவுலகிற் கோருயிராகவந்து வினைகளை நீக்கி யில்லாத நன்மைகளைத் தருவீரென் றிங்கே யாரறிவா ரிப்பொழுதொளி த்துப் போகிறதைக்கண் டஞ்சாநின்றாயென்று சொல்லுவாரோ வென் றானென்க.

11. இற்றுறுமருத்தியிலியம்பினணியம்பப்
பற்றுறுமுணர்ந்தபலவும்பகர்தறேற்று
முற்றுறுமரந்தையெனுநீத்தமுழுகிச்சொல்
லற்றுறுமழுந்தொழிலலாலெவனுமாற்றான்.

உரை.—சூசையுட்கொண்டவன்பிற விவைசொல்லிப் பின்னையு மாசையோடு சொல்ல நினைத்தபலவுஞ் சொல்லமாட்டாம லடைந்த துன்ப வெள்ளத்தில் முழுகிச் சொல்லற்றுப் போயழுவதன்றியொன்று மாற்றாதிருந்தானென்க.

## II. வேறு.

12. ஆசைவெற்புவீ ழரந்தைவாரியுட்
சூசைபட்டய்யச் சுழியின்மூழ்கலிற்
பூசைவாயினுள் புகற்கைதந்தூர
மாசையங்களை மருவச்சொல்லினுள்.

உரை.—தன்னன்பினுசையென்னும் மலையினின்று விழுந்து துன்பமென்னும் வெள்ளத்திற் சூசையகப்பட்டுச் சந்தேகமென்னும் நீர்ச்சுழியிலே முழுகி யமிழ்ந்திவருகையிற் றேவவருச்சனை விடாத வாயினையுடைய மரியென்பவ ளாறுதலான சொல்லென்னுங் கையைச் சூசைக்குத்தந்து மனவூக்கமென்னும் பொற்கரையிலவன் சேரும்படி சொன்னுளென்க.

13. உருக்குங்காலுல குயிரொலாங்கெட
முருக்குங்காலமே முடிந்துபோயருள்
பருக்குங்காலமாய்ப் புரந்துபாதுகாத்
திருக்குங்காலமென் றிளவலாயினுன்.

உரை.—முன்னுளி லிவ்வாண்டவன் கோபமிகுதியாற் பூவுலகிலுள்ள வுயிரெல்லாந் தீயிலே யுருக்கினுற்போலக் கெடும்படி கொலைத்தொழிலைச் செய்வானுயினு மிப்பொழு தக்கொலைக்கால முடிந்துபோ யருள்மிகும்படி காலம்வந்து நம்மை யிரட்சித்துக் காத்தற்குக் காலமிதென்று குழந்தை வடிவாய்த் தோன்றினுனென்றுனென்க.

14. மண்ணைவேண்டினும் வருத்துவாழ்வறு
விண்ணைவேண்டினும் விரும்பியீகுவான்
கண்ணைவேண்டினு மளிக்குங்காறனை
யெண்ணிவேண்டினு மிகல்செய்வான்கொலோ.

உரை.—இவனே வேண்டியவர்க்கு மண்ணரசைத் தந்து நல்லறத்தைச் செய்து முடியாத வாழ்வினையுடைய விண்ணரசை வேண்டுபவற்க்குக் கொடுக்குந்தன்மையுடையனுவய்த் தன் கண்ணை வேணுமென்றுற் கொடுக்கும்படி தயையுமுடையவனுய் வந்த குழந்தை தன்னைப்பற்றி வேண்டியிருந்தாலு மெவர்க்கும் பகைசெய்வானே வென்றுளென்க.

15. மணியுயிர்க்குநாண் வடிவிற்றேன்றினன்
பிணியுயிர்க்குமா லவாசெய்பீழையாற்
றணியுயிர்க்கெலா முறுதிதந்துதன்
னணியுயிர்க்கிட ராகமாள்குவான்.

உரை.—நன்மணிவடிவினுற் குழந்தையாய்ப் பிறந்தவன் பிணியைச் செய்யுமயக்கத்தோடு கூடியவாசையால் வந்த பாவத்துயர்களாற் றணி

மையுற்ற வுயிர்க்கெல்லாந் தானேயுறுதிசெய் திரட்சிக்கும்படி தன்னழ கிய வுயிர்வருந்தி நமக்குவேண்டிச் சாகவந்தானென்றுளென்க.

16. இறந்துநம்முயி ரிரங்கிக்காக்கவந்
தறந்துதைந்தவ னிறத்தற்கஞ்சவோ
திறந்துதைந்துமுச் செகத்தையாள்பவன்
மறந்துதைந்தபுன் மதுகைக்கஞ்சவோ.

உரை.—இங்ஙனந் தானிறந்து நம்முடைய உயிர்களையிரட்சிக்கும் படி மனிதனுய்வந்த சகலவரங்களையுடையோ னிப்பொழு திறத்தற்க ஞ்சுவானோ? சர்வத்துக்கும் வல்லவனு யுலக மூன்றையுமாள்பவனுய்ப் பாவியுடைய சிறியதோர் வல்லமைக்கஞ்சுவானோ வென்றுளென்க.

17. நஞ்சினுலுயி ரருந்துநாற்படைக்
கஞ்சிலானறி வருள்வல்லாண்மையீ
டெஞ்சிலானென விறைஞ்சிக்கூறினு
ணெஞ்சினுலமு தார்ந்தநேமியாள்.

உரை.—நஞ்சாக வுயிரைக்கொன்றுண்ணும் நால்வகைப்படைக்குத் தானஞ்சல்செய்யா னறிவையு மருளையுமாண்மையும் பெருமையையு மெலிவின்றி நிறையக்கொண்டவனென்று வணங்கிச் சொன்னுளமிர்தத் தானிறைந்த கடலொத்த நெஞ்சினையுடைய மரியென்பவளென்க.

18. புடைவரும்புகழ் பொலிந்தமிக்கயே
லடைவருந்தலை யணிந்ததாடொழு
துடைவருங்கருத் துணர்ந்தவாண்மையைத்
தொடைவருங்கனி பாவின்சொற்றினுன்.

உரை.—அப்பொழுது புடையில்வந்த மிக்கபுகழையுடைய மிக்க யேலென்னும் வானவனடைதற்கரிய தலையையுடையநாதன் றிருப்பா தத்தை வணங்கிக் கெடாதவிவனுண்மையை நினைத்துப் பாவாகச் சூசை க்குறுதியு மின்பமுமாகும்படி சொன்னுனென்க.

## III. வேறு.

19. அஞ்சுவான்கொல்லோநீதி யணிக்கலத்திலங்குவீரத்
தெஞ்சுவான்கொல்லோஞாலத் தியாவரும்பணிப்பவாண்மை
விஞ்சுவான்கொல்லோவென்ன மேவியவெசித்துநாடா் [ஞேய்.
துஞ்சுவானுணர்ந்தார்முன்னுள் சுருதிசேர்கொழுகொம்பன்

உரை.—வேதமென்னுங் கொழுந்து மேற்படருங் கொழுகொம் போடொத்த சூசையே! இத்தேவகுழந்தை யஞ்சுவானோ? நீதிவிளங்கும்

வீரத்தில் மெலிவாேனா? உலகெல்லாம் நடுங்கும்படிவல்லமையில் மிகு வர்ேனாவென்று நீரிப்பொழுது போகிற வெசித்துநாட்டிலுடையோர் தா மடிந்துகெடும்படி முன்னாளிலே நன்றாயறிந்தாரொன்றானென்க.

20. நினைந்தயாவையுநினைந்த நிலைக்கவைநிகழ்த்துந்தன்மை
புனைந்தமாமதுகைகாட்டப் புணர்ந்தபுற்சூரற்கொண்டு
முனைந்தகாலிவன்முன்னாளின் முரிந்தெதசித்தஞ்சிவாட
வனைந்தயாவையுநினக்கேன் வகுத்தியானுரைப்பலென்றான்.

உரை.—நினைத்தயாவையும் நினைத்ததன்மைக்கு நிறைவேற்றும்படி தனக்குள்ள வல்லமையைக்காட்ட முன்னாளிலே யிவன்றானே சினந்த காலத் தொருசின்னப் பிரம்பினைக்கொண்டு எசித்தாரெல்லாரு மெலிந் தஞ்சிக் கெடும்படி செய்ததெல்லாம் நானுனக்குச் சொல்லிக்காட்ட வே ண்டுமோவென்றானென்க.

21. வீங்கெழுந்துயருளாற்று வெதிர்ப்பெழும்புணரிநெஞ்சிற்
பூங்கெழுங்கொடியோன்சொல்லிப் புரையறவுணர்ந்ததேனு
மீங்கெழுந்தெளியனென்ன விரிந்தநாயகனைவாழ்த்த
வாங்கெழுந்திறலினாண்மை யறைதியென்றறைந்தான்வாேனான்.

உரை.—உட்கொண்ட மிக்கதுயராற்றுமற் கலங்கியெழுந்த கடலி னொத்த நெஞ்சினையுடைய பூங்கொடியோனாகிய சூசைசொல்லி நான் முன்னாலாகிய செய்தியை நன்றாயறிந்தாலு மிங்கேமணிதனு வெளியனைப் போலத் திரிந்தநாதனை வாழ்த்தும்படி யங்கே முன்னாளிலே தோன்றிய விவனுடைய வல்லமை சொல்லிக்காட்டுவாயாக வென்று சூசைசொல்ல மீளவும் வானவன்சொன்னானென்க.

22. பேரவோங்கியவெற்புச்சி பிளந்தவிண்ணசனியேறு
நேரவோங்கடலிற்சீற்ற நெறித்தருள்வணங்காச்சென்னிப்
பாரயோனென்பானுதன் பணித்தநற்பூசைசெய்யா
வீரயோகத்தியூதர் விலக்கிமிக்கல்லற்செய்தான்.

உரை.—ஓங்கிய மலையினுச்சி பிளந்துபேரும்படி மேகத்தினின்று விழு மிடியைப்போலத் தனக்குள்ள வோங்கிய வல்லமையாற் சீறிக் சினத்தாலெறித்துத் தயையால் வணக்கமில்லாத சென்னியையுடைய பாரயோனென்னு மன்ன னாண்டவன் கட்டளையிட்ட பூசையைச் செய் யாதபடி வீரத்திலுயர்ந்த யூதரைவிலக்கி மிகவு மவர்க்குத் துன்பஞ்செய் திருந்தானென்க.

28. உடைக்கலத்திலங்கிச்செற்றத் துடன்றிருள்பருகுநெஞ்சா
னடைக்கலத்தடைந்தயூதர்க் கடிமையென்றியற்றும்பீழை
துடைக்கலற்றெவருமெஞ்சித் தொறுந்தொறுமழுதகண்ணீர்
படைக்கலத்தகுதிபோலப் பைதிரஞ்சிதைத்ததன்றே.

உரை.—பூணையணிந்து விளங்கிப் பின்னேயுஞ் சலஞ்சாதித்துக்கொண்டபகையா லிருண்ட நெஞ்சினேயுடைய கொடிய மன்னனடைக்கலமாக முன்றன்னுட்டிலே வந்த யூதரை யடிமைகளென்று பாவித்து நாடோறுஞ்செய்த வருத்தத்தைப் பொறுக்கமாட்டாமல் மெலிந்தெல்லாருங் கூட்டங்கூட்டமா யழுதகண்ணீர்தானே படையாகநின்று அந்நாட்டை முழுதுங் கெடுத்ததென்க.

24. நொந்துநொந்தழுதவோதை நுழைந்துயர்வானத்துச்சி
வந்துவந்தருளின்மிக்கான் வருந்தினர்க்கிரங்கிக்குன்றின்
முந்துநின்றருணமேய்த்த மோயிசன்விளித்தோர்சூரல்
தந்துநின்குலங்கொல்கோன்கட் சடுதிதூதேகுகென்ருன்.

உரை.—அங்ஙன மன்ஞர் நொந்துநொந்து நாடோறு மழுதவோசையே வானத்தினுச்சி நுழைந்துவந்து தயையின் மிக்கநாத னதைக்கேட்டு வருந்தின யூதர்க்கிரங்கி மலையின் முன்னேயாட்டை மேய்த்திருந்த மோயிசனேயழைத் தவன்கையிலே யொருபிரம்பினேத்தந்து உன்குலத்தாரை வருத்திய கொடியமன்னனண்டைக்குச் சீக்கிரமாய்த் தூதாகப் போவென்ருனென்க.

25. கொடியகோன்வெருவலன்ஞன் சூலேவுறிவெருவப்பேசி
விடியமாபூசையாக விடுதியென்றவன்விடாதேல்
நெடியசூரலேச்சூழ்ழோங்கி நிருபனேடெவருமஞ்சக்
கடியதோர்துயராங்குய்த்தென் கதத்திறல்காட்டுகென்ருன்.

உரை.—நீ யக்கொடுங்கோனுக்கஞ்சாம லவன் சூலேந்தஞ்சும்படி பேசி நாளேயுதயத்திலே நான் கட்டளேயிட்ட பூசையாம்படி யூதரைவிடுவாயாகவென் றவனேடு சொல்லி யதற்கவன் விடானுயி னிந்தச் சூரலேயோங்கி யிராசாவோ டனைவரு மஞ்சும்படி கொடியதுன்பங்களேக்கொண்டு விட்டு என் கோபத்தின் வல்லமையைக் காட்டுவாயாக வென்ருனென்க.

26. ஓளியிற்சொன்னயாவு முணர்ந்தமோயிசன்போய்க்கூற
வாளியிற்கொடுங்கோன்கேளா தாங்கவனெறிந்தசூரல்
வாளெயிற்றடுஞ்செம்பாந்தள் வடிவெடுத்தெழுந்தங்காடி
நீளெயிற்றழலுங்கட்டீ நிறையும்விட்டுடற்றிற்றன்றே.

உரை. — ஆண்டவன் சொன்னதெல்லாவற்றையு மொழுங்கோடு கேட்ட மோயிச னிராசாவினண்டைக்குப் போய்ச்சொன்ஞன், சொன்னவளவிலே யாளியிலுங் கொடிய மன்னனிணங்கிக் கேளாதிருக்கால் மோயிசனவன் முன்னே தானேந்திய பிரம்பை யெறிந்தான், எறிந்தபிரம்புங் கூர்ந்தவெயிற்றைக்கொண்டு கொல்லுஞ் செம்பாம்பினுருவத்தையெடுத் தங்கெழுந்தாடாநிற்க நீண்டபல்லின் வழியாகவுங் கண்வழியாகவு நிறைய நெருப்பினேவிட்டுச் சீறுநின்றதென்க.

27. சாத்திரமாயவிஞ்சைத் தன்மையிலவரும்பற்பல்
காத்திரங்காட்டியன்னார் காட்டியவரவைத்தேவ
சூத்திரவரவுநுங்கத் துடர்ந்துமோயிசன்வால்வவ்வி
வேத்திரமாயதன்மை வேந்துகண்டஞ்சினானே.

உரை.—அதைக்கண்ட விராசன் மாயவித்தைக்காரரை யழைப்பித்து அவர்களும் பிரம்புகளைப்போட்டுப் பாம்புகளாகத் தோன்றும்படி செய்தான், ஆயினு மவர்காட்டிய பாம்புகளெல்லாவற்றையுந் தேவசூத்திரத்தால் முன்றோன்றின பாம்புவிழுங்கிற்று. அப்பொழுது மோயிசன் போய்த் தன்பாம்பின் வாலைப்பிடித்தவளவிலே முன்னிருந்தபடி பிரம்பாகநின்றது. இதெல்லா மிராசாக்கண் டுள்ளஞ்சினானென்க.

28. அஞ்சினானெனினுந்தேவ வருச்சனைக்கிடஞ்செய்யாத
நெஞ்சினான்கொடுமையாற்ற நீரொரிக்கமலத்தன்னந்
துஞ்சிவாழ்பொய்கைபோகிச் சொன்னவைமறுப்பாயாயி
னெஞ்சிலாத்துயரத்தாழ்வா யென்றுமோயிசன்சொல்கின்றான்.

உரை.—அங்ஙனமன்ன னஞ்சினாலுந் தேவபூசைக்கிடங்கொடாமற் றன்கொடுமையின் வேகத்தையாற்றும்படி நீரிற்றவழு நெருப்பாகிய தாமரையின் பள்ளியின்மே லன்னங்களுறங்கி வாழாநிற்கு மொருதடாகத்துப்போகையில் மோயிசன்கூடப்போய் நான் சொன்னதை நீமறுப்பாயாகில் முடியாததுன்பங்களிலே யமிழ்ந்துவாயென்று சொன்னானென்க.

29. சொல்லியவிசையிலேந்துஞ் சூரலைச்சுழற்றிநிற்பக்
கல்லியமலர்கள்வாடக் கயலினந்தளர்ந்துமாள்க
வுல்லியர்மயங்கயாரு முண்ணுநீரின்றிச்சோரப்
புல்லியபுனல்கள்யாவும் புண்ணினீராயிற்றன்றே.

உரை.—மோயிச னதுசொன்னவளவிலே தானேந்திய பிரம்பினை மேலேசுழற்றினவுடனே நீர்மலரெல்லாம் வாடவுங் கெண்டைமுதல் மச்சங்களெல்லாஞ் சாகவுங் கற்றோரெல்லாரு மதிசயித்து மயங்கவும் மற்றெவருமுண்ணும்படி நன்னீரின்றிச் சோரவு மங்கிருந்த பலவகைத் தண்ணீரெல்லாமிரத்தமாக நின்றதென்க.

30. மீட்டருஞ்சூரல்வீசி வீழ்ந்தனநுணலைமாரி
தீட்டருஞ்சயனமாடஞ் சித்திரக்கூடம்யாவு
மீட்டருங்கனகச்சாலை யிவைமுதலிடங்கடோறும்
வாட்டருந்துயர்கொணாட்டின் மல்கியநுணலையீட்டம்.

உரை.—மீளவு மோயிசனரிய சூரலைவீசாநிற்க வெங்குந்தவளைகள் மாரியாகப்பெய்தன, பெய்தமிகுதியா லிராசாப்படுக்கை வீடுஞ் சித்திரக்

கூடங்கள் பொக்கிஷச்சாலை யிவைமுதலான விடங்கடோறு மொன் றும்விடாமல் முடியாததுன்பங்கொள்ளும்படி நாடெங்கு நிறைந்த தவ ளைகளே மிக்கனவென்க.

31. பண்ணிகலிசையாற்கோகு பயன்படாதென்னவன்று
னெண்ணிகள்விடாமைநாத னேவலிற்சூரலோங்கி
யுண்ணிகளெண்ணில்மொய்ப்ப வுழிதொறும்வெருவுமொய்த்துப்
புண்ணிகழ்கிடந்தநாடு பொருவிலாவருந்திற்றன்றே.

உரை.—வீணையினினிய வோசையாற் கழுதைபயனைக்கொள்ளா ததுபோல வவ்வரசனுஞ் செய்ததைக்கண்டு பயனைக் கொள்ளாம னினைத்த பகையையும் விடாமலிருந்திறு லாண்டவன் கட்டளையினுல் மோயிசன் பிரம்பினையோங்கின வளவிலே மட்டின்றி யுண்ணிகள் நிறைய மொய்த்தன, அவற்றலெங்குநிறைந்து ஒருபெரும் புண்ணாக நின்ற வந் நாடு நிகரின்றி வருத்தத்தைக்கொண்டதென்க.

32. தீயினங்குளித்தநெஞ்சான் செருக்குளத்தறு துசீறத்
தூயினம்வெருவமீண்டு சூரலையாட்டுந்தன்மைத்
தீயினமெண்ணுமீறு மின்றியேயெவணுமூய்த்து
வீயினமலர்ந்தநாடு வீந்ததோர்பிணத்திற்றுமே.

உரை.—நெருப்பினைக்குளித்த கொடியநெஞ்சா ஞங்காரத்தைவி டாமற் சீறுநிற்க நல்லோரெல்லாரும் வெருவும்படி மீளவும் மோயிசன்பி ரம்பினை யாட்டினவளவிலே மட்டு முடிவுமின்றி யீக்களே யெங்குந்திர ண்டு மொய்த்ததனுல் முன் பூமலர்ந்தநாடு செத்தபிரேதத்தின் தன்மை யாய்த் தோன்றிற்றென்க.

33. வெருவுறவரசன்போக விடைசெயவிடருநீங்கு
முருவறவிடர்கணீங்க வுரைத்தவைமறுத்துச்சீறச்
செருவுறச்சாதியோங்கச் சிந்துரமுதன்மாவெல்லாந்
தருவறுவுணராநோயாற் றளர்ந்துநொந்திறக்குமாதோ.

உரை.—அஞ்சினவளவிலே மன்னன் யூதரைப்போகவுத்தாரஞ்செ ய்வா னவ்வளவிலே தோன்றியதுன்பங்களும் நீங்கும், நீங்கியவளவிலே மீளவுமவன்முன் சொன்னதைமறுத்துச் சீறுநிற்க மோயிசன் திரும்பிச் சூரலையோங்கிறு னோங்கிய வளவிலே யானைமுத லுள்ளவிலங்கினங்க ளெல்லாம குணங்கெட்டு மற்றெருவனும் கண்டுபிடியாத நோயைக்கொ ண்டு சாகாநின்றனவென்க.

34. சுட்டநோயாறிறுறுத் துகடருந்தருக்குநீக்க
விட்டநோய்போராவேகத் திவன்சுழல்சூரறன்னுற்
குட்டநோயரசனுதி கொண்டுளங்குலைந்தார்யாரும்
பட்டநோயொன்றுமின்றிப் பரிவறயூதர்வாழ்ந்தே.

உரை.—தீயாற்சுட்ட புண்ணுறினும் பாவமிகுதியா லவ்வரசன் கொண்ட வாங்காரமாறுமையினு லதைநீக்கும்படி யாண்டவனவற்கிட்ட முற்சொன்ன துன்பங்கள் போராமலு மேரியிசன்றிரும்பிச் சுழற்றின சூர லினு லரசன்முத லங்குள்ள வனைவருங் குட்டவியாதியைக் கொண்டா ரந்த நோய் யூதர்களுக்குள்ளே யொருவனுக்காகிலும் வாராமற் றுன்ப மொன்றின்றி யூதர்வாழ்திருந்தாரென்க.

35. உலைமுகந்தருந்துந்தீய்நெஞ் சுருவுறச்சூரலோங்கி
யலைமுகந்தருந்தியையென் றழன்முகிலார்த்துமின்னிச்
சிலைமுகந்தருந்திக்கான்ற சீரொனப்பெய்தவாலி
கொலைமுகந்தருந்தியெங்குங் கொல்லுயிரளவொன்றுண்டோ.

உரை.—மீளவு நெருப்பினைமுகந்துண்ட நெஞ்சினையுடைய மன் னனஞ்சும்படி பிரம்பினையோங்கிய வளவிலே கடலினீரைமுகந் தொரு கணத்திலெழுந்த வழலைக்கொண்ட மேகங்கள் மூடியார்த்து மின்னிப் பெருங்கல்லுகளை முகந்துவிட்டாற்போலத் திரளாய்ப் பெய்தவாலங் கட்டிகள் எங்குமட்டின்றி யுயிர்களைக் கொன்றனவென்க.

36, மதங்கலந்தரசன்கொண்ட மறங்கழிந்திலனுந்தன்மை
கதங்கலந்தசைத்தசாதி கடுகியபதங்கமெங்குஞ்
சிதங்கலந்தலர்ந்தநாட்டிற் சிறுபுலொன்றின்றியாவு
மிதங்கலந்திமைக்குமுன்ன ரிற்றழித்தாயிற்றன்றே.

உரை.—மதத்திற்பொங்கி யரசன் சாதித்த சலத்தைவிடாமையால் மீளவும் வெகுண்டசைத்த பிரம்பினுல் விரைந்து திரளாய் மொய்த்த விட்டில்களே குளிர்ச்சிபடமலர்ந்த வந்நாட்டி லொருபசும்புல்லில்லா தபடி யெல்லாமு மொருநிமையிமைக்கு முன்னே யிற்றழித்தனவெ ன்க.

37. துச்சிறையுளம்போன்றள்ளுந் தொகுதியாலிருள்மொத்தா
கைச்சிறைகடக்கறேற்றுக் காற்சிறையாகியெங்கு [டாக்
மெய்ச்சிறைபட்டயாரும் வெருவியார்த்தலறிநோக
மைச்சிறைபட்டநாடு மறச்சிறைநரகொத்தாமால்.

உரை.—அத்தனை யாக்கினைகண்டு நடுங்கித் தெளியாதகொடுமன் னனுள்ள மிருண்டதன்மைத் தெங்குமள்ளத்தக்க நெருங்கியடர்ந்தவி ருள் மொய்த்ததனு லாடமாட்டாதகைகள் சிறைபடவு நடக்கமாட்டா தகால்கள்சிறைபடவுஞ் சரீரமெல்லாஞ் சிறைபட்டு நின்றவெல்லாரும் வெருவிக்கூப்பிட் டலறி நோம்படி யிருளாற்சிறைபட்ட வந்நாடு பாவ த்திற்குச் சிறையாகிய நரகத்தின் றன்மையாத் தோன்றிற்றென்க.

## IV. வேறு.

38. அங்கடைகலமாயடைந்தவராளென் ருக்கியகொடுவினை
மாருய்
பங்கடைகொடியவேந்தனைத்தணிப்பப் படியுளவேந்தராள்பரமன்
வெங்கறைநீகமுண்ணிகளீக்கள் விலங்கிஞேய்குட்டநோயாலி
சங்கடைபதங்கமல்கிருளென்னுஞ் சபித்ததோர்சாபமொன்பது
வே.

உரை.—எசித்துதேசத்தி லடைக்கலமாக வந்த யூதரை யடிமையாக்கிய தீவினைமாருத கொடிய வரசனுடைய வாங்காரத்தைத் தாழ்த்தும்படி பூவுலகினரசரெல்லாரையு மாளாநிற்கும் பரமநாத னவனைச்சபித்திட்டசாபங்களொன்பதாவன: இரத்தத்தவளை யுண்ணி யீ விலங்கின் நோய் குட்டநோ யாலங்கட்டி விட்டில் இரு ளிவையொன்பதென்க.

39. கான்முகம்புதைத்தகண்மலர்நாட்டிற் கலக்கமுற்றிடந்தொ
றுமியாரும் [யூதர்
வான்முகம்புதைத்தமுகின்முழக்கெஞ்ச மயங்கியார்த்தலறமற்றி
தேன்முகம்புதைத்தமலரெனவங்கோர் சிதைவிலவாழ்தலைக்கண்
டே [ன்.
யூன்முகம்புதைத்தவேலரசஞ்சி யொருங்ககன்றேகுமினென்பா

உரை.—வாசமதுவைப்பொழிந்த மலரைப்பூத்த வந்நாட்டிலெங்குமெல்லாரும் வானத்தின் மேகங்கள் முழங்கின வோசையைமறைக்கும்படி மயங்கி முழங்கியலருநிற்க யூதரோவென்னி லதிலேதேனேடு மலர்ந்த பூப்போல வொருகேடுமின்றி வாழாநிற்பதுகண்டு ஊத்தைசொரிதற்குக் காரணமான வேலையேந்திய கொடியவரச னஞ்சி யெல்லாருமொருப்பட்டுப் போவீர்களாக வென்பானென்க.

40. என்பதுவீரமோயிசன்றன்கை யெடுத்திடர்நீர்ப்பதுமொ
ன்ருய்த் [யா
துன்பதுநீங்கவரசுளத்திகன்று தொழும்பராய்நின்மினென்றமை
லொன்பதுசாபநிறைநிறைதுடர வுவமியாமதுகையோனிட்ட
பின்பதுகணியாஞேவெனச்சினந்து பெயர்ப்பருமிடுக்கணுய்த்
திட்டான்.

உரை.—போங்களென்று மன்னன் சொன்னவளவிலே மோயிசன்றன்கையையெடுத்தோங்க வந்த துன்பமு நீங்கும், நீங்கியவளவிலே மீளவு மரசன்பகைத்தடிமைகளாக நில்லுங்களென்றவரை நிறுத்துவானென்றதனுற் சொன்னவொழுங்கோ டொன்பதுசாபமு மொன்றின்பின்ஞென்றை நிகராதவல்லமையுடைய நாத னந்நாட்டிற் கிட்டபின்னரிதுவுமெண்ணுதிருப்பாஞே வென்றுசினந்து பெரியதோராக்கினை யிட்டானென்க.

41. கண்முழுதட்டவிருளிராநடுவிற் கதத்தளவருந்திறன்மிக்க
விண்முழுதன்றிமண்முழுதிறைஞ்சும்வேந்தர்வேந்தனாநொடிபொ
மண்முழுதாண்டகோன்றலைமகனு மற்றவர்தலைமகர்யாரு [ழுதின்
மெண்முழுதின்றியிறந்துயிர்செகுப்ப வெசித்துநாடெங்கணுங்
கொன்றான்.

உரை.—ஆண்டவனெசித்தார்க்குச் சினந்திட்ட பத்தாஞ் சாபமே தென்னி லிருண்ட விராவினடுவிலே கோபத்தினளவாக வல்லமையுடைய வானு மண்ணும் வணங்கு மரசர்க்கரசனாகிய கத்தா வோராநொடிநேரத்தி லந்நாட்டைத் தனியாண்ட கொடியவரசன து தலைமகனு மற்றவர்தலைமக்களு மெல்லாருமட்டின்றி யிறந்துகிடக்கும்படி யெசித்து நாட்டி லெங்குங் கொன்றானென்க.

42. ஒல்லெனவுளைந்துகண்புதைத்தலறி யுடன்றவிக்கடவுளோ
டெதிர்ப்ப [தஞ்சி
வல்லெனவெவரோமற்றெமையொருங்கு மடிப்பனோவெனவுளத்
யல்லெனவெண்ணாதரசன்மோயிசனை யழைத்துமரிக்கணத்தெழு
கச் [ங்ககன்றார்.
சொல்லெனவிளைப்பவனைவருமுவந்து துணுக்கெனவெழுந்தொரு

உரை.—அதைக்கண்டெல்லாரு மொல்லெனவலறிக் கண்ணைப்புதைத்தழுது இத்தன்மைத்தாகிய கடவுள் கோபித்தா லவனோடெதிர்க்கும்படி வல்லவனாரோ வினிநம்மையெல்லாரையு மிங்ஙனேகொல்வானோவென் றழுதஞ்சி நடுச்சாமமென்று பாராம லந்நேரத்திராசா மோயிசனையழைப்பித் துன்னினத்தாரெல்லாரு மிந்தக்கணத்திலே தாமதமொன்றுமின்றிப்போகச் சொல்வாயாக வென்றமையா லவரெல்லாருமுவந்து சீக்கிரமா யகன்றுபோனாரென்க.

43. இற்றியாவையுமிவ்விளவருன்காட்டி யெசித்திடைச்சிதறிய
வெருவின் [ர்
வெற்றியாலியூதர்தஞ்சிறைதீர்த்து மிடைந்தனதெரிவையரிளைஞ
முற்றியாங்கிழவரிவரலதரும்போர் முரண்படமலைப்புயவீரப்
பெற்றியாரறுநூறாயிரர்கடல்சேர் பெருஞ்சுரத்தேகினரன்றே.

உரை.—இவையெல்லா நீங்கள் கையிலேந்திய வித்திருக்குமாரன்றானே செய்துகாட்டி யெசித்து நாட்டிலெங்குஞ் சிதறின வெருவினாற் கொண்ட வெற்றியினா லியூதர்பட்ட சிறையை மீட்டான், அங்ஙனமன்று மாதர்களுஞ் சிறுபிள்ளைகளுங் கிழவமாருமன்றிப் போர்பொருதற் கேற்ற மலையிறைத்த புயங்களையுடையவீரரோ யாறுநூறாயிரங் குறையாமற் கடலைநோக்குஞ் சுரத்துவழியாகப் போனாரென்க.

44. விண்ணுகவார்த்துவீழுருமன்ன வேந்துமீண்டுலம்பியையெ
ன்னப் [தீக்
பண்ணுகபசும்பொற்கொடிஞ்சியந்தேரும் பண்ணுகபுரவியுஞ்செந்
கண்ணுகபடுமாமதகரிமாவுங் கடிந்தனர் தகைப்பனென் றயில்
கொண் [துடர்ந்தான்.
டெண்ணுகவிடமற்றபயர்மாகடல்சூழ்ந் தெய்தகோல்பின்னுறத்

உரை.— யூதர்போனபின்பு மீளவுமவ்வரசன் மேகத்தினின்று முழங்கிவிழுமிடிபோலவார்த்துப் பொருக்கெனத் தேர்களுங் குதிரைகளும் யானைகளும் பண்ணுகவென்றுபோன யூதரைத்தடுப்பேனென்று தானே யெண்ணப்படாத வீரர் கடல்சூழவர வெய்தவம்பினுங் கடிதாய் முடுகித் துடர்ந்தானென்க.

45, நோக்கியநோக்கந்திசைத்தொறுந்தீக்க றாக்கருஞ்செருக்
கொடுநோக்கித்
தாக்கியதாக்கினுடன்றுளந்தாக்கச் சலத்தடுமடங்கலேறன்னு
னீக்கியபாக்கத்தகல்வரைத்தாக்க நெருங்கியகானெடுமறைவை
யாக்கியபடத்திலார்த்தகார்முகில்விட் டடைத்தனன்மதுகையி
ன்வல்லோன்.

உரை.—திசையெல்லாந் தீப்பற்றிவேதற்குக்காரணமாம்படி மாறு தவாங்காரத்துடனேநோக்கிப் பாய்ந்தபுலியினுங்கொடிதாய்ச்சினந்து தாக்கும்படி கொல்லுஞ்சிங்கத்தினேறொப்பான் றன்னகரைநீக்கி யகன்றயூதரைநெருங்கிவருகையி லிருபடைக்குநடுவிலே மறைவாக விரித்ததிரைச்சீலைபோல விடிக்குங்கரியமேகத்தைவிட்டு வழியடைத்தா னளவிறந்த வல்லமையுடைய நாதனென்க.

46. இப்படைதுடரப்புணரிமுன்னெருங்க விடைவரும்யூதருள்
வெருவ [க
வப்படைகடலைமோயிசன்பிரம்பா லடித்தலிற்பளிக்கொளிச்சுவர்
ளொப்படையலைகள்பிரிந்தகன்றிருபா லுயர்ந்துநின்றிடத்திவர்பு
க்கு [ர்.
வெப்படையரசனுளத்துடன்றுலம்ப விருப்புடனியூதர்கள்போனு

உரை.—மாற்றார்படை பின்றுடரவுங் கடலேமுன்னெருங்கவு நடுவேநின்றயூத ருள்ளே வெருவாநிற்ப மோயிசன்றன் பிரம்பாற் கடலையடித்தான், அடித்தவளவிலே யலைகள் பிரிந்து பளிங்குச்சுவராக விருபக்கத்துயர்ந்துநிற்ப யூதர்நடுவே கடல்விட்டவழியே புகுந்து கொடியமன்னனிதைக்கண்டு மனதிலேவெந்து சினந்துமுழங்காநிற்ப யூதரெல்லாருங் களிகூர்ந்துபோனாரென்க.

47. மறங்கொடுகதஞ்சால்மருட்டியமனத்தில் வருஞ்சிதைவுணர்கிலாக்கொடியோ
னறங்கொடுபுக்கயூதனைத்தடுப்ப வையெனத்தானையுந்தானும்
புறங்கொடுபிரிந்தபுணரிசெய்வழியே புக்குறிக்கடனடுவடைந்தா
றிறங்கொடுசினமுமாசையும்பெருகச் சேரிழிவறிகுவரொவரோ[ன்

உரை.—மறமுங்கதமு மிகுந்தமையான் மயக்கத்தைக்கொண்டமனதிலே வருங்கேடறியாத கொடியவரச னல்லறத்தின் றுணையாற்கடலுட்புகுந்த யூதனை மறிக்கும்படி சீக்கிரமாய்த் தானுந் தன்படையும்பிரிந்தகடல்செய்தவழியே புகுந்து நடுக்கடலிலே சேர்ந்தான், வல்லமையுடையார்க்குக் கோபமு மாசையு மிகுங்காலத்துத் தமக்குவருங்கேடுகளையவர்களுள்ளறிவாரில்லையென்க.

## V. வேறு.

48. நெடுமாகடனிகர்மாபடை யுறிமாகடனெறியே
நடுமாகடலடைகாலையி னமையாள்பவனவில்சொல்
லொடுமாகடல்மிசைவானவ னருவாயினவொருவன்
வடுமாகடலெனுதானையை மதியாவதைவகுத்தான்.

உரை.—கடலொத்தவப்படை கடல்வழிவந்து நடுக்கடலிலேசேர்ந்தபோது நம்மையாளுஞ் சுவாமிகட்டளையினுற் கடல்மே லரூபியாய்நின்ற வொருவானவன் கசடெல்லாமடங்கக்கொண்டகடலாகிய மாற்றார்படையைச் சங்கரித்தானென்க.

49. உரமற்றனர்கவசத்தொடு முறமுற்றனவுமவர்
சரமற்றனர்தருகத்தொடு சமமற்றனசமிதக்
கரமற்றனர்கருவிக்கொடு கழலற்றனர்கவிழச்
சிறமற்றனர்படைவிட்டெதிர் செருவுற்றனர்தெரியார்.

உரை.—நிகரில்லாத படைவீரர்கவசத்தோடு நெஞ்சினையும் வில்லோடுவம்புகளையும் பிடித்தவாயுதத்தோடு நிகரின்றிப்பொருத கையையுங் கால்களையுங்கவிழ்ந்துவிழும்படி தலைகளையுமிழந்துவெட்டுண்டுபோயெதிர்த்துத் தம்மேற் படையை விட்டுச் சண்டைகொடுத்தவராரென்று தெரியாதிருந்தாரென்க.

50. கோலில்லனபுதையோடுள குதையில்லனகொடிய
வேலில்லனவளையோடிரு மழுவில்லனவிரிநீண்
டோலில்லனவசியோடுயர் கதையில்லனசுளிவிற்
காலில்லனவடமோடொரு கடையில்லெனமடிவார்.

உரை.—கைப்பிடித்தவம்புகளுந் தூணியோடதிலுள்ளவம்புகளும் வேலுஞ்சக்கரமும் பெரியமழுவு நீண்டகேடகமும் வாளுந் தண்டாயுத

முநாணியோடுகோபித்தவில்லின்காலு மிவையெல்லாமில்லாதபடி முறிந்து மட்டின்றிச்சாவாரென்க.

51. உருள்பூட்டியநெடுமச்சில வுருள்காலிலவுகளி
மருள்பூட்டியபரிமாவில வருபாகருமிலமேற்
பொருள்பூட்டியவுயர்கூம்பில பொலிநீண்கொடியிலபொற்
றெருள்பூட்டியவிரிபாரில சிதைதேர்பலபலவே.

உரை.—சிலதேருக்கச்சின்றிச் சிலதேருக்குருளையின்றிச் சிலதேருக்குப்பூட்டிய குதித்துமருளிப்பாயுங்குதிரைகளின்றிச் சிலதேருக்குப் பாகரின்றிச் சிலதேருக்குப்பொற்கொடிஞ்சியின்றிச் சிலதேருக்குயரக் கட்டின நீண்டகொடியின்றிச் சிலதேருக்குப் பொற்பரப்பின்றி யிங்ஙனம்பற்பலதேர்கள் முறிந்துகிடந்தனவென்க.

52. பிரிவார்தமினெரிவார்கறை பிளிர்வார்வதைபெறுவார்
முரிவாரலைபுகுவாருள முணிவார்துயர்முதிர்வா
ரெரிவாருடல்கரிவாரிறந் திழிவாரிடையிடையே
யொருவாளியெய்யருவாயின வொருவானவனூறனல்.

உரை.—அருபியாய்நின்ற வொருவானவ னேரம்பினையெய்தவல்லமையினா லப்பகைவர்தம்முட்பிரிந்தெரிந்து இரத்தத்தைச்சிந்திப் பலரேசாவார், பலர்முரிந்துபக்கத்துநிறுவி நின்றகடலினலையுட்புகுந்துசாவார், பலர்சினந்துவருந்தியெரிந்துகரிந்து அங்கங்கேசாவாரென்க.

53. வலமாயினுமிடமாயினும் வருவாளிகளளவுண்
டிலதாயினும்வருவாளிகள் படுமல்லதுமிலையால்
பலவாளியிலொருவாளியும் பறிப்பாரிலதுயிருண்
டலதாறுயிருணுமோர்சர மலதெல்லையுமிலையே.

உரை.—வலத்திலுமிடத்திலும்வந்துவிழு மத்திரங்கள் மட்டளவின்றியாயினு மவற்றுள்படுஞ்சரமன்றிப் படாததில்லை, பட்டவம்புகளுடனேகொல்லு மதனூற்றனக்குப்பட்டவம்பைப் பறிப்பாரில்லை, மீளவுமொவ்வொருசர மாறுயிரையுண்ணு மிதிலேயுமுடிவில்லையென்க.

54. அழலக்குயவழலக்கரி யழலப்பரியயிலோ
டழலக்கதையழலத்தனு வழலச்சரமசியோ
டழலக்கிடுகழலப்புதை யழலப்படையெவையு
மழலக்குடையழலக்கொடி யழலத்திரம்விடவே.

உரை.—அவ்வானவ னேரக்கினிபாணமெய்ததனாற்றேரு மியானையுங் குதிரையும் வேலுந் தண்டாயுதமும் வில்லு மம்பும் வாளுங் கேடகமுந் தூணியு மற்றவாயுதங்களுங் குடைகளுங் கொடிகளுமழன்று வெந்தனவென்க.

55. அழிதாரொடுகடலாழியி னடிவீழ்வனவுயர்தே
ரொழிபாயொடுகவிழ்கின்றன வுருவொத்தனமதமே
கழிமால்கரிகழறிக்குளிர் கடலுட்புகல்கதிரோ
னெழில்வானுறவலைபுக்கன விருளொத்தனவெனவே,

உரை.—மேற்கொடியழிந்து கடலில்விழுந்தேர்கள் விரித்தபாயழிந் துகவிழ்ந்துவிழுமு கப்பல்கள்போலத் தோன்றின, மதயானைகளலறிக் கடலிலே புகுவது சூரியன் வானத்திலெழுந்து வருகையிற் கடலிலேபு குந்த விருளைப்போலத் தோன்றினவென்க.

56. முடிவானுறுமிரதத்துளர் சிரமற்றுகுமுடிகள்
வடிவாளியொடுரமற்றுகும் வடிவுற்றணிமணிக
ளடியோடுருகரமற்றுகு மழகுற்றவிரணிகள்
கடிதாயுலகொழிநாளுகு கணமொத்தனவெனவே.

உரை.—வான்மேலுயர்ந்த தேரினின்றவரசர் தலைவெட்டுண்டு சூழ் ந்த முடிகள்விழவு மார்பறுந்துபோ யணிந்தபலமணிகள் விழவுங் காலுங் கையுமற்றுப்போ யதிலேபுனைந்த வாபரணங்கள் விழவு முலகமுடியுங் காலத்துவானினின்று விழும் விண்மீன்கள்போலத் தோன்றுமென்க.

57. காராரொலிகடலாரொலி கறைபாயொலிகடிதூர்
தேராரொலிகரியாரொலி பரியாரொலிசிதறும்
போராரொலிமுரசாரொலி புகைவாரொலிபுனைசெய்
நேராரொலிமடிவாரொலி நிறைபாரொலிநிகரா.

உரை.—மேலேமேகங்களும் பக்கத்துக்கடலு நடுவேயூர்திகளு மி யானைகளுங் குதிரைகளு முரசுபறைகளு முழக்கத்தோடு கூடிய சிதை வாரொலியுங் கோபிப்பாரொலியுஞ் சாவாரொலியு மிவையெல்லாங் கூடி மயங்கிப் பாவிகளான பகைவரிடத்துக் கிளம்பின முழக்கத்துக் கிவ்வுலகி னிகரில்லையென்க.

58. மாறுமதகரிபட்டன வதைபட்டனவயமா
வேறுயுருளழிபட்டன வழிபட்டனமிளிர்தேர்
கூறுயுடல்குறைபட்டன குறைபட்டனகுருதி
யாறுயலைகிழிபட்டென வதிர்பட்டுறுமகடே.

உரை.—மதயானைகளுங் குதிரைகளும் பட்டன, உருளைகள்வேறு பட்டுத் தேர்களுமழிந்தன, கூறுகூறுயுடல்கள் துண்டித்ததனு லிரத்த மாறுகவோடிப் பக்கத்துநின்ற கடல்கிழிபடும்படி யதிர்ந்துள்ளே கலந்த தென்க.

59. செப்பாரிலதடமுனைக டிரள்மாள்தலிறிரளுந்
துப்பாறெனவுதிரத்திரை துடராழியின்விரவ
வப்பாறிவழலேசேப்பலி னதுசெங்கடலெனவே
யொப்பாறிலகதையாவரு முணரப்பினருரைத்தார்.

உரை.— சொல்லுந்தன்மைத்தன்றி வல்ல தானைகளின்றிரள்மடிந்திறத்தலாற் சிவந்தாறுகத் திரண்டோடுமிரத்தங் கடலோடுகலந்தவளவிலே தெளிர்ந்தகடலுஞ் சிவந்ததனு லக்கடல் செங்கடலென்று நிகரின்றி யன்றுநடந்த சரிதை யெவருமறியும்படி பெயரிட் டிந்நாளு மப்பெயர்வழங்காநிற்குமென்க.

60. நானேருளதிசையெங்கணு நானுபடைநணுக
மேனேருளமுகிலின்றுளி மேனேர்கணைவிழுகக்
கானேருளபடைகண்டிலர் காணுர்விடுகரமும்
மானேருளமழிவஞ்சகர் மாறுதுளமருள்வார்.

உரை.—நாற்றிசையெங்கும் பலவகையாயுதங்கள் தம்மேனெருங்கவு மழையின்றுளியினுமடர்ந்த வம்புகள் தம்மேல்விழவு முயிரையுண்ணுங் கூற்றனோடொத்த கொடிய படைகள் விழும்போ தவற்றைக் காணுமலு மவற்றையெய்த கையைக் காணுமலு மான்கூட்டம்போலே மனத்திலஞ்சி யழியும் வஞ்சகர் நிகரொன்றின்றி மயங்காநிற்பாரென்க.

61. முன்னேரினர்பின்னேரினர் புடைநேரினர்முகிலி
னன்னேரினரின்னேரின ரன்னேரினரலைமே
லென்னேரினரொன்னேரின ரொன்றேயவரொணினுங்
கொன்னேபடைகொண்டாருயிர் கொன்றுன்கரங்குறிப்பார்.

உரை.—இங்ஙனமயக்கமாதலா லதோநம்மைச் சிதைத்துக் கொல்பவர் முன்னே நிற்பாரென்பார், பின்னே நிற்பாரென்பார், பக்கத்து நிற்பாரென்பார், மேகத்துநேர்மேனிற்பாரென்பார், இங்கேநிற்பாரங்கே நிற்பாரென்பார் கடலின்மே லெமக்கு நேர்நிற்பாரென்பார், இவரல்ல வெமக்கு நேர்நிற்பாரென்பா ரவரொன்றுலும் வீணுய்ப்படைகளை விட்டுத் தம்மைக்கொல்லுங் கையைக்குறிப்பாரென்க.

62. கட்டுற்றெழுகன்றுற்றிய கதமுற்றியகயவ
ருட்டுற்றெழுபகையொத்தன வுறவிட்டிசையுயர்நேர்
பட்டுற்றெழுமுகிலொத்தெழு பகழித்திரள்விடுவார்
விட்டுற்றெழுசரம்விட்டனர் மிசைபட்டுருவிடுமால்.

உரை.—தம்மைக்கொல்வா ரெங்கேயுள்ளாரென்று காணுமையாற் கண்வழி நெருப்புப்பொங்கிவிடும் கோபமிகுதியாலப்பாவிக ளுள்ளே கொண்ட நிறைந்த பகையின் விசையோடு போம்படி யாகாயத்தினே ராக வெழும்பின மேகம்போலத் திரளாயம்புகளை யெய்வார், எய்தவம்பு

களோவென்னில் மேற்பறந்துபோ யெய்தவர் மேலேமீளவும் விழுந்து பட்டுருவியவனைக்கொல்லுமென்க.

63. அண்டத்துயருலகாளிறை யவனேடெவர்பொருவார்
மண்டத்துயர்வலியற்றன மெனமற்றவர்மதமா
கண்டத்துயர்பொலிவேந்தொடு கடிதோடியகடையிற்
சண்டத்துயர்கணையூதர்கள் தனியுற்றனரொருங்கே.

உரை.—மடிந்தாரொழிய நின்றமற்றவ ரிவையெல்லாங்கண்டு வா னுலகில் வீற்றிருந்தானுங் கடவுளோடு போர்செய்ய வல்லவரார்? நாமி க்க துன்பங்களை யடைந்து பெலனழிந்து கெட்டோமேயென்று தாமு மதயானைமேனின்ற வரசனுஞ் சீக்கிறமாய்ப் புறங்கொடுத்தோடினர், ஓடத்துடங்கினபொழுதே விரைந்து முன்னேபோன யூதரெல்லாரு மறு கரையேறினரென்க.

## VI. வேறு.

64. கரைமேலிவர்சென்றனரொன்று கதத்திறையோன்கடற்றெ
டிரைமேலடற்சூரலைநீட் டெனநீட்டியசீர்திரண்ட [ண்
வரைமேல்வரைவீழ்ந்தன வாங்கலைவீழ்ந்தவர்மேற்கவிழ்ந்து
குரைமேலெழவுட்குளித்தாழ்ந்து கொடும்பகைவர்மடிந்தார்.

உரை.—யூதரெல்லாருங் கரைமேற் சென்றவளவிலே சினத்தைக் கொண்டநாதன் கடலின்மேற் பிரம்பினை நீட்டுவாயாகவென்று கட்ட ளையிட்டமையால் மோயிசனதை நீட்டினவுடனே திரண்டமலையின்மே லே மலைவிழுந்தாற்போல விருபக்கத்துச் சுவராய் நின்றவலைகள் விழு ந்து ஓடினபகைவர் மிசையேகவிழ்ந்து மேலே நுரைதிரளாயெழும்படி யுள்ளேயவரெல்லாரு மமிழ்ந்தியிறந்தாரென்க.

65. கடைநாள்கடனீர்குடைந்து கழறிப்பொங்குங்கதம்போ
லுடைமால்கரிகள்பரிக ளுருடேருழவருளமற்
படைநால்வகையுங்குடையப் படமேற்படக்கீழ்படவே
புடைவாங்கலையோடலையப் பொலியார்ப்புலகிற்பொருவா.

உரை.—உலகமுடியுங் கடையுகத்திலே கடல்குடைந்து முழங்கிப் பொங்குந்தன்மைத்து மதயானைகளும் புரவிகளுந் தேர்களும் படைவீ ரரு மிந்நால்வகைப்படைகளுங் குடையப்பட்டு மேலுங்கீழுமாகத்து மாவி யிருபக்கத்து விழுந்து கவிழ்ந்த வலைகளோடலையப்பட்டபொழு தெழுந்தமுழக்கத்திற் கிவ்வுலகி னிகரில்லையென்க.

66. ஓராயிரமால்கரிமா வோராயிரநூறயமா
வீராயிரமோரொழுநூ றுருடேறொறிதும்மியவே
லாராயினபற்கோடி யமிழ்ந்திநிமைப்பிலனைத்தும்
பேராயினநீர்வலையிட்ட பிரானிறைவாரினனுல்.

உரை.—அங்ஙனமாயிரம்யானையு நூறுயிரங்குதிரைகளு மீராயிரத்தெழுநூறுதேரு மக்கினிபுறப்படவிட்ட வேலுடைய வீரர்பலகோடிகளு மொருகணத் திலமிழ்ந்திப்போ யத்தனையெல்லாவற்றையுங் கடலினலைகளைப் பெரியவலையாக விட்டநாத னுருப்படவாரிக் கொண்டானென்க.

67. போர்மீதேந்தும்புரவி கரிதேர்பொருனர்பொருவாச்
சீர்மீதேந்துஞ்செருக்குற் றெவையுங்தெளியாநெஞ்சி
னோர்மீதேந்துந்திறன்கொ ணிமலற்கஞ்சாக்கொடுங்கோ
னோர்மீதேந்தும்படையோ டிமைப்பிற்சிதைந்தானழிந்தான்.

உரை.—போர்க்களங்களைக்கடந்து மிக்கவெற்றியாலேந்திய குதிரைகளும் யானைகளுந் தேர்களும் படைத்தலைவரு நிகராதவல்லமையென்றெண்ணினதரு லாங்காரத்தைக்கொண் டெத்தாலுந் தெளியாதநெஞ்சிரு லுவமியாமலுயர்ந்த வளவிறந்த திறத்தையுடைய நாதனுக்குச் சற்றுமஞ்சாதிருந்த கொடியமன்னன் றன்னுயர்ந்தபடையோடு தானுங்கூட வொருகண்ணிமைத்தவளவிலே கெட்டழிந்து செத்தானென்க.

68. கரைமேனின்றூர்கொடிஞ்சி கழிதேர்த்திரள்பற்றீவின்
புரைமேன்மிதக்கவாமைப்புரையிற்கிடுகுமிதக்கக்
குரைமேலெழும்போற்குடைவெண் கொடிவெண்கவரிமிதக்கத்
திரைமேன்மகரத்திரள்போற் செருமாமிதக்கக்காண்பார்.

உரை.—அப்பொழுது கரைமேல் நின்றயூதர் கொடிஞ்சியில்லாத விரதங்கள் தீவுகளைப்போலத் தோன்றி மிதக்கவுங் கேடகங்களாமைகள்போல மிதக்கவுங் குடைகளுங் கொடிகளும் வெண்சாமரைகளு நுரையைப்போல மிதக்கவு மதயானைகளுங் குதிரைகளு மகரமீன்களைப்போல மிதக்கவுங் காண்பாரென்க.

69. அல்லின்வண்ணத்துடலோ ரணியாத்திரண்டுபிரியா
தெல்லின்வண்ணத்தெரிவா டணராதிணைந்துதிரிய [ய்
வில்லின்வண்ணத்தொளிர்தெண் டிரைமேன் மிளிர்மின்னுடுமே
செல்லின்வண்ணத்தெவனுந் திரண்டுமிதக்கக்காண்பார்.

உரை.—இராப்போலக் கரியவுடலையுடைய பகைவர் கூட்டங்கூட்டமாய்த்திரண் டொருவனொருவனைக் கட்டிக்கொண்டு பிரியாமலுங் கதிரைவிட்டெரியும் கைப்பிடித்தவாளை விடாமலுங் கூடித்திரிந்து விளங்கிய கடலின்மேலே மின்னிக்கொண்டு மேய்ந்துதிரியு மேகங்களைப்போல வெங்குர்திரளாய் மிதக்கக்காண்பாரென்க.

70. மிகப்பட்டுருயர்வல்லிறைறயோன் விறலாற்களைசேர்ந்தவரோ
நகப்பட்டொருங்கேநவைபட் டுடன்றநண்ணார்கடலுள்
ளகப்பட்டமிழ்ந்தியலேமேன் மிதக்கவனேத்துங்கண்டே
புகப்பட்டழிக்கும்வினையின் பொலிசைசகாண்மினென்பார்.

உரை.—மிக்கவல்லமையுடைய நாதன் றிறத்தினூற் களைமேற்சேர்ந்த யூதரோ நகைக்கப்பட்டுப் பாவவினையா னிறைந்த தம்பகைவர் கடலினுள்ளகப்பட்டமிழ்ந்தி யவர்படையெல்லாஞ் சிதைந்து திரைகளின் மேல் மிதக்கக்கண்டு இதோவொருவன் மனத்திற் புகுந்தவினை யவனை யழித்துக்கொடுக்கும் பயனிது காண்மினென்பாரென்க.

71. பரியேகாவாவுயிரைப் பருகியூன்பெய்மருப்பிற்
கரியேகாவாவளிமுற் கடிதூரிரதங்காவா
வெரிவேல்காவாவெவையுங்காவா விறையோனருளிற்
புரிவேகாவாதனகால் புரையின்விளேவிதென்பார்.

உரை. — குதிரைப்படையு முயிர்களையுண்டு குருதிகளையுமிழ்ந்த கொம்பையுடைய யானைகளுங் காற்றிலுங் கடிதாயோடிய விரதங்களும் படைவீரரு மற்றெவையுங் காக்கமாட்டாதே யாண்டவன் றயையைப்புரிந்து தானன்போடு காவாறுயினுதலாலவ னுதரவில்லாதபடி காரணமான பாவந்தரும் விளைவிது தானென்பாரென்க.

72. நல்லதிலதேலமுதே நஞ்சாநஞ்சேயமுதா
மல்லதிலதேல்வினையே யமர்செய்துதைப்பநிற்பா
ரில்லதிலதேல்வினையே யிகல்செய்தவனைக்கெடுக்க
வல்லதிலதேயென்பார் வரையாத்தொழுதுமகிழ்வார்.

உரை.—நல்வினையில்லாதாயி னமிழ்துண்டாலு நஞ்சாமே, தீவினையில்லாதாயி னஞ்சினையுண்டாலு மமிர்தமதுதாமுமே, ஒருவனுக்குத் தன்றீவினை போர்செய்துதைத்துத்தள்ளுங் காலத்து நிற்பாரில்லை, அவ்வினையில்லாதவனைப் பகைத்தாலு மவனைக்கெடுக்க வல்லதொன்றில்லையென்பா ரளவுமின்றி நாதனைத்தொழுது மகிழ்வாரென்க.

73. சொல்வாய்தவிரச்சிறைதீர் சூதருவந்தப்புறம்போ
யெல்வாய்முகிலுமல்வா யெரித்தூணுருவுமிவர்முன்
செல்வாயிவர்சென்றெரிவாய் தினைத்தபாலைத்திணைவா
யொல்வாயழலுமாற்று துணுநீரின்றியுளைந்தார்.

உரை.—இங்ஙனஞ் சொல்லின்றன்மை கடந்தமுறையோடு சிறைதீர்ந்த சூதர்களிகூர்ந்தப்புறம்போய்ப் பகலிலே யொருமேகமு மிராவிலே யோரக்கினித்தூணு முன்னே வழியைக்காட்டத் தாம்பின்சென்று போ யழன்றபாலைநிலைத்திற் சேரும்போதெழும்பிய வழலையும் பொறுக்கமாட்டாம லுண்பதற்கு நீருமில்லாமல் மிகவும் வருந்தினுரென்க.

74. தொடையேநின்றதயையு நீதித்தொகையும்பிரியா
மிடையேநின்றவிறையோன் பணிப்பவேத்திரத்தாற்
புடையேநின்றகல்லைப்புடைப்பப் புனல்பாய்ந்தக்கல்
லிடையேநின்றுதுடர வினிதெண்ணிலர்சால்புண்டார்.

உரை.—தொடர்ந்த மாலையாகத் தயையு நீதியும்பிரியாம னிறைய க்கொண்டநாதன் கட்டளையைச்செய்ய மோயிசன் முற்சொன்னபிரம்பி னுற் பக்கத்து நின்றகல்லை யடித்தவளவிலே யக்கல்லினின் றுண்ணீர்ப் புனல் புறப்பட்டுப் பாய்ந்தோடி யவரப்பாற் பெயர்ந்துபோகையி லக்க ல்லும் பக்கத்துத் துடர்ந்துவர நீரில்லாதவிடமெல்லாங் குறையின்றி மட்டில்லாத சனங்களே மினிதாயுண்டாரென்க.

75. அவ்வாறொருகுரலைக்கொண் டவையாவையுஞ்செய்தெவ
விவ்வாறிளவலென்ன வொளித்தநாடேகுகின்றான் [னே
செவ்வாறுளத்தோன்பயந்தத் திசைதேடுவனோவென்று
வொவ்வாவெசித்தாருணர்வாரென மீட்டுரைத்தான்வானோன்.

உரை.— சொன்னதன்மையா லவற்றையெல்லாஞ் செய்தவனுரோ வென்னி லிவ்வழியாக விளவலாயொளித்தாற்போல வவ்வெசித்து நாட் டிற்குப்போகிற திருக்குமாரன்றானே யிவன்பயந்தங்கே போகிறானோ வில்லையோவென்று நன்றாயெசித்தார் தாமேயறிவாரென்றான் மிக்கயேல் மீளவு மிவற்றைச்சொன்னானென்க.

## VII. வேறு.

76. கடலுடையுலகெலாங் கலங்கவின்னவை
மிடலுடைவலியொடு விளங்கச்செய்தவ
னுடலுடையிளவலா யொளித்தபான்மையா
லடலுடையருளுணர் வமைந்துளானரோ.

உரை.—கடலையுடுத்த பூவுலகெல்லா முற்சொன்னதைக் கேட்டுஞ் சிக் கலங்கும்படி யிவற்றையெல்லா மளவிறந்த வல்லமையோடு செய்த நாதன்றானே மனிதனு யுடலைக்கொண்டு குழந்தையாய்த்தோன்றி யொ ளித்துப்போகிறவனைப்போலப்போ யளவிறந்த வனுக்கிரகத்தைச் செய் யும்படி நினைத்தானென்க.

77. தீய்வினைசெய்தபோ தெசித்துச்சீர்கெட
நோய்வினைசெய்தன னுனித்தநாடர்தாந்
தாய்வினைசெய்துமுன் சகோபுகாத்தலாற்
போய்வினையறுத்தருள் பொழியவுள்ளினான்.

உரை.—முற்சொன்னபடி யெசித்தார் கொடுமையோடு தீவினைசெய்தகாலத் தவர்செல்வமெல்லாங்கெடும்படி பலவருத்தங்களைசெய்தநாதன்றுனே யதற்குமுன் குணத்தோடவ்வெசித்தார்தாமே தாயைப்போலச் சகோபென்பவனைப் பேணினுரென்றதனுற்றுனே யிப்பொழுதங்கே போய்த் தீவினைகளையறுத் தருளைச்செய்யும்படி நினைத்தானென்க.

78. விண்டுளியிலாமையால் வியன்றபார்மிசை
பண்டுளியனைத்திலும் பசிபரந்துயி
ருண்டுளிசகோபுதன் னுயர்குலத்தொடு
மண்டுளியெசித்தன ரருள்செய்தாரரோ.

உரை.—மழைத்துளியொன்றின்றிப் பூருவத்திலகன்ற பூவுலகிலெங்கும் பசிபரந்துயிர்களையுண்ணும்போது சகோபென்பவன் றன்குலத்தோடங்கேபோ யண்டினவளவிலே யெசித்தாரவர்க்கு மிக்கவாதரவைச்செய்தாரென்க.

79. வேதமொன்றறிந்திலார் வேதங்கொள்குலங்
கேதமொன்றியதெனக் கிளர்ந்தவன்பொடு
மேதமொன்றிலவள ரகனுள்ளிட்டனர்
பேதமொன்றிலநயன் பெருகவீட்டினர்.

உரை.—எசித்தார்தாம் வேதத்தையறியாதவராயினும் வேதத்தையநுசரித்த சகோபென்பவனதுகுலத்துக்குத் துன்பம்வந்ததென்றிரக்கம்புரிந்து குறையின்றி விளையுமொருநாட்டையுந்தந்து வேறுபாடின்றித் தம்மோடொத்ததா யெல்லாநன்மையுந்திரளாய்க் கொடுத்தாரென்க.

80. தோன்முதலுடைமைசால் தொகுத்தங்கோச்சுசெங்
கோன்முதலளித்தகோன் பேணுங்கொளகையால்
வான்முதலவற்றெழும் வளர்சகோபவன்
கான்முதலினமெலாங் களையில்வாழ்ந்ததே.

உரை.—யானைமுதற்பலவுடைமைகளை யிவர்க்குத்தந் தந்நாளிலங்கிருந்தவரசன் றன்செங்கோலைமுதலா யிவர்க்குந்தந்திவரைப்பேணினதன்மையால் வான்முதலோனுகிய விக்கடவுளைவணங்கிய சகோபுமகனுகிய வானையன்முதற்றுவக்கியவனினமெல்லா மளவின்றியங்கேவாழ்ந்தாரென்க. (இக்கதையைவிரிவாகச் சித்திரகூடப்படலத்திற்காண்க.)

81. இக்குலத்திவன்பிறந் தெய்துவானென
வக்குலத்தினருவந் தருட்கைம்மாறுற
மைக்குலத்தொளிநலம் வகுப்பப்போயவண்
மெய்க்குலத்தறிவிட வன்றுமேவினுன்.

உரை.—முற்சொன்ன சகோபென்பவனதுகுலத்தி லித்திவ்வியகுழ ந்தை யுலகத்தையிரட்சிக்கவந்து மனிதனுய்ப்பிறப்பானென்றதனுற் ச கோபினத்துக் கெசித்தார்சொன்னபடிசெய்தவுதவிக் கவர்கைம்மாறடை யும்படி யப்பொழுதுதானே விளையாலிருளைக்கொண்ட வெசித்தார்க்கு ஞானவொளியைக்கொண்டுவிடும்படி தான்மனிதனுயபின் பங்கேபோய் மெய்யானவேதத்தை யவர்க்கிடத் திருவுளமாருனென்க.

82. மேவியகருத்தறிந் தரியவேதநூ
லேவியவிதியினே ரிவனங்கேகிய
தூவியமுகிலெனத் தோன்றுவானென்றூர்
பாவியமுறைக்கிது பயணமுள்ளினுன்.

உரை.—அங்ஙனநாதன் றிருவுளமானதன்மையறிந்த வேதநூலோ ரக்காலத்துத்தானே வரும்பொருளையுணர்த்தி யித்திருக்குமார னெசித் துதேசத்துக்குப்போ யருளைப்பொழிநத மேகம்போலத்தோன்றுவானெ ன்றெழுதிவைத்தா ரிப்படி யிந்நாளின்முடியும்படி யிப்பயணத்தைக்கொ ண்டானென்க.

83. உள்ளியவருணல மொளித்துச்செய்குவான்
றெள்ளியவமைதியீ தென்று தீயுளத்
தெள்ளியவரசுசெய் யிகற்பெயர்ப்பட
விள்ளியவுளத்துணர் வினைமுடிக்குவான்.

உரை.—எசித்தார்க்குச் செய்யும்படிநினைத்த தயையையொளித்து ச்செய்யும்படி நல்லசமயமிதுவென்று தீயமனத் திழிவுடைய கொடியவர ச னிவனைக் கொல்லவேணுமென்று வைத்தபகையினிமித்தமாகப் போ கிறதென்றுபேரிட்டு நினைத்தவற்றைமுடியாநிற்பானென்க.

84. மெல்லியவுருக்கொடு மிடலினேனுணர்
கல்லியகருணையின் கருத்திதாமெனச்
சொல்லியமிக்கயேல் தோன்றறாயடி
புல்லியவணக்கொடு பொலியப்போற்றினுன்.

உரை.—மெல்லியகுழந்தையுருவத்தோ டளவிறந்தவல்லமையுடை யவிந்நாதனினைத்த வமிர்தமானதயையின் கருத்திதுதானேயென்று மிக் கயேலென்னும் வானவன் சொன்னபின் பத்திருக்குமாரனிருபாதத் தை மிக்கவணக்கத்தோடு தலைமேல்வைத்துவணங்கினுனென்க.

85. பெய்தகான்மதுமழைப் பெருக்குற்றோடிய
மொய்தகாவெள்ளமுண் மூழ்கியின்பெழப்
பொய்தகாச்சுருதிநூற் பூத்தவாகையான்
கொய்தகாயிடர்கெடக் குளித்துள்ளாடினுன்.

உரை.—மிக்கயேல் சொன்னவுரைகள் பெய்ததேன்மழையாகக்கொண்டு பெருகியோடிய வளவில்லாத வின்பத்தின்வெள்ளத்திலே யின்பமாய்முழுகி மெய்யானவேதநூல் மலராகக்கொண்டு பூத்தபூங்கொடியோனுகியசூசை யுள்ளேகாய்ந்ததுயர்க ளறுந்துகெடும்படி யுள்ளேகுளித்தாடாநின்முனென்க.

86· தன்னுயிர்காத்தன தன்மைதன்னினும்
மன்னுயிர்காத்தருண் மலிபிரான்றன
தின்னுயிர்காத்தென வொளித்தெசித்துபோ
யன்னுயிர்காக்கவோ வயர்வுற்முனென்முன்.

உரை.—தன்னுயிரினு மற்றமன்னுயிர்களைக் காத்தளிக்குந் தயையின்மிக்கநாதன் றன்னுயிரைக் காக்கவேணுமென்றதுபோல வொளித்தபான்மையா லெசித்துதேசத்துப்போயங்குள்ளவுயிர்களைக்காக்கும்படியோவித்துன்பங்களைக்கொண்டானென்முனென்க.

87. தெவ்வுலகருட்படத் தெரிந்தசூட்சிவா
னவ்வுலகினருணர்ந் தறிகுவாரலா
லிவ்வுலகுணர்குவா ரொவர்கொல்லென்றருட்
டுவ்வுலகிறைஞ்சடி தொழுதுபாடினுன்.

உரை.—பகைவர்நா டருளையடையும்படி நாதன்றெரிந்தெடுத்த விச்சூட்சியைவானுலகத்தோர் கண்டுபிடிப்பாரொழிய விவ்வுலகிலெவரோவறியக்கடவாரொன்று சொல்லியபின்ன ரின்பமிகுதியா லருளைக்கொண்டறிவுடையோரெல்லாரும்வணங்கு மத்திருக்குமாரன் பாதத்தைத் தானுந்தொழுது பாடத்துடங்கினுன்சூசையென்க. (எசித்துநாடுமெய்க்கடவுளைவணங்காமையாற் கடவுட்குப் பகைவர்நாடென்முன்.)

## VIII. வேறு.

88. தனைவேண்டிப்போயொளித்த தன்மைபிறர்கொள்
வினைவேண்டித்தானுண் மெலிந்தழுவான்யாரோ
வினைவேண்டித்தானுண் மெலிந்தழுதேயிங்கண்
ணெனைவேண்டிமைந்தனென வெய்தியநீயன்றே.

உரை.—தன்னைவேண்டி யொளித்தவனைப்போலப்போய்ப் பிறர்கொண்டவினைகளைத்தீர்க்கும்படி தானே துயர்கொண் டுள்ளேமெலிந்தழுந்தன்மையுடையான்யாரோ? இத்தன்மையுடையா னென்னையிரட்சிக்கும்படி யிங்கேமனிதனுயநீதானேயென்முனென்க.

இச்செய்யுள்முதன்மூன்றும் வெண்பாவிற்கேற்ற செப்பலோசையால்வருவனவென்றறிக.

89. புள்வழியேநீர்மேற் புணைவழியேயாய்ந்தடைந்தா
லுள்வழியேநீத்தடையா வோங்கியல்பான்றான்யாரோ
யுள்வழியேநீத்தடையா வோங்கியல்பான்வானரசாய்
முள்வழியேயிங்கிடருண் மூழ்கியழுநீயன்றே.

உரை.—பறவைக ளாகாயத்திற்பறந்துபோனவழியையுங் கப்பல் கடலைக்கீண்டிப் போனவழியையுமாராய்ந் திதுவென்றுகண்டுபிடிக்கக்கூடாது, கண்டுபிடித்தாலு மனிதர்நினைக்குந்தன்மையெல்லாங்கடந்து கண்டுபிடிக்கப்படாதோங்கிய குணத்தையுடையோன்யாரோ? அக்குணத்தையுடையோன்வானரசனுயிருந்து நமக்குவேண்டி யிவ்வுலகின் முள்ளுநிறைந்தவழிநடந்து துன்பங்களுட்குளித்தழாநிற்குநீதானே யென்றானென்க.

90. காய்ந்தாலுலகெரிக்குங் கண்ணான்கருணைமுகந்
தீய்ந்தாலவாவவிக்கு மேந்தருளான்றான்யாரோ
ஈய்ந்தாலவாவவிக்கு மேந்தருளானீயன்றோ
வாய்ந்தாலுனதியல்பீங் காரறிவாராருயிரோ.

உரை.—கோபித்தகாலத்துலகெல்லாம்வேம்படி யெரிக்குங்கண்ணையுடையனாய்த் தன்றயையைமுகந்து நன்மைகொடுத்தகாலத் தாசையையவிக்கு முயர்ந்தவருளையுடையவன்யாரோ யவன்றானீயல்லோ? நாமாராய்ந்தாலு முன்னியற்கையின்றன்மையை யிங்கேயறிவாரில்லை யெவர்க்குநிறைந்தவுயிராகநின்றநாதனே யென்றானென்க.

## IX. வேறு.

91. பாடினான்வியந்துளத்திற்பெருகுமின்பப் பரவையின்று
ளாடினானழுங்கண்ணீராட்டித்தேம்பூ வடிதொழுதான்
சூடினான்சுவைவிள்ளான்பினர்முந்நீர்மேற் றுறும்வெள்ள
மோடினலெனத்தொழுங்காபிரியலின்புற் றுரையுற்றான்.

உரை.—இங்ஙனஞ் சூசைபாடினான், அதிசயித்துளத்திற்பெருகிய வின்பக்கடலைக்குளித்தான், திருக்குமாரன் மலர்ப்பாதத்தைத் தானழுதகண்ணீராற் கழுவித்தொழுதான், தலைமேலணிந்தான், தானுள்ளுண்டவினியசுவைகளைவிடாதிருந்தான், அதற்குப்பின்பு நிறைந்தகடலிலே வந்துவிழும்வெள்ளம்போல வவற்றின்னுமின்பமிகும்படி காபிரியலென்னும் வானோன் றேவகுழந்தையை வணங்கிச்சொல்லத் துடங்கினனென்க.

92. உடல்வண்ணத்திளவலெனவிங்கண்டோன்றி யுதித்தபிரான்
கடல்வண்ணத்தெக்குணமுமுளனாய்முன்னாட் கடுநீதி
யடல்வண்ணத்தெசித்தறியுமல்லாவிங்கண் ணாரறியார்
மிடல்வண்ணத்தெழுங்கதத்திலிவன்றன்னீதி வெகுண்டனகால்.

உரை.—அவதரித்தெடுத்த திருமேனியின்றன்மையாற் குழந்தையாய்த்தோன்றுநிற்கு மிந்நாத னீரெல்லாங் கடலிலேயடங்கிக்கொள்வது போல வநந்தஞானமுத லெல்லாநற்குணங்களையுடையனாய் முன்னுளிலேவல்லமைகொண்டு காட்டியதன்னுடைய நீதியை மிக்கயேல்சொன்னபடி யெசித்துநாடறியுமன்றி யிவன்றன்றிறத்தளவாகப்பொங்கிய தன்னீதியைக்காட்டக் கோபித்தகாலத் திப்பூவுலகி லதையறியாதவருண்டோவில்லையென்றானென்க.

93. செய்ப்பட்டவானுலகும்வான்மீன்றிங்கள் செஞ்சுடரு
மொய்ப்பட்டநீருலகுநீரிற்றுப்பும் முத்தணியு
மைப்பட்டபூவுலகும்புனலும்வெற்பு மைந்திணையுங்
கைப்பட்டவெவ்வுலகுஞ்செய்தானிந்நற் காதலனே.

உரை. — இத்திருக்குமாரன்றானே சிவந்தவானத்தையும் வானத்தின் மீன்களையு மதியையுஞ் சூரியனையு மலைபொருதகடலையுங் கடலிலுள்ளபவளமுத்துக்களையு மழகியபூமியையுமதிலேயாறுகளையு மலைகளையுங் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலையென்னுமைந்திணையையு மற்றுள்ளவுலகங்கள்யாவையுமுளவாக்கினானென்க.

94. சீராருமணியினமும்பைம்பூமுப்பா றிளையினமும்
பாராருங்கூழினமுங்கனியுந்தீந்தேன் பல்லினமு
மோராருநிறத்தினமுமின்புய்த்தாரு மிசையினமு
நீராரும்பூவுலகின்செல்வங்கூறு நிலையிலதே.

உரை.—இங்குள்ளசெல்வமணிவகையு நீர்ப்பூ கொடிப்பூ கொம்பிற்பூவென்னு மூவிடத்துள்ளமலர்பலவகையு நிறைந்தபலபயிர்வகையுங் கனிவர்க்கமு மினியதேன்பொழியும்பலவகையு மழகியவண்ணங்களு மினியவோசைகளும் பூவுலகின் மற்றுள்ளசெல்வங்களை விரித்துச் சொல்லுந்தன்மையல்லவென்க.

95. கூறுறநான்கூறுங்கால்கூற்றுங்குன்றக் குவிந்ததிரு
வேறுறவேறாய்ப்பரப்பிமண்மேனீர்மேல் விண்டிசைமேற்
பாறுறவாழ்புள்ளினமுநீர்வாழ்மீன்கட் பல்லினமு
மாறுறநீணிலத்துயிருமெண்ணற்றீட்டி வகுத்தனனே.

உரை.—வகுப்பறுத்துச் சொல்லுதற்கென்சொல் குறையா நிற்கும்படி திரளாய்க் கூட்டிய செல்வங்களை வேறுவேறாக வங்கங்கே பரப்பியபின்பு மண்ணிடத்தும் நீரிடத்தும் வானிடத்தும் விரிவாகப்பறந்து வாழும் பறவைகளினத்தையு நீரிடத்துவாழு மீன்களின் பலவினங்களையுந் தம்முண்மயங்கி நடந் தூர்ந்து நிலத்தில் வாழும் பல்லுயிரினங்களையு மட்டின்றித் தோற்றுவித்தானென்க.

96. மட்டற்றபுல்லுயிர்கட்காசனாக வானவர்போற்
கட்டற்றவேண்டுதல்வேண்டாமைவல்ல கருத்துயிரை
நட்டற்றநிகர்கடந்தவுருவின்மாமை ஞாயில்பொறித்
திட்டற்றமின்றிமனுக்குலத்தையீன்றா னித்திறத்தான்.

உரை.—மட்டின்றி யுண்டாக்கிய நல்லறிவில்லாத முற்சொன்ன புல்லுயிர்க்கெல்லா மரசனாம்படி வானவரைப்போலப் புறத்திறத்தாற் கட்டப்படாமற் றோன்றியபொருளை வேண்டும் வேண்டாமென்னும்படி வல்லகருத்தினையுள்ள வுயிரை நட்டுச் சூழ நிகரில்லாத வடிவினையுள்ள வுடலாகிய வழகிய மதிலையெழுதிவைத்துச் சோர்வொன்றின்றி மனுக்குலத்தை யுண்டாக்கினா னளவிறந்த வல்லமையுடைய விவன்றானேயென்க.

97. இற்றெல்லாங்கலைமுகந்தகற்றோனெஞ்ச வீட்டியபின்
னற்றெல்லாமுணர்கில்லாமக்களின்னா வருந்துமவா
வுற்றெல்லாமழுக்குற்றதென்றுநாத னுடன்றனகான்
முற்றெல்லாமழிப்பமுனிவுணர்ந்ததன்மை மொழிகிற்பேன்.

உரை.—இங்ஙன முற்றக்கற்றோருந் தஞ்சொல்லாலின்ன தன்மைத்தென்று சொல்லாமட்டாம லெஞ்சிமெலியாநிற்கும்படி சொல்லிலடங்காத செல்வங்களையுண்டாக்கிப் பூவுலகிலாண்டவன் கூட்டியபின்பு மனிதரவ்வருமையுணரமாட்டாமற் றீயவைநுகரும்படி யாசையைவைத்துச் செய்தபாவங்களினாற் பூவுலகிலுள்ளதெல்லா மழுக்கடைந்ததென்று நாதன் சினங்கொண் டெல்லாவற்றையு முழுதுமழித்ததன்மையைச் சொல்லுவேனென்றானென்க.

## X. வேறு.

98. மாயிரத்தவிர்புவி வகுத்துமாயன
மாயிரத்தாறுநூற் றைம்பத்தாறுமாய்த்
தீயகத்தார்ந்தன செயிர்பொறாமையாற்
காயகத்தாண்டகை கதத்தையுள்ளினான்.

உரை.—சூரியன்கதிரால் விளக்கப்பட்ட விப்பூவுலகத்தை யுண்டாக்கி யாயிரத்தறு நூற்றைம்பத்தாறு வருடமாகி மனிதர்மட்டின்றிச் செய்த பாவங்களைப் பொறுக்கமாட்டாம லாண்டவன் றன்கோபத்தைக்காட்ட நினைத்தானென்க.

99. மறைநெறிநீங்கிய மனிதருட்கெட்
நிறைநெறிநீங்கிய காமநீர்குளித்
திறைநெறிநீங்கிய வின்னபாருடை
கறைநெறிநீங்குப கழுவலுள்ளினான். *

* Genesis, chap. 6, 7. மோயிசன் முதலாகமம் 6-ம், 7-ம் அதி.

உரை.—மனிதரெல்லாரும் வேதாகமத்தில் விதித்தநன்னெறியை விட்டுத் தம்முள்ளங்கெடும்படி யந்நாளிலே நிறையைத் தவிர்ந்த காமக் கடலி லமிழ்ந்தித் தேவாராதனையையுங் கைவிட்டாரென்று நாதன்கண்டு பாவங்களா லிப்பூவுலகெல்லா மடைந்த மாசுகணீங்கும்படி யதைக்கழுவ நினைத்தானென்க.

100. உள்ளியவாய்செய வுளத்திேனவலா
லெள்ளியவுலகெலா மெஞ்சக்கார்முகில்
விள்ளியகண்பக மின்னியார்ததிடித்
தள்ளியவிருள்புவி யனைத்துமொய்த்ததே.

உரை.—ஆண்டவனினைத்தவற்றைச் செய்தற் கேவலிட்ட வளவிலே யிழிவுற்ற பூவுலகமெலியும்படி கரியமேகங்களெங்கும் பரந்து விழித்தகண்ணைப் பிளந்தாற்போலக் கொடியதாய் மின்னிமுழங்கி யிடிகளிடித்துவிழவே கையாலள்ளலாமென்னும்படி யடர்ந்தவிருளுலகெல்லா மூடிற்றென்க.

101. வரையுழிவரைவிலா வடிந்தவாறெனப்
புரையுழிமுகில்கணீர் பொழியநாழிகை
யரையொழியாமுன ரகன்றியாண்டையுந்
தரையுழியாற்றொடு தடங்களார்ந்தன.

உரை.—மலையினின்றிழியு மாறுபோலத் துளைத்தமேகங்களினின்று நீர்த்தாரைகள் விழுந்ததனு லரைநாழிகைமுடியாமுன்னே யகன்ற பூவுலகெங்குமுள்ள வாறுகளுந் தடாகங்களு நிறைந்தனவென்க.

102. ஆற்றொடுமாற்றொடு மரிதநான்கினு
மாற்றொடுமாறுமொய்த் ததிர்ந்தெழுந்திரை
பாற்றொடுபாறெனப் பொருதுபாரெலாம்
பாற்றொடுபாறுநீர் படர்ந்துமொய்த்ததே.

உரை.— பதினாறுதிசைகளிடத்துங் கரைவிட்டெழுந்த வாறுகளொன்றொன்றோடேமோதிக் கப்பலோடு கப்பலெதிர்த்துப் பொருதாற்போல வதிர்ந்தெழும்படி பருந்துபறக்குந்தன்மைத் தோடியவெள்ளம் பூமியையெங்கு மூடிற்றென்க.

103. கரைகொளுங்கடலெழீக் கழறிவாங்கிய
வரைகொளுமுயர்திரை மங்குற்பாய்ந்தெழப்
புரைகொளுமுழக்கெழீப் புவனமெங்கணு
முரைகொளுநடுக்குறி யுலம்பிற்றுயதே.

உரை.—கரையின்மேற் பொங்கியகடல் முழங்கிவாங்காநின்ற மலையினுமுயர்ந்த திரைகளெழுந்து மேகத்திற்பாய்தலினிகரில்லாத முழக்கமாகிப் பூவுலகமெங்குஞ் சொல்லப்படாத நடுக்கத் தோடுஞ்சி முழங்கிற்றென்க.

104. நீரொழுமோதையு நீர்பெய்யோதையுங்
காரொழுமோதையுங் கால்செய்யோதையுங்
சூரொழுமோதையும் துதைந்துவீழ்மனை
பேரொழுமோதையும் பெருகிமாறுமால்.

உரை—கடற்றிரைமேற்பாயவு மழைதிரளாய்ப் பெய்யவும் மேகத்தினின் றிடிகளிடித்துவிழவு நாற்றிசையிற் காற்றதிர்ந்துவீசவு மஞ்சினர் கூவென்றழவு நெருங்கி யெங்கும்பெரிய மாளிகை தகர்ந்துவிழவு மூழக்கத்தோடெழுந்த வோசைகள் தம்முண்மயங்கிப் பெருகி முழங்கினவென்க.

105. புதைத்திருட்கிளர்த்தலும் புயற்பனித்தலுந்
துதைத்தடுத்திடித்தலுங் கடற்சுளித்தலுஞ்
சிதைத்தலைப்பெருக்கமுந் திளைப்பக்கண்டனர்
பதைத்திரைத்துகப்பிடைப் பனிப்புற்றோடுவார்.

உரை.—அங்ஙன நெருங்கிய விருளின் மிகுதியு மேகங்கள்விடாமழையைப்பெய்தலு மோயாமலிடி மிக்கிடித்தலுங் கடல் பொங்கிக்கோபித்தலு மெல்லாவற்றையுங் கெடுக்கும் வெள்ளப்பெருக்கமு மென்மேலு மிகவாதலைக் கண்டவெல்லாரும் பதைத்துக் கூப்பிட்டு வெருவி நடுங்கி மேட்டிடத் தொதுங்கும்படி யோடுவாரென்க.

106. மாடநீண்முகட்டுயர் மரத்தின்கொம்புயர்
கூடநீண்பொருப்புயர் குழாங்கொடெய்தினர்
தேடநீணுளுளைந் தடுத்தசீரொலா
மோடநீணீத்தமோ டொழியக்காண்பரோ.

உரை.—சிலருயர்ந்த மாளிகையின்மேலுஞ் சிலர் பெருமரத்தின் மேலுஞ் சிலர் மலையினுச்சியின்மேலுங் கூட்டமாய்க் கூடிநின்று நெடுநாளுந் தாமுளையும்படி தேடிச்சேர்த்திய செல்வமெல்லாம் வெள்ளத்தோடோடிப்போ யழிவதே காண்பாரென்க.

107. கவிகையுங்கொடிகளுங் கதிர்செய்மஞ்சமுஞ்
சிவிகையுந்தளிமமுந் திவழ்ந்தகோசிகக்
குவிகையுங்குஞ்சமுங் கோலவட்டமும்
புவிகையுண்பெருக்கொடு போகக்காண்பரோ.

உரை.—குடைகளுங் கொடிகளுங் கட்டில்களுந் தண்டிகைகளு மெத்தைகளும் பட்டாடையின் கட்டுகளுங் குஞ்சங்களு மாலவட்டங்களு மற்றதெல்லாமும் பூவுலகமெல்லாங் கைக்கொண்டதுபோல வெங்கும்பரந்த வெள்ளத்தோடு போகக்காண்பாரென்க.

108. ஏர்முகப்புதிமணத் திணைந்தகாந்தனு
மோர்முகத்தன்னையு முலந்ததாதையுஞ்
சீர்முகத்துணைவரு மினியசேயரு
நீர்முகத்தமிழ்ந்திமேல் ஞெமுங்கக்காண்பரோ.

உரை.—மேட்டிலே நின்றவருட் சிலர் புதுமணமாகத் தமக்கமைந்தபுருடனைச் சிலரொருப்படத் தாயையுந் தகப்பனையுஞ் சிலர் தஞ் செல்வத்திற்குத் துணையாய்நின்ற கூடப்பிறந்தவரைச் சிலர் தாம்பெற்ற வினியமக்களை வெள்ளத்திலே யமிழ்ந்தி மேன்மிதந்தழிந் தலையக்காண் பாரென்க.

109. கண்டுகண்புதைக்குவார் கலங்கியார்த்திட
ருண்டுகண்மழையொடு முமிழ்ந்துவிம்முவார்
வண்டுகண்விசைவரும் வாரிமேட்டுமேற்
கொண்டுகண்டங்கணூர் குழைந்தமிழ்ந்துவார்.

உரை.—சொன்னதெல்லாவற்றையுங் கண்டவர் கண்டவளவிலே தங்கண்ணைமூடிப் புதைப்பார், மனதிற்கலங்கியார்த் தளவிறந்த துன்பங்களை யுட்கொள்வார், உட்கொண்ட துயரைக்கண்மழையாக வுமிழ்ந்தாற்போல வழுவார், அப்பொழுதெய்த வம்புவரும்விசையோடு மேற்பெருகியோடிய வெள்ளமேடுகளின்மேற் பிரளக்குதித்தமையா லங்கேயிருந்தவரெல்லாருங் குழைந்தமிழ்ந்திச் சாவாரென்க.

## XI. வேறு.

110. ஏரணிவலியின்னீதி யிறையவன்முனிந்தகாலை
நீரணியரணமாகா நெடுமதிளரணமாகா
சீரணியரணமாகா சேண்வரையரணமாகா
பேரணியரணமாகப் பெற்றநல்வினையிலார்க்கே.

உரை.—உயர்ந்த வல்லமைக்களவாக நீதியையுடையநாதன் முனிந்த காலத்துத் தன்னுயிரைக் காக்கும்படி பெரும்படையினரணாக நல்வினையையுடையார்க்கொழிய மற்றவர்க்குக் கடலுமரணாகா, மதிலுமரணாகா, காடுமரணாகா, மலையுமரணாகாவென்க.

111. எல்லிராப்பனிப்பமாரி யெழுந்திராக்கதிரிற்பாய்ந்த
வில்லிராப்புரிசையோங்கு மெயிலிராப்புணர்ந்தநாவாய்
வல்லிராக்கவிழ்ந்துமூழ்க வரையிராப்பெருக்குண்மூழ்கா
கொல்லிராவுயிருமில்லாக் குழைந்துலகழிந்ததன்றே.

உரை.— நல்வினையில்லாரைக்காக்கும்படி யரணில்லாமையாற் பகலிராவுமாக மழைவிடாமற்பெய்தலிற் சந்திரன்முகத்திற்பாய வெழுந்த மாளிகையொன்று நில்லாமலு முயர்ந்த மதிலாற்சூழப்பட்ட கோட்டை

யொன்று நில்லாமலுஞ் சம்பாதித்த கப்பல்களிற் கவிழ்ந் தமிழ்ந்தாதபடி வல்லதொன்றுமில்லாமலுஞ் சாகாத வுயிரொன்றின்றி யன்றேபூவுலகெல்லாமழிந்ததென்க.

112. ஆதியைப்பழித்தகாமத் தசனிபட்டெரிகின்றாரு
நீதியைப்பழிப்பவெள்ளி நீந்திநைந்தமிழ்ந்துவாரு
மோதியைப்பழித்தபாவத் துணவிலசோர்கின்றாருஞ்
சேதியைப்பழித்தமாடஞ் சிதைந்துவீழ்ந்தழுங்கின்றாரும்.

உரை.—ஆண்டவனைப்பழித்து முன்காமத்தீயிலெரிந்தவரன் றிடிபட்டெரிவார் சிலர், தேவநீதிமுறையை யெண்ணும னிந்தித்தவர் நீந்திநீந்திச் சோர்ந்து வெள்ளத்தமிழ்ந்துவார் சிலர், உயிர்க்குணவாகிய நல்லுணர்வுகளைக் காதுட்கொள்ளாமற் செய்தபாவத்தால் வாயினாலுட்கொள்ளும்படி யுணவின்றிப் பசியாற் சோர்ந்துசாவார் சிலர், தேவகோயிலினுஞ் சிறப்பாக வைத்த மாளிகைதகர்ந்துவீழ்ந் ததின்கீழ் நெரிந்தழிவார் சிலரென்க.

113. இடிமுகத்தூற்றுமாரி யிடைவிடாநாற்பானாளும்
படிமுகத்தெழுந்தவாரி பருப்பதத்துயர்ந்தவெல்லா
முடிமுகத்தெழுந்துமூவைம் முழத்தெழீயெவருமாண்டு
மடிமுகத்தழிந்தஞாலம் வயின்றொறுநீத்தவாரி.

உரை.—இடைவிடாம னாற்பதுநாளு மிடித்துப்பெருமழை யூற்றதாகப்பெய்ததனாற் பூவுலகிலாயவெள்ள மெல்லாவுயர்ந்த மலைகளினுச்சிமேலே பதினைந்துமுழமாக வேறினதன்மையான் மனிதரெல்லாருமடிந்து பிணமாகவழிந்த பூவுலகெங்கு மொருவெள்ளமாக நின்றதென்க.

114. பிடிநலந்தழுவிநீந்தும் பெருங்கரிவரையென்றெண்ணி
மடிநலமுயன்மான்கேழல் மரைகவிபலவுமேறிக்
கடிநலஞ்சோர்ந்துமூழ்குங் களிற்றொடுமவையுமூழ்க
வடிநலமிழந்தவாழ்க்கை யடுத்தனர்சிதைவபோன்றே.

உரை.—தன்பெட்டையானையைத்தழுவிநீந்துகின்ற பெரியமதயானையைக்கண்டு மலையென்றெண்ணி நீந்திச்சோர்ந்தமுயலு மானுங் காட்டுப்பன்றியு மரையுங்குரங்குமொழிந்தபலவு மந்தயானைமேலேறிப்போகையிற்றானெடுங்காலத்து நீந்தியபின் தன்பலன் சோர்ந்தமையாலியானையமிழ்ந்தி யத்தோடு மற்றதெல்லாமு மமிழ்ந்தின, எத்தன்மைத்தோவென்னி லடிப்பெலனில்லாத வாழ்க்கையை நம்பினவரழிந்துபோம்வாழ்க்கையோடு தாமுமழிவதுபோல விருந்ததென்க.

115. பயமிகப்பகைதோன்றாது பசுவரிப்புலியின்மேலும்
வயமிகச்சிங்கமேலு மான்கலையாளிமேலு
மயமிகச்சடுதிநீந்தி யயர்ந்துசோர்ந்துளமாயாவுங்
கயமிகப்பெருக்குண்மாண்டு கயற்கினம்விருந்துண்டாமே.

உரை. — பயமிகுதியாகிய வளவிலே முன்னிருந்த பகைதோன்ற மாட்டாமையாற் புலியின்மேலே பசுவுஞ் சிங்கத்தின்மேலேயாடும் யாளியின்மேலே கலைமானு மேறிக்கொண்டு நீர்பெருகி மிக்கவளவிலே சீக்கிரமாய் நீந்தியதனு லயர்ந்து சோர்ந்து சொன்னவையு மொழிந்த மிருகங்களெல்லாமு மாழமாய்பொங்கின வெள்ளத்தின் மடிந்து மீனினங்கள் திரளாய் விருந்தினையுண்டனவென்க.

116. மயில்கிளிபுறவுபூவை மடவனங்குறும்புள்நாரை
குயில்கொடிசிரவங்கூகை கொக்கினமுதற்புள்யாவும்
பயில்துளிவிடாமையானும் பருகவொன்றிலாமையானுந்
துயில்சிறிதிலாமையானுந் தொறுந்தொறுந்துஞ்சிற்றன்றே.

உரை.— மயிலுங் கிளியும் புறவும் பூவையு மன்னமுங் காடையு நாரையுங் குயிலுங் காக்கையுங் கவுதாரியுங் கூகையுங் கொக்கு மொழிந்த மற்றப்பறவைகளெல்லாந் தாமாகாயத்திற் பறப்பனவாயினு நாற்பதுநாள் மழைவிடாமலு முணவில்லாமலுந் தூங்காமலு மெல்லாங் கூட்டங் கூட்டமாய் மடிந்தனவென்க.

117. வாயுமுன்றாமம்போலு மாலிமுன்கங்குற்போலுந்
தீயுமுன்பூளைபோலுந் திடனின்முன்பொய்யும்போலும்
வீயுமுன்னுழைகள்போலும் விமலனுண்முனிந்தநீதி
நோயுமுன்னெதிர்த்துத்தாங்க நுனித்தபீடுடையார்யாரே.

உரை. — காற்றின்முன்னே புகையுஞ் சூரியன்முன்னே யிருளுந் தீயின்முன்னேபஞ்சு மெய்யின்முன்னே பொய்யும் வேங்கையின்முன்னே மான்களு மிவையெல்லா நில்லாதழிவனபோலே யாண்டவன் கோபித்து நீதிமுறையால் வருத்துவிக்கும் வருத்தத்தைத் தாங்கி யழியாமலெதிர்த்து நிற்கும்படி வல்லமையுடையாரெவருண்டோ வில்லையென்க.

118. நூல்வருஞ்சுருதிவேலி நெறிதவம்விளைத்தசீலஞ்
சால்வருமாட்சிநோவன் ருனுந்தான்றவத்திலீன்ற
வால்வருஞ்சேமுங்காமும் யாப்பனுமக்களாக
நால்வருநால்வர்காந்தை நான்குமன்றிறந்திலாரே.

உரை. — அங்ஙன முலகிலுள்ள வுயிரெல்லாந் தப்பாம லிறந்தபோது வேதமே வேலியாகக்கொண்டு அடக்கத்தையுடைய தவத்தால் விளைந்தவரத்தின் சீலங்கள் மிகுதியால் மாட்சிமையுடைய நோவனென்பவனு மவன்றவத்தினுற்பெற்ற மூன்றுமக்களாகிய சேமுங் காமும் யாப்பனு மிந்நாலுபேரு மிவருடையதேவிமார் நாலுபேரு மன்றே பூவுலகின் மடியாதிருந்தாரென்க.

119. எண்மருமிறைவனூலா லியைந்தநவ்வேறிமீண்டு
மண்மருவினங்கள்விண்மேன் மருவினம்விடாமையேற்றி
விண்மருவமலன்றனே விரும்பிமீகாமனுய்ப்பார்
கண்மருவளவில்வாரி கடந்துமேன்மிதந்துநின்றார்.

உரை.— சொன்னவெட்டுபேரு மாண்டவன் சூட்சியாற் செய்யப்பட்ட வொருமரக்கலத்தேறி யதிலே பூமியிற்றிரியும் விலங்கின்வகையு மற்றுயிர்வகையு மாகாயத்திற் பறக்கும் வகையும் வகைக்குவகை பல சோடுகளைத் தப்பாமலேற்றி யக்கப்பலையுண்டாக்கிய சூட்சியான் மழைத்துளியொன்றுமுள்ளே நுழையாமலுங் கவிழாதபடி யதற்காண்டவன் றனே மீகாமனு யதனைநடத்திப் பூவுலகிடத் தளவின்றிப் பரந்தவெள்ளத்தின்மேன் மிதந்து துன்பமொன்றின்றி நின்றாரென்க.

120. அணிவளராருமேனி யாகியநாட்டிலங்கண்
மணிவளர்குன்றத்துச்சி வதிந்தபாறிழிந்தவேலை
பிணிவளரின்னதன்மை பினர்பெயாதானையாகப்
பணிவளர்வான்வில்பெய்காற் பரப்புவலென்றனுதன்.

உரை.— அழகிய ஆருமெனிய் நாட்டிலுள்ள வுயர்ந்தமலையி னுச்சியிலே யக்கப்பலுளுக்கார்ந் ததினின் றெல்லாருமிறங்கினபின்பு பிற்காலத்தித்தன்மைத்துக் கேடாம்படி பெய்யாததற் காணையின்றன்மையாலடையாளமாக மழைபெய்யும்பொழுது மேகங்களிலே யணியைப்போல வான்விலைப் பரப்பித் தோற்றுவிப்பேனென்று நாதன்றனே யவர்களுக்குச் சொன்னனென்க. (ஆகையாலச்சலப்பிரளயம் வருமுன்னே வான்வில்தோன்றுதென்றதாயிறறென்க.)

121. சோதியின்வடிவாய்ஞானந் துடர்குணத்தெஞ்சான்கோப
வீதியின்வடிவாய்நீத்தம் விட்டுலகஞ்சியெஞ்ச
நீதியின்வடிவாய்நின்ற நிமலனேகருணைபூத்த
சாதியின்வடிவாயிங்கண் டனையனுமிவன்றனென்றான்.

உரை.— அங்ஙனஞ் சோதிவடிவாக வந்தஞானமுதற் சகலநற்குணங்களைக் குறையாமலுடையனுய்க் கோபத்தின் வழியாகச் சொன்ன பிரளயத்தை வரவிட்டுப் பூவுலக மஞ்சிக்கெடும்படி நீதிவடிவா யந்நாளினின்ற கடவு ளிப்பொழுது கருணையைப் பூவாகவணிந்த சண்பகமரத்தின் வடிவாயிங்கே குழந்தையாய் நிற்கு மிவன்றனே யென்றான்காபிரியலென்க.

122. பொற்கலத்தேந்தித்தந்த பொழியமுதனையவானேன்
சொற்கலத்தேந்திக்காதை துற்றியவிருவருள்ளந்
தற்கலத்தேந்துமின்பஞ் சால்பினுலன்னைதன்கை
யெற்கலத்தேந்துதேவ விளைவலைப்பாடினளே.

உரை.— பொற்கலத்தின்மே லமிர்தத்தை யேந்தித் தந்தாற்போல வவ்வானவ னினியதன்சொல்லாற் காட்டியசரிதையைக் காதாலுண்ட சூஸைசயு மரியுமென் றிருவருள்ளத்திற்கொண்ட வின்பத்தின் மிகுதியாற் முயாகிய மரியென்பவள் தன்கையா லொளியின் வடிவாகவேந்திய திருக்குமாரனைநோக்கிப் பாடாநின்முளென்க.

## XII. வேறு.

123. மருடருமறுவற மழைதருமடிவற
வருடருகுருதியி னடைமழைதருகுவை
யருடருகுருதியி னடைமழைதருகுநின்
சுருடருமதுமல ரிணையடிதொழுதும்.

உரை.— மயக்கத்தால்வந்த பாவங்களை யறுக்கும்படி முன்னுளிலே யளவின்றிப் பெய்தமழை தந்தகேடுகள்போ யருளைப்பொழியு மடைமழையாக வுன்றிவ்விய விரத்தத்தைச் சிந்த மனிதனுய்வந்தவனே யிந்தத்தயையைப்பற்றி யுன்முமரை மலர்ப்பாதத்தைத் தொழுதுமென்முளென்க.

124. சினவழிதெரிகில தயைவழிதெரிகில
மனவழியடைகில மரபுயர்கடவுளை
மனவழியடைகில மரபுயர்கடவுணின்
றனவழியொளிரரு டகுமடிதொழுதும்.

உரை.— உன் சினத்தின்வழியு முன்றயையின்வழியு மொருவனுற்றெரியப்படாம லுணர்வெல்லாங் கடந்த வுயர்ந்தகுணத்தையுடைய கடவுளே யத்தன்மையைப்பற்றிப் பொன்னுல்விளங்கி யருளைத்தரு முன் பாதத்தைத்தொழுதுமென்முளென்க.

125. மெலிபுலகழிவுற வெருவிடவெகுளினை
மலியுலகுயிருற மகவுருவடிவனை
மலியுலகுயிருற மகவுருவடிவநின்
வலியுலகுணர்வுற மலரடிதொழுதும்.

உரை.— பூவுலகெல்லா மெலிந்தழியும்படி யந்நாளிலே வெருவிட்டு வெகுண்டாயே, இந்நாளோவென்னி லுலகெல்லாந் தன்வினைதீர்த்து நல்லுயிரைப்பெறும்படி மனிதனு யுதித்தாயே, உலகத்தையிரட்சிக்கும்படி யிங்ஙனம் வந்தவனே, உன் வல்லமையை யுலகெல்லா மறியச்செய்யும்படி யுன்மலர்ப்பாதத்தைத் தொழுதுமென்முளென்க.

## XIII. வேறு.

126. பாவெணறிபலவையும பகர்ந்துவப்பெழீக்
கோவெணறியொழிமுகக் குழவியேந்தினர்
சேவெணறிநடந்துபோய்த் தெளிந்தவாவியைக்
காவெணறியெய்தியக் கரையினண்மினர்.

உரை.— இனியபாத்தொடையாக விவற்றையும் பலவற்றையுஞ் சொல்லி மிகவுமகிழ்ந்து நவக்கிரகத்திலொன்றுபோல முகத்தொளிர்ந்த குழந்தையையேந்தி யிருவருநெடுநெறி நடந்துபோனபின்பு தெளிந்தத டாகத்தைக்காணும் படிசென்று கண்டகுளத்தின் கரையைச்சேர்ந்தாரொன்க.

127. புலங்கரைவதிந்தனர் புடையகன்றதோர்
நிலங்கரையிலாதொரு நிழலிலாதுநீ
றிலங்கரையுயர்மலை யெனக்கண்டும்பரா
யலங்கரைவாகையா னழைத்தஃதேதென்றான்.

உரை.— சொன்னகுளத்துயர்ந்த கரையின்மேலிருந்து தூரமகன்ற தோரிட மட்டுமின்றி நிழலைச்செய்யு மரமுமின்றிக்கண் டதிலேவெண் சாம்பலாகப் பக்கத்துயர்ந்த மலையைப்போல வோர்மேடுகண்டு மலர்க் கொடியோனாகிய சூசை சூழிருந்த வானவரையழைத் ததேதென்று கே ட்டானென்க.

128. இன்னவைமிக்கயே லிறைஞ்சிக்கேட்டவண்
பன்னவைமிடைந்தவைம் புரத்திற்பண்டுநா
டின்னவையிளவறன் றண்மைதோற்றுமென்
றன்னவைகேண்மினென் றணுகிக்கூறினான்.

உரை.— இதைக்கேட்ட மிக்கயேலென்னும் வானவன் றெண்டனி ட்டுச்சொல்லி யங்கேபாவமிகுதியாலைந்துநகர்க்குப் பூருவத்திலே சம்ப வித்தசெய்தி யித்திருக்குழந்தையுள்ள வளவிறந்த வல்லமையைக் காட் டுமென் றச்செய்தியைக்கேட்பீராகவென்று மீளவுங் கிட்டவந்து சொ ன்னானென்க.

## XIV. வேறு.

129. கானாறுநேமிகாணாதுமூடு காவாதவாருகழிவாய்
நானாறுமாகநான்மூன்றுமாக நாலாண்டுமாகிநவையா
ருனாறுசோதுமத்தாரதைந்து மூருற்றபாவமொழிய
வானாறுதீயையோர்மாரியாக வான்வாரினானிம்மகனே.

உரை.—முற்சொன்னபடி யொருவனாற்காக்கப்படாம லுலகமெல் லா மொருவெள்ளமாகநிற்க வந்த சலப்பிரளமுடிந்து நானூற்றுப்பதி னாறு வருடமாயபின்பு பாவத்தா னிறைந்தமையாற் பாவத்தினூற்றா கிய வுடலைக்கொண்டிருந்த சோதும நாட்டிலுள்ளோரிருந்த வைந்துநகரு மடைந்தபாவங்களை யொழித்துத் தீர்க்கும்படி யித்திருக்குமாரன்றானே வானத்தினின்று மாரியாக வங்கேயக்கினியைப் பெய்யவிட்டானென்க.

130. மறையொன்றிலாது தவமொன்றிலாது மருள்கின்றசீலமடி
நிறையொன்றிலாதுநிறையொன்றிலாது நெகிழ்கின்றநீதியகல [ய
முறையொன்றிலாதுவரையொன்றிலாது முரிகின்றகாமமுதிரச்
சிறையொன்றிலாதுசிதைகின்றநாடு தினைகின்றதீயினிரையாம்.

உரை.—வேதமுந் தவமுமின்றி மயங்கிய நல்லறமேமடிந்திருப்பவு நிறையுஞ் செம்மையுமின்றிக் குழைந்த நீதி யந்நாட்டைவிட் டகன்றிரு ப்பவு முறையு மட்டுமின்றி வழியெல்லாங்கடந்து முறியாநின்ற காமமே முதிர்ந்திருப்பவு நல்வினைசெய்யுங் காவலின்றி யந்நாடு கெட்டதனானி றையப்பெய்த வக்கினிக்கிரையாயிற்றென்க.

131. முடிகோடிகோடிகதிர்காலுமேக முதலேவலாகியசனி
யிடிகோடிகோடியெரியோடுவீழ வெதிரோதைசீறவெரிவான்
றுடிகோடிகோடிதுறுமோதைபோலு சுடுசூலகோரமுகிலே
கடிகோடிகோடிகுடியாயுலாவு கடுநாடுமூடிமிடைய.

உரை.—கோடாகோடி முடிகளைச்சூழ்ந்து கதிர்களைப்பரப்பாநிற்குந் தனிமுதலாகிய விக்கடவுளேவலினாலேயளவின்றி யிடிகள்மேலிடிகள் நெருப்போடுவீழ வெரியும்வானமெல்லா மெதிராகமுழங்கிக் கொடியதா ய்ச்சீற வெண்ணிறந்த பறைகள் திரண்டுகூடி முழங்கினாற்போல வக்கி னியைச் சூலாகக்கொண்ட வகோரமேகங்கள் திரண்டு கோடாகோடி பசாசுகள் குடியாயிருந்துதிரியு மக்கொடிய நாட்டை மூடிநெருக்கினவெ ன்க.

132. புரிவாய்பிளந்தவிறையோனுடன்று புரிசாபமென்றுகடி
யெரிவாய்பிளந்தமுகிலேயுமிழ்ந்த விடியேறதிர்ந்துபடலான் [தே
முரிவாய்பிளந்தமுகிருவுயர்ந்த முடிமாடமெங்குமுரிய
விரிவாய்பிளந்தமுகில்காலுமங்கி விளியாதெரிந்துபொழிய.

உரை.—சொன்னதைச் சொன்னதன்மையி லுளவாக்குந் திருவா யைத்திறந் தாண்டவன் கோபித்திட்ட சாபம்போல வெரியுந் தம்வா யைப் பிளந்த மேகங்கள் கொப்பளித் தெரிந்து விழுந்த விடிகள் பட்ட தனால் மேகங்களைத்தாவி யுயர்ந்த வுச்சியையுடைய மாடங்களெங்கும் வாயைப்பிளந்து முறிந்துதகர்ந்து விழுவே மீளவும் விரிவாக வாயைப்பி ளந்தமேகங்கள் திரளாய்ச் சொரிந்த வக்கினிமாரி யிடைவிடாமற் பொ ழிந்ததென்க.

133. பட்டையுமெங்குமெழுவோதைபட்ட படர்ஞாலமுற்றுநெ
விட்டையுமெங்குமிழிகாமமுற்றி விளைசோதுமத்தர்விரகத் [கிழ
துட்டையுமெங்கும்வெருவோடுமுற்ற வுளவேகமுற்றியுருகுங்
கட்டையுமெங்கும்விரவேகலந்து கடிமாகமொய்ப்பவெழுமே.

உரை.— பட்டுவிழுமாடங்களெழும்படி விட்டவோசையாற் படர்ந்த பூவுலகெல்லா மதிர்ந்து குழையாநிற்க மேகத்தினின்று பொழியுந் தீயும், சோதுமநாட்டாருடைய காமமுற்றி விளைந்த விரகநோயாலவர் மனதினின்றெழும்புந்தீயும், வெருவுங் கோபமும் வருத்தமுமுற்றி யுருகாநின்றவவர் கண்ணிடத்துக் கிளம்புந்தீயு மிவையெல்லா மெங்குங்கலந்தாகாயத்தைமூடி யெழுந்தனவென்க.

134. மேகங்கள்வேகவிடுமீன்கள்வேக விடியேறுவேகமிளிரு
மாகங்கள்வேகவொளிவேந்தன்வேக மனமஞ்சிமேகமறைய
வாகங்கள்வேகவிழிகண்கள்வேக வறைநாவும்வேகவலைகொள்
வேகங்கள்வேகநதிவேகவேக வெருவாகவேலையகல.

உரை.—அங்ஙன மேகங்களு மீன்களு மிடிகளும் வானமும் வேகாநிற்பச் சூரியனும் வெந்தஞ்சி மேகத்துண் மறைந்தொளிப்ப அங்கெவர்க்குமனமும்வெந்து வேகுமவ்வக்கினியைப் பார்த்தகண்ணும் வெந்து வேகுதென் றுச்சரித்தநாவும் வெந்து அந்நாட்டிலிருந்தவாறு சுருட்டினவலைகள் வேகும்படி தானும்வெந் தோடியதனாற் கடலுமஞ்சி யகன்றதென்க.

135. நாலோடுநாலுதிசையோடியோடி நணியாய்நடுங்கிநலியக்
காலோடுகாலுமெரிகெந்தகஞ்செய் கனலாலெரிந்தபலவோ
டாலோடுமாலுமழலாலிமண்டி யவியாதகாமவசடர்
மாலோடுமோலுமிகமாழ்கிவெந்து மதியாதெலாருமடிவார்.

உரை.—எண்டிக்கிலுமோடி யெவையு நடுங்கும்படி யடித்தகாற்றோடெரிந்துவிழுங் கெந்தகநெருப்பினுன் மற்றதெல்லாம் வேகாநிற்ப விடாமழையாக முழங்கிப் பெய்யுமக்கினிமாரி மிகுதியா லவியாத காமத்தீயிலே வெந்தவப்பாவிக ளன்று வாதையுமச்சமு மிகுந்துமயங்கி யெல்லாரு நினைத்திராமன் மடிந்தாரென்க.

136. வீழ்ந்தாருமேறுபடுவாருமுண்டு வெருவாகமுண்டுமனை
ரூழ்ந்தாருமாவிவிடுவாருமுண்டு தழல்மாடமுண்டுதகர [யின்
வாழ்ந்தாருமாகிநெரிவாருமுண்டு வயின்யாவுமுண்டுவடியாச்
சூழ்ந்தாருதீயினெரிவாருமுண்டு சுடுமாரியுண்டதிலையார்.

உரை.—நெருங்கிவிழுமிடிகள் பட்டுச் சாவார்சிலரோ, வெருவி யுயர்ந்த மனையினின்று தாண்டிவிழுகையி லிறப்பார் சிலரோ, பெரியமாளிகைகள் வெந்துதகர்ந்து விழுகையி லதிலே வாழ்ந்திருந்தவர் கிழகப்பட்

டுநெரிந்து மடிவார்சிலரோ, இடங்கடோறும் வடிவின்றிப்பரந்து நிறைந்த வக்கினி வெள்ளத்தி லெரிவாரன்றித் தப்பியுய்ந்தாரில்லையென்க.

137. விரகங்கொடீயமிறையாவும்வேக விரிநீதிதூண்டும்விளியா
நரகங்கொடீயினிகர்தோற்றுமாரி நனியாகவிட்டவிவனே
யுரகங்கொடீயவிடமிஞ்சுபாவ முருவாகிமாறுகருணைச்
சிரகங்கொடுயமுகிலாகவின்று திரிநாதனென்றுதொழுதான்.

உரை.— காமவிரகமுதற்கொண் டுள்ளபாவமெல்லா மெக்காலமும் வேகும்படி யாண்டவனதளவிறந்தநீதி கொளுத்தித் தூண்டாநிற்க வெப்பொழுது மவியாத நரகத்தீயி னகோரத்தைக் காட்டும்படி முற்சொன்ன வக்கினிமாரியைத் திரளாய்பொழியவிட்டவ னித்திருக்குமாரன்றானே. இப்பொழுதோவென்னிற் பாம்பினஞ்சினுங் கொடியபாவங்களைத்தீர்த் திரட்சிக்கும்படி மனிதனாகிக் கருணையை மழையாகப் பொழியு மேகவடிவாய்த் திரிகின்றானென்று மிக்கயேல்சொல்லி வணங்கினானென்க.

138. மெய்ந்நூற்றிறத்துளிவையாவுமின்ப மிகவும்பர்கேட்டுவிரி
கைந்நூற்றிறத்துநிகராதமாலை கடிதாகவாசமலரை [வாய்க்
யந்நூற்றிறத்துவடிவாகவீக்கி யடிமேலிறைஞ்சியணிய
வெந்நூற்றிறத்துமிணையாதவாசி யினிதன்றுபாடியிடுவார்.

உரை.— உண்மைகொண்டு சொன்னவற்றை யினிதாய்க்கேட்டமற்றவானவர் கைபடித்த நூலின்றிறத்தினு னிகரப்படாத வழகிய மாலைகளாம்படி சீக்கிரமாய் வாசமலர்களை யழகுள்ள பொன்னூலாலே வடிவாகக்கட்டிக் குழந்தையின் திருப்பாதத்தின்மேல் வணங்கியணிந்தபின்னரெல்லாநூலானு நிகரப்படாத புகழ்ச்சிகளை யினிதாயுரைத்துப் பாடினாரென்க.

139. மாற்றானைமாய்த்தகதநீதிமாற்றி மாற்றானையாற்றமனுவா
யேற்றானையேற்றவடுகாலநீக்கி யேற்றானையேற்றவிழிந்தே
தேற்றானையாற்றவழுதாவிவாழ்த றேற்றானையுய்ப்பமடிவா
யாற்றானையாற்றுமருளாய்ந்தியாரு னருவீரவாண்மையறிவார்.

உரை.— உன்னைப்பகைத்தவரைக் கொல்லும்படி சினந்த நீதியை மாற்றி யப்பகைவரை யிரட்சிக்கும்படி மனிதனா யுன்னை வணங்காதவரை வெட்டியழிக்குங் காலம்போக்கி யாவரையும் மோக்ஷக்கரையேற்றும்படி காலமாகி நீயிப்பூவுலகிலிறங்கித் தேறுதலின்றி வருந்தினோரை யாறுதல்செய்து பேணும்படி நீயழுது தம்முயிர் பிழைக்கும் வகையில்லாதாரைப் பிழைப்பிக்கும்படி நீயுன்னுயிரைச் செலவழித்துமடிவா யாறுதலில்லாத பாவிகளுக் காறுதல்செய்யு மித்தயையை யாராய்ந் துனதரிய வல்லமையாரறியவல்லாரென்றாரென்க.

140. ஒருநாதனென்று தனியேகனின்று மொருமூவரொன்று பெயராய்க்
குருவாகிவந்து தணவாதகன்று குறுகாதுமெங்குமுளனாய்ப்
பொருளாதியென்றுபொருடோறுநின்று பொருடோறழிந்து சிதையா
யருவாகிநின்றுமுருவோயியாரு னருவீரவாண்மையறிவார்.

உரை.—நீ தேவசுபாவ முறையாற் றுணையின்றி யொரேயொருக டவுளா யேகனுமாய் நின்று மாள்வகையினால் மூவரிவொருவனாய் நின்று எப்பொழுது மெங்குமுளவனாயினு மொருகாலத்துக் குருவாக வந்தாயென்று முன்னிருந்தவிடத்தை விடாமலு மகன்றாயென்று முன்னளவிறந்த சுபாவங் குறுகாம லொவ்வொரு குறுகியவிடத்து முழுதுநிற்பாயென்றுஞ் சொல்லப்படுவாய், பொருளெல்லாத்திற்கு மாதிகாரணமே நீயாகி யெப்பொருளிடத்திலு நிற்பாய், அப்பொருளழியுங் காலத்துக் கூடநின்ற நீ கூடவழியாய், அரூபியாய் நின்று மிக்காலத்துருவானாய், ஆதலா லிவ்வுலகி லுனதரிய வல்லமை யறியும்படி வல்லவராரொன்றொன்க.

141. வினையென்றுமின்றிவினைசெய்துசெய்த வினைதன்னிலொன்றும்விழையாய்
நினைவொன்றுமின்றிமறவொன்றுமின்றி நிகிலந்தெரிந்தநிலவாய்
முனைவொன்றுமின்றிமுனிவாய்முனிந்து முதிர்கின்றவன்புமுயல்வா
யனையொன்றுமின்றியுயர்வோயியாரு னருவீரவாண்மையறிவார்.

உரை.—வினையொன்றுங் கொள்ளாம லாக்கல் காத்த லழித்தலென்னும் வினையெல்லா நீ யொருவனே செய்து செய்தவினைகளிலே யுனக்கிலாபந்தேடாய், இறப்பெதிர் நிகழென்னு முக்காலமு முனக்கொன்றாயெல்லா நிகழ்காலமாகி யெல்லாவற்றையு மப்பொழுதே யாரும்பொருளைப்போலக் கண்டறிந்தமையா லுனக்கு நினைவுமில்லை மறதியுமில்லை, இங்ஙன மெல்லாவற்றையு மறிந்தவொளியே! நீ மயக்குவிக்குங் கோபமொன்றுமின்றிக் கோபிப்பாய், கோபித்தவிடத்து நிறைந்த தயையைச் செய்வாய், இங்ஙன முவமையொன்றின்றி யுயரிய குணங்களையுடையோனே! இவ்வுலகிலுன தரியவல்லமை யறியும்படி வல்லவராரொன்றொன்க.

இளவன்மாட்சிப்படலம் முற்றும்.

ஆகப்படலம் — 14 — க்கு — விருத்தம்

1405



## பதினைந்தாவது

# சோசுவன்வெற்றிப் படலம்.

- ∽∾∽ -

### I. வேறு.

1. தேனூர்ந்தநறும்பாகிற் றெள்ளமுதிற்றீஞ்சொல்லான்
மீனூர்ந்தவிண்ணவர்சூழ் விழைந்திளவற்றுதிபாடக்
கானூர்ந்தமலர்வாவி கடிந்தன்னூர்நெடுநெறிபோய்
வானூர்ந்தகதிர்சாய்ந்து வாருதிநீரொளித்ததுவே.

உரை.—முன்சொன்னபடி வாசத்தேன் பாகினுந் தெளிந்தவமுதினு மினியசொல்லைக்கொண்டு வானவர்கூடித் தேவகுழந்தையைத் துதித் துப் பாடாநிற்கப் பகலிலேயிருந்த வாசமலரைப்பூத்த குளத்தின்கரை யைவிட்டு மரியுஞ் சூசையுந் திருக்குமாரனையேந்திக்கொண்டு நெடுவழி நடந்தபின்பு வானத்தினிறைந்த சூரியன் கதிரன்று கடலிலேயொளித் தத்தமித்ததென்க.

2. நீரொளித்தசுடறெழுமுன் னின்றெழுந்தநிறைநிரார்
பாரொளித்தநாதனடி பணிந்தேந்தித்துயர்கெஞ்சாக்
காரொளித்தமின்களெனக் கடுகிப்போய்நெடுநெறியின்
சூரொளித்தவானவர்தீஞ் சொல்லாடவேகினரோ.

உரை.—கடலிலொளித்த சூரியனெழுந் துதயமாகுமுன்னே நிறை விடாத குணத்தையுடைய மரியுஞ்சூசையும் பூவுலகிலொளித்து மனித னுயநாதனைவணங்கிக் கையிலெடுத்தேந்தித் துயர்க்குப் பின்வாங்காமல் மேகத்திலொளித்த மின்களைப்போலச் சீக்கிரமாய் நடந்து நெடும்வழி யால் வருந் துன்பங்களையாற்றும்படி சூழவானவ ரினிதாய்ப் பேசிக்கொ ண்டுவரப் போனுரென்க.

3. முளைத்தெழுந்தமுழுமதிபோ லரசன்னமுதிர்தூவி
வளைத்தெழுந்தகுடைவிரிப்ப வானுச்சிசெஞ்சுடரோன்
றிளைத்தெழுந்தகதிர்வீசித் தேன்றுளித்தபூஞ்சினைகள்
விளைத்தெழுந்தமலர்ச்சோலை மிடைந்தடைந்தார்வினைவென்றார்.

உரை.—இங்ஙனம் வினையாவையும் வென்ற விம்மூவர் விரைந்து நடந்துபோய்ப் பூரணசந்திரனைப்போலத் தூயவன்னங்களிறகுகளை விரித் திவர்க்குமேற் குடைபிடித்தாற்போலப் பறந்துவரச் சூரியனுச்சியிலே வந்தபோது தேனைப்பொழிந்த மலரைப்பூத்த வொருசோலையிலே சேர்ந்தாரென்க.

4. நீர்தவழுஞ்செந்தீயோ நிலமகடன்றுவர்வாயோ
கார்தவழுமின்னினமோ கமலமலர்த்தடமொருபால்
வார்தவழும்புவிச்சிலம்போ மணிவரன்றியொலித்தோடிப்
பார்தவழும்யாறொருபால் பணிக்கைபோற்றழுவினவே.

உரை.—அச்சோலையி னொருபக்கத்து நீர்மேலே தவழாநின்ற நெருப்பென்பவோ, பூமகளது சிவந்தவாயென்பவோ, மேகத்திற்றோன்றிய மின்களென்பவோ, தாமரைநிறையப்பூத்த தடாகமு மொருபக்கத்து அப்பூமகள் காலிலே காட்டின பொற்சிலம்புபோல மணிகளைக்கொழித்து முழங்கிப் பூமேற்றவழ்ந்தோடுமாறு மிவ்விரண்டு மிருபக்கத் திருகைகளைப்போல வச்சோலையைத் தழுவாநின்றனவென்க.

5. அத்தலையாரநிழற்கா வகட்டுறைந்தார்மாதவனு
மைத்தலையார்முகிலுலகின் வானுலகின்மேலுயர்ந்தோன்
மொய்த்தலையாருலகெய்தி முற்றெளிய னுருக்கொண்டா
னித்தலையாளுண்மையைவா னெய்தினரோசொன்மினென்றான்.

உரை.—அம்மூவர் சொன்ன பூஞ்சோலை நிழலிலேயிருந்தார், இருந்தபின்பு மாதவன்சூசை சூழ்ந்தவானவரைப்பார்த்து மேகமண்டலத்தையும் வானமண்டலத்தையுங் கடந்து வாழ்திருந்தநாதனிஃதா கடல்சூழ்ந்த பூவுலகில்வந்து முழுதெளியனைப்போல வுருவத்தைக்கொண்டான், இத்தன்மைத்தானுக்குள்ள வல்லமையை வானவரோ சொல்லுவீராகவென்றானென்க.

6. செய்ப்பட்டவானவருந் திறமுனிசொற்கேட்டுவந்து
மெய்ப்பட்டமறைமுதலோன் மெல்லடியைப்பணிந்தேற்றிக்
கைப்பட்டபடைவீரர் களத்திடைமுன்னிவன்காட்டும்
மொய்ப்பட்டவலிகாட்ட மிக்கயலேமொழியுற்றான்.

உரை.—வானவருஞ் சூசைசொன்னதைக்கேட்டுக் களிகூராநிற்ப மிக்கயேலென்னும் வானவன் மெய்யானவேதத்தைத்தந்த முதலோனாகிய வத்திருக்குமாரன் திருப்பாதத்தை வணங்கி முன்னாளி லிவன்போர்க்களத்திலே காட்டின வல்லமையைத் தான் காட்டும்படி சொல்லத்துடங்கினனென்க.

7. அலையின்றமுத்தெனவீங் கயர்வுற்றோன்முன்னாளின்
மலையின்றவிம்மணிப்பூம் புனலிடத்தும்மறைபகைத்த
கொலையின்றவேல்வல்லார் குழைந்தறவிந்நாட்டிடத்துங்
கலையின்றசொற்கடந்து காட்டியவைகேண்மினென்றான்.

உரை.—சிப்பியிற்றிரண்ட முத்துப்போலத் துணையின்றிக் கன்னித்தாயிடத் துடலையெடுத்து மனிதனு யலைபட்டுக் கடலி லம்முத்து நின்றலைவதுபோல விங்கேயலைந்து திரியுமிந்நாதன் முன்னாளிலே மலையினின்றொழுகி மணிகளைக்கொழித்தோடு மிவ்வாற்றிடத்தும் வேதத்தைப் பகைத்தவர் படையெல்லாங் குழைந்து மடிந்துகெடும்படி யிந்நாட்டினிடத்துங் கற்றோருஞ் சொல்லத்தகுந் தன்மையைக்கடந்து வற்புதமாக விவனடத்தினவற்றை நான்சொல்லக் கேட்பாயாகவென்று மிளவு மிக்கயேல் சொன்னானென்க.

## II. வேறு.

8. கல்விற்றீட்டிவரைந்தமறை கடவுள்தந்துமலையிறங்கி
யெல்விற்றீட்டியொளிர்ந்தமுகத் தெழுமோயிசன்செல்கதிசேர்ந்
வில்விற்றீட்டியூனுமிழ்ந்த வேற்சோசுவனக்குலத்தரசாய் [து
வல்விற்றீட்டிவளர்தெய்வ மாட்சிகாட்டுமுருவானான்.

உரை.—ஆண்டவனிருகல்லிலே வேதகற்பனைகளை யெழுதித்தந்த பின்பு சீனாயிமாமலையினின் றிறங்கிச் சூரியனைப்போல விளங்கின முகத்தோடு தோன்றின மோயிசனென்பவன் செல்லத்தகுங் கதியைச்சேர்ந்து மடிந்தபின்பு விளங்கியூனுமிழ்தற்குக் காரணமான வேலையுடைய சோசுவன் யூதர்குலத்திற் கரசனாகி வல்லமையால் வளர்ந்த தேவமாட்சிமையைக்காட்டும்படி தானேயுருவானானென்க.

9. கார்தாவசலமேற்பிறந்து கதிர்சால்தும்முமணிவரன்றித்
தார்தாவென்னச்சூழ்தயங்கித் தண்டாதலரிற்றவழ்ந்துலவிச்
சீர்தாவிந்நாட்டிடைப்பரந்து செல்வாயெல்லாந்திருச்செலுத்துஞ்
சோர்தானென்னுமிந்நதியைத் துன்னியூதரெய்தினரோ.

உரை.—மேகத்துட்டாவிய வுச்சியையுடைய மலையிற்பிறந்து விளங்கிய மணிகளைக்கொழித்து மாலையின் றன்மையான் மலைசூழவசைந்தோடிக் குளுந்த மலருட்டவழ்ந்துலாவி யிந்தச் செல்வநாட்டிடத்துப் பரந்து தான் போனவிடமெல்லாஞ் செல்வங்களே நிறையும்படி செய்தோடுஞ் சோர்தானென்னப்பட்ட விவ்வாற்றினிடத்து யூதரெல்லாரு மணுகிச் சேர்ந்தாரென்க.

10. தெண்ணந்தண்ணீர்மேய்ந்துயர்ந்தசெல்லேமின்னித்திரண்டார்த்துக்
கண்ணங்குன்றத்துயர்நெற்றி களிப்பப்பொழிந்தவெள்ளமொடு
தண்ணங்கந்தமலர்முல்லைத் தடத்திற்பெருகியந்நாளில்
வண்ணங்கொண்டுவந்தோங்க வரைவற்றொழுகுமாநதியே.

உரை.—இந்நதி பூதர்வந்தபொழுதே கடற்றிரையைமேய்ந்துயர் பரந்தமேகங்கள் திரண்டுகூடி மின்னிமுழங்கிப் பெரிய மலையினுச்சி களிகூரும்படி திரளாய்ப் பெய்தோடிய வெள்ளத்தோடு குளிர்ந்த வாசமலரைப்பூத்த முல்லையிடத் தங்கங்கேகூடிய வாரிகளாற்பெருகி யிவ்வழகிய நாடுமகிழ்ந்து வளரும்படி மட்டில்லாத பெருக்கத்தோ டோடினதென்க.

11. கரைமேற்றிரண்டபூதர்கொணர்கதிநூற்பேழைசேர்ந்தனகா
ணிறைமேற்கீழ்நின்றனதிரைக ணெறிபோயோடமேல்வருநீர்த்
திரைமேற்றிரைநின்றதிசயித்த சீர்போலடுக்கிநின்றினிதாய்ப்
புரைமேற்களித்தபூதரெல்லாம் போயக்கரைசேர்ந்தெய்தினரே.

உரை.—அங்ஙனம் பெருகினவாற்றின் கரையின்மே லிபூதரு மவர் கொண்டுவந்த வேதமெழுதிவைத்திருந்த பேழையுஞ் சேர்ந்தவுடனே நேராகப்புனல்பிரிந்து அவருக்குக் கிழக்குள்ளவாற்றுநீரெல்லாந் தன்வழியைத் தொடர்ந்தோடிப் போகாநிற்க மேல்வரு நீரோவென்னி லதிசயித்துப் பார்த்திருந்தாற்போல முன்னிருந்த திரைமேற் பின்பு வருந்திரையடுக்கடுக்கா யேறுநிற்பக் கீழே நீரின்றியினிதாய் நனையாம னிகராத மகிழ்ச்சியோடு பூதரெல்லாரு மக்கரைசேர்ந்தாரென்க.

12. இவ்வாறவ்வாறவற்கடந்த வெல்லைவெயவருமுள்வியப்பச்
செவ்வாறடிகடம்பொறிபோற் சிதறுதொதுங்கிநின்றதிரை
யொவ்வாமறையைத்தொழுந்தன்மைத் துவந்தொல்லெனவீழ்ந்
துலகறிய
வவ்வாறுற்றதுரைத்தென்ன வதிரமுழங்கியோடினவே.

உரை.—இங்ஙன மந்நதியை பூதர் கடந்தவளவிலே கண்டயாவருமதிசயிக்கும்படி நல்லமுனிவரடக்கின பஞ்சேந்திரியங்களைப்போல வங்கங்கே சிதறிப்பரவாம லொதுங்கி நின்ற திரையெல்லாம் பூதர்கொண்டுவந்த வெத்தாலு நிகராத வேதத்தைத் தெண்டனிட்டதன்மையா லொல்லென விழுந்து அன்றங்கேயான செய்தியை யுலகறியும்படி சொல்லிக்கொண்டு வந்தாற்போல வெங்குமதிரும்படி முழங்கி யோடினவென்க.

13. அமிர்தம்பாய்ந்துமதுப்பாய்ந்தா ரன்னம்பாய்ந்தவயல்கட
துமிர்தம்பாய்ந்துகயல்பாய்ந்து துள்ளுங்கமலத்தடநீக்கித் [ந்து
திமிர்தம்பாய்ந்துநிழல்பாய்ந்த செழும்பூஞ்சோலைபுடைமருவ
நிமிர்தம்பாய்ந்துமுகில்பாய்ந்த நேரார்வைகுநகர்கண்டார்.

உரை.—அங்ஙனம் பூதராற்றைக்கடந் தப்புறம்போயினிய புனற்றண்ணீரு மதுவுங் கலந்துபாய்ந்துவிளைய வுள்ளே யன்னங்கள் குதித்துவிளையாடும் வயலைக்கடந்து நீர்த்திவலை சிதறும்படி கெண்டைகள் குதித்துப்பாய்தலிற் றுள்ளித்தளம்புந் தாமரைமலரைப்பூத்த பெருந்தடாகத்தையுங் கடந்து மேல்வளர்ந்து நிழலைப்பரந்த பூஞ்சோலைகள் சூழ்ந்துதலையெடுத்து மேகத்துட்பாய்ந்த மதிலையுள்ள பகைவரிருந்த நகரைக் கண்டாரென்க.

14. செல்லேவரையைத்தழுவுதலோ செல்லைத்தாங்கும்வரைதா
வெல்லேயெரிக்கோவென்னுநக ரேந்துங்கன்னியம்புரிசை [ஞோ
வல்லேவளர்வேல்யூதரொலா மகிழக்கண்டார்த்தம்புவிசை [னே.
யொல்லேவெல்லப்போயினபோ துரையுற்றறைந்தான்சோசுவ

உரை.—மலையைத்தழுவின மேகங்களென்பவோ, மேகங்களைத்தாங்கிய மலைதானென்பவோ, விளங்கிய எரிக்கோவென்னு நகரைச் சூழ்ந்த வழியில்லாத மதில்களை வேல்வல்லமையுடைய யூதரொல்லாரு மகிழ்ச்சியோடு கண்டவளவிலே முழங்கிவிட்ட வம்பின் விசையை வெல்லும்படியதின்மேல் விரைந்துபோகையி லரசனாகிய சோசுவன் சொன்னானென்க.

15. செல்வேஞ்செல்வநகர்தகர்ப்பச் செல்லச்செல்லுமெல்லைசெ
வெல்வேம்வெல்லும்வல்லமையோ வீரவில்விள்மாரியினோ [லும்
டெல்வேல்வல்லதல்லதென விறைவன்றன்றன்வலிகாட்டக் [ன்.
கொல்வேலில்லாதிந்நகரைக் குலையச்சிதைத்தல்காண்மினென்று

உரை.—வீரரே! நாமச்செல்வநகரிடத்துச் செல்லுவோம், சென்றதைத்தகர்த்தழிக்கும்படி யங்கேசேருதற்குச் செல்லு நேரமாத்திரமே செல்லும், சென்றவுடனே வெல்லுவோமாகிலு மிவ்வெற்றியைக் கொள்ளும்படி வீரவில்லெய்தவம்பின் மாரியும் விளங்கிய வேலின்றன்மையும் வல்லதல்லவென்று நம்முடைய வாண்டவன்றனே தன்வல்லமையையின்று காட்டும்படி யாயுதமொன்றுமின்றி யந்நகரை யழிக்கக் காண்பீராகவென்றானென்க.

16. ஏறுரொலிபோற்பற்பறையார்த் திறைவன்பணியால்மறைப்பேழை [னைந்
வீறுமதில்சூழ்கொணர்ந்தொருசொல் விளம்பாவெள்வேலேந்திவி
தாறுவழல்பெய்யரியன்ன ராறுநாளைக்கொருகாலே
மாறுவரவேமருண்டொன்னார் மனமுட்பதைப்பவியப்புற்றார்.

உரை.— இடிமுழக்கம்போலப் பற்பல வாச்சியங்கள் முழங்கி யாண்டவனேவலினால் வேதம்வைத்திருந்த பேழையை யந்நகர் மதிலின் சூழக்கொண்டுவந்து தாமொன்றும் பேசாம லாயுதங்களை யேந்திக்கொண்டு தழலைவிட்ட சிங்கங்களைப்போல யூதராறுநாளுந் தப்பாமல் நாளைக்கொருமுறை சூழவந்தார், அதைக்கண்ட பகைவர் மயங்கி யுட்பதைத் ததிசயித்திருந்தாரென்க.

17. கோளுற்றொளிர்வான்கோனிவற்றைக் காணக்குணக்கிலெழு
நாளுற்றம்பிற்கடிதோடி நகரேழ்முறையின்றிடைவளைத்து [வேழா
வாளுற்றெவரும்வானதிர வாய்விட்டார்த்துவருகவெனத் [ன்.
தோளுற்றுயர்குன்றியல்குன்றுஞ் சோசுவன்றன்பணித்திட்டா

உரை.—அங்ஙன மாறுநாளும்போய் யேழாநா ளங்கே நடக்கு மதிசயத்தைக் காணும்படி சூரியனுதயஞ் செய்தவளவிலே யின்றுவில்லெய்தவம்பினுங் கடுகிப்போ யேழுமுறை நகரைச்சூழ வளைத்து வாளையேந்திக்கொண் டெல்லாரும் வானதிரும்படி வாய்விட்டார்த்து முழங்கி வாருநகரென்று மலையினும் வல்லதோளையுடைய சோசுவன் பணித்தானென்க.

18. ஆர்த்தார்திரண்டார்முடுகுகின்று ரன்றேயேழாமுறைவரக்கா
ரீர்த்தாருருமொத்தொலித்ததிரவிடைவிட்டரணுந்தகர்ந்திடிந்தே
பார்த்தாரொன்னார்பதைத்தஞ்சப் பாய்ந்தார்யூதர்வாள்பசியைத்
தீர்த்தார்துமித்தார்பகைவெள்ளஞ்சிறந்தவெற்றிநலங்கொண்டார்

உரை.—சோசுவன் சொன்னபடி யூதர் திரண்டுபோய்க் கூப்பிட்டு முடுகி யன்று சூழவேழாமுறைவரும்போது மேகத்தைக் கிழித்தவிடி போல முழங்கியதிராநிற்க வந்நகர் மதிலு மிடையில் விட்டுத் தகர்ந்திடிந்ததனைக் கண்டபகைவர் பதைத்தஞ்சாநிற்க யூதருள்ளே பாய்ந்து பகைவர் வெள்ளத்தை வெட்டித் தம்வாளின் பசியைத்தீர்த்தா ரங்ஙன நிகராத வெற்றியைக் கொண்டாரென்க.

## III. வேறு.

19. பொருவற்றவிதத்துயர்பொற்புநகர்
செருவற்றதிறத்திறகர்ந்ததெனு
வெறுவுற்றவியப்பிலொருங்கெவருந்
தருவுற்றபிரானடிதாழ்ந்தனரே.

உரை.—நிகராதவல்லமையுடைய வந்நகர்போரொன்று மின்றித் தகர்ந்து விழுந்ததென்று கேட்டவெல்லாருமஞ்சி யதிசயப்பட்டு அவ்வல்லமையுள்ள குணத்தையுடைய நாதன் பாதத்தைவணங்கினாரென்க.

20. விண்காவலனார்மிடலஞ்சினராய்
மண்காவல்வழங்கியசோசுவன்வாய்
தண்காவிலடைக்கலமேதரவென்
றெண்காபனநாடரொடுங்கினரால்.

உரை.—அங்ஙனங் காபன நாட்டிலிருந்தவ ரந்தச்செய்தியைக்கேட்டு வானுலகத்தையாளு மிக்கடவுளுள்ள வல்லமைக்கஞ்சிப் பூவுலகாண்ட சோசுவனிருந்த குளுஞ்சோலையிடத்துவந்து தமக்கடைக்கலந் தரச்சொல்லி யிவனிழலிலே யொடுங்கினாரென்க.

21. பாரஞ்சினவஞ்சினபாரிநொடு
நீரஞ்சினர்நித்தனடைக்கலம்வந்
தீரஞ்சிலிரஞ்சிலிரொன்றனனால்
போரஞ்சிலகைப்புகழெஞ்சிலனே.

உரை.—அப்பொழுதுவந்த காபனரைப்பார்த்துப் போர்முகத்திலஞ்சாதகையா லென்றுங் குறையாத புகழையுடைய சோசுவனிதனைச் சொன்னான்: நடந்தவற்புதங்களைக்கேட் டஞ்சினவுலகத்தோடு நீருமஞ்சி யழிவில்லாத நித்தனாகிய கடவுளையண்டி யடைக்கலமாக வந்தீரோ யினியஞ்சாதிருப்பீராகவென்று அடைக்கலந் தந்தானென்க.

22. எஞ்சாவுறவாயினவொன்றுளமற்
றஞ்சாமறமார்பலநாடரொலா
நஞ்சாடியநாணிவில்வவ்வியரு
நெஞ்சாடிகலாடநினைந்தனரால்.

உரை.—அங்ஙனங் காபனர் சோசுவனோ டுறவானாரென்று பின்வாங்காத கோபத்துடனே மற்றநாட்டாரெல்லாரு மிவரைப்பகைத்து வில்லையு மற்றவாயுதங்களைங் கைப்பிடித் திவர்மேற் போர்பொர நினைத்தாரென்க

23. வேறுயுரையும்முறையுள்விதமும்
வேறாய்முறையும்விதியுங்குலமும்
வேறாயிறையும்விழையும்மறையும்
வேறாயுறவாடவிரும்புதலென்.

உரை.—யூதர்பேசும் வார்த்தையு மிருக்குமிடமு நடக்கு முறையுஞ் சொல்லும் விதிகளு மெய்துங்குலமும் வணங்குந் தெய்வமு மனுசரிக்கும்வேதமு மிவையெல்லாம் வேறாகக்கொள்ள நீரவரோடுறவாகும்படி விரும்பினதென்னோ வென்று மற்றநாடர் காபனரைக் கோபித்தாரென்க.

24. பகையார்க்குறவோர்பகையாரெனவுந்
தகையார்க்குளதம்முறையாமெனவே
நகையார்க்கநகைத்துநடுங்கியவவ்
வகையார்க்கிகல்செய்திடவந்தனரால்.

உரை.—நம்முடைய பகைவரோடுறவானரெல்லாரு நமக்குப்பகைவர்தாமேயென்பது பெரியோருக்குள்ள முறைமையல்லோவென்று காபனரை மிகவு நகைத்து நடுங்காநின்றவர்மேலே போர்செய்யும்படி மற்றவரெல்லாரும் வந்தாரென்க.

25. வஞ்சித்துயிருண்ணயில்வவ்வினர்போர்
விஞ்சித்திரளாகமிடைந்தனரொன்
றஞ்சித்திரிகாபனர்வந்தலறி
யெஞ்சித்தொழுதிற்றையியம்பினரால்.

உரை.—அப்பொழுது காபனர் வஞ்சனைமுற்றி வேலேந்தி மட்டின்றித் தம்மேற்போராடும்படி கூடினாரென்று கண்டஞ்சிச் சோசுவனிடத்துவந்து மெலிந்தலறி யவன்பாதத்தை வணங்கி யிதனைச்சொன்னாரென்க.

26. ஒன்னாரினுரத்திலுலாவியுணான்
மின்னோடுமிழுங்கதவேலடலோ
யுன்னோடுறவாடினமென்றுளமற்
றன்னாடரெலாம்பகையாடினரால்.

உரை.—பகைவர் மார்பிலுலாவி யங்கேயுண்டவவரிரத்தத்தையு மின்னையுங்கொப்பளியாநின்ற வேல்வல்லவனே நாமுன்னோ டுறவானோ மென்று மற்றநாடரெல்லாரு நம்மைப் பகைத்தாரென்க.

27. மஞ்செஞ்சுகமாமுரசார்ப்பவரா
நஞ்செஞ்சுகவெய்ப்படைஞாஞ்சிலொடு
நெஞ்சஞ்சுகநீணிலமெஞ்சுகவந்
தஞ்சஞ்சிலமன்னரடுத்தனரால்.

உரை.—மேகமுழக்கத்திலு மதிர்ந்து முரசுமுழங்கிப் பாம்பினஞ்சி னுங்கொடிய பலபடைகளையேந்திக் கண்டவர் நெஞ்சஞ்சும்படி பூவுலகி லெங்கும்பரந்து பஞ்சரசர்கூடி நம்மேல்வந்தாரென்க.

28. விதுவீசியவில்லில்வெலற்கரியான்
மதுவீசுமெரூசலமண்டிலமா
ளதுனீசதனென்னுமடற்பெயரான்
பொதுவீசர்பிரான்பொரவெய்தினனால்.

உரை.—அவ்வைந்தரசருள் பிறைதந்தவில்லால் வெல்லப்படாமல் மதுவைப்பொழியு மெரூசலநாட்டையாண்ட அதுனீசதனென்பவ னரசர்க்கரசனைப் போர்செய்யும்படி வந்தானென்க.

29. நாவாலடையாநயனாபிரமாள்
மேவார்பணிவேலெறிகைமிடலோன்
காவாருமதத்தகளிற்றினுய
ரோவானெனுநாமனுமுற்றனனால்.

உரை.—வாயினாற் சொல்லத்தகாத செல்வத்தையுள்ள ஆபிராநாட் டினரசனுமாய்ப் பகைவர்வணங்கும் வேலினையெறியுங் கையனுமாய் நிறைந்த மதத்தைப்பொழியும் யானையின்மேல் ஓவானென்பவனும் வந் தானென்க.

30. ஏராடியவேரிமநாட்டிறையோன்
பாரானெனுநாமனகல்படியின்
வேராடியமூவிலைவேலுடனோர்
சீராடியதேர்மிசைசென்றனனால்.

உரை.—அழகிய ஏரிமநாட்டரசனாகிய பாராஎன்பவனு மகன்ற பூமியின் வேரறும்படி காரணமாகிய வொரு சூலத்தை யேந்தித் தேர் மேலே வந்தானென்க.

31. கணையோவலியோகதிர்கார்மினலோ
துணையோர்துரகத்துயர்வாள்சுழலப்
பணையோம்பயிலக்கினபாழியினு
னிணையோதவிர்யாப்பியனெய்தினனால்.

உரை.—அம்புங் காற்று மின்னலு மிவையெல்லா மயங்கும்படி பாயுங் குதிரைமேல்வந்து வாளைச்சுழன்றேந்தி வயலைப்பேணி வளரும் அயிலக்கின நாட்டரசனாகிய நிகராத யாப்பிய னென்பவனும் வந்தானென்க.

32. வாசத்தலர்பூம்வயலேகிலநற்
றேசத்தரசாய்ச்சிகிவாகையனைப்
பாசத்திணைபான்மதியாழியனைப்
பூசத்தியிருபிர்பொலிந்தனனால்.

உரை.—வாசமலரைப் பூத்தவயலுள்ள ஏகிலநாட்டரசனு யக்கினிக் கொடியையுடையனைக் கொடுமையா லுயிரைக்கொல்லும் கூற்றன்பாசம்போலவும் வடிவினாற் சந்திரனைப்போலவுந் தோன்றிய சக்கராயுதத்தையேந்தினனைப் போர்முகத்து வீரயானையின் மேலாய்ந் தாபிரென்பவனும் வந்தானென்க.

33. இன்னருமெவேயருமெத்தையரும்
பொன்னுடமுறேயரும்வண்புகழ்சேர்
நன்னடெபுசேயருநச்சயில்வேன்
மன்னர்பிரொசேயருமண்டினரோ.

உரை.—சொன்னவரச ரைவருமன்றி எவேயநாட்டாரும் அமுறேயநாட்டாரும் எத்தைய நாட்டாரும் எபுசேயநாட்டாரும் பிரொசேய நாட்டாரு மிவ்வைந்து நாட்டிலுள்ளவருங் கூடிவந்தாரென்க.

34. மடையைக்கடல்வாரிதிறந்ததெனப்
புடையிற்புவியாவும்புழக்கமுற
விடையெக்கணுமுள்ளவியாவருமே
படையுற்றெமையின்றுபகைததனரால்.

உரை.—இங்ஙன மடையைத்திறந்து கடல்பொங்கி யோடினாற்போலப் பூவுலகம் நெருங்கும்படி சூழவெங்குமுள்ள வெல்லாருங் கூடிப் படையைச்சேர்த்து நம்மைப் பகைத்து மண்டிவந்தாரென்க.

35. மலைநேர்கரியும்வளிநேர்பரியும்
முலைநேர்தனுவுமுறைநேர்கணையுஞ்
சிலைநேருராமுந்தினைசேனைகளே
நிலைநேரிலநேமிநிறைந்தனவே.

உரை.—மலைபோலுங் கரிகளுங் காற்றுபோலும் பாய்குதிரைகளுந் தீயைவிளைக்கு முலைபோலும் வில்லுகளு மழைத்துளிபோலு மம்புமாரி யுங் கல்லுபோலு நெஞ்சுமுடைய சேனைகளுவமையொறின்றிப் பூவு லகெல்லா நிறைந்தனவென்க.

36. போர்கீறியவெய்ப்புணரித்திரையோ
நீர்கீறியநீண்கலமோசிறகாற்
கார்கீறியகற்றிகிரிக்குலமோ
பார்கீறியகாற்படர்தேர்த்திரளே.

உரை.—பொங்கிப் போர்க்களத்திற் படர்ந்த கோபக்கடலின்றிரை களோ, கடலிற்றிரியு மரக்கலங்களோ, இறகுகளைக்கொண்டு மேகத்திற் பறந்த மலைக்கூட்டமோ வெங்கும் பரந்து பூமியைக்கீறி யுருண்டுவருந் தேர்களின்றிரளே தோன்றிற்றென்க.

37. வளியோகடலோமழையோவுருமோ
விளியோடதிர்கூற்றினமோவெவையோ
தெளியோமுயிருண்டுசினந்ததிருங்
களியோடுகடத்தகரித்திரளே.

உரை.— ஓடும்விசையினுற் காற்றே, அதிருமுழக்கத்தாற் கடலோ, பொழியுமதத்தால் மேகமோ, பயக்குமச்சத்தாலிடியோ, செய்யுங்கொ லையாற் கூற்றினமோ வேதோ நாந்தெளிந்து சொல்லப்படாதபடி யுயிர்களையுண்டு சீறிமுழங்கு மதமாருத யானைகளின் றிரளென்க.

38. மேன்மன்னினவீரியர்வில்லினுருங்
கோன்முன்னினகொல்லுகுளம்பினமேல்
வான்மின்னெனவொல்கினவாவினபோர்ப்
பான்மன்மனமுற்றபரித்திரளே.

உரை.—திரண்டகுதிரைகளின் வெள்ளமோவென்னில் தம்மேலே றின வீரரெய்தவம்பிற்கு முந்திப்பாய்வன, தங்குளம்புகளாற் போர்க்க ளத்தைக் குழப்பிப் பகைவரைக்கொல்வன, வான்மின்னைப்போல வொ ல்கிச் சுழல்வன, பாய்ந்து தாண்டுவன போர்முகத்திற் பின்வாங்காத மன த்தனவென்க.

39. கழற்காலினர்கற்றிரடோளினர்பொன்
னிழற்றாரினர்போர்பலநீந்தினரோ
றழற்கோலினர்கூற்றநுதோழரலைச்
சுழற்காரிணைதுன்றபயர்த்திரளே.

உரை.—காலாளாகிய படைவீரரோவென்னில் கழலையணிந்தகால்களையுங் கன்மலையொத்த புயங்களையும் பொன்னால் விளங்கிய மாலைகளையும் பலபோர்க்களங்களை நீந்தி வென்றபழக்கத்தையு மழன்றவிடிகளையொத்த வம்புகளையுமுடையராய்க் கூற்றனுக்கேற்ற தோழருமா யலைகளைச்சுழற்றிய கடலைப்போலத் தம்முணெருங்கித் திரண்டனரென்க.

40. கோற்பேர்படைதேர்க்கொடிமாபடைமால்
தோற்பேர்படையோர்தொகையின்றிவருங்
காற்பேர்படைமாகடலக்கடைபோய்
வேற்பேர்படையோவெவர்வெல்வரொன்றார்.

உரை.—இங்ஙனங் கூடிய குதிரைகளின் பெரும்படையுங் கொடித்தேர்களின் பெரும்படையு மதயானைகளின் பெரும்படையுந் தொகையொன்றின்றித் திரண்டகாலாளின் பெரும்படையுங்கூடி யாய வம்மாபோர்க்கடலைக்கடந்து வெல்லும்படி வல்லவருண்டோ பெரும் வேற்படையுடையோ யென்றானென்க.

## IV. வேறு.

41. ஊன்முகந்தழன்றவேலோ னோர்நகைசினந்துகொட்டித்
தேன்முகந்தந்துகொல்லுந் தீவினைப்பகையொன்றன்றி
வேன்முகந்தந்தவெம்போர் வெருவவோவிரங்கிநாதன்
றன்முகந்தந்தகாலை சயநமக்கரிதோவென்றான்.

உரை.—காபனர் சொன்னதைக்கேட்டுப் பகைவர்மார்பிலே யூனைமுகந்து தீயைக்கொப்பளிக்கும் வேலையுடையசோசுவன் கோபத்திலேயொரு புன்னகையைக்காட்டிச் சொல்வான்: இன்பத்தைக்காட்டிக்கொல்லும் பாவஞ்செய்த பகையையஞ்சுவதல்லாதே வேலையேந்திப் பகைவர்செய்யும் போர்முகத் தஞ்சுவேனோ? ஆண்டவன் றானிரங்கி முகந்தந்தவிடத்தில் வெற்றியு நமக்கரிதோ வென்றானென்க.

42. கூற்றெனச்சினந்தங்கின்ன கூற்றினைமுடியாமுன்ன
ரோற்றினத்துடன்றதானை யெழுகவென்றுயர்தேரேறிக்
காற்றெனப்பறந்துஞாலங் கலக்குறிக்கூசச்செந்தீ
யூற்றெனச்சுடரைப்பில்கி யொளிர்படைபடர்ந்ததன்றே.

உரை.—சோசுவன் கூற்றுபோலச் சினந் திவற்றைச் சொல்லிமுடியுமுன்னே சிங்கங்கள் கூட்டம்போலக் கூடினதன்றுனைகளெழுகவென்று தானு முயர்ந்ததேரேறிக் காற்றுபோலப் பறந்துபோய்ப் பூவுலகெல்லாங் கலங்கிக் கூசும்படி செந்தீயைக்கொப்பளிக்கு மூற்றுபோல விடைவிடாம லொளியைச் சிதறினபடை யெங்கும் படர்ந்து நடந்ததென்க.

43. காலெனவிசையிற்றேர்கள் காலொடுபறந்துசெல்லக்
கோலெனப்பரிகள்செல்லக் குளிறிவேமிடிச்சூன்மேகஞ்
சாலெனக்கரிகள்செல்லச் சமர்ப்புலிவெள்ளமொய்த்த
பாலெனப்பதாதிசெல்லப் பகைவர்வெம்படையைக்கண்டார்.

உரை.—அங்ஙனங் காற்றுபோலத் தேர்களுந் தம்முருளை விசையிற் பறந்தாற்போலச்சென்று கூடவம்புபோலக் குதிரைகளுமுழங்கியிடிகளைச் சூலாகக்கொண்ட மேகங்களின் றிரளைப்போல யானைகளும் போர்முகத்துமொய்த்த புலிகளின் வெள்ளம்போலக் காற்படைவீரருஞ் சென்று பகைவருடைய படையைக்கண்டாரென்க.

44. கட்புலனழலைத்தும்மக் கதத்தெதிர்கடலைக்கண்டா
னுட்புலனழற்றுஞ்சீற்றமொடுக்கியசீலமுள்ளி
மட்புலன்மொய்த்தவாரி மறித்தெனப்படையைப்போக்காப்
புட்புலன்றேய்வேலாபன் புணர்கவென்றறைந்தான்வல்லோன்.

உரை.—வல்லோனாகிய சோசுவன் றன்கண் டீத்திரளைக் கொப்பளிக்கும்படி கோபத்தோடு பகைவர் படைக்கடலைக்கண்டான், கண்டவளவிலே யுள்ளேபொங்கிய கோபத்தை யுள்ளொடுக்கித் தருமநினைவெடுத்துப் பூவுலகெல்லா மூடும்படி வரும் வெள்ளத்தை மறித்துத் தடுத்தாற்போல வவன்றபடை போகவொட்டாமனிறுத்திப் பகைவர்மார் பிற்படுத்தின புண்ணிடத்துத் தேய்வுள்ள வேலையேந்திய ஆடனை வரச்சொல்லிச் சொன்னானென்க.

45. ஐவருமிடைத்தூதேகி யனைத்தையும்பொதுவற்றாளு
மெய்வருஞ்சுருதிநாதன் விழைந்தடைக்கலம்வந்தாரைக்
கைவரும்படையின்சால்பிற் கலக்குறிப்பகைத்ததென்றோ
மொய்வரும்பகையினாங்கு முதலவன்பகைதீதென்பாய்.

உரை.—அவ்வைந்தரசரிடத்துத் தூதாகப்போ யுலகங்கள் யாவையுந் தனியேயாளுகின்ற மெய்யான வேதத்தைத் தந்த நாதனைவிரும்பி யவனடைக்கலமாக வந்த காபனரைத் தாந்தம் படைமிகுதியா லாங்காரத்தைக்கொண்டு மயங்கிப் பகைத்ததேதென்றுகேட்டு மீளவும் போர்செய்யும் வீரர்பகையைக் கொள்வதைக் காட்டிலு மாண்டவன்பகை மிகவுந்தீதென்பாயாக வென்றானென்க.

46. பார்பெறவாசையானும் பானுமுன்பனியினீங்குஞ்
சீர்பெறவாசையானுஞ் செகுத்துயிர்வித்திக் கொள்ளும்
பேர்பெறவாசையானும் பிறர்க்கியான்செருப்போர்செய்யேன்
போர்பெறநாதன்வேண்டிப் பொறுக்கவுஞ்செய்யேனென்பாய்.

உரை.—மீளவும் நான் பூவுலகமாள்வதற் காசையினாலாயினுஞ் சூரியன்முன்னே பனிகரைவதுபோல நில்லாதழியுஞ் செல்வங்களையடைவதற்காசையினுயிலாயினும் போர்முகத்திற்கொன்ற வுயிர்களை விரையாகவித்தி விளைந்தடையும் புகழைப்பெறுவதற்காசையினாலாயினும் பிறர்க்குப் போர்செய்யவு மாட்டேன், நம்முடைய நாதனைவேண்டிப் போர்செய்யவுஞ் சற்றும்பொறுக்க மாட்டேனென்பாயாக வென்றானென்க.

47. ஒருப்படவுறவுநன்றென் றுடன்றுதாஞ்செருக்குற்றின்றே
செருப்படவேண்டினின்றே செருவரந்தருவலென்பாய்
மருப்படமலர்ந்ததாரோய் மருட்படாதறைதியென்று
னெருப்படவெய்யவாப வீருபனைத்தொழுதுபோனான்.

உரை.—ஒருப்பட்டுறவாதலே நல்லதென்பாயாயினுந் தாமாங்காரித் தின்றுபொருதல் வேண்டுமென்று லின்றுதானே போர்பொரவந்து கேட்டவரத்தைத் தருவேனென்பாய், வாசமாலையையுடையோய்! மயக்கின்றி யஞ்சாதவுரைகளைப் பேசுவாயாக வென்றான் சோசுவன் ஆபனுமிதைக்கேட்டு நெருப்பினும் வெகுண்டு தன்னரசனைத்தொழுது போனானென்க.

48. வின்முகத்தம்பிற்சென்று வேந்தரைந்திறைஞ்சிச்சொல்வா
சொன்முகத்தடங்காச்சீர்த்திச் சோசுவன்றாதென்றுற்றேன் [ன்
வன்முகத்தொவ்வாநாதன் வணங்குகாபனரைச்சீய்க்கச்
சென்முகத்துறையின்வைவேற் செருப்படைமிடைந்ததென்றே.

உரை.—அங்ஙனம் ஆபன் வில்லாலெய்யப்பட்ட வம்பின் விசையால் விரைந்து பகைவரிடத்துச் சென்று கூடியிருந்தமன்னரைவரையுமிறைஞ்சிச் சொல்லத்துடங்கினான்: சொல்லிடங்காத கீர்த்தியையுடைய சோசுவன் வரவிட்ட தூதாகவந்தேன், நிகராதவல்லமையுடைய நாதனை வணங்கிய காபனரைக் கெடுக்கும்படி நீங்கள் மழைத்துளியினுநிறைந்தபடையைக் கூட்டினதேதோவென்றானென்க.

49. மண்முழுதன்றிவானும் வணங்குமொப்பெதிரீறின்றி
யெண்முழுதிழந்தசிதைத் திறைவனைத்தொழுதல்தீதோ
வெண்முழுதறிவுமாழ்க வுடற்றலேவேண்டாவென்றுன்
புண்முழுதேற்றும்வேலோன் பொருநருஞ்சினந்துநக்கார்.

உரை.—பூவுலகும்வானுலகும் வணங்காநிற்ப நிகருமெதிரு முடிவு மின்றி யெண்ணப்படாத குணங்களையுடைய கடவுளை வணங்குவ தமக் குத் தீதென்று தோன்றிற்றே? இங்ஙன நல்லறிவு முழுதுமயங்கும்படி சினத்தைக்கொள்ள வேண்டாமென்று கழுகு முதலிய புள்ளெல்லாந் தமக்கு நல்விருந்திடுமென்று துதித்து வாழ்த்தும் வேலையுடையோனாகிய ஆபன் சொன்னான், இதைக்கேட்ட வவ்வைந்தசருஞ் சினந்து நகைத் தாரென்க.

50. வேற்றலாதவருநீரும் விரும்பியொன்றுயபோழ்தின்
மாற்றலாரொமக்கென்றன்ன மன்னவருரைப்பமீட்டுங்
கூற்றலாதிணையாவேலான் கூறுவான்படையின்வெள்ளம்
போற்றலானுளத்திலேமம் பொங்குபுமருளல்வேண்டா.

உரை.—காபனரு மீருமொன்றுயபின்பு வேற்றுமையின்றி யெல் லாரு நமக்குப் பகைவர் தாமேயென்று அவ்வரசர் சொல்ல, மீளவுங் கூற்றனல்லாமல் வேறே நிகரில்லாத வேலானாகிய ஆபன் சொல்லுவான். நீர் வெள்ளம்போல வெண்ணப்படாத படையைக்கொண்டதனு லாங்கா ரமுட்பொங்கிமயங்கவேண்டா மென்றுனென்க.

51. பிரம்பினுலெசித்துநாட்டிற் பெருந்துயர்விளைந்தவாறுங்
கரம்பினுரடியேகாணக் கடற்றிரைபிரிந்தவாறும்
வரம்பிராதெழுந்திந்நாட்டில் வரும்புனல்நின்றவாறும்
பரம்பிரான்வலியைக்காட்டும் பலவையுங்கேளீர்கொல்லோ.

உரை.—எசித்துநாட்டிலே யொறுசிறு பிரம்பினாற் பெருந்துன்பங் கள் விளைந்தவகையு மடிமணல்காணும்படி கடல் தன்றிரைகளைப் பிரி த்து வழிவிட்டவகையுங் கரையிலங்காமற் பொங்கி யிந்நாட்டிலேபா யுஞ் சோர்தானென்னுமாறு நின்றவகையு மிவையுமன்றிப் பரமநாதனு டைய வல்லமையைக் காட்டும்படி யாயபலவையுங் கேளீரோ வென்று னென்க.

52. இத்திறத்தனைத்துஞ்செய்த விறைவனம்மிறைவனாகி
யத்திறத்தடலோனம்மை யமர்செயவெகுண்டகாலை
கைத்திறத்துடன்றவெள்வேற் கடற்படையரணமாமோ
மெய்த்திறத்திறைஞ்சியன்னான் விரிநிழற்பெறனன்றென்றுன்.

உரை.—இங்ஙன மற்புதமாய் முடிந்த வவற்றையெல்லாஞ் செய்த நாத னும்வணங்குநாதன்றுனே யாதலா லத்தன்மைத்தாய வல்லமையு டைய கடவுள் நம்மைப்பகைத்தா லப்பொழுது கையிலே வேலையேந் திக் கடலைப்போல மட்டின்றிக் கூடியபடை நம்மைக்காக்கும்படி யுரிய வரணாகுமோ? உண்மையுணர்ந்த துணிவோ டத்தன்மைத்தாய நாதனை வணங்கி யவன்செய்யும் விரிந்த நிழலிலே யொதுங்குதலே நல்லதென் றுன் ஆபனென்க.

53. போற்றியதேவர்நீக்கிப் புதுப்படவொருவற்போற்றச்
சாற்றியதூதோபோதி சடுதியேநீருநீவி
ரேற்றியதெய்வந்தானு மெம்படையாண்மைநம்மைத்
தூற்றியபின்னர்வாழ்த்திச் சொற்றுவீரொன்றான்றூர்.

உரை.—அதைக்கேட்ட வவ்வசர்கோபித்து நா மிந்நாள்வரைக் கும் வணங்கிய தேவரைக் கைவிட்டுப் புதிதாய்வந்த வொருவனை வண ங்கச்சொல்லவோ தூதாகவந்தாய்? அகன்றுபோ. சீக்கிரத்தில் நீரும் நீர் வணக்கியதெய்வமு மும்மைவென்றழித்தபின்பாக்கு நம்முடைய படையின் வல்லமையையறிந்து வாழ்த்திச்சொல்லுவீரொன்றொன்க.

54. போரிடத்தஞ்சித்தூது புகலவோவந்தேனென்றாய்ப்
பாரிடத்தெதிராநாதற் பழித்தபோதின்றேயிவ்வேற்
சீரிடத்துரிமைசொல்வேன் செருப்படவம்மினென்னக்
காரிடத்தசனிகூசக் கதத்திலார்த்தாபன்மீண்டான்.

உரை.—அதைக்கேட்ட ஆப னிடியேறு கூசும்படி கோபித்து முழ ங்கி நானோ பொருதற்கஞ்சித் தூதுசொல்லவந்தேன்? பூவுலகிலொன்று யிருந் தெதிரில்லாத நாதனை நீர்பழித்தபொழுதே யின்றுதானே யிந்த வேலைக்கொண்டு நம்முடைய நாதற்குள்ள வுரிமையைச்சொல்லிக்காட்டு வேன், இப்பொழுதே போர்செய்யவாருங்களென்று திரும்பினனென்க.

55. சுளிமுகத்தனைத்துங்கேட்ட சோசுவ னுருமிற்சீறி
வெளிமுகத்தமலன்சொல்லும் வெல்லுவாய்வென்றென்னுண்மை
தெளிமுகத்தெவர்க்குந்தோன்றத் தெளிக்குவாயென்னக்கேட்டு
வளிமுகத்தழலிற்பொங்கி வயப்படையெழுகவென்றான்.

உரை.—நடந்தயாவையும் ஆபன்சொல்லச்சினந்துகேட்ட சோசுவ னிடிபோலச்சீறிநிற்க வாகாயத்திலொருமுழக்கந்தோன்றி யாண்டவன் சொன்னான்: பகைவரைவெல்லுவாய், வென்றவகையா லென்வல்லமை யெவர்க்குந்தெளிவாகத்தோன்றும்படிசெய்வாயென்றான். இச்சொல்லைக் கேட்ட சோசுவன்காற்றுமுகத்திலேபொங்கும் பெருநெருப்புப்போலத் தானுமுட்பொங்கிப் போர்செய்யும்படி படையெழுகவென்றானென்க.

56. காரின்மேன்முழங்கயானை கடலின்மேன்முழங்கத்திண்டேர்
தேரின்மேன்முழங்கமன்னர் திசைகள்மேன்முழங்கப்பம்பை
போரின்மேன்முழங்கப்பாய்மா புரவிமேன்முழங்கவீரார்
பாரின்மேன்முழங்கயாவும் பகைவர்மேன்முழங்கிமொய்த்தார்.

உரை.—சோசுவன் படையெழுகவென்றமாத்திரத்திலே மேகத்தி லுமியானைகள் முழங்கவுங் கடலினுந் தேர்கள்முழங்கவுந் தேர்மேனி ன்ற வரசர்முழங்கவு மெண்டிசையிலும்படைவாத்தியங்கள் முழங்கவும்

போராசையினாற் குதிரைகள்முழங்கவுங் குதிரைமேனின்றவீரார்முழங்கவும் பூவுலகெல்லாமுழங்காநிற்க யூதர்தம்பகைவர்மே லெதிர்த்துமொய்த்தாரென்க.

## V. வேறு.

57. யானையெழுங்கடலேந்தியதேர்பரிகாற்
சேனையெழுங்கடல்சென்றுசெழுங்கடல்மே
லேனையெழுங்கடல்மோதலெனப்பகைவர்
தானையெழுங்கடலோடுதலைப்படுமால்.

உரை.— யூதர்க்குள்ளயானைகளின் கடலுந் தேர் குதிரை காலாளென்னும் பெருங்கடலுங் கூடிச்சென்று கடல்மேற்கடல்மோதினாற்போலப் பகைவர்தானையின் கடலோடெதிர்தனவென்க.

58. செல்லுகுமாரியெனச்சினமுற்றியநீள்
வில்லுகுமாரிமிடைந்துமிடைந்தனர்வாய்ச்
சொல்லுகுமாரிசுளித்தமுழக்கமெழீ
யல்லுகுமாரியகத்தனரஞ்சினரால்.

உரை.—மேகங்கள்விட்ட மழைமாரிபோலச் சினந்தவில்லுகளெய்தவம்பின்மாரி நெருங்கும்படி மேனெருங்கினயூதர் வாய்விட்டார்த் ததிர்ந்தமுழக்கத்தினு லிராவைப்போலவிருண்டமனத்தையுடைய பகைவரஞ்சினுரென்க. (அப்பகைவர்வஞ்சகராகவு மெய்யானவேதத்தையறியாதாராகவு மவரையிருண்டமனத்தையுடைய ரென்றுரென்க.)

59. நெஞ்சுறைநீள்கவசத்தொடுநேரலர்தந்
நஞ்சுறைநெஞ்சறநஞ்சுறைவெஞ்சரமொய்த்
தெஞ்சுறைவிஞ்சியகுஞ்சரமிற்றதின்
மஞ்சுறையுஞ்சினர்வஞ்சகர்துஞ்சினரால்.

உரை.—பகைவர் மார்பின்மேலணிந்தகவசத்தோடு நஞ்சுநிறைந்த தம்மார்புமறும்படி நஞ்சினையுகுத்த வம்புகள்மொய்த்து மேகத்துளியினு மதத்தைப்பொழியாநின்றயானைகளுமடிந்து யானைகள்முதுகின்மேனின்ற வஞ்சனையுடையபகைவரு மடிந்தனரென்க.

60. அற்றிழிவார்பிரிவாரதிர்வாரிரிவார்
மற்றிகல்வார்மருள்வார்வரையாமடிவார்
முற்றியமாதவமார்மூனிமார்முனிவை
யுற்றிரிகோனுயிருண்டிலதொன்றிலதால்.

உரை.—அங்ஙனம் பகைவரற்றுவிழப் பிரிந்ததிரத் திரிந்துவெகுள மட்டின்றிச்சாவார். அதற்கியூதசெய்தவம்புகள்முதிர்ந்ததவத்தையுடைய முனிகளின் கோபத்தைக்கொண்டவம்புகள்போல வவற்றுளுயிரையுண் ணுது தப்பினதொன்றில்லையென்க.

61\. தாரொடுதானைகள்சாய்ந்துமடிந்திடவும்
நீரொடுநூறியவீறுடனீறிடவும்
பாரொடுபற்சிரமீதுபறந்திடவு
மாரொடுமாறுதிரத்திரையார்ந்தனவால்.

உரை.—அணியணியாய்த் தானைகள் சாய்ந்திறக்கவும் புழுதியோடு புழுதியாக பேருடல்கள் துவைக்கப்பட்டழியவும் வெட்டுண்டபலதலை களவற்றைக் கழுகுகளெடுத்தமையாற்கூடமேலே பறக்கவு மாற்றோடா றுக வோடியவிரத்தந்திரைமேலெழும்பும்படி நிறைந்ததென்க.

62\. தோலொடுதோல்பொரமீமிசைதுள்ளியெழீக்
கோலொடுகோல்பொருகொள்கையின்வாசிபொரக்
காலொடுகால்பொரநேமிகலந்துலகின்
ஞாலொடுநாறிசைநாதநரன்றனவே.

உரை.—யானைகளோடியானைகளுந் துள்ளிப்பாயுங்குதிரைகளோடு குதிரைகளும் போர்செய்யாநிற்கவு மம்பின்விசையோடுவளைந்தோடு முருளையோடுருளைபடும்படி தேர்கள்தம்முட்கலந்து நெருங்காநிற்கவுமுல கினெண்டிசைகளுமிகவேமுழங்கினவென்க.

63\. மேகநிகர்த்தன வேழமருப்புமிதித்
தேகமறுத்தலிஞனெயெனப்புயல்பாய்
வேகவினப்பரிமேகமுருக்குருமொத்
தாகவளைத்துகளாகவுழக்கினவால்.

உரை.—மேகத்தோடொத்த யானைகளின்கொம்புகளைமிதித்தற்கு வேகத்தின்மிக்க குதிரைகள்பாய்தலி னிளைவுதப்பியானையென்று மேக த்தைப்பாய்ந்தன. பாய்ந்தபின்பு மேகங்களுமிழ்ந்த விடிகளைப்போலக் கீழேபாய்ந்து தங்குளம்புகளினாற்போர்செய்தபகைவரைப் புழுதியாகும் படிகுழப்பி யுழக்கினவென்க.

64\. வேலொடுவாளொடுவீரர்கள்மேலதிரக்
கோலொடுகோலியகொல்கரிசாய்ந்துபொரச்
சூலொடுசூழ்ந்துசுளித்திடிமின்னொடுகக்
காலொடுகாய்ந்ததிர்கார்த்திரளொத்தனவே.

உரை.—வேலையும் வாளையுமேந்தி மேனின்றவரெதிராநிற்க வங்குசத்தால் வளைந்துதிரியும்யானைகள் போர்செய்தலிற் சூலைக்கொண்டு கோபித்திடித்து மின்னுமிடிகளுந் திரண்டுவிழும்படி காற்றுவிசையினால் வேகத்தோடுதிரியும்மேகங்களைப்போலத் தோன்றினவென்க.

65. கோடையெழுந்தபதங்கனெனக்கொடிநீ
ளாடையெழுந்தகலாகவநீளடவி
பீடையெழுந்துபெரும்படைவாடியற
மாடையெழுந்துயர்தேர்வருசோசுவனே.

உரை.—அப்போர்களத்திற் சோசுவனோடுவென்னிற் கோடைநாளிலே யெவையும்வாடும்படி கொடியதாய்ச்சுடுங் கதிரைவீசிச் சூரியன் வருவது போலத் தானும் பொற்றேரின்மேனின்று கொடிக்காடாகத்தோன்றிய வப்போர்க்களத்திற்படைநால்வகையுங் கெட்டுச்சோரும்படி தோன்றினனென்க.

66. மிடலொடுவேகமிருந்தெறிவெங்கணைகள்
படலொடுமேகமலிந்தபருப்பதமொத்
துடலொடுவேழமுருண்டுகுவெங்குருதிக்
கடலொடுதீவுகிடந்தனகாட்சியதே.

உரை.—சோசுவன்வேகமும் வலியு மிருந்தெய்யுங்கணைகள் பட்டு மேகங்கள்சூழ்ந்த மலைபோலநின்ற யானைகள்செத்துருண்டுவிடு மிரத்தமோர்கடலாகத்தோன்ற விழுந்தயானைக ளக்கடலிலேகிடந்த தீவுகளைப் போலத் தோன்றினவென்க.

67. படுகணையல்லதுபட்டிலதொன்றிலதால்
விடுகணையாவையும்வீழ்த்தலில்வில்விசையாற்
றொடுகணைமாரிதுளித்தனபின்றொகையற்
றடுகணைவாரியனைத்தையும்வாரினவே.

உரை.—சோசுவனெய்த கணைகளிற்பட்டுக் கொல்லுமம்பல்லாதே படாததில்லையாகி யெதிர்த்ததெல்லாஞ் சாய்த்துவருவனுகையால் மிக்க விசையோடு தன்வில்லு மேகமாகவிட்டவம்புகள் மாரியாகத்திரளாய்ப் பெய்த பின்பு மட்டின்றிச்செய்யுங்கொலையினு லவ்வம்புகள் வெள்ளமாகத் திரண்டெல்லாவற்றையுஞ்சாய்த்து வாரிக்கொண்டுபோவனவென்க.

68. ஈரிருதேரினரீராறுயானையின
ரோரிருநூறுகள்மாவுயர்வில்லினர்வந்
தாரிருபாலினரார்த்திவனைத்துதையப்
பாரிருநாறிசையன்றுபதைத்தனவே.

உரை.—அங்ஙனஞ் சோசுவன்பொருதுகொண்டு வருகையில் நாலு தேரிலுள்ளவரும் பன்னிரண்டானைகளேறினவரு மிருநூறுகுதிரைமேல் வில்லின்வல்லவருங்கூடி யொருப்பட்டிருபக்கத் தவனைமுழங்கிநெருங் கினார், அப்பொழுதுலகத்தெண்டிசைகளும்பதைத்தனவென்க.

69. இத்தகவுற்றதெனக்கடிநக்கிடிவில்
லத்தகவோனவர்மீதுவளைத்தமையான்
மத்தக்மாவொடுபாய்பரிமாவொடுவெண்
முத்தகநாறிரதங்கள்முறிந்தனவே.

உரை.—இங்ஙன மவர்வந்ததைக்கண்டசோசுவன் மிகவுநக்கு முழ ங்கியிடிகளை விடுந்தன்வில்லை யவர்மேலேவளைத்தவளவிலே யானைகளுங் குதிரைகளு முத்தாபரணங்களால்விளங்கியதேர்களு முறிந்தனவென்க.

70. ஓராறுபத்துமிரட்டியுமோர்தொடையாற்
சீராறுவேகமொடம்புகள்சேர்த்திவிடப்
பாராறுவாரியெனப்படர்சோரிவிழ
வீராறுபேர்பிணமிற்றதொரோர்கணையால்.

உரை.—சோசுவனம்புகளை யொவ்வோர் தொடையாலாறும்பத்து மிருபதுஞ்சேர்த்து மட்டில்லாதவேகத்தோ டெய்ததனாற் பூமியைப்பள் ளமாக்கி யோடும்வெள்ளம்போலவிரத்தம்படர்ந்தோடும்படி யொவ்வோ ரம்பாற் பன்னிருபெரும்பிணங்கள்விழுந்தனவென்க.

71. வேலறவாளறவில்லறவீரரறக்
காலறக்கூம்புகவிழ்ந்தறநேமியறத்
தோலறமீமிசைதுள்ளியவாசியற
மேலறமேவினன்வில்லுகுமாரியறா.

உரை.—வேலும் வாளும் வில்லுமற்றுப்போய்ப் படைவீரருமடிந் து தேருருளைமுறிந்து சிகரங்கவிழ்ந்து தேர்களழிந்து யானைகள்பட்டுக் குதித்தகுதிரைகள்செத்து விவையெல்லாங்கெடும்படி மேலானநல்லற த்தைமேவிய சோசுவன்கைவில்லுகுத்த வம்பின்மாரி யிடைவிடாததெ ன்க.

72. துறுவனவாளிதுமிந்தனயானைகடே
ரிறுவனதாரொடெரிந்தனவின்னதெலா
மறுவனகாறுடையங்கையுரந்தலைக
ளுறுவனயாருமொழிந்துநடந்தனனே.

உரை.—அங்ஙன மிடைவிடாம லெய்தவம்புகளால் யானைகளெல் லாம் வெட்டுண்டன, தேர்களெல்லாமுறிந்து கொடியோடெரிந்தாற்போ ல வழிந்தன, காலுந் தொடையுங் கையு மார்புந் தலையுமற்றுப்போ யெதிர் த்துவந்தவெல்லாரு மடிந்தொழிந்ததனாற் சோசுவனெதிரின்றி யப்பான டந்தானென்க.

## VI. வேறு.

73. திருத்தகுபுயக்கிரிவளரவீக்குபு செருக்களமுழக்கிவனுலவ
ஞெக்கிய
மருத்தகுதடத்தணியெகிலநாட்டினை வயப்படவளித்தனவரச
னேற்றெரி
கருத்தகுமுகிற்குரல்மெலியவார்த்தன கதத்தொடுகடுத்தனகளி
றுபோக்கியு
முருத்தகுபுயத்தெழுவளையையோச்சியு முருக்கினனிரட்டின
னுருமிருக்கியே.

உரை.—இங்ஙனஞ் சோசுவ னெதிர்த்தவெல்லாவற்றையுஞ் சாய்த்துச் செல்வமலையோடொத்த தன் புயங்களுயரவசைத்துப் போர்க்களத்தையுழக்கி யுலாவிவருவதைக்கண்டு வாசமலரைப்பூத்த தடாகங்களா லழகுபெற்ற ஏகிலநாட்டையாண்டவரசனுகிய தாபிரனென்பவ னைந்தரசருள்ளொருவன் வேகுமிடிகளைச்சூலாகக்கொண்ட மேகமுழக்கத்திலுங் கடிதாயார்த்துக் கோபத்தோடு வேகத்தின்மிக்க யானையைநடத்தி யழகியதன் புயங்களோங்கி யொருசக்கராயுதத்தைக்கையிலேந்தி யிடியினுங் கொடியனுய்ச் சோசுவனையெதிர்த்துத்தாக்கிச் சீறிமுழங்கினுனென்க.

74. மிகப்படுபசித்தகுவளையிதாய்ப்பல விதத்துயிர்வெறுத்துன
துயிரலாற்பசி
தகப்படுசுவைக்கொடுநிறையவாற்றில தருக்கொடுவரப்பசியருளி
நீக்கென
நகப்படுசினத்தொடுகரியிலூக்குபு நகைத்தகுமதிக்கிணைபருதிவா
ய்த்திகழ
பகப்படுகுறிக்கையிலெழுகதீத்திரள் பயப்படுசமர்க்களமிரியவோ
ச்சினுன்.

உரை.—வந்தவளவிலே தாபிரனென்பவன் சோசுவனைநோக்கி நானேந்தியசக்கர மிகவும் பசியுளதாயினும் பலவுயிர்களைவெறுத் துன்னுயிரையுண்டாலொழியச் சுவையோடுதன்பசியாறுதென்று களிப்போடுன்னிடத்து வரவிட்டேன், நீயிரங்கி யதின்பசியையாற்றுவாயாகவென்று நகைப்படச்சொல்லிச் சினந்து யானையின்முதுகின்மேற் காலூன்றிநின்று விளங்கியமுழுமதியோடொத்த சக்கராயுதத்தைப்பொருத்தி நாலடிம்படி குறிதப்பாதகையாற் றீயெழும்படிவிசையோடு சூழப் போர்க்களத்திலெவருமஞ்சி விலகாநிற்கவெறிந்தானென்க.

75. பசிப்படவரிற்பசியினிதிலாற்றிய பருக்கையிதெனக்குனி
தனுவின்வாய்க்கொரு
வசிப்படவளைத்தனவிசிகமேற்றலும் வயப்படவகுத்தனுமறிகிலா
க்கழு

சசிப்படவறுத்திருபிறைகளாக்கிய சமத்தெரிவளைப்படையறவு
நோக்கிலா
சுசிப்படவறுத்தனதுணிகள்மேற்றிசை துடிப்பனப்பறப்பன
வெருவநோக்கினர்.

உரை.—அதற்குச்சோசுவன் உன்சக்கராயுதம் பசியோடுவருவதாயி னப்பசிக்கினியபருக்கையிதுவென்று வளைத்தவில்லின்வாயிலே கூர்மைபட வெட்டற்குரியதாய்ப் பிறைபோல வளைத்த வோரம்பினையேற்றியெய்தான். ஆயினும்வில்லிலேயம்பினை யேற்றலு மதைவிசையாகவெய்தது மொருவருக்குந்தெரியாமல் நிறைந்த பூரணசந்திரனிருபிறையாகும்படி நடுவிலேயறுத்தாற்போல விளங்கிய வச்சக்கரத்தையிரண்டாகப்பிளந்தது சீக்கிரத்தினாலொருவருங்காணுமற் றீப்பறியும்படி யறுத்த துண்டுகள்மாத்திர மாகாயத்திலே துடிப்பதும் பறப்பதுங்கண்டாரென்க.

76. பொருக்கெனமனச்சினமனையதீக்கிய பொறிப்படுசிலைப்
படைவளையமாற்றினன்
முருக்கினசினத்திருபுடையினூற்றுவர் முறுக்கெனவளைத்திட
வொருகைதாக்கினர்
கருக்கனமிடித்தெனவருகதீக்கணை கணைக்கொருகணைப்பட
வெழுதிமீட்டவர்
வெருக்கனமுளத்துறவிடைவிடாச்சரம் விடுத்தனன்மறைக்கர
சொருவில்கோட்டியே.

உரை.— அப்பொழுது தாபிரனென்பவன் சீக்கிரமாய்த்தன்மனக்கோபத்திற்குரியதாய்த் தீயைக்கொப்பளிக்கும்வில்லைப்பிடித்துத் தானும்வளைத்துத் தன்னேடுமுருக்கப்பட்டாற்போலத் தன்னைவிடாமற்கொல்லுஞ்சினத்துச் சூழ்ந்தநூறுவீரரு மொருகையாகப் போரைத்துடங்கினார், அங்ஙனமிடித்தாற்போலச்சூழமுழங்கித் தன்மே லளவிறந்த வம்புகள் வருகையிற் சோசுவனவ்வோரம்பிற்கோரம்பெய்துதடுத்து மீளவு மவரெல்லாரும் வெருவும்படி யம்புகளையிடைவிடாமல் மட்டின்றியொரேயொருவில்லைவளைத்து அவர்மேலேவிட்டான் வேதத்தினரசனாகிய சோசுவனென்க.

77. திளைத்தனசினத்திருபுடையினூற்றுவர் சிலைக்கொடுபனித்
தனகணைகடாக்கலின்
முளைத்தனபொறிச்சிறகுடையதேர்க்கிரி முனைக்கொடுபறப்பென
நடவுபாத்திபன்
வளைத்தனதனுப்புயலிடைவிடாச்சர மழைத்திரள்களிற்றுயர்
மலையின்மேற்பட
விளைத்தனகளத்திடையுதிரநீத்தமுள் விறற்கயலெனக்குறையுடல்
களிட்டமே.

உரை.—அங்ஙனநெருங்கிக் கோபத்தோ டிருபக்கத்துச்சூழ்ந்தநூறுவீரர் சிலைக்கொண்டு விடாமற்பொழிந்தகணைகள் தேரிலேசூழத்தைக்கும்படி தாக்கின திறு லிறகுகள் புள்ளிபுள்ளியாய்முளைத்து மலையோடொத்தபறவைத்தேர் சினங்கொண்டுபறக்கும்படி யதை நடத்தினசோசுவன் வளைத்த வில்லாகியமேக மிடைவிடாமற்பொழிந்த வம்பாகிய மழைத்திரள் தாபிரனேறிய யானையாகியமலையின்மேற்பொழிந்து போர்க்களத்திலெங்கு நிறைந்தோடு மிரத்தமாகியவெள்ளத்திலே யவன்பாற் குறைபட்ட வுடல்களாகியமச்சங்கள் துடித்தனவென்க.

78\. எனிச்சிலைபணித்தெதிருறைகணீக்கியு மிழைக்கொடுவகத்தணிகவசநூக்கியு
நுனிச்சிலையடிச்சிலைசிலையைவீக்கிய நுனிக்கரமடிக்கரமெவையும்வீழ்த்தியுந்
தனிச்சிலைவளைத்தனவொருவனுக்கிய சயச்சமர்நலத்தினைவெருவநோக்கின
ரினிச்சிலையமர்க்கரசிவனைநீத்தெவ ரொனச்சிலர்வியப்புறியளவில்வாழ்த்தினூர்.

உரை.—குறிதப்பினதறு விகழ்ச்சிபட்டபகைவர்வில்லுகள் விடாமற் பொழிந் தெதிர்ந்துவருமம்புமாரி தான்மேற்படாமற் றடுத்துநீக்கலும் பகைவரணிந்தவணிகளுநுங் கவசமுறும்படியழித்தலு மவர் வில்லின்னுனியு மடியும் வில்லைப்பிடித்தவிரலு மடித்தோளு மற்றவையுங்கெடும்படிவீழ்த்தலு மிவையெல்லா மொருவில்லைவளைத்த வொருவன்றனே சோசுவனென்பான் செய்யும்போர்த்திறத்தொழிலாகவவன் செய்தவெற்றிப்போர்த்திறத்தைத் தாம் வெருவும்படிகண்டவ ரினிவில்லின்போரிலே யிவனைழியவரசனுனென்றதிசயப்பட் டளவின்றிவாழ்த்தினூனென்க.

79\. இளைத்தனரிளைத்தமர்முரியவார்த்தன ரெதிர்த்தனர்கணைத்திரளெழுதியோட்டினர்
திளைத்தனர்புடைப்புடைபடுபுண்வாய்க்கறை சிரத்தனர்சினத்தொடுசினவில்பூட்டெனை
வளைத்தனர்வளைத்தவிலொடியமீட்டொரு வயச்சிலைபிடித்தனர்முனியுதாக்கெனை
விளைத்தனர்சினச்சமரொருவில்வாய்க்குயிர் விடுத்தனரொருப்படவிடையினூற்றுவர்.

உரை.—அங்ஙன மந்நூறுவீரர்பொருதிளைத்து முறியாநிற்க மீளவுமார்த்தெதிர்த் தளவின்றியம்புகளையெய்து சோசுவனைச்சூழ்ந்துநெருங்கினூர், நெருங்கினவளவிலே யவனெய்தவம்புகள்தைத்துப் பட்டபுண்வழியாகத் திரளாய்க்குருதிகளைச்சிந்துவார், அத்தோடெழும்பிய கோபமிகுதியால்வில்லினிருதலையொருப்படப்பூட்டினூற்போ லதைமிகவும்வளைத்தார், அங்ஙனம்வளைத்தவில்லுமொடிந்து வேறொருவில்லைப்பிடித்து மு

னிந்தவேங்கையின் கூட்டம்போலக் கொடியபோர் விளையும்படி பொருதுவருகையிற் சோசுவன்வளைத்த வொருவில்லின் வாய்க்கிரையாகத்தம் முயிரைத்தந்து வொருப்பட்டந்நூறுவீரருமடிந்தாரென்க.

80. பரப்பினநிணப்பிணமெழுகநூற்றுவர் படத்தனியிபத்துயர் திரியுபாத்திப
னிரப்பினசிலைக்கொடுதொடையொடீட்டிய நெறிக்கணைதடுத்தன கவசமேற்பட
வரப்பெனவழற்பொறிதவழமீச்சுடர் வனப்பெனவிமைத்தவனடியின்மேற்கணை
யிரப்பெனநிரைத்தனவரமிதாய்க்கடி தெடுத்தமரொதிர்த்தனனயரவோச்சுவான்.

உரை.—அங்ஙனம் பரப்பினபிணக்குப்பையெழும்பும்படி நூறுபேருமடிந்ததனாற் றனிப்பட்டுயானைமேலிருந்த வரசனாகியதாபிரனென்பவன் சீறி வில்லுநிறையத் தொடைதொடையாயேற்றி யெய்தவம்புகள் சோசுவனணிந்தகவசத்திற்றடுக்கப்பட்டு நக்கினாற்போலே நுழையாமல் மேற்பட்டுவிழ வதனாலழற்பொறிகள் மிகவும்பறிந்து சூழத் தீ வரம்பிட்டதுபோலத் தவழாநிற்கச் சூரியனோடொத்த வடிவாகவிளங்காநிற்கச் சோசுவன் மீளவு மங்ஙனம்பட்டவம்புகள் தேர்மேலவன்பாதத்தில் வரங்கேட்குமிரப்போர்போல நிரைநிரையாய்க்கிடந்தன, அதைக்கண்ட சோசுவ னவ்வம்புகள் தேடும்வரமிதுவென்று தானவற்றையெடுத்துத் தன்வில்லிலேற்றி யெதிராகநின்ற தாபிரன்மேலவனயர்ந்துமெலியும்படி யெய்தானென்க.

81. வெறுத்தனபொறித்தவர்முனிவுபோற்பிறர் விலக்கரும்வடிக்கணைவிசையிலோட்டலோ
டிறுத்தெனமறைக்குயரிரதநீர்த்தன னிருட்பொறியகிக்கொடு விருநிலாப்பிறை
யறுத்தெனமருப்பிணைகரமொடீர்த்தன னடற்கரிமுழக்கொடு விழுமுன்மீட்டிம
னுறுத்தெனமறுத்தொருகணையையோச்சியு முருப்படுமுடித்தலையடியில்வீழ்த்தினன்.

உரை.—மீளவும் வேதமிறுத்தற்கமைந்த விரதம்போல நின்றசோசுவன் றமதைம்பொறிகளையடக்கின தவத்தோர் கோபம்போல வொருவனாலும்விலக்கப்படாத வம்பினைவிட்டெய்து கரும்பாம்பினையு மிருபிறைகளையு மொருப்பட்டறுத்தாற்போலத் தாபிரனேறினயானையி னிரண்டுகொம்புகளையுந் துதிக்கையையுமறுத்தான், அங்ஙன மவ்வியானைமுழங்கிமடிந்துவிழுமுன்னே திரும்பிக் கூற்றனையொத்திவிட்டாற்போல வேறொருகொடியவம்பினை போக்கி விளங்கியமுடியைச் சூழ்ந்தவரசனாகியதாபிரனது தலையை யடியோடறுத்துவீழ்த்தினனென்க.

## VII. வேறு.

82. காரொழுந்திடித்ததேபோற் கதத்தபற்பறையார்த்தின்ன
போரொழுந்தாயபோதைதம் பொருநர்நீடுவப்பவென்னத்
தாரொழுந்தலைவனாய தகஞ்சணன்புரவிமேலாய்
நீரொழுந்திரையிற்பொங்கி ஞெகிழிவேலேந்திநின்றான்.

உரை.—மேகங்களிடித்தாற்போலப் பலபடைவாத்தியங்கள் முழங
காநின்று சொன்னபோர்முகத்தி லிவையெல்லாநடக்கும்பொழுது வே
றோர்முகத்தி லைந்தரசர்நெடுங்காலத்துவாழ்ந்திருக்கக்கடவதென்றுவா
ழ்த்தி மாலையையணிந்தயாப்பியனென்னு மிராசாவின் படைத்தலைவனா
கிய தகஞ்சணனென்பான் குதிரைமேனின்று நெருப்புமிழும்வேலையேந்
திக் கடற்றிரைபொங்கினாற்போலக்;குதித்துநின்றானென்க.

83. நூல்வருமறையைவாழ்த்தி நுகோதரனெதிர்ப்பக்கண்டு
கோல்வரும்விசையிற்பாய்ந்து குந்தம்விட்டுனதிதென்றான்
மேல்வருநிறையிற்சாய்ந்து விலகிநின்றொலிகொண்டுற்ற
கால்வருமழல்பெய்வேலைக் கவ்விமீட்டெறிந்தான்வல்லோன்.

உரை.—அப்பொழுது சோசுவன்சேவகனாகிய நுகோதரன் வேத
மேவழங்கக்கடவதென்றுவாழ்த்திக் தன்மேலெதிர்த்துவரத் தகஞ்சண
ன்கண்டவளவிலே யம்புபோம்விசையோ டெதிராகவோடி யுனதிதென்
று வேலையெறிந்தான், எறிந்தவேல் தன்மேற்படாதபடி யதுவருநிரை
யைவிட்டுச் சற்று விலகாநின்று சீறிவரும்வேல்சென்றசீரிலே யதைக்
கையாற்கவ்வித் திருப்பி யவ்விசையோ டெறிந்தவன்மேலெறிந்தா னு
கோதரனென்பானென்க.

84. உழியறிந்தெறிகபாரா யுனதிதென்றெறிந்தவைவேல்
வழியறிந்தோடினாற்போல் வளியினுமுடுகிமார்பிற்
குழியறிந்தினிதின்மூழ்கிக் கொன்றுயிருண்டநெஞ்சின்
பழியறிந்தங்கண்ணில்லாப் பறந்தெனப்போயிற்றன்றே.

உரை.—அங்ஙனநீயிடமறிந்தெறிதல்வேண்டும் நன்றாயுடையவாளாகக
ளைப்பார்த்தா லிவ்வேலுனதென்பாயோவென்று நகைத்துத் தகஞ்சணன்
முன்னெறிந்த வேலை யவன்மேலேதிருப்பி நுகோதரனெறிந்தபொழு
தே யவ்வேல்முன்னடந்தவழியறிந்தோடினவனைப்போலக் காற்றிலுமு
டுகியோடி யவன்மார்பிலேபாய்ந்து தன்னூர்க்குளத்தின் றுறையையறி
ந்துகூசாமல் முழுகினாற்போல வுள்ளேமுழுகி யுயிரைக்கொன்றுண்டு பி
ன்னையு மவனெஞ்சின் கொடியபழியையறிந் தங்கேதங்குதற்கஞ்சிச் ச
ற்றுநில்லாமற்பறந்துபோயிற்றென்க.

85. காயெரிசீற்றத்தெல்லாங் கண்டயாப்பியனார்த்தெய்யத்
தீயெரியசனியூழ்த்துச் சினந்துவீழ்விசையில்வீழ்ந்த
வாயெரிகொடும்வேல்தைத்த மார்பினிற்பறித்தெய்யுங்கா
ளேயெரிகையுஞ்சோர்ந்து நகோதரனுயிரிற்சோர்ந்தான்.

உரை.—அப்பொழு தைந்தரசருள் ளொருவனாகிய யாப்பியனென் பவன் மிக்ககோபத்துடனே தன்றலைவனாகிய தகஞ்சணன்மடிந் தங்காய தெல்லாங்கண்டதனால் முழங்கிநகோதரன்மேலெறிந்தவே லிடியெரிந் து சினத்தோடுவிழும்விசையைக்கொண்டு தீயெரிவாயுடைய கொடிய வேலு மவன்மேல்விழுந்துமார்பிலேதைத்தது, தைத்தவேலையவன்பறித் து முன்னெறிந்தவன்மேலெறியும்போது பட்டபுண்ணேயின்மிகுதியாற் கையுஞ்சோர்ந் துயிரையும்விட்டு நகோதரன்சோர்ந்துவிழுந்தானென்க.

86. களிமுகத்தரசனார்ப்பக் கதமுகத்தெதிர்ந்தவாபன்
சுளிமுகத்தழலைத்தும்முந் துரகமேலிருவர்தோன்றித்
தெளிமுகத்தெரிந்தமின்போற் றீயெரியிருவாள்வீசி
வளிமுகத்தன்னதூளி மலிந்தெழவுழக்கிப்பாய்ந்தார்.

உரை.—அதைக்கண்டு யாப்பியன் மகிழ்ந்துமுழங்காநிற்க விவன் மேலெதிர்த்து முன்றூதுசொல்லப்போன ஆபனென்பவன்வந்தான், அ ங்ஙன மிருவர் சினந்தமுகத்தோடு தீயைத்தும்மியவிருகுதிரை மேற்றோன் றித் தெளிந்தெரிகின்ற விருமின்னலைப்போலத் தீயெரிகின்ற விருவாளை வீசிக்கொண்டு பெருங்காற்றுமுகத்திலெழும்பியதூசிபோல வெங்கும்பு ழுதிமலிந்தெழும்படி போர்க்களத்திலுழக்கிப்பாயாநின்றாரென்க.

87. வாடகவிசையோடாபன் வலத்திடத்தொல்கிவீச
வாடகமுடியிற்செல்வ னதற்குடற்காந்துதந்த
கேடகவிளிம்பிற்பட்டுக் கீழ்சரிந்தெருத்தின்மூழ்கிக்
கோடகத்தலையைக்கொய்து கோனிலத்துரும்பிற்பாய்ந்தான்.

உரை.—ஆபனென்பவன் வலத்திலுமிடத்திலும்பாய்ந்து வெட்டத் தகும்படி விசையோடு வாளைவீசியபொழுது பொன்முடிசூழ்ந்தவரசன் றன்னுடலை யொளித்தற்குத்தந்தகேடகவிளிம்பிலே வாள்பட்டுக் கீழே சரிந்து குதிரைப்பிடரியின்முழுகித் தலையைவெட்டி மேனின்றவரசனா கிய யாப்பியனிடிபோலே நிலத்திற்பாய்ந்தானென்க.

88. கோளொடுபரியிற்றானுங் குதித்துடன்றாபன்றீப்போல்
வாளொடுபிரிந்துதுன்னி வதிந்துபாய்ந்தியல்பில்வீசத்
தோளொடுகுரிசிலேந்துஞ் சுடர்ந்தபொற்கிடுகுநீண்ட
தாளொடுமுளரிவீழ்ந்த தன்மையில்வீழக்கொய்தான்.

உரை.—யாப்பியன் குதிரையில்லாமையாற் றானுங்குணமிதென்று குதிரைவிட்டுக் கீழேபாய்ந்தஆபன் றீப்போலச்சினந் தொருநிலைகொள் ளாமலகலவு மணுகவும் பதியவும்பாயவும் பலபோர்த்தொழில்களைப்ப

யிற்றி யியன்ற சீர்கண்டவுடனே வாளைவீசித் தாளோடுமலர்ந்த தாமரை யறுத்தாற்போல மன்னனடிக்கையுங் கையிலேந்தியகேடகமும்விழும்ப டியறுத்தானென்க.

89. ஏமமேதானுநீங்கி யிருவரீருழித்தீப்போற்
றாமமேமல்கப்பொங்கித் தூதினீநகைத்ததெய்வ
நாமமேவலியிதென்ன நல்வினையுலந்தகோமான்
வாமமேய்முடியிற்சென்னி வாளொடுவீழ்த்தினானே.

உரை.—ஆபனுங்கேடகத்தையெறிந்து மீளவு மிருவரிரண்டூழித்தீப்போலப் புகைமண்டியெழும்படி பொங்கிப்போரைச்செய்யாநிற்க நான்றூதுசொல்லவந்தவிடத்திலே நீநகைத்த வென் தெய்வநாமத்தின்வல்லமையிதுவென்று ஆபன்வாளைவீசி நல்வினையில்லாத கொடியவரசனுகிய யாப்பியன்றலை விளங்கிச்சூழ்ந்தமுடியோடுவிழும்படி யறுத்தானென்க.

## VIII. வேறு.

90. வாரொழுந்தமுரசெதிரொழுந்தபரி மதமெழுந்தகரிவளியினுந்
தேரொழுந்தவிசைவிசையெழுந்தவசி திரளெழுந்தகணைகணையுகும்
போரொழுந்ததனுபுகையெழுந்தபயர் பொரவெழுந்தவெருவொலி
மருள்
காரொழுந்தவிடியிடியெழுந்தவொலி கடலெழுந்தவலைமெலியுமால்.

உரை.—இங்ஙனம் பலமுகத்திற்போராகி முரசுகள்முழங்கக் குதிரைக்ளெதிர்த்துப்பாய யானைகள் மதத்தோடுசீறக் காற்றிலுந் தேர்களோட விசையோடுவாள்கள்வீசத் திரளாயம்புகள்மொய்ப்ப விடாமற் போர்முகத்தில் வில்லுகளம்புகளையுதைப்பப் புகைந்தகோபத்தோடு படைவீரர்போர்செய்ய வினைவெல்லாமயங்கிக்கூடிப் போர்க்களத்திலெழுந்த வச்சத்தால் மேகத்தினின்று விழுமிடிகள்மெலியவும் விளைந்தமுழக்கத்தா லவ்விடிக ளார்ப்பொலிகுறையவுந் தம்முட்கலங்கியாயமயக்கத்தாற் கடலலையின் மயக்கமொழியவு மன்றுபோர்பொருதாரென்க.

91. அணியுடன்றபரிபரியுடன்றகரி கரியுடன்றகொடியணியுதேர்
மணியுடன்றதனுதனுவுடன்றகணை கணையுடன்றகறைமலிதரப்
பிணியுடன்றவமரமருடன்றவுட லுடலுடன்றவுயிர்பிரிதரப்
பணியுடன்றகுயவுயருடன்றுபடை படவுடன்றமறையரசனால்.

உரை.—கடிவாளத்தால் முனிவுபட்டனகுதிரைகள், அக்குதிரைகள் யானைகளைமுனிந்துதுடர்ந்தன, அவ்வானைகள்கொடியணிந்ததேர்களைமுனிந்துதுடர்ந்தன, கட்டியமணிகளை யாட்டி வில்லுகள் முனிந்தன, அவ்வில்லுகள் முனிந்தம்புகளையுதைத்தன, அவ்வம்புகள் முனிந்து குருதியைச்சிந்தின, போர்முகத்துத் துன்பங்கள்முனிந்தன, அப்போருடல்

களை முனிந்தன, அவ்வுடல்கள் தம்முயிரைமுனிந்தாற்போலவ்வுயிர்பிரிந்தன, இவையெல்லாங் கட்டித் தூங்கியவாபரணங்கள்       போலவசையும்படி யாடித்திரியுந் தேரின்மேனின்று பகைவர்படையைமுனிந்து வேதத்தினரசனாகிய சோசுவன்செய்யும் போர்த்தொழிலாலாயின வென்க.

92. முனிவெகுண்டமுனிவிணைபுகைந்துமுனி முனிவளைந்துவி
டுமுனிவரு
நனிவெகுண்டகணைகுறிதவிர்ந்ததில நனியெழுந்தபிணமிருகரை
தொனிவெகுண்டநதியெனவெழுந்தகறை துணையெழுந்தகரை
யொடுமெழத் [லா.
தனிவெகுண்டநரபதிபொழிந்தசர மழையொழிந்ததிலதணிவி

உரை.—அங்ஙன நரபதியாகியசோசுவ னெய்தவம்புகள் தவத்தோர் கோபம்போலப் புகையெழும்படி முனிந்தவில்லுவளைந்தெய்தலிற் றணியாமல் மிகமுனிந்து குறியைத்தப்பாதன, ஆகையா லிருபக்கத் திருகரையாகப் பிணங்கள்குப்பையாய்க்கிடந்து நடுவேமுழங்கிமுனிந்தவாறுபோல விரத்தமோடிப் பின்னையு மேன்மேலவ்வாறுபெருகவு மப்பிணக்கரையிரண்டுமெழும்பவுஞ் சோசுவன்பொழியு மம்புமாரியொழியவுமில்லை தணியவுமில்லையென்க.

93. நீரோர்வாரிமுனர்நீளோர்கூலமென நீலோர்மேனியரோர்
நூறெதிர்த்
தோரோர்வாளிவிடவோரோராகமற வோரோராவியுகவேகியப்
போரோர்சோசுவனுமோரோராயிரர்க ளோரோராயிரவில்போலு
மென்
றூரோர்சாபமுளனுயினனெதிர வாவிவாழ்வனெனமாழ்குவார்.

உரை.—ஓடிவரும்நீர்வெள்ளத்தின் முன்னே நீண்டதோர்கரையையிட்டாற்போல வங்ஙனஞ்சோசுவன் பொருதுவருகையிற் கரியமேனியாரொரு நூறுபடைவீர ரெதிர்த்தாரெதிர்த்த வளவிலே யவனெவ்வொருவற் கொவ்வோ ரம்பெய்ததனு லொவ்வொருவன்மார்பற்றுப்போ யுயிருமழிந்துமடிந்தா ரவனுமப்புறம்போ யெங்குமோடிப் பொருதவிசையினுலவ்வொருசோசுவ னுயிரசோசுவர் போலவு மவன்வளைத்த வொருவில்லாயிரவில்லுபோலவுந் தோன்றுமென்றுதலா லவனெதிர்த்துப் போர் செய்யுங்காலத் தொருவில்லுள்ளவனும் பிழைத்துத்தப்பும்படி வல்லவனுமொன்றெல்லாருமயங்காநின்றுரென்க.

94. மலையிரண்டுமிசைமலையெழுந்ததென மலிபுயங்கள்மிசை
தலையெழ
வுலையிரண்டுமிசையழலழன்றதென வுயிரொரிந்தவெரிவிழிவிட
வலையிரண்டுமிசையெழுமுழங்குமென வதிரொழுந்தவுணனொருவ
னீர்க்
கலையிரண்டுமிசையமர்நிகர்ந்திருவர் களநடுங்கவமர்நடவினுர்.

உரை.—அப்பொழுதிருமலைகள்மே லடுக்கிவைத்த வேறொருமலை போல வுயர்ந்தவிருபுயங்கள்மேற் பெருமூண்டமாகத் தலைதோன்றுநிற் கவு மீளவு மிருவுலைகளிலெரித்தநெருப்புபோல வுயிர்களெரியும்படி யி ருவிழிகளெரியைக்கொப்பளியாநிற்கவு மிருகடல்பொங்கி முழங்குமொ லியைப்போல முழங்கிவந்தவோரிராக்கத னெதிர்த்தவளவிலே யிருவரு மிருவீரச்சுருக்கள் பொருதாற்போலப் போர்க்களமெல்லாம்நடுங்கும்படி யரியபோரைத் துடங்கினரென்க.

95. கொடிசுமந்தவுயர்குயவிரண்டுமுயர் கொலைமலிந்தமதகரி யெனு [ருட்
விடிசுமந்தமுகிலொடுமெதிர்ந்தமுகி லெனவெதிர்ந்துவிடுகணையி
கடிசுமந்தமுகிலெனமறைந்தவெளி கடைமுடிந்தவுகமிதுவெனுப்
படிசுமந்தபலவுயிரடங்கல்மருள் படவளைந்தவிருதனுபொர.

உரை.—கொடியையணிந்த வுயர்ந்தவிருதேர்களின்மேலிருவர்கொ லைத்தொழிலிற்பொங்கிய விருமதயானைகளினறன்மையாற்றோன்றி யிடி களைச்சுமந்த விருமேகங்கள் தம்முளெதிர்த்ததுபோல வவருமெதிர்த் தெய்தவம்புகள் மிகுதியாலிருண்டமேகத்தால் வெளியைமூடினாற்போல வானமறையாநின் றுலகமுடியும்படி கடையுகமிதுவென்று பூவுலகிலுள் ளவுயிரெல்லா மயங்கும்படி யோரிருவில்லுகள்வளைந்து போர்செய்தன வென்க.

96. தேரிரண்டுவலமிடமிரிந்தகல வருகெதிர்ந்துதமுடிரியவே
யோரிரண்டுசிலையளவிறந்தகணை யுகவடைந்துபடுகணையிலா
நேரிரண்டுபடையெனவெதிர்ந்தசர நெறியினின்றுரகவினமென
வாரிரண்டுபடைவியவமண்டிவிரி படமலர்ந்துமிசையாடவே.

உரை—அவரோறினவிருதேரும் வலத்திலுமிடத்திலும்வளைந்து தம் முளகன்றுபிரியவு மெதிர்த்துநெருங்கவுந்திரியும்போ தவரதுவில்லிர ண்டு மளவிறந்தவம்புகளையெய்துவிட்டாலு மொருவன்மேற்படும்படி கிட் டச்சென்றவம்பொன்றின்றி யவ்வம்புகளெல்லாம் நடுவழியிலேயிருப டையாகநின்று தம்முட் டடுக்கப்பட்டுப் பாம்புகளிருகூட்டம்போ லச் சூழப்பார்த்திருந்த விருபடைக ளதிசெயாநிறகும்படி படத்தைவி ரித் தாகாயத்திலாடாநின்றனவென்க.

97. சுசிமுகந்துசுடுமெனசரங்கடம தொழில்மறந்தனகொலெ
வசிமுகந்துகதிரளவிறந்திரவி மலியுமங்குலடவிடுமெனு [னவொளி
நிசிமுகந்துகருநிறமலிந்தவுண னிணமருந்தவுரிவிடநுனி [ன்.
யுசிமுகந்துபலமுகமுனிந்தகணை யொரொரலங்கலனிலவெய்தா

உரை.—அதைக்கண்டசோசுவன் செந்தீயைமுகந்து சுடுமென்னம் புக ளின்று தாம்படித்ததொழிலைமறந்தனவோவென்று கோபித்தூர் ரு ரியனொளியின் கூர்மைகொண் டம்பாக வளவிறந்தகதிரை யிருளைக்கொ ல்லும்படி யுதயத்திலேவிட்டாற்போல விராவிருளைமுகந்ததென்ன கரி

யவிராக்கதனிண த்தையுண்பதற்குரிய நஞ்சுதுவைத்தனவும் நுனிக்கூர் மையின்மிக்கனவும் பலமுகத்தனவுமாகவென்று முகந்து மட்டொன்றின்றி யம்புகளை யொவ்வோர்தொடையா லவன்மேலெய்தானென்க.

98. அறநிமிர்ந்தகொடியறவுயர்ந்தவுரு ளறவுகண்டபரிவலவனோ டறவெதிர்ந்தசிலையறமுனைந்தகர மறவணிந்தகழல்கழல்களோ டறவுடன்றவுரமறவிடைந்தசிர மறமுலந்தவுண னுயிரற வறமலிந்தசிலைநிகரடங்கலற வறமுணர்ந்துபொருமமரினால்.

உரை.—அங்ஙனஞ்சோசுவன் றொடைதொடையாய் மட்டின்றி யெய்தவம்புகளா லவ்விராக்கதனிருந்ததேர்மேலுள்ளகொடியுமற் றுருளைகளுமற்றுப்போய்ப் பாகனோடு தேரிலேகட்டினகுதிரைகளுஞ்செத்து அவன்வில்லுமற்றுப்பொருதவலக்கையு மணிந்தவணிகளோடுகால்களும் பகைத்தநெஞ்சுஞ் சினந்ததலையுமற்றுப்போய் நல்லறமில்லாத விராக்க தனுயிரும்போயிற்றே யிவையெல்லாம்புண்ணியநிறைந்தவொருவன் புண்ணியத்தைக்குறித்துச்சிலைகொண்டுசெய்தபோரினாலாயினவென்க.

## IX. வேறு.

99. பொன்பொதுளுங்கதிர்பூண்மகுடப் பொருனன்புனை வாகையினான்
மின்பொதுளும்புயலார்ப்புமெலிந்திட வீங்கொலியூதமொழீ
வென்பொதுளுண்டதழும்புமிடைந்த பொருந்தலர்மேன்முடுகி
முன்பொதுளும்பகையார்முரியக்கணை மாரிமுடுக்கினரால்.

உரை.—முன்சொன்னபடி பொன்னூற்கதிரைப்பூண்ட முடியுள்ள வரசனாகியசோசுவன் வெல்லப்படாத விராக்கதனைவென்று கொண்ட வெற்றியினால் யூதர்படையெல்லா மேகங்கள் மின்னியார்க்குமுழக்கத்தி லுமுழங்கி மகிழ்ந்தோங்கி முதுகிற்றழும்புநிறைந்த பகைவரைத்துடர்ந்து முன்னின்றெதிர்த்தவெல்லாருமுறிந்தோடும்படி யவர்மேலம்புமாரியைமுடுக்கிவிட்டாரென்க.

100. வளையமுழங்கினவண்சிலைதேருருள் வளையமுழங்கினநொந் துளையமுழங்கினமாள்கரிமாள்பரி யுளையமுழங்கினபோர்
விளையமுழங்கினபற்பறைசெம்புனல் விளையமுழங்கினமெய்
களையமுழங்கினவெம்படையொன்னலர் களையமுழங்கினரோ.

உரை.—வில்லுகளோயாமல்வளைந் தம்பெய்தலின் முழங்கவுந் தேர்களோயாமற் சுற்றிவருகையின் முழங்கவு முளைந்து யானைகளுங்குதிரைகளுஞ் சாகையில் முழங்கவும் போர்விளைதற்கோயாமற் பலவாத்தியங்கள்முழங்கவுங் குருதிகளாறுய்ப்பெருகிமுழங்கவு முடல்களைவெட்டிப் பலவாயுதங்களோயாமல் முழங்கவும் வெட்டுண்டபகைவரு மோயாமல் முழங்கினொன்க.

101. துண்டுபடப்படுமுந்திபடப்படு தூசிகொடேர்சுடர்வாள்
கொண்டுபடப்படுபற்சிரமுங்கர முங்குவியும்பிணமுந்
தண்டுபடப்படுவாளியும்வாளொடு சாபமும்வையயிலும்
வண்டுபடப்படுயானைகள்பாய்பரி வண்டுபடப்படுமே.

உரை.—அங்ஙனந் தேருருளைகள் துண்டாகமுறிந்து தேரிற்கட்டிய குதிரைகளும்பட்டுப் பலதேரழிந்தன, வாளைக்கொண்டு தலைகளுங்கைக ளுமற்றுப்போய்ப் பிணங்கள்குவியாநின்றன, தண்டாயுதத்தைக்கொண் டு பகைவர்வாள்களு மம்புகளும் வில்லுகளும்வேல்களுமுறிந்தன, அம்பு களைக்கொண்டு யானைகளுங்குதிரைகளுமடிந்தனவென்க.

102. கீழ்கடல்மேல்கடல்மேல்முடுகிக்கிளரோதைகிளைத்தெதனு
வாழ்கடல்மானடருனையிரண்டு மதிர்ப்பவமர்க்களமோர்
தாழ்கடல்மானுதிரங்கடரங்க மெழுந்துததும்பநிலஞ்
சூழ்கடறீவுகளென்றுகிடந்தன துஞ்சியதோலினமே.

உரை. — கீழ்த்திசைக்கடல்பொங்கி மேற்றிசைக்கடலின்மேல்முடு கிறு லெழும்பும்பெருமுழக்கம்போல விரண்டாழ்ந்தகடல்கள்போல வ வ்விருபடைகளு மெதிர்த்துமுழஙகத் தாழ்ந்தகடல்போலக்குருதிகளலை யெழும்படிபெருகி யதிலேபூவுலகஞ்சூழ்ந்த கடலிலுள்ளதீவுகளைப்போ லச் செத்தயானைகள்கிடந்தனவென்க.

103. இடித்தனவேறெனவார்ப்பெழுவின்னண மேயெதிர்யூதர்
பொரத்
தடித்தனகைப்படைதந்தனவாய்வழி தாவியதன்னுயிர்போய்
மடித்தனமேனிவடிந்தனசோரி மலிந்தனவார்கலியுட்
டெடித்தனகுன்றுகளென்றுயர்தோலொடு துஞ்சுகதூசிகளே.

உரை.—இடிந்தவிடிகளின்முழக்கத்தோ டிங்ஙனம் யூதர்போர்செ ய்தவளவிலே யவர்பிடித்தவாயுதங்கள் செய்தவழியாக வுயிர்போ யுடல் கள்திரளாய்விழுந் துமிழ்ந்தவுதிரவெள்ளத்திலே கடலுட்குன்றுகள் துடி த்தாற்போல மடிந்துயிர்விடுகையில் யானைகளுங்குதிரைகளு மொன்றின் மேலொன்று திரண்டுதுடித்தனவென்க.

104. போரிலெழுந்ததிர்போரினையாடினர் பொங்கியவோதை
மூரியெழுந்தமுரட்கரிதூசி முரிந்துதுடித்தமையாற் [யிறுன்
சோரியெழுந்துமிதம்படவோசுட ரச்சுழலொற்றையுருட்
டேரிலெழுஞ்சுடர்மேனிசிவந்ததின் மாலைசிவந்ததுவே.

உரை —மீளவு மிருபடை போர்முகத்திற் பொங்கிக்கிளம்பிய நிக ராதமுழக்கமிகுதியாற் பலயானைகளுங் குதிரைகளுமுறிந்துதைத்துத் து டித்துழக்கிக் குதித்துப்பாய்தலி னெழுந்தகுருதியின்றிவலைகள் மிகவுங் கிளம்பிச் சூரியன்முகத்திற்பட்டதினாலேயோ வென்றுந் தோன்றும்படி கதிரைவிட்டுச்சுழலு மொற்றையுருளையுள்ள தேரின்மேலெழுந்தஞாயிறு சிவந்துபோய் மாலைக்காலமாகிவானஞ்சிவந்ததென்க.

105. அல்லிருடோன்றியடுத்தனகாலை யடங்கலுமொன்னலரை
வெல்லிட வெல்லையிலாதொளிவேந்த னிழிந்தலைவீழுமெனு
வெல்லினைநோக்கியெழுந்தமனத்திற லேந்தியசோசுவனே
நில்லெனநின்றனனேமிவிளக்கிய விண்டவழ்நேமியினான்.

உரை.—மாலைக்காலமாயிற்றென்றுகண்டு இப்பொழுதிராவிருள்வந்து பகைவரைமுழுதும்வெல்லும்படி நேரமில்லாமற் சூரியன்கடலிலேமுழுகி யத்தமிக்குங்காலமாகுதென்று மனவூக்கமிகுதியாற்பொங்கியசோசுவன் சூரியனைப்பார்த்துநில்லென்முன், என்றவுடனே பூமியைவிளக்கி வானத்திற்றிரியுந்தேரோனாகிய சூரியனின்றதென்க.

106. மாலையில்மாலிபெயர்ந்தகலாது வதிந்தவணின்றொருநாட்
காலையிலாகையிலாகியகாட்சியி லாயகளிப்பொடறச்
சாலையிலாரியசோசுவன்மாலை தகாதுதடுத்தனவவ்
வேலையில்வேலையைவெல்லடனானையை வென்றனவாறரிதே.

உரை.—அங்ஙனஞாயிறுபெயராம லங்கேயொருநாள் முழுதுநின்றமையா லக்காட்சியினால் மிகக்களிகூர்ந்து நல்லறச்சாலையின்றன்மையானின்றசோசுவ னிருள்மூடாதபடிதடுக்கப்பட்ட வொருநாட்பொழுதிலே கடலோடொத்தபகைவர்படையை வென்றதன்மையைச் சொல்லிக்காட்டலரிதென்க.

107. மருடருநெஞ்சிடையஞ்சினவெஞ்சில வஞ்சினவெஞ்சம
கிருடருமாதரவாகவெதிர்ந்த விராவெனுமேற்படையைத் [ருக்
தெருடருமாலிசெருத்துமறித்திட வான்றிரிதேர்முடுகா
தருடருமன்பொடுவெங்கதிரம்பென வல்லெதிரோவினனால்.

உரை. — அங்ஙனநின்றசூரிய னெப்படிதோன்றிற்றேவென்னில் மயங்கியஞ்சிநின்ற குறையாதவஞ்சனையுடைய பகைவர் படைக்குதவியாக விருளைக்கொண்டுவந்த விராவென்னுமேற்படைவாராதபடி யதைமறித்து வெட்டியழிக்கும்படி சூரியன்வானத்திற் றன்றேரைநிறுத்தி யூதர்மேற்றயைவைத்து வெங்கதிராகியவம்புகளை யிராவிற்கெதிராக வோயாமலெய்யாநின்றதன்மைபோலத் தோன்றிற்றென்க.

108. நான்மறையாதிசினந்தருநூக்கரி தாம்வலிகாட்டியபோர்
வான்மறையாதுவழங்கிமலர்ந்தகல் வையமறிந்ததனைக்
கான்மறையாதுகதிர்க்குணிலோடு கரங்குகடற்பறையைத்
தான்மறையாதுபுடைத்தெனமாலி தரித்தனதோற்றமதே.

உரை.—மீளவு ஞாயிறுநின்ற தெங்ஙனந்தோன்றிற்றேவென்னில் வேதநாயகனன்றுகோபித்துக்காட்டுந் தள்ளற்கரியவல்லமையைக்காட்டிய வப்போரின்றன்மையை யிருள்கொண்டு வானமறையாமல் வழங்கிப்

படர்ந்தபூவுலகமெங்குமெல்லாருமறிந்திருந் தெக்காலமுமறையாதபடி சூரியன்றனே மறையாமனின்று தன்கதிர்களாகியவெண்ணப்படாதகு றந்தடிகளைக்கொண்டுமுழங்குங கடலாகியமுரசினை யோயாமலடித்தத ன்மைபோலத் தோன்றிற்றென்க.

## X. வேறு.

109. கதிரொதிருருட்டுமொழியகல்வில கருதலர்பதைத்ததானை
புறமிட
வெதிரொதிர்கடுத்தவீரநிசிதர னிரதமுயருற்றுவேகவுரையினுற்
பொதிரொதிர்சினத்துமீளமுகமிடு பொருதவர்முடுக்கிவேதமலி
கென [மே·
முதிரொதிர்கதத்தசோணனமர்செய முகிலிடிமறைத்தபூசல்விளையு

உரை.—சொன்னபடி யத்தமியாமற் சூரியனின்றதுகண்ட பகைவ ர்படை பதைத்தஞ்சியோடிப் புறங்கொடுக்கையிற் பாராளென்னுமரச னதுபடைத்தலைவனுகிய நிசிதரன் றனேடினவர்க்கெதிர்வந்து தேரின் மேலிருந்து கோபத்தோடு கொடியவுறுதிகளைச்சொல்லி யவருஞ்சினத் திற்பொங்கிமீண்டு முகந்தந்துபொருதார், அதைக்கண்டு சோசுவன் ப டைத்தலைவருள்ளொருவனுகியசோணன் வேதம்வளரக்கடவதென்றுவா ழ்த்திப் பகைவரைமுடுக்கி முதிர்ந்தகோபத்தோடுபோர்செய்தமையால் மேகத்திடிமுழக்கத்தை தமறைக்கும்படி போர்முழக்கம்விளைந்ததென்க.

110. அழலெழவளைத்தசாபவிருமுகி லளவிலபணித்தபாணம
ழையொடு [ரிதரப்
நிழலெழமறைத்தவானம்வெருவுற நிரைநிரையெதிர்த்ததானைமு
புழலெழவுரைத்தவாளிவழிவழி புனலெனவிரத்தமோடவிரு
வருஞ் [வதோா.
சுழலெழவுருத்தவாரியெனவமர் தொடுமுறையுரைக்கநூலினள

உரை.—அங்ஙன நிசிதரனுஞ் சோணனுமென்றிருவர் நீமேற்பறி யும்படி வளைத்தவிருவில்லாகிய விருமேகங்க ளளவின்றிப்பொழியு மம் புமாரியினுல் வானமுமறைந்திருண்டஞ்சும்படிமொய்த்து மற்றப்படைக ளணியணியாயமுறியாநிற்பப் புண்ணைப்படுத்தித் தைத்தவம்புகள் செய் தவழியால்வழிந்தகுருதி யாறுகவோடாநிற்ப நீர்ச்சுழியோடோடிவரு நி றைந்தவெள்ளம்போல விருவர்தொடுத்தபோரை யுரைக்கும்படி படித்த நூலின்றன்மையல்லவென்க.

111. கொடையிலதின்மக்களுமமெனவுயர் கொடிமுழுதொழி
த்துநீறநிசிதரன் [வில
கடையிலசினத்தவாளியெழுதினன் கனமெனவிடித்தசோணனள

தொடையிலழலுற்றபாணமிடுதலின் றுரகமோடறுத்தபாகன் மடிதர
நடையிலநிலைத்ததேரினிசிதர னணுகிறகறுத்தநாகநிகருவான்.

உரை.—நிசிதரன் முடிவின்றிவிட்டவம்புகளாற் கொடைதானமி ல்லாத வுலோபிகளின்பேரொழியுமாறுபோல வெதிராளிதேரின் மேலி ருந்த கொடிமுழுதுங் காணுதபடியழித்தான், அதைக்கண்ட சோணன் மேகமிடித்தாற்போல முழங்கித் தொடைதொடையா யளவின்றியம்புக ளையெய்தனு லவன்றேரிற்பூட்டியகுதிரைகளு மதைநடத்தினபாகனுஞ் செத்துத் தேர் நடையின்றிநிலைத்துப்பேரிறகறுத்தமலைபோல நிசிதர னின்றானென்க.

112. உகமுகமுடித்தநாளின்வளியென வுருளுருள்முடுக்கு சோணனலமர
நிகமுகமுகுத்ததேரினிலைமிசை நெயுமவர்பிடித்தநோழிகையினவ [ன்
முகமுகமெதிர்த்துவாளியிடையிடை முறைமுறைதொடுத்துமீள வயமலை
பகமுகமுனைத்தசூலமுனதிறைப் பழியிதுவெனக்கடாவவெழுதி [ஞன்.

உரை. — அப்பொழு துலகமுடியுங்கடையுகத்திற் பெருங்காற்றுச் சுழலாகவடிக்கும்போலச சோணனிடைவிடாமற் றன்றேரைமுடுக்கிச் சூழவந்தம்பெய்ய நிலைத்த விளங்கியதேரின்மேனின்ற நிசிதர னெய்வா ரகையி னூற்ருர்சுழலுமாறுபோலச்சுழன்று முகமுகமாயெதிர்த்துநின் று சூழவெங்குமுறைதப்பாமலம்புகளைத்தொடுதெய்வான், மீளவு மம் புகள் பயனினறிவிழுதலால் வயிரமலையையும் பிளக்கும்படி முனைகூடி னவொருசூலத்தையெடுத்துத் தேவதூஷணமாக விதுவுன்றேவற்குப் ப ழியாகும்படிவருவதென்று விட்டெறிந்தானென்க.

113. முதிர்வினைவிளைத்தகாலமெனவிவன் முதல்வனைநகைத்த ஞகியெறியழற்
கதிர்வினைபழுத்தசூலம்வழியிடை கதிர்முனரிருட்டுமாரியெனவ [ழிந்
தெதிர்வினைவிளைதசோணனெறிகணை யிழிவுறவுரைத்தவாயினி றைறவன
பொதிர்வினைபழுத்தமார்பநிசிதரன் புகைகணைபுதைத்ததூணிநிக [ரவே.

உரை.—அங்ஙன நிசிதரன் கொண்டதீவினைமுதிர்ந்துவிளையுங்கா லமாகையி லவன்முதல்வனுகியகடவுளை நகைத்தான், நகைத்தவினைப் பயத்தாற் ருனறிந்தவழலைப்பறியுஞ் சூலந்தானே சூரியன்முன்னே யி ருளழிவதுபோலவழியிலேபுகையாயழிந்தது, மீளவு மெதிர்போர்செய்த சோணனெய்தவம்புகள் தேவற் கிகழ்ச்சியைச்சொன்னவாயிலே திரண் டுநிறைந்தன. அங்ஙனநிறைந்ததீவினையாற் பழுத்தநெஞ்சினையுடைய நிசிதரன் சினந்துபுகைத்தவம்புகளானிறைந்தவம்பின் கூடுபோலத்தோ ன்றி மடியாநின்றானென்க.

# XI. வேறு.

114. மடிவுற்றதலைவனெனுமறமுற்றநிசிதரனை மனமுற்றவெகு
ளியொடுகண் [மிசையான்
டிடியுற்றவிசையினொடுவெரியொத்தவிவுளிவரு மலையொத்தவிரத
கடியுற்றமதுவினலொரிமத்தினரசனெதிர் கதமுற்றிமுடுகுவிசை
கா [கினான்.
ணடியுற்றசுருதியரசனிலத்துவிசையினுறி யமர்முட்டவெதிரணு

உரை.—வாசமதுவைப்பொழியு மலரைப்பூத்த ஏரிமநாட்டரசனாகிய பாரான் றன்றலைவனாகியநிசிதரன்மடிந் திறந்ததுகண்டு மேகத்தினின் றுவிழுமிடி வரும்விசைபோலத் தானும்நெருப்போடொத்த குதிரைகளி ழுத்த மலையோடொத்ததேரின்மேனின்று சோணன்மேலெதிர்த்து முடு கிவரும்விசையைக்கண்ட வாதிவேதத்திற்கரசனாகியசோசுவன்காற்றுப் போலப்பறந்துவந்து போரிடும்படி யவற்கெதிர்கொண்டு கிட்டினானென்க.

115. விரதத்தினெடிதுறியுனுயிர்துய்ப்பவரமொடமர் விழைவு
ற்றமழுவிதுவெனாப் [ச்
பிரதத்தினிரியவிடையமருற்றவெவருமது பிரிவுற்றவிடியிலெறிய
சுரதத்தினெதிருவெளிறெனவிட்டகணையிலது துகளிட்டுவெளி
யிலெழமற் [யெழுதினான்.
றிரதத்தினணியுமுடியெரியுற்றுமடியமறை யிறைமொய்த்தகணை

உரை.— கிட்டினவுடனே சூலத்தையேந்திய பாரானென்பவன் சோசுவனைநோக்கி நெடுங்காலத்துத்தவஞ்செய் துன்னுயிரையுண்ணும் படி வரத்தையடைந்ததனா லாசையோடிந்தப்போர்க்களத்தில் வந்த சூலமிதுவென்று பக்கத்துப்போர்செய்திருந்தவெல்லாருங் கலங்கியஞ்சி யோடும்படி மேகத்தினின்றுபிரிந்த விடியைப்போல வச்சூலத்தையவ ன்மேலெறிந்தான், எறிந்தவளவிலே சோசுவனெய்தவம்பினாற் கல்விமு ன்னேயறியாமை யழிவதுபோல வச்சூலமுந்தூளாயாகாயத்திற் சிதறி யழிந்தது, மீளவும் பாரான் றேரின்சிகரமெரிந்தழியும்படி வேதவரசனா கிய சோசுவனிறையவம்புகளையெய்தானென்க.

116. சிரகத்தினுழுவைமுகனுருமொப்பவுறுமிமதி தெளிவுற்ற
வளைவிடவெடுத் [றியுமுன்
துரகத்தினெயிறுபடுமதியொப்பவிரலினுள வொளியுற்றவளையெ
னரகத்தின்வெருவுவிடுதருமத்துவிசையனொரு நகையுற்றபிறை
யெழுதினான் [கரமுமே.
விரகத்தின்விளையுவினைவிசையுற்றகணையினொடு விழவட்டமொடு

உரை.—தலைச்சிராவின்மேற் புலியின்முகவடிவுள்ள பாரான் றன் சூலமழிந்ததுகண் டிடிபோலமுழுங்கி மீளவும் பூரணச்சந்திரனைப்போல விளங்கிய வொருசக்கராயுதத்தை யெறியும்படியெடுத்தான், கரும்பாம்பு தன்பல்லுப்படக்கவ்விய திங்களைப்போல வவன்விரலாற்கவ்விப்பிடித் தசக்கரத்தையெறியுமுன்னே நரகத்திற்கும் பயம்வருத்துவிக்குந் தரும த்திறுற் செயங்கொண்டசோசுவ னிளம்பிறைபோல்வளைந்தவோரத்திர த்தையெய்தான், எய்தவத்திரமுங் காமத்தாலொருவற்கு வினைகள்விளை யுஞ்சீக்கிரத்தோடுபோய் அச்சக்கரமு மச்சக்கரத்தைப்பிடித்திருந்த வல க்கையுமற்றுவிழுந்தனவென்க.

117. அடியற்றவலதுகையைவதைதமுற்றியிடதுகையி லணிவட் டமொடுவிடவெடுத்
திடியற்றமுகிலினொலியெழமற்றவிருதர்நக விடைவிட்டவிசையி லவிழக்
கொடியற்றவிரதமறவுரமற்றவலவனற வடியற்றகுதிரையறமின்
முடியற்றசிரமுமறமுனையுற்றபகைவனற முடிவற்றகணையரசெய் தான்.

உரை.— அங்ஙன மடியோடற்றுப்போன வலக்கையைப் பாரான் றனிடக்கையாலெடுத்துப்பிடித்து விடாத சக்கரத்தோடு கையுங்கூடச் சூழநின்றவீரர் மேகத்தினின்றற்றுவிழு மிடிபோலமுழங்கி நகும்படி யெறிந்தான், எறிந்தகையுஞ் சக்கரமுநடுவழிவிசையின்றிச்சோர்ந்து வி ழுந்தன. சோசுவனேனென்னிற் பாரானேறினதேரின்கொடியற் றிரதம ழியவு மார்பற்றுப்பாகன்மடியவுங் காலற்றுக்குதிரைகள்விழவுமவன்சூடி னமுடியுமற்றுத் தலையுமற்றுப் போரிலெதிர்த்தபாரான்மடிந்தொழியவு முடிவின்றி யம்பின்றொடைகளைவிட்டானென்க.

118. இறையுற்றவிறுதலொடுவெருவுற்றபடைமுடுகி யெதிருற்ற கரிமதமிலாப் [லாச்
பிறையொத்தவெயிறுமிலகுயவற்றபரியுமில பிரிவுற்றவுருளையுமி
சிறையுற்றபறவையெனவிசையுற்றவயமுமிலசெருவுற்றபடைகளு மிலாக் [முதவே.
கறையுற்றதிணையுமிலசெயமுற்றவரசுபடை கடையற்றகணையெ

உரை.—அங்ஙன மைந்தரசருள்ளொருவனாகிய பாரான்கெட்டுவிழு ந்ததைக்கண்ட வவன்படையெல்லாம் வெருவாநிற்க வவர்மேலேயூதர் முடுகி யெதிர்பட்டயானைகளெல்லா மச்சத்தாலே மதமின்றிச்சிலதும் வெட்டுண்டு பிறையோடொத்தகொம்புகளின்றிச்சிலதுமுறிந்தன, வெட் டுண்டமையாற் குதிரைகளின்றிச்சிலதேருமொடிந்தமையா லுருளையின் றிச்சிலதேருங்கிடந்தன, இறகைக்கொண்டு பறப்பனபோலும் பாயுமேற் றுக்குதிரைகளுமின்றிப் போர்செய்யும்படி யாயுதங்களுமின்றிக் குருதி கள்மட்டில்லாதோடும்படி பகைவர் படைகளழிந்தன செயங்கொண்ட வரசனாகியசோசுவன்படை யோயாதவம்புகளைவிட்டுச் செய்யும்போர்மு கத்திலேயென்க.

## XII. வேறு.

119. புயலிரெடுமாறுமுயர்கரியகரிமேற்சபலை பொழியுமயிலேந்
தியதிரோவான்
பெயரிரெடுமோவமுனைபடுகுமிடல்வேந்திவுளி பெலகரிபதாதி
யுருடிண்டே
ரியலிரெடுநால்வகையுமுவணமெனும்யூகமுறி யிரணமுரியாதுறு
திநிற்பக்
குயவிரெடுசோசுவனொடசனிபெறிசாபமுளர் குழுமியவன்மே
ன்முடுகிமொய்த்தார்.

உரை.—அங்ஙன மைந்திலே மூவரசருஞ்செத்து மூவரசர்படைக
ளுமழிந்தபின்பு ஓவானென்னுமரசன் றன்னுமத்தாற் போர்நொந்துகளை
யும்படி வல்லமையுடையான் மேகமோ வில்லையோவென்று மயங்கும்ப
டி யுயர்ந்தகரியமதயானையின் மேலான் மின்னலைக்கொப்பளிக்கும் வே
லையேந்தியகையான் றேர் கரி பரி காலாளென்னுநால்வகைப்படைகளோ
டுவணயூகம்வகுத்துத் தன்படைசற்றுமுறியாமலுறுதியாய்நிற்பதுகண்டு
தேர்மேலே சோசுவனு மவனோடுவில்லின்வல்லவீரருந் திரண்டு ஓவான்
மேலேமுடுகி விழுந்தெதிர்த்தாரென்க.

120. முடுகிவரும்வேகமுடனுவணவிருவண்சிறகு முரியவருதாக்
கிலமர்தாக்கக்
கிடுகில்வரும்வாளிபுடைவிலகவழல்மீதெழுக கிடுகிடெனமாரி
பொழிநாளில்
வடுகிவரும்வாரிவிசைமறையமறையோரொதிர வயவிரதம்யானைப
ரிவீழ்ந்தே
கடுகிவருசாபமழைகருடனிறகீர்த்திகல்வர் கடிதெவணுமோரோ
ரணிவீழ்ந்தார்.

உரை.—அங்ஙனஞ் சோசுவனு மற்றவீரரு முடுகிவந்தவிசையோடு
வகுத்த வுவண யூகத்தில்விரித்துவைத்த விரண்டிறகுமுறியும்படி வேங்
கையின்கூட்டம்போல யூதர்தாக்கினதினுல் விட்டவம்புகள் கேடகங்க
ளிற்பட்டு மின்னிறூற்போலத் தீத்திரளாய்ப்பறியாநிற்க மாரிகாலத்துப்
பெருகினகங்கையில்வரும் வெள்ளத்தின்விசையைமறைக்கும்படி வேத
த்தாராகிய யூதர்திரண்டு விசையோடெதிர்த்தலிற் றேர்களும்யானைகளு
ங்குதிரைகளு மழிந்துவிழ யூதர்விட்டவம்பின்மாரியாற் கருடனுகிய வுவ
ணயூகத்தினிரண்டிறகு மற்றுப்போ யணியணியா யெங்கும்பகைவர்செ
த்து விழுந்தாரென்க.

121. வருடலெனயூகவிருபுடையினுளயாவுமற வயவிருதர்வீழ்த்
தபினர்மீளக்
கருடனகல்மார்புலவுகணையிலவர்மாற்றரசு கரியினுளைபோரணி
யெதிர்த்தார்

புருடனினும்விஞ்சரிவையனையவிகலெண்ணமில பொருனனிவை கண்டுமனநோகக்
குருடனொருகாட்சியுறினெனவதிசயித்துமலை குவடதிரவார்த்த சனியொத்தான்.

உரை.— அங்ஙனமந்தயூகத்தி னிருபக்கத்திருந்தபடையெல்லாந்த டவிஞற்போல யூதர்முறித்துவீழ்த்தபின்பு மீளவுங்கருடன்மார்பிலேபா ய்ந்தவம்புபோல வவர் பாரான்யானைமேலிருந்தபேரணியைத்தாக்கிஞர். அப்பொழுது தன்புருடனுக்குமிஞ்சினபெண்டாட்டி யொன்றுமெண்ணு ததுபோலப் புறப்பகையையெண்ணுதிருந்தபாரா னதைக்கண்டுமன தி லேநொந்து பிறவிக்குருட னிருந்தாப்போலேகண்டிறந்துபார்த்தாற்போ லத் தானதிசயப்பட்டு மலைகளினுச்சியதிரும்படிமுழங்கி யிடிபோலநின் ருனென்க.

122. கொடிகளறவானிறவழ்குடைகளறமேகமறு கொடிகளொடு தேருமறயானை [னர்
யடிகளறவாசியறநெடியசிலைநாணியற வரணமொடுமார்புமறமன்
முடிகளறமுங்கமறவணிகமறமள்ளரற முனையுமொருசோசுவனொ டாரா
ரிடிகளறவேகமரிலெழுதுகணையோடுகணை யெழுதவெதிர்கின்றவ ருளுய்ந்தார்.

உரை.— அங்ஙனந் தன்வீரரோடுசோசுவன் பேரணியைத்தாக்கிய வளவிலே கொடிகளுங் குடைகளு மேகத்தையறுக்குங்கொடியோடு தே ர்களும் யானைகளுங்குதிரைகளு நாணியோடு வில்லுகளுங் கவசத்தோடு மார்புகளு மரசர்சூடியமுடிகளோடுதலைகளு மணியணியோடுபடைவீரரு மிவையெல்லாமற்றுப்போய் மடியாநிற்கப் போர்செய்யாநின்ற சோசுவ னிடியினுங்கொடியதாய் விட்டவம்பின்முகத்தெதிர்ந் தம்பினையெய்தவ ருள் மடியாம லுயிர்வாழ்வாருண்டோ வில்லையென்க.

123. கடியகணைசென்றவிசைகடுகுமிடிமின்னலினை கவசமறமீதி லழல்பொங்கக்
கொடியகருவஞ்சருரமுலவியுறைபென்றுநிறை குருதியுகவிண்ட னையர்வீழ
நெடியவரைவிண்டுபகவுருவுமுருமென்றுநெடு நிகழிகரிமார்புலவி வீழ்த்த
விடியமுகில்மின்னிலிவனிரதமுடனொல்கியுயி ரிறுதியுறவெங்கும மர்செய்வான்.

உரை.— யூதர்விட்டகடுங்கணைகள் விசையோடுசென்றுபகைவருடு த்த கவசத்தையறுத்தலின் மின்னிஞற்போலத் தீப்பறிந்து மீளவுங் கரியவஞ்சகராகியபகைவர்மார்பிலே யவ்வம்புகள்பாய்தலின் மின்னிய பின்பு மழைபெய்தாற்போல விரத்தமோடி யப்பகைவர் கரியமேகங்கள்

போலச்செத்துவிழவு நெடுமலைகளைப்பிளந்து தகர்த்துள்ளுருவின விடிகள்போல நீண்டவம்புகள் யானைகள்மார்பிலேபாய்ந் தவற்றைவீழ்த்தவு மிடித்திடியைவிடும்படி மேகமின்னினாற்போலச் சோசுவன் முழங்கிய தேரின்மேலிருந் தோயாமற் சூழத்திரிந் தெங்கு முயிரைக்கொன்று போரைச்செய்வானென்க.

124\. உருளுமுயர்காலுமிலகடவுபலபாகரில வொளிறுமுயர்பாரு
மிலபாய்ந்து [ற்ப
மருளுசுழிவாசியிலவடிவினிமிர்கூம்புமில வயிரவுயர்தேர்பலவுறி
வெருளுபரிகாலுமிலவணிகளொருவேலுமில விசையுறவில்நாணி
யிலவெம்போ
ரருளுமிவரீறுமிலநடுவையணிபோரணியு மழியமுனைசோசுவனு
ழைந்தான்.

உரை.—பலபலதேர்கள் சுழலுமுருளையில்லாதனவு நடத்தியபாகரில்லாதனவும் விளங்கியமேற்பரப்பில்லாதனவும் பாய்ந்து சுழலுங்குதிரைகளில்லாதனவும் வடிவுள்ள நிமிர்ந்தகொடிஞ்சியில்லாதனவு மழிந்துகிடப்ப மற்றக்குதிரைகள் காலுமின்றிச் சேவகராயுதமுமின்றி வில்லுகள்நாணியுமின்றிக்கிடப்ப யூதருமோயாமற்போர்செய்ய நடுவிலிருந்தபேரணியுமழிந்து சோசுவனுள்ளே நுழைந்தானென்க.

125\. தீய்ப்புறம்வளைப்பநடுவயிரவரணுத்தபயர் செறியவிடை
நின்றவரசோவான்
காய்ப்புறவயத்தபடைகடவிநுழைவீரர்முனர் கடுகிவடிசெம்புன
ல்களத்தீ
யேய்ப்புறவவித்தெனவெரியைவிழிவாய்பொழிய விழியுமதமால்
களிறுதூண்டிப்
போய்ப்புறமழித்துநுழைதருமனெதிர்வந்தசனி பொருவுமயிலே
ந்திநணுகின்றான்.

உரை.— அப்பொழுதுசூழவக்கினிக்கோட்டையாகப் படைவீரர் நெருங்காநிற்க நடுவிலேநின்றவரசனாகியவோவான் வலக்கைகாய்ப்புறும்படி யிடைவிடாமல் யூதர்விட்டபலபடைகள்செய்தவழியாக வவர்நுழைந்து சிந்தினவிரத்தமிகுதியாற் சூழக்கோட்டையாகவைத்த தீயவிந்ததுபோலச் சூழநின்றவீரர் மடிந்ததுகண்டு கண்விழியாகத் தீப்பறியும்படிகோபித்து மதயானையைத்தூண்டிச் சூழந்தவணியையழித்து நுழையுந்தருமனாகியசோசுவனுக்கெதிர்வந் திடியோடொத்த வேலையேந்திக்கிட்டினானென்க.

126\. கடவுமழலோடுகடம்வடியுகரிநாணநனி கதறியிபமேற்பொ
லியவெந்தீச்
சுடவுமழலோடுவிடம்வடியுமயில்நின்றிருகை துறவியெதிர்கோ
வுரமுறைத்துப்

படவுமழல்தாவுவிசையெறியவெறிவேலசனி படுமுனிவனுருமதி
வாளி
விடவுமழல்மேற்பறியவெளியிலுயர்பட்டதுணி விழியகலவோச்
சினன்வில்வல்லோன்.

உரை.— சென்றவுடனே வோவான் றீயையுமதத்தையுங்கலந்து பொழியாநின்ற தானேறினயானைநாணும்படி முழங்கியதட்டி யதின் மேற் காலூன்றினின்று தீயுஞ்சுடும்படியழலையுநஞ்சினையும்வடிந்த வேலை யிரண்டுகைகூட்டிப்பிடித்தெதிர்நின்ற சோசுவன்மார்பிலேபாய்ந்துபடும் படி குறிவைத்தழலாக மிக்கவிசையோ டெறிந்தான், எறிந்தவேலிடி போலவந்துபடுமுன்னர் வில்வல்லோனாகியசோசுவ னிளம்பிறைபோல வுளைத்தவோ ரம்பெய்து மேலேதீப்பறியும்படியறுத்த வேலின் றுண்டுக ளாகாயத்திற் கண்ணுக்குமறையும்படியெறிந்தானென்க.

127. நீறுபடநெட்டயிறுணித்தரசனுடிவனு நீண்டனுவெடுத்
தெவருமஞ்ச
வீறுபடவார்த்துநிமிர்கார்முகமலிந்தமழை விண்டலமுமண்டல
முமொய்ப்ப [கூச
மாறுபடமுட்டுசரமாறுபடுகின்றவிசை வன்னியெழமின்னிவிழி
ஆறுபடவோர்கணைபடாதுபுவியூறுபட வோரிருவில்போர்படு
முடன்றே.

உரை.— அங்ஙன நீறும்படி நெடியவேலையறுத்த சோசுவன்வில் லுக்கெதிரோவானும் வில்லெடுத் திருபடையு மஞ்சும்படி யிருவருமிக முழங்கி வளைந்துநிமிரவரிருவில்லுகள்பொழியுமம்புமாரியால் வானமும் பூமியு மொய்த்திருக்கத் தம்முள்ளெதிர்த்து மாறுபட்டவம்புகள் பட்ட விசையாற் றீயெழக் கண்கூசும்படி மின்னி யவ்விருவருடலி லொரு கணையும்படாமற் பூவுலகமஞ்சி யிடையூறுபடும்படி யவ்விருவில்லுகள் கொடியபோரைச் செய்தனவென்க.

128. உரைத்தகணைமேற்கணைதடுப்பதுதடுப்பிலது மொண்கவச
மேலுதிரியெங்கும்
விரைத்தநிலைசோசுவனுணர்ந்தொராறுபத்திருப ஷைம்பதரும்வெ
ம்பகழிவேகத்
திரைத்தசிலைக்காலெரியவோரொர்தொடையேவின னிகற்சிலையு
மால்களிறுமம்பொன்
வரைத்தவயிரக்கவசமுந்துணிபடப்படுபல் வாளியுரமூழ்கிவிழ
வோவான்.

உரை.— அங்ஙனம் விட்டவம்புகளெல்லாமொன்றி லெதிர்வரு மம்புகளாற் றடுக்கப்படவு மொன்றிற்கவசத்தின்மேற்பட் டுதிரவும் பய ன்படாம லெங்குஞ்சிதறிவிரைத்தாற்போல வம்புகள்கிடப்பதுகண்ட சோசுவன் மிக்ககோபத்தோடு தொடைதொடையா யாறும் பத்து மிரு

பது மைம்பதுஞ்சேர்த்திக் கொடியவம்புகளைச் சீக்கிரத்தால் வில்லின் கால் தீப்பற்றியெறியும்படியெய்தான். அத்தனையு மோவான்முங்கமாட் டாம லவன்சிலையுமற்றுப்போ யவனேறினயானையுஞ்செத்துத் தொடு த்தபொன்வயிரக்கவசமுந்துண்டாகி யவன்மார்பிலேபலவம்புகள் முழுகி னதினல் விழுந்தானென்க.

129. வெருவிமுரியாதபடைமுரியமுரிதற்குலகில் வெருவுதருநா
ன்விளியநீகொள்
பெருவிலதுசெய்தொழில்கொலுவமையிலநின்கடவுள் பெறுவலி
யிதென்றலறியோவான்
செருவினுயிர்தந்துதிரமுழுகுநிலைகண்டிவனோர் சிலையொடுபொர
ப்புவியிலாரார்
மருவியெதிர்வாளிதொடமடிவரலதுய்வொன மருளியெவருங்கடி
தகன்ருர்.

உரை.— அங்ஙனம்விழுந்தவரசனுகியவோவான் சோசுவனைநோக் கிச்சொன்னான்: இந்நாள்வரைக்கும் பயந்து முறியாதவென்படையுமுறி யும்படி யுலகெல்லாமுறிந் தஞ்சுவதற்குக் காரணமாய்நின்றநானு மிறக் கும்படி நீவளைத்தவில்லின்றொழிலோ வல்லவே யுன்கடவுளின்வல் லமை யிதுவென்றுகூப்பிட்டோவானுயிரைத்தந் துதிரத்துள்ளேயமிழ்ந் தினன். இதெல்லாவற்றையுங்கண்டவெல்லாருஞ் சோசுவனொரு வில்லை க்கொண்டு போர்செய்யவவனோடெதிர்த் தம்பினையெய்தவர்கெட்டா ரொழிய விப்பூவுலகிற் றப்பிவாழ்ந்திருப்பவராரென்று மயங்கிச் சூழப் படையெல்லாமுறிந் தோடினரென்க.

130. அகலவவர்யூதரொதிரகலமுறவந்தரிக ரகலமுலவச்சுருதிவா
ய்மைப்
புகலனையவாடரியகொடியகணையேவலொடு புரவிகரிதேர்விரிப [தாதி
யிகலவரினல்வகைகள்சிவையொடறவீர்த்தவள வெதிரமரினலர
சர்வையம் [ன்.
நகலமடிவாயபழியழலவுளமுந்திரத நடவியதுனீசதனெதிர்ந்தா

உரை.—அங்ஙன மஞ்சிப்பகைவரோடலின் யூதரொதிராகவோடிப் புறந்தந்தவர்மார்பினைக் காணும்படி வளைத்துவந்து கண்டபகைவர்மார் பிலே யுலாவும்படி வேதத்தின்றப்பாத சொல்லைப்போலத் தப்பாத கொடியவம்புகளை யோயாமலெய்தலிற் பரி கரி யிரதங்காலா ளென்னும் பகைவர்நால்வகைத்தானைகளை வேரோடீர்த்தழித்துவருகையி லெதிர்த் தவைந்தரசருள் மிகவும்பெரிய வரசனுகிய அதுனீசதனென்பவ னன் றொருபோரிலே யுலகநகைக்கும்படி நாலரசருமடிந்து வந்தபழி தன்னு ள்ளம் வேகும்படி தன்மனதிலேயுரைத்ததனுற்சீறித் தானேறின தேரை நடத்தி யெதிர்த்தானென்க.

## XIII. வேறு.

131. சிறைபதிதேரினன் றீப்பெய்வில்லினன்
பிறைபதிமுடியினன் பெயர்செய்வாகையன்
னறைபதிதொடையின னளிபன்மன்னவ
ரிறைபதியடியின னெந்தன்றெஞ்சினன்.

உரை.— அங்ஙனமிறகுகொண்டார்போலப்பறக்குந்தேரு மழலை யெய்யும்வில்லு முடியின்மேல்விருதாக விளம்பிறையுந் தன்பெயரே தனக்குச்செய்யும்வெற்றியும் வாசமாறுதமாலையுங் கூட்டமாய்ப்பலவரச ர்வந் திறைகொடுத்துவணங்கப்பட்ட பாதமு மிச்சிறப்பெல்லாவற்றை யுமுடைய அதுனீசத னன்று நாலரசர்தோர்த்து மடிந்ததுகண்டு மனதி லேநொந்து மெலிந்தானென்க.

132. ஓரிருநூறுற மொருமுன்னூறுடை
யீரிருவகைப்படை யீட்டினன்பினர்
பேரிருசிறகெனப் பிரித்ததற்குவெம்
போரிருவரியென விருவர்போக்கினன்.

உரை.— மெலிந்தாலு மொருகணத்திற் போர்முகத்திலே மடிந்த தொழியச் சிதறிநின்ற தன்னுலுவகைத்தானைக ளறுபதினாயிரங் கூட் டினன். மீளவுமதிலே யிரண்டுசிறகுபோலவிரண்டுவகுப்புபிரித்து வகுப் புக்கொருதலைவனுகப் போர்முகத் திருபுலியொத்தவிரண்டுவீரரைப்போ க்கிவிட்டானென்க.

133. இடச்சிறைத்தலைவனென் றிகுலனுய்வலம்
படச்சிறைத்தலைவனுய் நிகலற்பாத்திபன்
விடச்சிறைக்குயிர்நடு வணியில்வேய்ந்துதான்
றடச்சிறைத்திகிரிமேற் சினந்துதாக்கினன்.

உரை.—அங்ஙன மிடச்சிறை வகுப்புக்குத்தலைவனுக விகுலனென் பவன்போய் வலச்சிறைவகுப்புக் கிராசாநிகலனென்பவனைவிட்டுத் தா னிரண்டுசிறைக்குயிராக நடுவேயிருந்தபேரணியிலிருந்து வலியபற வைத்தேரின்மேன் மிகவும்வெகுண்டுதாக்கினனென்க.

134. பெரியவர்கேண்மைபோற் பீடையிற்றிளைத்
தரியவைகண்டெழு மடலிற்சோசுவன்
கரியவல்லியானையர் கனையன்சச்சுத
னுரியிருவகுப்பில்விட் டுருமின்முட்டினன்.

உரை.— அதைக்கண்டவளவிலே பெரியோர்நட்புப்போலத் துன் பத்திலேவளர்ந்து செய்தற்கரியவற்றைக்கண்டு மேலுயர்ந்தெழும் வீரத் தையுடையசோசுவன் ருனும்பிரித்தவிரண்டுவகுப்புக் கிரண்டுமதயானை கள்மேலிருந்த கனையனென்பவனையுஞ் சச்சுதனென்பவனையும் விட்டுத் தானடுவினின்றிடிபோலப் போரைத்துடங்கினனென்க.

135. கார்விளைமுழக்கமுங் காலொடுங்கட
னீர்விளைமுழக்கமு நிகரிலாதவெம்
போர்விளைமுழக்கமேற் பொருமிப்பொங்கலிற்
பார்விளைகலக்கநாற் றிசைபரந்ததே.

உரை.— அங்ஙனமிடித்தமேகமு மடித்தபெருங்காற்றும் பொங்கிய கடலு மிவையெல்லாங்கூடிச் செய்யுமுழக்க நிகராமற் கொடியதாயெ ழுந்த போர்முழக்கம்விம்மிப் பொங்கிப் பூவுலகினாற்றிசையுங் கலங்கா நின்றனவென்க.

136. போர்முகங்காண்டலும் புனைந்தவாகையின்
சீர்முகங்கோடலுஞ் சேர்ந்தொன்றாய்ப்புக
ழார்முகந்தருமறைக் கரசனன்றுதன்
கார்முகங்குனிமுகத் தெதிர்கண்டானரோ.

உரை.—இந்நாள்வரைக்கும் வேதத்தரசனாகியசோசுவன் றன்படை யோடிறங்கிப்போர்முகத்தைக்காணலுஞ் சிறந்த வெற்றிமுகமெதிர்கொ ள்ளலு மொன்றாகி மிக்கபுகழ்ச்சிலையுடையனா யன்றுதன்வில்லுவளைந்த முகத்திற் கெதிர்கண்டு வெற்றியைக்கொள்வதற்குத் தாமதங்கண்டா னென்க.

137. ஆரிருணெடுமையா ராடுமூசல்போற்
பேரிருபடைதமுட் பிரிந்துசேர்ந்துவெம்
போரிருமுகமுரி வின்றிப்போர்செய்வா
ரோரிருபுனலென வுதிரமோடவே.

உரை.— அங்ஙன மிருள்நிறைந்த கூந்தலையுடையமகளிரூசலாடி னாற்போல வவ்விருபெரும்படையுந் தம்முட்பின்வாங்கிப்பிரியவு மெதிர் த்துக்கலந்துதாக்கவு மிருமுகத்திற்குமுறிவின்றி யிரண்டாறாக வுதிரங்க ளோடும்படி பொருதாரென்க.

138. இடமுகத்திகுலனார்த் தெரித்தசூளையிற்
றடமுகத்தெழும்படை தாக்குந்தன்மையிற்
படமுகத்தெதிர்த்தனர் முரியப்பார்த்துமால்
கடமுகத்திபத்துயர் கனையன்சீறினான்.

உரை.—அங்ஙன மிருமுகத்திற்றோர்வையின்றிப் போர்நடக்கும் பொழுதே அதுனீசதனிடச்சிறைக்குத் தலைவனாகவிட்டவிகுலன் மிகவு முழங்கிச் சேனைகளுக்குச் சொன்னவுறுதிகளா லெரித்தசூளைபோல வவர் வீரங்கொண்டு பொருதவிசையின்றன்மையைத் தாங்கமாட்டா மல் யூதர்படைமுறியத்துடங்கினது, அம்முகத்துப்படைக்குத்தலைவனா கிய முன்சொன்னகனைய னதைக்கண்டு மதயானைமேனின்று கோபித்துச் சீறினானென்க.

139. நானலங்குலநல நொணித்தபோர்நலந்
தானலம்படச்சொலித் தானைமீட்டுவேய்க்
கானலஞ்சினந்தநீக் கனன்றுமேய்ந்தென
வேனலம்பகைவனை வெம்பித்தூற்றினன்.

உரை.—அங்ஙனஞ் சிறினகனையன் றன்படைக்கு வேதத்துவேண்டிவந்தபோராகையின் றம்வேதத்தினன்மையும் யூதர்குலத்தின்மாட்சிமையு மந்நாள்வரைக்குந் தாஞ்செய்தபோர்களின்சிறப்பு மவருக்குறுதியாம்படி தானேசொல்லிமுறியாநின்றபடையைமீட்டான். மீளவு மூலந்தமூங்கிற்காட்டிலே பெருந்தீக்கோபத்தோடு நுழைந்து எல்லாவற்றையுமெரித்தாற்போலத் தான்பகைவர்படையைச் சினந்துவெட்டியழித்தானென்க.

140. எரிகெடச்சினந்தவில் லெறிந்தமாரிமுன்
பரிகெடப்பரிபுனை பறந்ததேர்கெடக்
கரிகெடப்படையெலாங் கலங்கிப்போர்கெட
நரிகெடச்சினத்தரி நலத்திற்கோறினன்.

உரை.— அங்ஙனஞ் சொன்னகனையன் றீயினுஞ்சினந்தவில்லைவளைத்தெய்த வம்பின்மாரிமுகத்துக் குதிரைகளும் பூட்டிய குதிரைவிசையாற் பறக்குந்தேர்களும் யானைகளுநகெட்டுப பகைவர்படையெல்லாங் கலங்கிமுறியும்படி நரிகள்கூட்டத்துட் சினந்துபுகுந்தசிங்கம்போல வெல்லாவற்றையும் வெட்டிக்கொல்வானென்க.

141. முரிந்ததன்றனையை முனிந்தும்மீட்டிலான்
கரிந்தகைகடித்திடித் திகுலன்காற்றென
வரிந்தவிற்கனையனை நோக்கிவந்தெதிர்
சொரிந்தமும்மதகரி தூண்டினனரோ.

உரை.—அங்ஙன முறிந்தோடினபகைவர்படையை யதற்குத்தலைவனுகியவிகுலன் மிகவுநகோபித்தாலு மதைத்திருப்பமாட்டாமலோடினதினுற் கோபமிகுதியாற் றன்றன்கையைக்கடித்துமுழங்கித் தன்படையைமுறித்தகனையன்மேலே காற்றுபோலவோடித் தன்மதயானையைத் தூண்டி யெதிர்த்தானென்க.

## XIV. வேறு.

142. பொன்னணினர்மணிவில்லினர் பொறியம்பினர்புகையுஞ்
சொன்னுவினர்சயநெஞ்சினர் சுடுகண்ணினர்சுடர்பூண்
மின்னுறினர்புலைநாறின விறல்வாளினர்மதமார்
கொன்னுளியினிருமாவுயர் கொலையீரிமர்பொருதார்.

உரை.—அங்ஙனஞ் சோசுவன்படைத்தலைவனுகியகனையனும் அது நீசதன்படைத்தலைவனுகிய இகுலனும் பொன்னுன்முறுக்கியநாணியும் வயிரத்தாற்றிரட்டினவில்லு மக்கினியைப்பொழிந்தவம்புகளுங் கோபத்தாற்புகைந்தசொல்லு மிரும்போடொத்தகொடியநெஞ்சுந் தீப்பறியுங்கண்ணும் விளங்கியபூண்களால்மின்னுேத்தவொளியும் புலால்நாறுதற்குக் காரணமாகியவெற்றிவாளு மிவையெல்லாந் தாழ்வின்றியிருவருடையராய்க் கொடியவிருயாளிகளோடொத்த மதத்தைப்பொழிந்தவிருயானைகளின்மேனின் றிரண்டியமமைப்போலப் போரைத்துடங்கினு ரென்க.

143. சொல்வாயுகுசுடுதீயொடு சுளிகண்ணழலுகநீர்ச்
செல்வாயுகுவிடியார்ப்பொடு சினவாயுயிருணநீள்
வில்வாயுகுகணைமாரியின் விரிபோரிருமுகமுங்
கொல்வாயுகுகறைதாறில கொடிதாயமரொழுமால்.

உரை.—அங்ஙன மிருவர்சினந்தசொல்லுங் கோபித்தகண்ணுந் தீயாகப்பொங்காநிற்கப் பெய்யுமேகத்தினிடிமுழக்கம்போலத் தோன்றி நீண்டவிருவில்வளைந்தவா யுமிழ்ந்தவம்பின்மாரி சினந்தவாய்கொண்டு யிர்களையோயாம லுண்டமையா லிருமுகத்துச்சேனையும் படுங்கொலை மிகுதியா லளவின்றியுதிரமோடும்படி கொடியபோரைச்செய்தாரென்க.

144. தடவித்திரியியமற்கிணை தடவிற்குனிகனையன்
னடவித்திரிமதவத்தியி னடுமத்தகநுழையக்
கடவித்திரிகணைதைத்தன களியுற்றனனிகுலன்
சுடவிற்றிறல்கணைமட்டில தொடைவிட்டனனவனே.

உரை.— அங்ஙனங் கூற்றுப்போல வெல்லாவற்றையுந் தடவிக்கொண்டு வலிய வில்லையோயாமல்வளைத்தகனைய னடத்தியமதயானையின் மத்தகத்தினடுவே மூன்றம்புகள் கடாவித்தைத்ததனு லவற்றையெய்தவிகுலன் களியைக்கொண்டான், அதைக்கண்டு கனையன் றன்வில்விசையினுற்சுடும்படி தொடைதொடையா யளவிறந்தவம்புகளை யெய்தானென்க.

145. இசையுண்டுறுகணையும்பட விகுலன்றனுவொடியக்
கசையுண்டுறுமுரமும்பக வளவொன்றிலகணைகள்
விசையுண்டுறவளையம்பட விசையந்தனுவளைய
வசையுண்டுறவொலிபொங்கின மடிவின்முகமறவே.

உரை.— அங்ஙனங் கனையன் றொடையாய்விட்டவம்புகள்பட் டிகுலன்வில்லொடிந்ததே, அதைக்கண்டகனையன் கவசத்தையணிந்த பகைவன்மார்பினையும்பிளக்கும்படி யெண்ணப்படாதவம்புகளைவிட் டாசைமிகுதியா லம்புகள் மிக்கவிசைகொள்ளும்படி வட்டமாகத்தன் வில்லைவளைத்தான், அங்ஙனம்வளைத்தவளவிலே வசையாம்படி மிக்க வோசையெழும்பத் தன்வில்லுமுறிந்ததென்க.

146. பதமேற்படப்பவளத்தொடு பதிமுத்தெனவிருவ
ரிதமேற்படவெயிறுய்த்தன ரெறிபற்படையிலராய்க்
கதமேற்படவயநெட்டிரு களைதயிட்டிருகனல்போன்
மதமேற்படவுறுமத்திகள் மறலத்தமுள்விடுவார்.

உரை.—அங்ஙனங் கனையனு மிகுலனும் வில்லிருவர்க்குமொடிந்த தனல் மிகக்கோபித்து வரிசைபடப் பவளத்தின்மேலழுந்திய பலமுத்து கள்போல விருவர் தம்முதட்டின்மேற்றம்பல் லழுந்தும்படிவைத்து வா யைமடித்துமீளவு மெறியாயுதங்கள் வேறில்லாமையாற் கோபமிகும்படி யிருவரோறினயானைக் கிரண்டுநீண்டகதாயுதத்தைத்தந்து மதமிகுந்திரு நெருப்புபோலச்சீறிநின்றயானைகளைப் போருக்குவிட்டாரென்க.

147. இருகார்பலவெரிியேறுக விளையாடினவெனவே
செருவார்களமிடையாடுக திரடெயழுவலறிப்
பொருயானைகள்கதைவீசிய பொருவாவிசைபடலோ
டருகாயினபடையாவையு மடிநூறினபொருதே.

உரை.— இரண்டுமேகங்களெரியும் பலவிடிகளைவிட்டுச் சூழத்திரி ந்து விளையாடினாற்போலப் போர்க்களமாடவுந் தீத்திரளெழும்பவு மலறி ப்பொருத விரண்டியானைகள் பிடித்தகதாயுதத்தை வீசினவிசையினு லருகிருந்தபடைகளெல்லாவற்றையு மடியோடு நூறியழித்தனவென்க.

148. திரிகின்றனவிருதீநிகர் திரிகின்றனவெவணு
மெரிகின்றனவெதிர்யாவது மிரிகின்றனரெவரும்
பிரிகின்றனவெதிர்சீறின பிளிர்கின்றனவழலை
விரிகின்றனகதையேமிசை விசைவெங்கதைபடவே.

உரை.— அங்ஙன மவ்விருயானைக ளிரண்டுதீப்போலத்திரிந்தவிட மெல்லா மெதிர்பட்டதெல்லா மெரிந்தன, மற்றெவரு மிரிந்தோடினர், அவ்வியானைகள் தம்முள்பிரிவன வெதிர்த்துச் சீறுவன கொப்பளித்த வழலைப்பரப்பின கதைமேற்கதைபடவென்க.

149. அழலக்கதையழலக்கரி யழலக்கரிமிசையார்
சுழலக்கதையிகுலற்கரி சுழல்தற்கதைபறிபட்
டெழவிட்டிசையுறிமற்றது வெதிர்பட்டிடுகதைமேல்
விழமத்தகமடியிற்பக விழுமக்கரிபடவே.

உரை.— அங்ஙன மிருகதாயுதங்கள் தீப்பறிந்துவேகவுமிருயானை கள் பொருதுவேகவும் யானைமேலிருவர்சினந்துவேகவு மிருகதைகளைச் சுழற்றிப்பொருதுவருகையி லிகுலனேறினயானைபிடித்த கதாயுதம்பறி பட்டாகாயத்திலெழும்பிப்பறந்தது. மீளவுங் கனையன்யானை யெதிர்த்து விசையோடுகதையாலடித்து மற்றயானையின் மத்தகநேராகப்பிளந்து இகுலன்யானை பட்டுவிழுந்ததென்க.

150. கிரிநின்றிழிபுலியென்றெரி கிளர்வெஞ்சினவிகுலன்
கரிநின்றிழிதரமின்றவழ் கனல்மண்டசியொடுபாய்ந்
தெரிகின்றிழிகதைதமுன்விழ வெயிறுள்ளுரமுருவிச்
சொரிகின்றிழிகறைசிந்துக சுழல்கொண்டெறிதருமே.

உரை—அப்பொழு திகுலன் மலையினின்றுபாயும் புலியைப்போலப பட்டயானையினின்று வேகுஞ்சினத்தோடு நிலத்திற்பாய்ந்து மின்னியவாளையுருவியேந்திக் கனையன்மேலேபாய்தலிற் கனையனேறினயானைவீசின வழன்றகதைபட்டுவிழுந்தான், விழுந்தவுடனே யவ்வியானையவனைமார்பிலேகொம்புகளுருவக்குத்தி யவனையெடுத்துச் சூழவிரத்தமழைசொரியும்படி சுழற்றியாகாயத்திலெறிந்ததென்க.

## XV. வேறு.

151. இடிமுழங்கினமுகிலொடுங்கட லிணைமுழங்கினவொலியெழுத் [காற்
துடிமுழங்கினதொனியெழுந்திவர் துறுவிவெஞ்சமர்பொருத
படிமுழங்கினவொலிநிகர்ந்தில பருபதங்களுமதிரவே
கடிமுழங்கினவலமுகஞ்சமர் கனல்சினந்தெனவிளையுமால்.

உரை.—அங்ஙன மிடமுகத்திலே யிகுலன்படவுங் கனையன்செயங்கொள்ளவு மிடித்தமேகமு மெழுந்தகடலுங்கூடிமுழங்கினாற்போலப் பலவாச்சியங்கள்முழங்கிச் சொன்னபடிபோராகையில் வலமுகத்திலும் பூவுலகிலொவ்வாத முழக்கத்தோடு பெருமலைகளுமதிரும்படி நெருப்பு சினந்தாற்போலக் கொடிதாய்ப் போர்விளைந்ததென்க.

152. கரியதட்டியசினமிரட்டிய கடியசச்சுதனிடைவிடா
தெரியதட்டியகொடியவத்திர மிடையிடைக்களவிலவிடப்
பரியதட்டியவிரதவெற்புகள் பரிகளத்திகள்சிதறவெய்
யரியதட்டியகரியினத்தெதி ரரிகருட்குறிமுரிவரால்.

உரை.—அம்முகத்திலே சோசுவன்விட்ட படைத்தலைவனுகிய சச்சுதன் முனேறினயானையைதட்டிச் சினந்துமுழங்கியெரியைக்கோபித்த கொடியவம்புகளை யிடைக்கிடைவிடாமலளவின்றியெய்தலிற் றேர்களுங் குதிரைகளும் யானைகளுஞ்சிதறிச் சிங்கஞ்சினந்ததட்டியமுகத்தில் யானைகள்முறிந்தனதன்மையா லெதிர்ந்தபகைவரெல்லாரும் வெருவிமுறிந்தாரென்க.

153. பணையிலாடியபரிகள்யானைகள் பரவுதேர்களுமிவையெலா
மிணையிலாதறவுயருவாமலை யிடையிலோடியவளவிலாக்
கணையின்வாரிமுனடையல்சாய்வன கறையளாவியபிணமிரண்
டணையினேறினகுருதிநீர்நிறை யருவியோடினவெவணுமே,

உரை.—அங்ஙனஞ் சச்சுதன்செய்யும் போர்முகத்துப்பந்தியிலுமா டாநின்ற புரவிகளுமதயானைகளும் பரவினதேர்களு முன்சிதறிப்பின்ப ழியும்படி யவனேறினயானையாகிய மலையினின்றோடு மவனெய்த வளவி றந்தவம்புகளாகியவெள்ளத்தின்முன் னெதிர்ந்தவெல்லாஞ்சாய்ந்துவிழு ந்தன, மீளவுமிரத்தத்தைச்சிந்தியபிணங்க ளிருகரைபோலக்குவியாநின் றதிலே நிறைந்தவாருகக்குருதியோடினதென்க.

154 எதிரொழுந்துயரிரதநின்றம ரிடவுடன்றனநிகலனுங்
கதிரொழுந்தெரிகனலழுந்திய கதமலிந்தடுமுழுவைபாய்ந்
ததிரொழுந்துயர்வரைநடுங்குப வரிதுடன்றெனவிடியிடித்
துதிரொழுந்தழலுமிழ்சரங்கொடு வுயிர்விழுங்கினனெவனுமே.

உரை.—எதிர்முகத்தி லதனிசதன் படைத்தலைவனாகியநிகலனு மு யர்ந்ததேர்மேனின்று கொழுந்துவிட்டெரியுங் கனலழுந்தும்படி கதத் தோடுயிர்களைக்கொல்லுங்கொடியவேங்கைபாய்ந்து மலையுமதிர்ந்துநடுங் கும்படி யரிதாய்ப்பொருதாற்போலத் தானுமிடியெனவிடித்து முழங்கி யழலையுதிர்த்துமிழ்ந்தவம்புகளைவிட்டெங்கு மட்டில்லாதவுயிர்களை விழு ங்காநின்றானென்க.

155. சொரியிரத்தமொடெரிபிலிற்றிய சுளியெயிற்றடலதிரு
ரரியிரட்டியவமர்முகத்தெதி ரழலுடற்றியவதைவளர் [மோ
வரியெதிர்த்தெனவலியசச்சுதன் வருமுகத்தெதிர்நிகலன்வந்
தெரியெரித்தனவுலறுமுட்கழை யிருசுரத்தெனவமர்செய்வார்.

உரை. — அங்ஙனமிருவர் பொருதுவருகையிலிரத்தமுமழலும் புற ப்படச்சொரியுமெயிற்றோடதிராநின்ற சிஙகத்தின்மேற்கனன்ற கோபத் தின்மிக்க வேங்கையெதிர்த்தாற்போல வலியசச்சுதன்மேலே நிகலனெ திர்த் துலர்ந்தவிரண்டுமூங்கிற்கானத்தையிரண்டுநெருப்பு புகுந்தெரித்தா ற்போல விருவரும்பொருதாரென்க.

156. இருமுகத்தெதிர்படைகள்சிந்திட விருவர்வெஞ்சமர்பெரு
வருமுகத்தெதிர்நிகலனின்றெறி வளையுடன்றுறியிடிமுகிற்[கலின்
கருமுகத்திடைமதிநுழைந்தென வெதிரவன்கடவியகரி
செருமுகத்திடையுரநுழைந்துயிர் சிதையவுண்டதுதிகிரியே.

உரை.— அங்ஙனமிருமுகத்துப்படைகள் கெட்டுமுறியும்படி யிரு வர்செய்யும்வெம்போர்பெருகிவருகையி னிகலனெதிர்வந்து தானெறிந்த சக்கராயுதங் கோபித்தாற்போலவந்து இடித்தகரியமேகத்துள்ளே பூரண வட்டச்சந்திர னுழைந்ததுபோல வெதிராகச்சச்சுத னடத்தினயானை பொருதுவருகையி லதின்மார்பிற்பட்டுருவி யுண்ணுழைந்தசக்கர மதினு யிரையுண்டதென்க.

157. கரியவுச்சியமுகிலின்மின்னொடு கனலுமிழ்ந்திழியிடியெ
வரியசச்சுதனிபமிழிந்தழ லசிசுழன்றவனிரதமே [னு
னுரியநச்சரவெனவிவர்ந்தவ னுடல்பிளந்தெதிர்படையெலா
மிரியவச்சமோடுளமுடன்றவ னிரதமுந்தினனடவினன்.

உரை.— அங்ஙனம் யானைகெட்டுவிழுந்ததனாற் கரியமேகத்தினி ன்றுமின்னலோடிடிசனன்றுபாய்ந்தாற்போல வீரசச்சுதனெரிவாளைச்சு ழற்றிக் கரியயானையினின்றுபாய்ந்து நிகலனிருந்ததேரின்மேற் பறவை ப்பாம்புபோல வெய்தெனக்குதித்தேறி யவனையிரண்டாகப்பிளந்துவெ ட்டி யப்பாலெறிந்து பகைவரெல்லாருமஞ்சி முறியும்படி யத்தேர்மேலி ருந்து நடத்தினனென்க.

## XVI. வேறு.

158. இருமுகத்திவையிவரலினடுவுள வெரிமுகத்திருநிருபருமெ
திரெதிர்
பொருமுகத்தெழுமுரசொலிவளையொலி புரவிமிக்கொலிகரியொ
லிகுயவொலி
செருமுகத்திவைமருளியவெருவொடு சிலைவளைத்தொலியெழவி
ழுமழையொலி
யொருமுகததினுநிகரிலமுரிவில வுரைமுகத்தடையளவிலவமர்
செய்வார்.

உரை.— சொன்னபடி யிருசிறகினுள்ள படைமுகத்திற் போரா னையி னடுவேநின்றபேரணியிலே சோசுவனுமதனீசதனு மென்னுமிர ண்டரசர் தம்முள்ளெதிரதது முரசுஞ்சங்கு மற்றப்படைவாச்சியங்க ளோடுமுழங்காநிற்கப் பாய்ந்தகுதிரைகளு மதம்பொழிந்தயானைகளுஞ் சுழன்றுதிரிந்ததேர்களு மிவையெல்லாமுழங்கி யொருங்குடன்கூடி வெ ருவினையிடாநிற்க வோயாமல்வளைத்தவில்லினோசையும் வில்லினின்றோ யாமற் பொழிந்த வம்பின்மழையோசையு மிகாநிற்க விருமுகத்திலொப்பு மின்றி முறிவுமின்றிச் சொல்லுந்தன்மைத் தளவுமின்றி யிருவர்பொரு தாரென்க.

159. சுழலெழத்திரியிடிகளொடிருமுகில் சுளிமுகத்தெனவரவிரு
விரதமு [விழப்
மழலெழக்குனியிருசிலைமுடி விலவழல்பணிகதென விடுகணைமழை
புழலெழப்படுகணிகணைவழிவழி புனலெனக்கறைகுமிழிகளெழ
விழ
நிழலெழப்புயலொடுகுயிலினமென நிரைநிரைத்தெதிருபடை
மெலியவே.

உரை.—அங்ஙன மவ்வரசரிருவரு மேறினவிருதேருஞ்சுழன் றிடி களோடுதிரியுமிருமேகம்போலத் தோன்றித் திரியாநிற்க, அவரிருவரழல்

மேற்பறியும்படி விசையோடுவளைத்தவிருவில்லு முடிவின்றியழலைப்பெய்தாற்போல விட்டெய்தவம்பின்மழைவிழிதலிற் றுளைத்தபுண்ணும்படி பட்டுப் புதைத்தவம்புகள்வழியாகவழிந்த புனல்போல வுதிரங்குமிழிகளோடோடாநிற்க விருளைக்கொண்டுவிடு மேகமுகத்திற்குயில்கள்மெலிந்தாற்போல விருவர்சிலையாகிய விருமேகமுகத்திலணியணியா யெதிர்த்த படைகள் பட்டுமெலிவனவென்க.

160. வலமிடத்துறும்விசையொடுவளியென வருமிடத்தெழு
மொலியொடுகடலென
நிலமிடத்திடும்வெருவொடுமிடியென நிறைபணித்திடுகணையொடு
முகிலெனப்
பலவிடத்திடுகொலையொடுநமனெனப் படைமுகத்திவரிருவருநெ
டிதமர்
சலமிடத்தடுமவினையெனமலியன சவமிதித்தெழுமலைமிசைமலை
குவார்.

உரை.— அங்ஙனமிருவர்தேர்மேனின்று வலத்திலுமிடத்திலும்வரும்விசையினுற் காற்றுப்போலவுமவர்வருமிடத்தெழுந்தவோசையாற் கடல்போலவு மெங்கு மிட்டவச்சத்தா லிடிபோல மேயாமலெய்தவம்புகளான் மேகம்போலவுஞ் செய்யுநகொலையினு லியமன்போலவு மிருவர் போர்முகத்திற்றுேன்றித் தணியாமுனிவோடுயிராக்கொல்லுந் தீவினை போலத் தாமுநிறையைக்குவித்த பிணமலையை மிதித்தேறிப் போர்செய்வாரென்க.

161. வெளிமுகத்தெழுகணைமழையிருளிட விளிமுகத்தெழுகொ
டிதொலிசெவியட
வளிமுகத்தெழுநதிபதியலையெனவதையுடற்றியநரபதியிருவருஞ்
சுளிமுகத்தெழுவயவருமுரிவில துணையறச்சமர்பொருதலினெரு
வன்வந் [றினன்.
திளிமுகத்தெழுசிறைமுரிவனவென விளமதிப்பிறைமுடியினனல

உரை.—அங்ஙன மாகாயத்தின்மொய்த்தவம்புகள் மேகம்போல விருளைச்செய்யவுஞ் சாவாரிடத்தெழுந்தவோசை யிருசெவியையடைக்கவும் போராகிக்காற்றுமுகத்திலெழுந்தகடலலைபோல வரசரிருவர்முகத்து முன்னேநின்ற படைவீரருமுறியாம லொப்பில்லாத போரைச்செய்துவருகையிலொருவன்வந்து இருசிறகிலிருந்தபடைகள் கெட்டுமுறிந்தனவென்றுசொல்ல விருதாகவிளம்பிறைபதித்த முடியையுள்ளவதுனீசதனேந்தலறிக்கோபித்தானென்க.

162. கதமிகப்படரிரதமுமதிர்குப கழல்புடைத்தனனழலெழ
வளவறப் [முன்
பதமிகத்தனுவளையவுமிருதுணி படமறுத்தடலொருசிலைவளையு

சதமிகப்பதிமறையரசிடுகணை சடுதிதைத்தனவளவிலவுடலெலா
மதமிகக்கரியெனவொலியிடவவன் மருளிமுட்கிரிகிடியுருநிகரு
வான்.

உரை.—அங்ஙனமிருபக்கத்துத் தனதிருபடைமுறிந்ததனாற் கோப மிகுதியா லதுனீசதன் றன்னிரதமதிரவு மழல்மேற்பறியவும் வலியகா லாற் றேரைப்புடைத்து மட்டின்றிவளைத்தவில் விருதுண்டாகவொடிய வும் வேறொருவலியவில்லையெடுத்துப்பூட்டிவளையாமுன்னே யாண்டவன் றந்தவேதத்திற் கரசனாகியசோசுவ னொருசதத்திலுமிக்கவம்புகளையெய் தான், எய்தவம்புக ளதுனீசதனுடலெல்லாந்தையா நிற்க வவன்மதயா னையினுஞ் சீறிமுழங்கி யொருமுட்பன்றியைப்போலத் தோன்றி நின்று னென்க.

163. குருதிமிக்குகமலைமிசைதுகிரது கொடிமுளைத்தெனவுபரி
யவிரதமேற்
கருதிமிக்குகுநிலைபலபயனில கதறிநிற்பவன்விழிவழியழலெழ
விருதினுய்த்தனபிறையுணுமரவென விடுசரத்தொடுமறவிழமறு
கணை [ரிறைவனே.
பருதிமொய்க்கடல்முழுகெனவொளிமுடி பரியவிட்டனனறமுணை

உரை.—மீளவுமுடலெல்லாந் தைத்தவம்புகளைப் பறித்தோடிய வி ரத்தமிகுதியான் மலைமேற் பவளக்கொடிமுளைத்ததுபோல வுயரிரதத்தி ன்மே லதுனீசதன்ரேன்றித் தானினைத்தபோர்வகைபலவு முதவாமை கண்டு கண்வழியாகத்தீயெழும்படி கோபித்துமுழங்காநிற்க வறத்தினை யுணர்ந்துபோர்செய்யுமரசனாகியசோசுவன் விட்டவம்பா லவன்விருதாக முடிமேல்வைத்தபிறை பாம்புவந்துண்டாற்போல வற்றுவிழுந்தது. மீள வுஞ் சூரியன்கடலிலேமுழுகினாற்போலவதுனீசதன் சூழ்ந்தமுடி கவிழ்ந் துவிழும்படி சோசுவன் மறுகணையெய்தானென்க.

164. பிறைபுதைத்தனமுடிவிழவுளமறு பிணிபுதைத்தனவிறைய
வனலறிநன் [ளியின்
னறைபுதைத்தனசிகழிகைமெலிதர நனியுரத்தழலெழமிகுவெகு
கறைபுதைத்தனவிடநுனிவசிமிகு கணையெடுத்துனதுயர்முடிபு
னைவலென்
றுறைபுதைத்தனமுகிலெனவுறுமிவில் லுடல்புதைத்தெழவிசை
யினொடெழுதினன்.

உரை.—அங்ஙன மதுனீசதன்பிறைபதித்திருந்த தன்முடியையிழந் ததனான் மனதிற்புதைத்ததுன்பம் பொறுக்கமாட்டாமலலறி யணிந்தவா சமாலை தீந்துவாடும்படி நெஞ்சினின்றழல்புறப்படக்கோபித்து இரத்த முந்நஞ்சுந்துவைத்த நுனிக்கூர்மையின் மிக்கவோரம்பினையெடுத் தினி

நானுன்முடியைப்புனேவேனென்று துளிமேகமிடித்தாற்போல முழங்கி வில்லுக்குள்ளே யம்பினுனிபுதைத்துமறையும்படி மிகவும்வலித்துவாங்கி விசையோடு புறப்படவிட்டானென்க.

165. தனையுதைத்தன தனுமுழுதகல்முனர் சரமுதைத்தறவெதிர் சரமெழுதினன் [கெனமறு
முனையுதைத்தனவரியெனவெதிரிலன் மொழிமறுத்திதுமுடிபுனை
கனையுதைத்தனபிறையெனவளேவுள கணையுதைத்திடறுதலொடு தலைபக [படைகளே.
வினையுதைத்தனவுயிர்விடுமிறையவன் விழவுதைத்தெனமுரிவன

உரை.—அங்ஙன மதுனீசதன் விசையோடெய்தவம்பு தன்னையுதைத்துவிட்ட வில்லின்புருவத்தை முழுதும்விட்டுப் பிரியுமுன்னே யவ்வம்பினையுதைத்தழிக்கும்படி போரையுதைத்தசிங்கம்போல வெதிரில்லாதசோசுவ னெதிராகவம்பினைவிட்டான். மீளவு மவன்முன்சொன்னதற்கு மறுமொழியா யிது முடியாகப்புனைவாயென்று பிறைபோலவளைத்தவோரம்பினை யொலியெழும்படி விசையோடெய்தலி னதுனீசதன்றலை நெற்றிக்குநே ரிரண்டாகப்பிளந்து அவன்றன்வினையா லுதைக்கப்பட்டுயிரைவிட்டுவிழுந்தான், அவன்படைகளுமுதைக்கப்பட்டாற்போல முறிந்தோடினவென்க.

166. உழையெனப்படைமுரிதரவரியென வுடறிமொய்த்தனமறையினரிடையிடை
மழையெனத்தொடுகணையொடுபலபடை வழிவகுத்துயிரளவிலவனிலமுன்
றழையெனப்படவுதிரமுமலையொடு ததையவிட்டிசையிறையவன் வெருளிமுன்
பிழையெனப்படைவகைவகைமடிவன பெருகுதற்கொருங்கிரிடவளவதோ.

உரை.—அங்ஙன மான்கூட்டம்போலப் பகைவர் படைமுறிதலிற் சிங்கங்கள்போல வேதத்தாராகியயூதர்திரண்டு சீறி யிடைக்கிடைவிட்டவம்புமாரியும் வீசினபலவாயுதங்களுந் தந்தவழியாகப் பெருங்காற்றுக்குமுன்னே தழைகளுதிர்ந்தாற்போல வளவின்றிப்பலவுயிர்கள் பட்டுவிழவுங் குருதிகளலைகொண்டு மலிந்தோடவும் வான்கடவுட்டிருமுகத்திற் குற்றங்கள்கெட்டழிவதுபோலப் பகைவருள்ள நால்வகைப்படைகள்கெட்டமிகுதியை யுவமித்துரைக்கும்படி யளவுள்ளதல்லதென்க.

167. வினைமுடுக்கியபகையவரிரிதர விசையமுற்றனகளியெழுமிறையவன் [மர்
முனைமுடுக்கியதமரமர்துடர்கில முனைநிறுத்தியபொழுதினுமரித

தனைமுடிக்கியகடவுடன்வயவலி வுறிக் தகுசினத்திறமறிகுவர்வெரு
[செய்தான்.
கனைமுடிக்கியகடலுடையகல்புவி கடிநடுக்குறவிரிபடைகொலை

உரை.— தம்வினைகளான் முடிக்கப்பட்டபகைவ ரங்ஙனமோடலின் வெற்றியைக்கொண்டு களிகூர்ந் துள்ளத்திலெழுந்தசோசுவன் பகைவரைவெட்டி முடிக்கின தன்படையினித்துடராதபடி போரைநிறுத்தினன். அங்ஙன மவன்போர்நிறுத்தினகாலத்துங் கடவுடானே தனியே போரைத்துடங்கித் தன்னளவில்லாதவல்லமையுள்ள கோபத்தின்றன்மையைக் கண்டறிந்தவரெல்லாரும்வெருவி முழங்கினகடலையுடுத்த வகன்ற பூவுலகெல்லா மிகநடுங்கவுந் தானேயோடினபகைவர் படையைக் கொன்றனென்க.

## XVII. வேறு.

168. முரிதருபகையவர் முழுதடவவர்மிசை
விரிதருவலைகவிழ் வனவெனவெகுளிடி
யெரிதருகருமுகி லிடையிடையொருகணம்
பரிதருமுனருயர் பரவினவெளியெலாம்.

உரை.— கடவுளெங்ஙனந்தனிப்போர்செய்து பகைவரைக்கொன்றனென்னில், முறிந்தோடியபகைவரை யொருங்குடன்கொல்லும்படி யவர்மே லகன்றவலையைக்கவிழ்த்தாற்போல வெகுண்டவிடிகளால்வெந்த கரியமேகங்க ளெங்கு மொருகணமுடியுமுன்னே யாகாயத்திற்பரந்தன வென்க.

169. முனைமுதிர்படையெழ முரசதிரொலியெனச்
சினைமுதிரிடியொடு செருமுதிர்சினமெழக்
கனைமுதிரரவொடு கருமுகில்பரவலின்
வினைமுதிருளமென வெளிமுதிரிருளதே.

உரை.— போர்முகத்துப் படையெழும்படி முரசுமுழங்கினாற்போலக் கருவாகக்கொண்ட விடிகளோடு சினமெழுந்து போர்முற்றி மிக்கதிர்ந்த முழக்கத்தோடு கரியமேகங்கள்பரந்ததனாற் றீவினைநிறைந்தமனம் போலவெங்கு மிருண்டதென்க.

170. முடியொடுமுடிபட வரைமுனைவனவென
விடியொடுசினமுதி ரெரிமுகிலெதிர்பொரும்
படியொடுபிரிபரு பதமெனவசனியின்
வெடியொடுமழையென விழுவனவுபலமே.

உரை.— பலமலைக ளுச்சியோடுச்சிபடும்படி தம்முட்பொருதாற்போல விடிகளையிடித்த சினத்தெரிந்தமேகங்க டம்முள்ளெதிர்த்துப் பொருந்தன்மையா லம்மலைக டம்முள்மோதித் துண்டாகவொடிந்துதிர்ந்தாற்போல விடிமுழக்கத்தோடு மழையாகத்திரண்ட பெருங்கல்லுக்கள் பெய்தனவென்க.

171. துறுவனவலியகல் துகளெழவிரதமு
மிறுவனகரிபரி யினமினமடிவன
வஃறுவனபடையின மழிவனர்பகையவ
ருறுவனவிடிகளொ டெனவையெரிவன.

உரை.— அங்ஙனம்நெருங்கிப் பலத்தகல்லின்மழை பெய்தலாற் றூளாகத்தேர்களொடிந்தன, யானைகளுங்குதிரைகளுமொழிந்தன, பலவாயுதங்களெல்லாமுறிந்தன, பகைவருங்கெட்டழிந்தனர். மீளவும்விழுந்த விடிகளா லவையெல்லாமெரிந்தன வென்க.

172. கடியொலியெழவிழு கலினுறைபடுமொலி
யிடியொலியிடியினு மிறுமிரதமதொலி
மடிகரியெழுமொலி மடிபரியெழுமொலி
முடிவிலவிளிகுவர் முதிரொலிநிகரில.

உரை. — அங்ஙன மிக்கவோசையோடு விழுங்கல்லின்மழை கீழே படுதலினெழும்புமோசையு மிடிகளிடித்தவோசையு மிடியினு மொடியுந் தேர்களினோசையும் யானைகளுங்குதிரைகளுஞ் சாதலினிடுமோசையு மட்டின்றி யெங்குஞ்சாவா ரலறிவிடுமோசையு மிவையெல்லா மொருங்குடன்கூடியொப்பின்றித் திரண்டுமுழங்கினவென்க.

173. சிந்தினசிலைமழை சிந்தினசிலைகணை
சிந்தினபலபடை சிந்தினகரதலஞ்
சிந்தினவிருகழல் சிந்தினதலைமுடி
சிந்தினவுடலுயிர் சிந்தெரிநரகுற.

உரை — அங்ஙனங் கல்லின்மழைபெய்தலால் வில்லுகளுமம்புகளும் பலவாயுதங்களுங்கெட்டுக் கையுங் காலுந்தலையும்வேருக வுடல்களழிந்து மெய்யானவேதத்தைப் பகைத்தவராகையி லவருயிர்கள் தீக்கடலாகியநரகத்தில் விழுந்தனவென்க.

174. தப்பிலகளிறுக டப்பிலபுரவிக
டப்பிலவபையவர் தப்பிலதலையவர்
தப்பிலகுருசிலர் தப்பிலவனையவர்
தப்பிலவெமதிறை தப்பிலவமர்செய.

உரை.— அங்ஙனந் தப்பாதவல்லமையுடையவெமது கடவுடானே தப்பாதபோர்செய்தமையால் யானைகளும்புரவிகளும் வீரரும் படைத்தலைவரு மரசரு மற்றெவருந் தப்பாமலழிந்தாரென்க.

175. வானவரனைவரு மலைமலியுலகுள
வேனையரனைவரு மிதையமுள்வெருவுறி
யானவையறிதலொ டளவிலவிறையவன்
மேனிவாருமிடல் விழைவொடுபுகழுவர்.

உரை.—அங்ஙனம் வானுலகத்தோரும் பூவுலகத்தோருமனேவரு மு ள்வெருவி யன்றங்கே யானதெல்லாவற்றையு மறிந்தளவிறந்தகடவுளு டைய மேலானவரியவல்லமையை யாசையோடு துதியாநின்றுரொன்க.

176. வில்லொடுவயவரு மிடவிடுமமால
தெல்லொடுபிரிகில விரவியுமமர்செய
வல்லொடுதவிரின சிலவுயிர்மடிதரக்
கல்லொடுமழைபொரு திறையதுகதமென.

உரை.— இவ்வெற்றிவகையறிந்தோ ரெங்ஙனந் துதிப்பரொன்னில் வில்லின்வல்லார்செய்தபோரன்றிச் சூரியனுந்தன்திகர்பெயராம லொரு நாளுநின்றுபோர்செய்ய மீளவுமிவர் போரின்மடியாமற் றப்பினசிலவுயி ர்கள் தவிராமற்கெடும்படி கல்லின்மாரியைப்பெய்த மேகங்களும் பொ ருதலா லாண்டவன்கோபமிகுதிதோன்றிற்றென்பாரொன்க.

177. கைவருமொருசிலை கணையெழுவளைமுகத்
தைவருமொருபக லழியினபினரினி
மொய்வருசினமொடு முதலவனமர்செயி
னுய்வருமெவரென வெருவுறியுருகுவார்.

உரை.— சோசுவன்றன்கைப்பிடித்த வொருவில்லோசையெழும்படி வளைந்தமுகத் தரசரைவரு மொருநாளெல்லை யினழிந்திறந்தபின்னரி னிப் பெரிதுசினந்தகடவுள் போர்செய்யுங்காலத் தெவர்வாழ்வொன்று வெருவி யுள்ளுருகாநின்றுரொன்க.

178. வலியர்பகைமுனர் மடிவிலருளரொனின்
மெலியவரெதிரினும் வெகுளியபலநவை
மலியவரொனினிறை வயவமர்சினமுனர்
பொலியவரெவரென வளவிலபுகழுவர்.

உரை.—வல்லமைகொண்ட பகைவரெதிர்த்த போர்முகத்துக் கெ டாமலுள்ளவராயினு மெலிந்தவர்போர்செய்யுங்காலத்துந் தாம் பலதீவி னையுள்ளவராயி னப்பொழுதாண்டவனும் வல்லமையொத்த சினங்கொ ண்டுபோர்செய்தமையாற்கெடாமற் பொலிவாகநிற்ப வல்லவரெவருண் டோ வில்லையென் றளவின்றிக்கடவுளைத்துதியாநின்றுரொன்க.

## XVIII. வேறு.

179. ஊன்முகஞ்செறித்தவெம்போ ருடன்றிவையனைத்துஞ் செய்தோன்
வான்முகஞ்செறித்தவாழ்க்கை வகுப்பவிங்கிளவலாகத்
தேன்முகஞ்செறித்தபைம்பூந் திருமுகைமுகத்திற்றோன்றித்
தான்முகஞ்செறித்தவன்பின் றகவுகுமிவன்றனென்றான்.

உரை.—அங்ஙன மூனிறையப்பொழிதற்குக் காரணமாகிய சொன்னவெம்போர்முகத் திவையெல்லாவற்றையுஞ்செய்த நாதனுனொன்னில் வானத்திலுள்ளவழியாதவாழ்க்கை பூவுலகிஞேர்க்கிடும்படி யிங்கேகுழந்தைவடிவாகத் தேனைப்பொழிந்த பூவரும்பின்முகத்தோடுதோன்றித் தானேதன்முகத்திலேயளவில்லாதவன்பின்றயைக்காட்டாநிற்கு மிவன் முனேயென்முன் மிக்கயேலென்க.

180. புண்கனிந்தாற்றிறுற்போற் புன்கணீத்துவப்பச்சூசை
பண்கனிந்திசைத்ததேபோற் பாகினுமினியசொல்லாற்
கண்கனிந்துவப்பத்தெள்ளார் கதிர்க்கிழிபொறித்ததேபோல்
விண்கனிந்தாயகாதை விரித்தடிபணிந்தான்வானோன்.

உரை.— அங்ஙனம் புண்ணேகாமலினிதாயாற்றிறுற்போலச் சூசையுள்ளடைந்ததுன்பத்தைத்துடைத்து மனமலர்ந்துவக்கும்படி வீணைபேசினுற்போலப் பாகினுமினியசொல்லைக்கொண்டு கண்ணுங்களிகூரக் கதிரைத்தெளித்துச் சித்திரத்தையெழுதிக்காட்டினுற்போல முன்னுளிலே வானுலகமகிழும்படி யாய விச்செய்தியைமிகவும்விரிவாகச்சொல்லி வானோனுகியமிக்கயேல் திருக்குமாரன்பாதத்தை வணங்கினுனென்க.

181. நாமஞ்சானுயர்ந்தவீர நாயகனெளியகோலங்
காமஞ்சானுருத்தவன்பிற் கனிந்தெடுத்துதித்தபாலால்
வாமஞ்சால்பொறித்தபைம்பூ மலரடிவணங்கியுள்ளத்
தேமஞ்சாலின்பமூழ்கி யிருவரும்வியப்பின்மிக்கார்.

உரை.— அங்ஙனம் பேர்பெற்றுயர்ந்த புகழுடையவீரமுள்ளநாயகனிந்நாளி லெளியகோலத்தையெடுத்து நம்மேல்வைத்தவாசையின் மிக்கவன்பினுற்கனிந்து மனிதனுய்ப்பிறந்ததன்மையையாராய்ந்து கதிராலெழுதப்பட்டமலர்ப்பாதத்தைவணங்கி மரியுஞ்சூசையுமென்றிருவர் மிக்கவின்பக்கடல்மூழ்கி யதிசயப்படாநின்முரென்க.

182. மருமணித்தொடையாழேந்தி மரகதமணித்தாள்வைத்த
பருமணிக்காந்தட்கையாற் பயிரளிகிளைபோற்கீதந்
தருமணிநரம்பின்மேலெண் டகுமிசைகிளப்பவானோர்
திருமணிச்சாயற்ருய்தன் சிறுவனைப்பாடினுளே.

உரை.—அங்ஙன மிருவருவந்ததன்மைத்துச் சூழநின்றவானவர் வாசமணிப்பூமாலையணிந்த வீணைகளையெடுத்தேந்தி மரகதமணியொத்ததாளின்மேற்பூத்த வழகிற்பெரிய கார்த்திகைப்பூவொத்தகைகளா லினியகுரல்வண்டினங்க ளொத்தனவாய்ச் சங்கீதந்தருதற்குக்காரணமாகிய பலமணி நரம்புகளின்மே லெட்டுவகையி னிசைகள் கிளம்பும்படிவாசியாநிற்பத் திருமணிச்சாயலாய்நின்ற தாயாகியமரியென்பவள் தன்றிருக்குமாரனைநோக்கிப்பாடினுளென்க. (எண்வகை யிசைகளாவன: படர்த லுலாவல் வடித்த லுந்த லுறழ்த லுருட்ட றெருட்ட லள்ளலென வெண்வகை யிசைகளென்க.)

## XIX. வேறு.

183. மருடருவலியுருவே மருளறுசினவுருவே
யருடருதயையுருவே யளவறுதிருவுருவே
தெருடருகலையுருவே செயிரறுமனுவுருவே
பொருடருமணியுருவே பொழிமணவடிதொழுதேன்.

உரை.—பிறரஞ்சிமயங்குதற்குக் காரணமாகியவல்லமையுடையோனே, தான் மயக்கமின்றிச் சினத்தைக்கொண்டோனே, அருளின்மிக்க தயையுருவோனே, அளவிறந்தசெல்வத்தின்மிக்கோனே, தெளிந்தகல்வியினுருவே, பூவுலகங்கொண்ட பாவவினையறும்படி மனுக்கோலத்தையெடுத்தோனே, பொன்னிற்பதித்த மாணிக்கவடிவோனே, உனது வாசமலர்ப்பாதத்தைத் தொழுதேனென்றுளென்க.

184. உரையிலகலைநிலையே யுயரறமடையுரையே
கரையிலபடர்கடலே கதியுயிர்பெறுகரையே
வரையிலசுகநிலையே வளர்தவமடைவரையே
புரையிலமனுமகனே பொதிமலரடிதொழுதேன்.

உரை.—காதிற்குப் புலனாகிய வொலியைக்கொண்ட வுரையொன்றின்றிக் கல்வியெல்லாமுணர்த்துநிலையே! உயர்ந்தவறமொன்றேயடையுமுரையே, கரையில்லாத சகலநன்மைநிறைந்தகடலே, கதியிற்சென்றவுயிர்களடையுங்கரையே, மட்டில்லாதசுகவானந்தநிலையே, வளர்ந்ததவமொன்றேசேர்ந்தடையுமலையே, ஒப்பில்லாததன்மைத்து மனுமகனானவனே, உமது பொதியாய்மலர்ந்ததிருப்பாதத்தைத் தொழுதேனென்றுளென்க.

185. மருமலிமலர்நிழலே மறைமலியுயர்பயனே
திருமலிகாமுகிலே சிவமலிதனிமுதலே
யிருமலியுலகுளரோ யிணரொடுதொழுமடியே
குருமலியறநெறியே கொழுமலரடிதொழுதேன்.

உரை.— வாசமலர்ச்சோலையொத்த வருளாணிழல்செய்தளித்தவனே, வேதநமக்குப்பயன்றரும்படிவந்தவனே, செல்வநன்மைகளைப்பொழியு மேகமொத்த கையுள்ளவனே, மோட்சத்தைத்தருந் தனிமுதலோனே, வானுலகத்தோரும் பூவுலகத்தோரு மலரைச்சாற்றிவணங்கப்பட்ட திருப்பாதத்தையுடையோனே, ஈங்கவதரித்துக் குருவாகவந்து நல்லறத்தின்வழுவாநெறியே, உனதுதிருமலர்ப்பாதத்தைத் தொழுதேனென்றுளென்க.

## XX வேறு.

186. காய்முகத்துறைநீர்போலுங் கங்குலின்விளக்குப்போலு
நோய்முகத்துலன்றநெஞ்சார் நுனித்தெழவிவையங்காகிச்
சேய்முகத்துயிரிற்கான்ற செழுங்கதிர்தெளிப்பமாந்திப்
போய்முகத்தெதிர்ந்தநாடு புக்குநீணெறியேபோனார்.

உரை.—அங்ஙனம் பூமிகாய்ந்தவிடத்து நிறையைப்பெய்த மழைத்துளிபோலவு நிறைந்தவிருளிடத்தேற்றிய விளக்குபோலவு நொந்துலன்று காய்ந்தநெஞ்சினையுடையமரியுஞ் சூசையு நன்றாய்க்குளிர்ந்துவந்தோங்கும்படி யிவையெல்லாமவுகேயாகையிற் றந்திருக்குமாரன் முகத்தினின்றுயிராகப்புறப்பட்டகதிர்களைத் தாமுள்ளேதெளியும்படி கண்களவாயாலுண்டுநடந்துபோ யெதிர்நின்றநாட்டிற்புகுந்து நெடும்வழியே நடந்தாரென்க.

187. ஒழித்தெனச்சுடர்நீர்மூழ்க வுலகிருட்போர்ப்பக்கஞ்சந்
தெழித்தெனக்கதவடைப்பச் செழும்பொழிற்பறவையார்ப்ப
விழித்தெனக்கண்களாக மீனலம்வானம்பூப்பக்
கழித்தனநெடுஞ்செல்வப்பாற் களரிமாபுரத்திற்சேர்ந்தார்.

உரை.—அங்ஙனம் நடந்துபோய்ச் சூரிய னொழிந்துபட்டாற்போலக் கடலிலேமுழுகவும் பூவுலகமிருளாகியபோர்வை தன்மேற்போர்த்துக் கொள்ளும்படி யிமுக்கவு மதைக்கண்டுதாமரைகள் கோபித்தாற்போலத் தம்மிதழாகியவீட்டுக்கதவையடைக்கவுஞ் சோலைகடோறுமடையும்பறவைகள் முழங்கவும் விழித்துபார்த்தார்போல வானுலகு கண்களாக மீன்களைப்பூத்துக்காட்டவு மிவையெல்லாமாகு மாலைநேரத்திலேயவர்நெடும்வழியைக்கடந்து களரிமாபுரத்திற்குச் சேர்ந்தாரென்க.

சோசுவன் வெற்றிப்படல முற்றும்.

ஆகப்படலம்-15-க்கு-விருத்தம்

1592.



## பதினொருவது

# சேனையோன் வெற்றிப் படலம்.



### I. வேறு.

1. கிணைநிலைமுரசமார்ப்பக் கீதயாழ்தெளிப்பவேளிற்
பிணைநிலைக்கரிகள்சீறப் பிரிநிலைக்கறவையேங்கப்
பணைநிலைப்புரவியாலப் படரொலிக்களரிமூதூர்த்
திணைநிலைப்புறத்திலன்னார் சிறந்தமண்டபத்தினின்றார்.

உரை.— முற்சொன்னபடி மாலைக்காலத்து [மரியுஞ்சூசையுந் திருக்குமாரனையேந்திக்கொண்டு களரிமாபுரத்திற் சென்றவளவிலே யந்நகரிடத்துப் பலவாச்சியங்களோடுமுரசார்ப்பவும் வீணைகளோடு சங்கீதங்கடெளிந்தொலிப்பவுந் தூணிற்கட்டின மதயானைகள் சீறிமுழங்கவும் பிரிந்துநின்றகன்றைநினைத்தகறவைக ளேங்கிக்கனையவும் பந்தியினின்ற குதிரைகளாடிக்கனைப்பவும் படர்ந்தபலவோசைகளின்மிக்க வந்நகருட்புகாம லிவர்புறத்துநின்று சிறந்ததோர்மண்டபத்திற் றனியேநின்றாரென்க,

2. தாளூறுவருத்தமோம்பித் தலைவிரிகதலிமுற்றி
நீளூறுகனிகண்மாந்தி நெடும்பசிப்பரிவுமாற்றி
வாளூறுகதிராலெங்கு மல்கியவிருளைப்போழ்ந்து
கோளூறுதிங்கள்வான்மேற் குளிர்முகங்காட்டிற்றன்றே.

உரை.—அம்மண்டபத்தினின்றவர் நடந்துவருந்திய காலினைப்பாற்றியபின்பு வாழைகள் முற்றிப்பழுத்துத் தந்ததீங்கனிகளையுண்டு நெடுங்காலத்துப் பொறுத்தபசியுமாற்றிச் சந்திரன்முளைத்துத் தன்கதிர்வாளாலெங்குநிறைந்தவிருளைவெட்டிப்பிளந்து வானத்திற் றன்குளிர்ந்தமுகத்தைக் காட்டினதென்க.

3. கோள்கடைந்தழுத்திறற்போற் கொழுமணியழுத்திவைத்த
தாள்கடைந்தழுத்திப்பைம்பொற் றவழ்கதிர்ப்பவளத்தூணில்

வாள்கடைந்தழுத்திஞற்போன் மதிசொரிபசும்பாற்கற்றை
பிள்கடைந்தழுத்திப்பாயும் பெருங்கதிர்சூசைகண்டான்.

உரை.— அங்ஙனஞ் சந்திரன் முளைத்தவளவிலே நவக்கிரகங்களைக் கடைந்தழுத்திஞற்போல நவமணிகளைச் சூழப்பதித்துப் பசும்பொன்ஞலடிகடைந்து கதிர்களைவீசி யங்கிருந்த பவளத் தூணிஞுட்புதைத்த வொளிபுறப்படும்படி வாளைக்கொண்டு கடைந்தாற்போலச் சந்திரன்சொரிந்த பசும்பாலொத்தவிளங்கதி ரத்தூணிலழுந்தியதன்மையா லங்கேநின்றெழுந்த பெருங்கதிர்பரவக் கண்டான்சூசையென்க.

4. மணிநிலைப்புரத்தின்வாயின் மணிக்கதிர்த்தூணுநிற்ப
வணிநிலைப்பவளத்தூண்மே லவிர்மணிப்பாவைநின்று
பணிநிலைப்பசும்பொற்காளம் பதிமணித்தீபமோடு
துணிநிலைப்பசும்பூங்காந்தட் டுணைக்கையிருங்கக்கண்டான்.

உரை.— மணியாலழகுபெற்ற களரிமாபுரத்தின் வாயின்முன்னே சொன்ன மணித்தூணிற்க வத்தூணின்மேல் மணியாற்செய்த வழகிய வொருபெண்ணின்று விளங்கியபசிய கார்த்திகைப்பூவொத்த தன்னிரு கையி லாபரணமாக வூதும்பொற்காளமு மணித்தீபமு மேந்திநிற்பதை சூசைகண்டாரென்க.

5. கதிரொழுமுருவினின்ற கபிறியறன்னைநோக்கிப்
பொதிரொழும்பவளத்தூண்மேற் பொன்மணித்தீபங்காள
மெதிரொழுமணிபொற்பாவை யேந்தியதுமைமோவென்னப்
பிதிரொழுங்கதிரின்வாஞேன் பிழிமொழிபிலிற்றிச்சொன்ஞன்.

உரை.— சூசையதைகண்டவளவிலே கதிர்வீசியமேனியோ னண்டையினின்றவாஞேஞுகிய கபிரியேலைநோக்கியங்கே நின்றபவளத்தூண்மே லெதிராய்நிற்கும் பொற்பாவை தீபத்தையுங் காளத்தையு மேந்திநிற்பதேதோவென்று சொல்வாயாகவென்று கேட்டவளவிலே விளங்காநின்றவாஞேன் மதுவுமைகொண்டு மறுமொழிசொன்ஞனென்க.

6. வான்முழுதிறைஞ்சுநாய்கன் வலிமையிஞுருவமாகத்
தேன்முழுதுமிழ்பூந்தண்டார்ச் சேதையோன்மறைபகைத்த
வூன்முழுதுடன்றவேலா ரொருங்கழிந்தறவெம்போரில்
வேன்முழுதிலகைக்கொண்ட விளக்குங்காளமுமிதென்றுன்.

உரை.—கபிரியே லெங்ஙன மறுமொழிசொன்ஞனென்னில் வாஞுலகில்வணங்கப்பட்ட வாண்டவனுடையவல்லமையைக்காட்டும்படி தேன்மாலையணிந்த சேதையோனென்பவன் முன்ஞளிலேவேதத்தைப்பகை

த்த கொடியவேலேந்தியபெரும்படைக ளொருங்குடனழிந்துகெடும்படி வெம்போர்முகத்தி லவன் வேலொன்றின்றிக் கையிலேந்தியதீபமுங் கா ளமு மிவைதாமென்ருன் வானவனென்க.

7. வான்சுவைத்தகவிற்றேவ வாழ்த்திருசெவியின்வாயாற்
ருன்சுவைத்தல்லதல்லற் றகும்பசியாற்ருநீரா
னூன்சுவைத்துடன்றபோரி னுற்றதுசொன்மினென்னத்
தேன்சுவைத்துமிழ்தீஞ்சொல்லாற் செப்புதலுற்ருன்வானோன்.

உரை.—அதைச்சூசைகேட்டவளவிலே வானுணவின் தன்மையாற் றேவபுகழ்ச்சிகளைத் தன்னிருசெவியாகிய வாயினுலுண்டாலொழியத் து ன்பமென்னும்பசியை யாற்றமாட்டாதகுணத்தோனுகையிற் சொன்ன போரி லானதெல்லாஞ்சொல்வாயாகவென்று சூசையுரைத்தவளவிலே வானவனுகியேகபிரியேலுந் தேனுண்டுகொப்பளித்தாற்போல வினியவு ரை கொண்டானென்க.

## II. வேறு.

8. சொல்வழங்கியதகுதியாற் சுருதிநூல்வழங்கச்
செல்வழங்கியதுளியினுங் கொடையொடுசினந்த
வில்வழங்கியவிசையமா சோசுவன்வென்ற
வெல்வழங்கியவிருமுடியரச ரெண்ணரிதே.

உரை.—மிக்கயேல் முன்சொன்னபடி வேதம்வழங்குதற்பொருட்டு மேகத்துளியினுமிக்க கொடைதானமழையுஞ் சினந்த வில்லின்மழை யும் வழங்கினவலக்கையுடையவெற்றிச்சோசுவனென்பவன் முன்னுளிற் ருன்வென்று விளங்கியமுடியைச்சூழ்ந்த வரசரையெண்ணுவதரிதென்க.

9. சாரனுப்பகன் ருப்புவன்பெத்திலன்ருபிர்
தோரன்யாக்கனன் சுடர்முடியிலேபுவனெரிக்கோன்
றேரிசாவெடு தேனகன்காசரனுபரன்
னேரிமானவ னேருசலனெரிதன்யெரிமான்.

ஏதிலேபிர னிலக்கனனெகிலன்சிமேரோன்
காதனுயரன் க்லகலன்காதரனுதுலன்
மாதனுசுரன் மச்சதனக்கிசன்மகத்த
னேதுபேருள முப்பதோரரசர்வென்ருழித்தான். (†)

இவையிரண்டுமொருதொடர்.

---

(†) Josue, cap. XII. Vers. 9...24.

உரை.— அங்ஙனமாண்டவன் வல்லமைகாட்டும்படி சாரனுமாப்ப கனுந் தாப்புவனும் பெத்திலனுந் தாபிருந் தோரனும் யாக்கனனு மிலே புவனு மெரிக்கோனுந் தேரிசானுந் தேனகனுங் காசரனு முபரனு மேரிமானு மேருசலனு மெரிதனும் யெரிமானு மேபிரனு மிலக்கனனு மெகிலனுஞ் சிமேரோனுங் காதனு மாயரனுங் கலகலனுங் காதரனு முதலனு மாதனு மாசுரனு மச்சதனு மக்கிசனு மகத்தனு மென்றிம்முப்பத்தொரு முடிசூடியவரசரையுஞ் சோசுவனொருவன் வென்றுகொன்றானென்க.

10. ஒழிந்தமாற்றல ருரைந்தபல்லூழித்தொறுமுறைந்தாண்
டிழிந்தமாரியி னிருந்திருயூதர்கள்பின்னாள்
விழிந்ததேவரை மேவலினரமொடுவிரத
மழிந்தபான்மையா லடலழிந்தொளியழிந்தழிந்தார்.

உரை.— அங்ங்ன மடிந்தபகைவராகிய முப்பத்தோரரசராண்டதேசங்களெல்லாம் யூதராண்டுகொண்டு பெய்த மழையின்றன்மையானிறைந்தசெல்வங்களையுடையரானபின்பு மெய்க்கடவுளைவிட்டுப் பொய்யானதேவர்களை வணங்கத்துடங்கி நல்லறமு முன்காத்தவிரதமு மழிந்ததனாற்றமக்கிருந்தவல்லமையுங்கீர்த்தியுமழிந்து தாமுமழிந்தாரென்க.

11. அறமகற்றின ரறப்பயத்தாண்டவன்ளித்த
திறமகற்றினர் சிதைவுறவறிவுறிக்கொடிய
மறமகற்றினர் வணங்கியவிறைவனுஞ்சிறுமை
புறவகற்றினன் பொருவிலவலித்திறம்விளங்க.

உரை.— அங்ஙனம் யூதர்நல்லறநெறியைவிட்டவளவிலேயறத்தின் பொருட்டாக வாண்டவ னவர்க்கு முன்றந்தவல்லமையுமிழந்து தம்பகைவர்கீழ்ப்பட்டு மிக்ககேடுகளையடைந்தார், அடைந்தகேடுகளால் நல்லறிவுமடைந்து செய்தகொடியபாவங்களைவிட்டு மீளவுமண்டிவணங்கினநாதன் மனமிரங்கி யவர்கொண்டசிறுமையைநீக்கித் தனக்குள்ளநிகராதவல்லமைவிளங்கச் செய்யும்படி திருவுளமானரென்க.

12. ஆளுங்கோனில வடற்படைவீரருமிலவெங்
நாளுங்கொடிய கோற்பொறைசுமந்திறைபிறர்க்கு
நீளுங்கோடணை நிந்தையோடழிவுடைகுலத்தோர்
மீளுங்கோதற மிடவினோனுழுநனைத்தெரிந்தான்.

உரை.—அங்ஙனம் யூதர்குலத்தி லாளுமிராசாவுமின்றிப் படைவீரருமின்றி யெந்நாளும்விளைந்த கொடுங்கோலின்கொடியபாரத்தைச்சுமந்து தாம்பிறர்க்குத்திறைகட்டிநெடுநாள்தந்து கொடுமையோடுநிந்தைபடவழிந்தனராகியவர்சிறுமைமீளும்படி குறையின்றி யளவிறந்தவல்லமையுடையாநாத னுழுநர்தொழிலைச்செய்திருந்த வொருவனைத் தெரிந்துகொண்டாரென்க.

13. ஓதைமோங்கிய களத்துநெல்தெளித்தெடுத்துறைந்த
சேதையோனிடைச் சென்றவான்றாதுமைப்பகைத்த
கோதைவேலினர் கொல்லவேம்போரமைகெனவிப்
பேதையோபகை பெயர்த்தடவெனவயிர்ப்புற்றுன்.

உரை.—செந்நெல்லைத்தெளிக்குங்கிடாக்களை யதட்டுவாரோதையும் வைக்கோலைநீக்கி நெல்லைப்புடைப்பா ரோதையு மிரப்போரோதையுங கொடுப்போரோதையு நெல்லைப்பகுப்பாரோதையும் வண்டிகள்மே லேற்றிக்கொண்டுபோவாரோதையு மிவ்வோதைகள்முதலியனவு மிக்க களத்திற்செந்நெல்லைத்தெளித்துச் சேர்த்துக்கொண்டிருந்த சேதையோ னென்பவனிடத் தாண்டவன்விட்டதூதாகிய வொருவானவன் சென்று நம்மைப்பகைத்தபடைவீரரைக் கெடுத்துக்கொல்லும்படி போரைச்செ ய்வாயாகவென்றுன், அதைக் கேட்டசேதையோ னுழுவர் தொழில்செ ய்யும் பேதைநானுபகைவரைக் கெடுத்துக்கொல்லுவேனென்று சந்தே கப்பட்டானென்க.

14. அரியவோர்தொழி லாண்டவனேவியகாலை
யுரியவோர்தக வுளத்திடுந்தகுதியாலூக்கம்
புரியவோர்மதப் புகர்முகமெனவெழுந்தையம்
பரியவோர்குலப் படைமுகம்பண்ணுகவென்றுன்.

உரை.— ஆண்டவனொருவற்குச் செய்தற்கரியதோர்தொழிலை யே வினகாலத் ததற்குறியகுணத்தையு மவற்கிடுவதுமுறைமையாகையிற் சேதையோனென்பவற்கிட்ட தொழிற்குரியவூக்கத்தைத்தந்தமையா லவன் முன்னினைத்த சந்தேகமெல்லாம்போக யொருமதயானையைப்போ லவெழுந்து தன்குலத்தாரைப் படையாகக்கூட்டினுனென்க.

15. வேன்முகந்திவர் வெஞ்சமர்க்கமைகுவரொன்று
மீன்முகந்தொளி விரிமணிமுடிப்பலவரச
ரூன்முகந்தகோட் டுவாப்பரிதேர்பலபண்ணி
நான்முகந்தகு ஞாலமுநெளிதரத்திரண்டார்.

உரை.— அங்ஙனம் யூத ராயுதமேந்திப் போர்செய்யும்படி கூடுவ தொன்றறிந்து விளங்கியமுடியைச்சூழ்ந்த பலவரசருங்கூடி மதயானைக ளும்பாய்பரிகளு முயர்ந்ததேர்களுமொருகணத்திற்சேர்த்துப் பூவுலகி னுதிக்குகளும் நெளியும்படி மட்டின்றித் திரண்டாரென்க.

## III. வேறு.

16. துதியானிகராவலியான்சுடுமேறுவில்லான்
றிதியாவுமெரிந்துகெடத்தழறிக்குகண்ணுன்

மதியானெனுமாபெயரரான்வரையாதவெண்ணிற்
பதியாதபடைக்கடல்பண்ணியதிர்ந்தெதிர்த்தான்.

உரை.— அங்ஙனம் பூதரைப்பகைத்துக்கூட்டிய பலவரசருட் புகழ்த ற்கரியவல்லமையுடையனுமிடிகளையெரியும் வில்லைவளைத்தவனுய்ப் பகை த்ததிச்குகளையெரிக்குந் தீக்கண்ணனுய்மதியானென்பவ னெண்ணிக்கை க்குள்ளடங்காத கடலொத்தபடையைக்கூட்டி முழங்கியெதிர்த்தானெ ன்க.

17. மலையீன்றமணிப்புயமாபுலியீன்றமார்பங்
கொலையீன்றகரங்கொடிதீன்றவழற்கொடுங்கண்
சிலையீன்றசரத்திடிகொண்டெரியீன்றசீற்றத்
தலையீன்றபடைத்திரளோடமலேக்கெதிர்த்தான்.

உரை.—மீளவு மலையோடொத்தபுயங்களுஞ் சிங்கத்தோடொத்த கொங்டியமார்புங் கொலைத்தொழிற்குரிய கையுங்கொடியதீயோடொத்த கண்ணுந் தன்வில்லெய்யுமிடிகளோடொத்தவம்புகளு மிவையெல்லாவ ற்றையுமுடையவனு யெரிந்தசெந்தீயைப்பொழியுங் கோபத்துடனே கட லோடொத்தபடையைக்கூட்டி யமலேக்கென்னு மிராசாவுமெதிர்த்தா னென்க.

18. வாளித்திரளோங்கியதூணிவளர்ந்ததோளார்
கூளித்திரளோவடுகூற்றதுதோழர்கொல்லோ
யாளித்திரளோவவிர்கீழ்த்திசையாவுமாளு
மோளித்திரளோருமொருங்குதிரண்டென்றார்.

உரை.— மீளவு மம்புநிறைந்ததூணியோ டோங்கியதோளுடையரா ய்ப் பசாசுகள்கூட்டமோ வியமனது தோழரோ யாளிகளின்றிரளோ வென்னும்படி கீழ்த்திசையிலாண்டயானைகளைத் திரளாயுடையவரசரெ ல்லாருங்கூடிக் கோபித்துவந்தாரென்க.

19. தாமக்கவினிம்முடியாரொடுசாய்ந்தசாலைத்
தூமக்கணெரித்தனதானைகளோதுளித்த
காமக்கடமார்கரியோபரியோகவின்கொள்
சேமக்கடிதேர்த்திரளோவெவர்செப்பவல்லார்.

உரை.— அங்ஙனம் விளங்கிய முடியைச்சூடிய விவ்வரசரோடுகூட ச்சாய்ந்துவந்த புகைந்தகண்ணுலெரிக்குஞ் சினத்தகாலாட்டானைகளு ம தத்தைத்துளித்தயானைகளும் பாய்புரவிகளு மழகியபொற்றேர்களு மிவ் வளவென்றுசொல்லும்படிவல்லவனுண்டோவில்லையென்க.

20. கரியேகுகவேகிலகாற்கடருனேகாலாள்
வரிவேகுகவேகிலவாய்ந்தெழுதேர்தடந்தேர்க்
கிரியேகுகவேகிலகேழ்கிளிவாசிபாயும்
பரியேகுகவேகிலதோல்படர்வெள்ளமட்டோ.

உரை.— அங்ஙனங் கூடியபடைமிகுதியாற் றம்முன்னெருங்கியானைப்படைநடக்கையிற் காலாள்நடக்கமாட்டாமலுங் காலாள்நடக்கையிற் றேர்நடக்கமாட்டாமலுந் தேர்நடக்கையிற் குதிரைகள் நடக்கமாட்டாமலுங் குதிரைகள் நடக்கையில் யானைகள்நடக்கமாட்டாமலுங் கூடியபடைகளின் வெள்ளமட்டில்லாததாயிற்றென்க.

21. நாட்டங்கணிமைப்பினடிப்புநடத்துபாய்மாக்
கூட்டங்கதிகொண்டகுரத்துகள்கோவிசும்பின்
மோட்டங்கவொளிக்குமெனமதமூற்றியானை
யீட்டங்கடமாரிவழங்கமுனேகவிட்டார்.

உரை.— அங்ஙனந் திரண்டபடைபோகையிற்கண்ணிமைத்தமாத்திரத்தி லாடிக்குதித்துப்பாயுங் குதிரைத்திரள், தங்குளம்புகளாற்கிளப்பியதூசிகள்மிகுந்து வானுச்சியைமறைக்குமென்று அத்தூசிகளெழாதபடி மதமுற்றிய யானைத்திரள்மதமழையைப்பெய்து வழிநனையும்படி படைக்குமுன்னேயானைகளைப் போகவிட்டாரென்க.

22. கார்வென்றனபோர்முரசார்ப்பொலிகாளகார்பெய்
நீர்வென்றனதோன்மதநீருகளென்னிலச்சொற்
சீர்வென்றனபாய்பரிமாதிசையாங்கணும்பற்
போர்வென்றனபொற்பொறைவென்றபுயத்துவீரர்.

உரை.—அங்ஙனம் பலபறைகளோடு முரசினொலி மேகத்தின் முழக்கத்தைவெல்லவு மம்மேகம்பெய்துளியை யானைகள் பெய்தமதமழை வெல்லவும் பாயென்றேவிய சொல்முடியுமுன்னேபாய்ந் தச்சொல்லைக் குதிரைகள்வெல்லவும் பலதிசைகள் முகத்திலாய பலபோர்களை வென்றவராய்ப்பொன்மலையினுந் திண்ணியபுயங்களையுடைய வீர ரெதிர்த்தாரென்க.

23. கட்டாவியதீக்கனலிக்கடருனேசெல்ல
விட்டாவிவிழுங்கயில்வேலுடைசேனையோன்றன்
னுட்டாவியதேவருளூக்கமொடோங்கியோர்நான்
கெட்டாயிரஞ்சேவகரைக்கடிதீட்டினுல்.

உரை.—அங்ஙனந் தம்மைப்பகைத்து மட்டின்றித் திரண்டுகண்வழியாற் றீப்பொழியாநின்ற கடலொத்தபடைகள்வருவதைக்கண்டு மாற்றுனுயிர்களை விழுங்குதற்குரிய வேலையேந்திய சேதையோனுண்டவனுட்டந்த மனவூக்கத்தாலோங்கி யூதர்களி லொருமுப்பத்தீராயிரஞ்சேவகரை விரைந்துகூட்டினுனென்க.

## IV. வேறு.

24. கவிமதத்துயர்வலிக் கடவுள்கண்டுளி
குவிமதத்திபமுதற் கொலைப்படைக்கடல்
செவிமதத்துருவுறச் சிதைத்துநான்வெலச்
சவிமதத்தெழுந்தவித் தானைவேண்டுமோ.

உரை.—அங்ஙனஞ் சேதையோன் கூட்டியபடையைக் கவிஞர்கருத்தைக்கடந் துயர்ந்தவல்லமையுடைய நாதன்கண்டுசொன்னுன்: நிறைந்தமதத்தைப்பொழிந்த யானைமுதற்கொண்டு நாலுவகையாய்க் கடலொத்தப் பகைவர்கூட்டியபடையைக் கேட்டோர்செவிமிக்கஞ்சும்படி நான்கெடுத்துவெல்லுதற்கு நீகூட்டியவழகிறுற்பொலிந்த விப்படையெனக்குவேண்டுமோவென்றுனென்க.

25. சுட்டமுழற்சமர்க்குளந் துவளவஞ்சுவார்
விட்டமுழற்சினமுதிர் வீரர்நிற்பவென்
றிட்டமுழற்கதத்தெழுந் தீரையாயிரங்
கட்டமுழற்றிறலினேர் கனிநின்றுரரோ.

உரை.—மீளவுங்கூடினபடைகுறையும்படி சுடும்போர்முகத்திற்றுவண்டுள்ளஞ்சிறுெல்லாரும்போகவிட்டு வெஞ்சினத்துத் தளராதவீரர்மாத்திரம் நிற்கக்கடவாரென்று நாதனேவியதன்மைத் தஞ்சினவரிருபத்தீராயிரம்போய்ப் பதிறுயிரந்திறத்துயர்ந்தோர்நின்றுரென்க.

26. வாகைமிக்கொளியெனக் காகமற்றுநாள்
வேகமிக்குறிப்பகல் வேலையாற்றிடை
தாகமிக்ககனின் றன்மைநீருண்பார்
போகமிக்கள்ளியுண் பொருநர்சேர்க்கென்றுன்.

உரை.—மீளவும் பதிறுயிரமிகுதியென்று வெற்றியைக்கொண்ட கீர்த்தி யெனக்காகும்படி நாளைவேகத்துடனேபடையைநடத்தி யுச்சிப்பகல் நேரத் தாற்றங்கரைசேர்ந் தங்கேதாகமிகுதியா லுய்போலேவிழுந்து நீரையுண்பாரெல்லாரும் போகவிட்டுக் கையானீரையள்ளியுண்ணும் வீரரைமாத்திரஞ் சேர்ப்பாயாகவென்று னுதனென்க.

27. நீர்முகந்துண்டமுந் நூறுநின்றபின்
பார்முகந்தொழும்பிரான் பார்த்துநம்பகைப்
போர்முகந்தகுஞ்சய மினிப்பொலிந்தவென்
சீர்முகந்தகுந்திறல் சிறப்பிற்ருமென்ருன்.

உரை.— ஆண்டவன்கட்டளையிட்டபடி சேதையோன் செய்து கை யானீரையள்ளியுண்டவர் மூந்நூறுசேவகர்மாத்திரம்நின்ருர், நின்றபின்பு பொதுவற்றுப்பூவுலகில்வணங்கப்பட்டநாதன் பார்த்து இனி யிம்மூந்நூ றுசேவகரைக்கொண்டு மட்டின்றிக் கூடியபகைவர் படைகளை வென்று நான்றரும்வெற்றி யுன்வல்லமையாலானதென்று தோன்ரும லென்னள வில்லாதவல்லமையே தோற்றுவிக்குமென்ருனென்க.

28. வவ்வொருவேலில மங்குனுப்பணிற்
கவ்வொருகாளமட் கலம்விளக்கிவை
யொவ்வொருவற்கிடு கெனவுரைத்தனன்
செவ்வொருதிருவிளை யாட்டுத்தேவனே.

உரை.—மீளவு மிம்மூந்நூறுபேரு மாயிதம்பிடித்துப் பொரவும்வே ண்டாம் நடுவிராத்திரியி லொவ்வொருவனுக் கொருகாளமு மொருமட்க லமு மொருதீபமுமு கையிலே கொடுப்பாயாகவென்ரு ஞேரோரிடத்து விளையாடினுற்போலத் தன்திருநீதியைக்காட்டும்நாதனென்க.

29. செம்முகம்புதைத்தொளி சிகன்றபின்செயம்
நும்முகந்தருமென நூறுநூறுமாய்
மும்முகம்பிரித்துமூன் றிட்டுமொய்ப்பகை
யம்முகம்வாய்விடா தணுகினுரரோ.

உரை.— ஆண்டவனேவியபடி சூரியன்றன்சிவந்தமுகத்தைக்கடலி ற்புதைத் தொளிமாறியிருண்டபின்பு சேதையோன் தன் சேவகரைப்பா ர்த்து வெற்றியுமதாயிற்றென்று தேற்றி யவரை நூறு . நூருக மூவகு ப்பாய்ப்பிரித தொவ்வொருவனுக்குக் காளமு மட்கலமுந் தீபமுமென்னு மூன்றினையுங் கையிற்றந்து பகைவரிருந்தவிடத்து வாய்விடாமற்கிட்டிப் போனுரொன்க.

## V. வேறு.

30. எதிரொழுந்தபகையவருறைந்தவிடை யிவரொழுந்தரவமில வுறிக்
கதிரொழுந்தசுடரொளிமறைந்துமிசை கவிழுகின்றபலகலமொடு

பொதிரொழுந்தவிருடலைபரந்துவிரி புவிமறைந்தநிசிநடுவெளி [வார்.
முதிரொழுந்தவிறையவனறைந்தவிதி முறைபணிந்தசமர்முயல்கு

உரை.— அங்ஙன மெதிர்நின்றபகைவரிடத்துச் சத்தப்படாமற்சென்று கையிற்பிடித்தெரியுந் தீபங்கள் விட்ட வொளிகாணுதபடி யவற்றைமட்கலத்தால்மூடிமறைத்து நிறைந்தவிருள்படர்ந்து பூவுலகெல்லாமூடாநின்ற விருண்டவிராவினடுவிலே யளவிறந்தவல்லமையுள்ளநாதனேவினமுறையோடரியபோர்துடங்கினரென்க.

32. வீறுவீரனியைதாழிநூறியிடு வேலைவேகமுடனூறொருடு
நூறுநூறுகலநூறிநூறுமொடு நூறுநூறுசுடர்தோன்றநூ
றேறுநூறுமொடுநூறுதாரையொலி யீறிலாதுமெழுவானின்மேற்
சீறுமேறுபலகோடிகோடியதிர் சீரினுலுதிசைகூசவே.

உரை.— அப்பொழுதி லாண்டவனேவலால் வீரசேதையோன் தான்வைத்திருந்ததீபத்தைமூடினமட்கலத்தைக் கிட்டநின்றவன் கலத்தோடுமோதியுடைத்தான், அவனதையுடைத்தவளவிலே முந்நூறுபேரு முந்நூறுகலங்களையுடைக்க முந்நூறுதீபங்கள்கதிரைவிட்டுத்தோன்ற முந்நூறுகாளங்களை யூதாநிற்க வுலகினாற்றிசையுங்கூசும்படி கோடாகோடியிடிகள் வானத்தினின்று முழங்கிவிழுந்தாற்போலத் தோன்றிற்றென்க.

33. கனவுடைந்தமருளிரவடர்ந்தவிருள் கலமுடைந்தவொளி சுடரிடும் [ளிவெம்
வினவுடைந்தவொளிமலிமலிந்தவொலி வெருவியன்றவிவைமரு
மனமுடைந்தபதைபகையுடன்றபடை வயமுழங்கிவளர்முகிலிடி
யினமுடைந்தபடிகரியினங்களுயர் பரியினங்களுயரேறினர்.

உரை.— அங்ஙனம் பகைவர்திடுக்கெனவிழித்து நித்திரைக்கலக்கமு மிராவிருள்மயக்கமு மட்கலங்களுடைந்த வரவமுங் கண்கூசியறிவுமயங்கும்படி முந்நூறு தீபங்களிட்டவொளிமிகுதியு முந்நூறுகாளங்களுதினமுழக்கமு மிவையெல்லா மொருங்குடன்கூடியமையாற் பகைவர்படையெல்லா மனமுள்ளுடைந்து பதைத்துச்சீறி வலிதாய் முழங்கியவிடிகளினுமுழங்கியானைகளின்மேலுங் குதிரைகளின்மேலுமேறிக்கொண்டாரென்க.

34. மருள்முதிர்ந்தவெருவொடுவளைந்தவினை வடுவளர்ந்தபொழுததுவெனத் [மை
தெருள்முதிர்ந்தமறையவர்கலந்ததெனசெருமுதிர்ந்தபகையவர்த
யிருள்முதிர்ந்தவிரவெரிமுதிர்ந்தசின மொடுதுமிந்துகொலையிட விட [வார்.
வருள்முதிர்ந்தவிறையவனனந்தவய வடல்விளங்கவரிதமர்செய்

உரை.—சொன்னபலகாரணங்களாற் பகைவர்க்குவந்தமயக்கமு மச்சமுமிகுதியாகி யவர்செய்ததீவினைவளர்ந்து முற்றி விளையுங்காலமதுவென்று தம்முணர்வுமயங்கிக்கிக்கெட்டு மனையோராகியபூதர்வந்து தம்பாளை யத்துண்ணுழைந்து கலந்துநிற்பாரொன்றுநினைத்து மிக்கிருண்ட விரவின டுவிலெரிந்தகோபத்தோடு பகைவர்தாம்தம்மைவெட்டிக் கொன்றழித்த ருளின்மிக்க நாதனுடைய வனந்தநீதிவல்லமைவிளங்கும்படி யரியபோ ரைத் துடங்கினாரென்க.

35. இடியெழுந்தவொலிமுகிலெதிர்ந்ததென விழிமுதிர்ந்தமத கரிபொர [யக்
முடியெழுந்தவரையுயர்பறந்துபொரு முனையிணைந்திரதமுனைசெ
கடியெழுந்ததிரையெறிசினந்தகட லெனவெதிர்ந்தகதியிவுளிகள்
துடியெழுந்தபறையொலிமுழங்கவமர் தொடருடன்றகொலையள
வதோ.

உரை.—அங்ஙன மிடியிடித்தபலமேகங்க ளெதிர்ந்தாற்போல மதத்தைப்பொழிந்த கரியயானைக டம்முட்பொரவுமுயர்ந்தவுச்சிமலைகள் பறந்து தம்முட்பொருதாற்போலவுயர்ந்ததேர்கடம்முட்பொரவுங் கடல் சினந்தெரிந்ததிரைக டம்முட்பொருத்தார்போலக் குதிரைகள்பாய்ந்து தம்முட்பொரவும் பலபடைவாத்தியங்கள்முழங்கும் போர்களத்திலாய கொலை மட்டல்லவென்க.

36. பறைமுழங்கமதகரிமுழங்கவய பரிமுழங்கவிடுபகழிக
ளுறைமுழங்கவவரவர்முழங்கவிக லுழவொன்றுதமரொழிதர
நிறைநுகர்ந்தமதுவெறிமுதிர்ந்தநெறி யிலருடன்றவமர்நிகொனப்
பிறைநுகர்ந்தவிருளொடுமயங்கியவர் பெரிதுமிழ்ந்தவுயிரளவதோ

உரை.—அங்ஙனம் பலபறைகள்முழங்கவு மதயானைகள் முழங்கவும் புரவிகள்முழங்கவு மெய்தவம்பின்மாரிமுழங்கவு மவரவர்சீறிமுழங்கவுந் தம்மைப்பகைத்த வீரராகியபூதரொன்று தமர்தாமொழிந்துகெடும்படி நிறையக்கள்ளையுண்டநீசர் வெறிமயக்கத்தோடு தம்முட்செய்தபோர் போலப்பிறையொளியின்றி மிக்கவிருளோடவருமயங்கிப் பொருததன் மையிற் சிந்தினவுயிர்கள் மட்டல்லவென்க. (அந்நாளிலேவளர்பிறையா கையிற் போர்துடங்கின நடுசாமத்துக்குமுன்னேயப்பிறை யத்தமித்தத னூற் பிறைநுகர்ந்த விருளென்றாரென்க.)

37. வண்டுபட்டனவிபங்கள்பட்டன வயங்கள்பட்டனவளர்ந்த
தேர்
துண்டுபட்டனகரங்கள்பட்டன துமிந்துபட்டனபதங்கடிண்
டண்டுபட்டனசிரங்கள்பட்டன சடங்கள்பட்டனதடிந்தவாள்
கொண்டுபட்டனகுணுங்கர்பட்டன குணுங்குபட்டிலநயங்களே.

உரை.— அங்ஙனம் பட்டவம்புகளால் யானைகளுங்குதிரைகளும் பட்டன, தண்டாயுதங்களாலுயர்ந்ததேர்களுந் துண்டாகமுறிந்தன, காலுங்கையுமழிந்தன, கூர்ந்தவாள்களாற் றலைகளுமுடல்களும்வெட்டுண்டு நீசனைப்போலப் பகைவர்பட்டுப் படாததுன்பமும் பேய்கள் பட்டனவென்க.

38. உழையினங்கடமையடவெதிர்ந்தவய வுகிருடன்றவரியெனவுமுட் [மென்
கழையுலந்தவனமிடைநுழைந்துநுகர் கனலுடன்றகதமெனவு
மழைமிகர்ந்தகணைகனமலிந்தவசி வசிமுனிந்தவயினுழையிடும்
புழையகன்றவழிவழிசிவந்தபுனல் புறமறைந்தமருளிரணமே.

உரை.— அங்ஙன மான்கூட்டத்துட்பாய்ந் தவற்றைக்கொல்லும்படி வலியவுகிர்களைக்கொண்டு கொடியவேங்கைகள் பொருதாற்போலவுமுலர்ந்தமூங்கிற்கான த்து நுழைந்த செந்தீ மிக்ககோபத்தோடெல்லாவற்றையு மேய்ந்தாற்போலவுங் கொடியபோராகிப்பெய்தமழைத்துளியொப்பவிழுமம்புகளும் வானதிரும்படிவீசியவாள்களுஞ் சினந்தகூர்மையின் மிக்கவேல்களு மிவையெல்லாம்நுழைந்து செய்யும்பெரும்புண்வழியாக வழிந்த விரத்தத்தின் புனலால் மயக்கப்போர்க்களமெல்லாமூடி மறைந்ததென்க.

## VI. வேறு.

39. முருடொடுமுரசமாதி முனிந்தபற்பறைகளார்ப்ப
விருடொடுநிசியிலாதி யிறைவனைப்பகைத்தபாலான்
மருடொடுதலைவராதி மற்றவர்தமிற்றுந்தம்மை
யுருடொடுமிரதமாதி யுளபடைசிதைத்துமாய்த்தார்.

உரை.— அங்ஙன முருடு முரசமுமுதற்கொண்டு பலபறைகள் கோபத்துடனேமுழங்கியார்ப்ப விருண்டவிராவிலே யாதிக்கடவுளைபகைத்தவராகையின் மயக்கங்கொண்டு படைத்தலைவர்முதற்கொண்டு மற்றவருந் தம்முட்பொரு துருள்பெருந்தேர்கள்முதலுள நால்வகைப்படைகளுமழிந்துகெடும்படி தாமேதம்மைவெட்டிக்கொன்றொன்க.

40. கூன்பிறையெயிற்றுமாபோற் கொற்றவரிருவர்தம்மைத்
தேன்பிறழலங்கன்மார்பிற் சேனைதயோனென்னவெண்ணி
வான்பிறையுறழ்வில்வாங்கி மறங்கொடுமயங்கித்தம்மே
லூன்பிறழ்பகழிமாரி யுதிர்த்தரிதமரினேர்ந்தார்.

உரை.—அங்ஙன மெல்லாருமயங்கிப் பொருதுவருகையின் மதியானும் மலேக்குமென்னு மிரண்டரசரொதிர்பட்டு மயக்கமிகுதியாற் றேன்

மாலையணிந்த மார்புடையசேனையோனெதிர்பட்டானென் றிவனுமவனு மெண்ணிப் பிறையோடொத்தவில்வாங்கிச் சேனையோனென்று தம்மே ற்பகழிமாரியைவிட்டெரியபோரி லொருவற்கொருவன் றாழ்வின்றி நேரா கப் பொருதானென்க.

41. கடுவுண்டவெண்ணிற்பல்லங் கதமுண்டவமலேக்கெய்தான்
கடுவுண்டவெண்ணிற்பல்லங் கான்றவைமதியான்காத்தான்
வடுவுண்டபிறையின்வாளி மறமுண்டமதியான்கோர்த்தான்
வடுவுண்டபிறையின்வாளி வகுத்தவையமலேக்கீர்த்தான்.

உரை.—அங்ஙனம் அமலேக்கென்பவ னஞ்சுதோய்ந்தவெண்ணப்ப டாதவம்புகளைச்சினந்துவிட்டான், அத்தொகையிலொத்தவம்புகளைவிட் டு மதியா னவற்றைவிலக்கினன், மீளவு மிவன்றேய்ந்தபிறைபோல வளை த்தவம்புகளை வில்லிற்கோர்த்தெய்தான், எய்தவம்புகளை யமலேக்கெதிரா ய்விட்ட வவ்வகையம்புகளாலறுத்தானென்க.

42. பொறிப்படப்பகழிமாரி போக்கினனமலேக்கற்றைப்
பொறிப்படப்பகழிமாரி புகுத்தியமதியான்றீர்த்தான்
கறிப்படப்பகுவாய்ப்புங்கங் கதத்துடனிவனுமேவக்
கறிப்படப்பகுவாய்ப்புங்கங் கடைத்தவையவனுங்காத்தான்.

உரை.—மீளவும் அமலேக்கென்பான் தீயெழும்படிவிசையோடெ ய்த பகழிமாரியை மதியா னொத்தமாரியால் விலக்கியுயிரையுண்ணும்படி யகன்றவாயுள்ளவம்புகளைச் சினந்துவிடவே யொத்தவாயுள்ளவம்புகளை யெதிராகவவனுமேவி யவற்றைக் காத்துவிலக்கினனென்க.

43. நச்சரவொக்கும்வாளி நடுங்குறமதியான்றூவ
நச்சரவொக்கும்வாளி நவிழ்த்தவைவிலக்கிமீட்டு
முச்சிரமொய்க்கும்வாளி முடுக்கினனமலேக்கற்றை
முச்சிரமொய்க்கும்வாளி முனிந்துவிட்டறுத்தான்முன்பான்.

உரை.—மீளவு மதியான் குழைவருநடுங்கும்படி நஞ்சுமிழும்பாம் போடொத்த வம்புகளைவிடவே யவற்றையொத்தவம்புகளைக்கொண்டுவி லக்கி மீளவு மமலேக்கெய்த முத்தலையம்புகளை யவ்வகையம்புகளா லறு த்துவிலக்கினன் முன்னின்றமதியானென்க.

44. ஓரிருமுகிலினொப்ப ஒலித்திருதடந்தேரோடிப்
பேரிருவசனியொத்தார் பெருஞ்சினத்துடற்றியார்ப்ப
நேரிருவயவிற்கோலி நேரலாற்றமிழுழ்வின்றி
யீரிருதிசைகள்கூச வியன்றபோருழைக்கும்பாலோ,

உரை.—அங்ஙன மிடித்தவிருமேகங்கள் பொருதாற்போல முழக்க மெழும்படி யவரேறின விருபெருந்தேர்கள் இரிந்தோடி யவ்விரண்டரசரு மிரண்டிடிகளைப்போல மிக்கசினத்துடனே பொருதுமுழங்காநிற்க வவர் நேரா யிருவலியவில்லுகளைவளைத்துத் தம்மிலொருவற்கொருவன்று ழ்வின்றி நாற்றிசையுங்கூசும்படி செய்தபோர் சொல்லத்தகுந்தன்மையல்லவென்க.

45. பைம்மணித்தேரின்சித்தி பகழியாலமலேக்கீர்த்தான்
மைம்மணித்தேரின்சித்தி வாளியான்மதியானற்றுன்
சேய்ம்மணித்தேரின்சாரன் சிரங்கவிழ்த்திவனுங்கொய்தா
னைம்மணித்தேரின்சார னகலமற்றவனுமாய்த்தான்.

உரை.—அங்ஙனம் பொருதுவருகையி லமலேக்கென்பானெதிர்தேரின்மேலிட்ட விடக்கியத்தைவறுத்தான், மதியானுடனே யவன்றேரிடக்கியத்தையறுத்து மீளவு மவன்றேர்ப்பாகனைத்தலைவெட்டினன், அமலேக்கென்பவனு மவன்றேர்ப்பாகன்மார்பினைப்பிளந்து கொன்றுனென்க.

46. சாரர்சார்பிழந்தவாசி தழற்படத்தவறித்தாவித்
தேரர்தேருளத்திற்சீறிச் சீயமுமுருமுந்தீயு
நேரர்நேரலரிலாது நெடுமருளறுதும்வீர
போரர்போரியற்றுமாறு புகன்றிடலரியவாறே.

உரை.—அங்ஙன மிருவர்தேர்ப்பாகர் மடிந்துநடத்துவாரின்றித் தேரிற்பூட்டியகுதிரைக ளழலெழும்படி தவறிக்குதித்துப்பாயாநிற்கத் தேரின்மேலிருவர்சீறிச் சிங்கமுமிடியுந்தீயுமொப்பவெகுண்டு பகைவரொதிர்ப்பின்றித் தம்முள்ளே முன்வந்தமயக்கந்தீராமற் சேதையோனேடு பொருதுவதென்றெண்ணிச் செய்தவீரபோரின்றன்மை யொருவனுற் சொல்லத்தகாதென்க.

47. எரிக்கொன்றுஞ்சினக்கண்சேப்ப விளைத்தவில்குனியவாங்
கரிக்கொன்றுங்கதத்தவீரர் கடுத்திளம்பிறையின்வாளி [கிக்
பரிக்கொன்றுமொன்றவேவிப் பகப்படுபரிகள்வீழ்க
வரிக்கொன்றுஞ்சீற்றத்தொண்டே ரசலமேலிருவர்காய்ந்தார்.

உரை.—நெருப்புபோலச் சினந்தகண்சிவக்க முழங்கும்வில்லை யிருவர்மிகவளைத் திருமதயானைகள்போலச்சீறிச் சந்திரபாணங்களொவ்வொருகுதிரைக்கொன்றெய்து விருவர்தேரிற்பூட்டியபுரவிகள் வெட்டுண்டுமடிந்துவீழ்தலால் மலைமேற்சீறிய விருசிங்கங்களைப்போல வுயர்ந்ததேராகியம்மலைமேலிருவர் மிகவுங்காய்ந்துமுழங்காநின்றுரென்க.

48. நிலையுண்டதேரிற்செந்தீ நிலையுண்டமதியான்சீறிச்
சிலையுண்டபகழிபோக்கித் திறத்துண்டகவசமீர்த்தான்

மலையுண்டகவசமீர்த்தான்மறமுண்டவிழித்தீயோடு
கொலையுண்டகணையொன்றேவுங் கூற்றுண்டவமலேக்கென்பான்.

உரை.—அங்ஙனம் பூட்டியகுதிரையெல்லாஞ்செத்து நிலத்ததேரி ன்மேற் செந்தீயினுங் கொடியதாய்ச்சீறிக் கோபித்தமதியா னொரம்பினை ப்போக்கியமலேக்குடுத்தவலியகவசத்தையீர்த்தான், இவனுங் கூற்றினுங் கொடிதாய்ச்சினந்த கண்விட்டதீயோடு கொடியதோரம்பினைவிட்டு அவ ன்மலையோடொத்த மார்பிலணிந்த கவசத்தையறுத்தானென்க.

49. வேணிகர்வடிவைவாளி வில்லிடையவன்கோர்த்தெய்ய
வாணிகர்விலங்கறன்னை வானுருமறுத்தாற்போலத்
தோணிகரமலேக்காகந் துளைத்தகோலுருவியப்பாற்
கானிகர்மூடர்க்கோதுங் கலையெனப்போயிற்றன்றே.

உரை.—அப்பொழுது மதியான் வேலோடொத்த கூர்ந்தவோரம் பினை வில்லிலேற்றியெய்தான். எய்தவம்பும் வானத்திற்பாய்ந்தமலையை விழுந்தவிடிபிளந்தாற்போல மதயானையொத்த அமலேக்கென்பவன்மார் பினைத் துளைத்துருவி நீசருக்குச்சொன்னகல்விபோல வங்கேதங்காமற் காற்றினைத்தவிசையோ டப்பாற்போயிற்றென்க.

50. தனம்பழுத்தமலேக்கேங்கித் தன்னுயிருயிர்க்கும்வேலை
சினம்பழுத்துயிரைத்தாங்கித் திங்களின்பாதிகோர்த்துக்
கனம்பழுத்திழியேறுத்த கணையொடுமுயிரும்போக்கி
மனம்பழுத்தெதிர்ந்தோன்சென்னி வலித்தறுத்திருவர்மாய்ந்தார்.

உரை.— அங்ஙனம் பட்டுருவினவம்பினால் வருந்தாநின்றவமலேக் கென்பவன் தன்னுயிர்தன்னைப்பிரிந்துபோகையி லதைக்கோபத்தின்வ ல்லமையாற் சற்றுநேரத்துப் போகவொட்டாமற்றாங்கி யோர்சந்திரபா ணத்தை வில்வாயிலேற்றிப் பழுத்தமேகத்தினின்றிழியுமிடிபோல வப் பாணத்தையுந் தன்னுயிரையும்போக்கி மனவூக்கத்தோங்கி யெதிர்நின்ற மதியான்றலையையறுத் தொருங்குடனிருவருமாய்ந்தானென்க.

51. மாயிரவிடையிற்றம்மின் மயக்கொடுவீரரோர்நூ
றாயிரரோடுநால யாயிரரான்றியங்கண்
டீயிரவாசிற்சூழ்ந்த சுடிகையோர்மடிந்துமூவை
யாயிரரின்னுநிற்ப வவிர்சிகன்முளைத்ததன்றே.

உரை.—அங்ஙன மிருண்டவிராநடுவில் மயக்கமிகுதியாற் றம்மி லொரு நூற்றிருபதினாயிரவீரரான்றிச் சந்திரன்போலவிளங்கிய முடியை ச்சூழ்ந்தவரசரு மடிந்தபின் பின்னம் பதினையாயிரம்பேருமடியாமனிற் கக் கீழ்த்திசையில் வெள்ளிமுளைத்ததென்க.

## VII. வேறு.

52. மண்மாமகள்போர்த்தவிருளின்போர்வை வாங்கிடத்தன்
றெண்மாவெளிக்கரத்தைநீட்டிவெய்யோ னுதித்தனகாற்
கண்மாயிருள்கொண்டமயக்கந்தீர்ந்த கடும்பகைவர்
விண்மாவிறையோன்றன்வலிமைகண்டு வெருவுற்றார்.

உரை.— அங்ஙனம் விடியற்காலமாகிப் பூவுலகமேற்போர்த்த விருளென்னும் புடவையைவாங்கும்படி சூரியன்றன்கதிராகியகைகளை நீட்டியுதித்துவருகையிற் பகைவருள்மடியாமனின்ற பதினையாயிரம்பெருங் கண்மாயைபோல முன்கொண்டமயக்கத்தைவிட்டு பூதருள்ளொருவனுமெதிர்த்துப்போர்செய்யாமற் றந்தம்மைவெட்டினதென்றுகண்டுவான்கடவுள்காட்டிய வல்லமையிதென்றறிந்து மிகவும் வெருவியஞ்சாநின்றாரென்க.

53. தீவைவேலாடாவெருவியேங்கித் திறங்குழைந்தம்
மூவையாயிரருமோடபூதர் முடுகியவர்
மீவைவாளிதொடுத்தொருங்குமாய்த்தார் வியந்தெவரு
நாவையையிரட்டியடையாவண்ண நடுக்குறவே.

உரை.—அங்ஙன நின்ற பதினையாயிரம்பேரு மச்சமிகுதியாற்போர்செய்யவேந்தியவாயுதங்க ளசையாமற்பிடித்துவெருவியேங்கித் திறங்குழைந்தோடத்துடங்கினார், அப்பொழுதுபூத ரவரைத்துடர்ந்து மேல்விட்டவம்புமாரியா லொருங்குடனவரைக்கொன்றார், இச்செய்தியைக்கேட்டோரெல்லாரு மதிசயித்துநடுங்கியடைந்தவச்சஞ்சொல்லும்படி ஐம்பதுநாக்குளதாயினும் போதாதென்க.

54. ஏமப்போர்க்களமிதென்னவிவ்வூர் களரியென்றார்
தாமத்தீபமொடுகாளந்தந்த சயமதுவோர்
வாமப்பாவையவையேந்தியெந்தை வளமறவா
நாமத்திறல்காட்டவைத்தாரொன்று னவிவாறேன்.

உரை.— அங்ஙன மயக்கமிகுதியாற் போர்செய்தகளமிதுவாகையிலிவ்வூருக்குப் போர்க்களமென்னுங் களரிமாபுரமென்று பேரிட்டார், மீளவுந் தீபமுங்காளமுங்கொண்டு பகைவரைமயக்குவித்து நாதன் பூதருக்கு வெற்றியைதந்ததனால் வெற்றிதானே விசையையென்றொருபெண்ணுக வத்தூணிலேற்றித் தீபமுங்காளமுங் கையிற்றந்து முன்னாண்டவன்காட்டியவளமை பிற்காலத்துமறவாதபடி யவன்றிருநாமவல்லமையைக்காட்டற்பொருட்டு வைத்தாரொன்று னழகியவானிலுள்ள கபிரியேலென்க.

55. மாலைத்தூணுச்சிவிரித்தநீல மணிப்படத்து
வேலைத்தாளமெனவிளங்குமீன்பூம் பந்தர்க்கீழ்
பாலைக்கதிர்மதியந்தீபமேந்தப் பணித்தூண்மேற்
சாலைக்கடவுடிறற்கண்டசூசை தகவுற்றான்.

உரை.—அங்ஙன நடந்தகாதையை வானவன்சொல்ல நிலாவெளிச் சத்தில் சூசைகண்டதூணின்குறிப்பறிந்தமையா லிராவொருதூணைக் கொண் டதினுச்சியில்விரித்த நீலமணியாற்செய்த மேற்கட்டியோடுக டலிலுள்ள வெண்முத்துக்களோடொத்த விளங்கியமீன்களாலிட்ட வழ கியபந்தற்கீழேபாலோடொத்தகதிர்களை யழகியதாகவீசியசந்திரன் மணி விளக்கேந்தாநிற்க வந்நகர்வாசல்முன்னே மணியாலலங்கரித்ததூண்மே லாண்டவன் முன்மிகக்காட்டிய வல்லமையினடையாளங்களைக்கண்டு மகி ழ்ந்தோங்கினனென்க.

56. மாற்றருடற்படத்திலவர்தங்கையால் வடியுதிரத்
தேற்றாறிந்தேற்றவரிதுன்னுண்மை யெழுதியபின்
றேற்றுனெவருந்தித்துன்பத்தின் றுன் றிருவுடலத்
தாற்றுவன்பினிலேவரைந்தாயோவென் றடிபணிந்தான்.

உரை.— அங்ஙன மனத்தோங்கியசூசை தேவதிருக்குழந்தையை நோக்கிச்சொல்வான்: நீயேமுன்னுளிலுன்னைப்பகைத்தவருடலைப் பட மாகக்கொண்டு அவர்தங்கையாற் சிந்தினதமதுதிரத்தை மையாகக்கொ ண்டுன்னைவணங்காதவரு மறிந்துவணங்கும்படி யுன்னரியவல்லமையை யெழுதிவைத்தபின்ன ரிந்நாளிலேதேறமாட்டாதவருள் ளொருவனைப் போல நீயேவருந்தி வருந்தியதுன்பத்தின்கையா லுன்றிருமேனியென் னும் படத்தின்மேலாற்றுத வுன்றயையின்தன்மையை யெழுதவந்தருளி னுயோவென்றிரங்கித் திருப்பாதத்தை வணங்கினனென்க.

57. தணியாவலித்திறத்தையுலகங்கண்டு தாடுதிப்ப
மணியாறிவழ்சுடர்செய்தூண்மனனுர வைத்துயர்த்தார்
கணியாநயன்செய்யுன்னுர்வங்காட்டுங் கம்பமெனை
வணியார்திருமேனியணிந்தாயோவென் றடிபணிந்தான்.

உரை.— தாழ்வில்லாத வுன்வல்லமையின்றன்மையை யுலகெல்லா மறிந் துன்பாதத்தையெவரும்வணங்கும்படி யன்றவர் மணியாற்கதினை விடுமித்தூணை யேற்றிவைத்தாரே இப்பொழுதோவென்னில் நினையாத நன்மை யெமக்குவருதற்குக் காரணமானவுனதுகருணையைக்காட்டும்ப டி பூவுலகிலேற்றிய பொற்றூணுகவழகிய வித்திருமேனியை யவதரித் தெடுத்தாயோவென்று மீளவுஞ் சூசைதிருப்பாதத்தை வணங்கினனெ ன்க.

58. வினையங்கடனீந்திவழியென்றறியார் மிளிர்பைம்பொன்
மனையங்கதியடையநாட்டிவைத்த மணித்தூணே
நனையந்திருவடிநான்பிரியாவாழ்க நறும்பைம்பூ
வனையங்கதிர்மேனியணிந்தாயோவென் றடிபணிந்தான்.

உரை.—வினையாகிய பெருங்கடலைநீந்திக் கதியைச்சேரும்வழியைய றியாதமனிதர் வழிதப்பாமற் பொன்னுலகின்வீடாகிய பரமகதியை ய டையும்படி யடையாளமாகவிவ்வுலகினுட்டிவைத்த மணித்தூணீயே, பூ

வரும்போடொத்த வுன்றிருப்பாதத்தைவிட்டுப் பிரியாமனுன்வாழும்படி வாசமலரொத்ததாய்விளங்கிய திருமேனியையெடுத்தவதரித்துமனித்னு னுயோவென்று வாழ்த்திப் பாதத்தைவணங்கினுனென்க.

59. தானோர்களிப்பெருக்கிற்பலவுஞ்சூசை சாற்றியபின்
வானோரவைகேட்டகளிப்பிற்பொங்கி மணிப்பண்யாழ்
தேனேரிசைதளிர்ப்பத்தாமும்பாடிச் செயிர்நீக்க
வீனேருடற்கொண்டோனெடிதுவாழ்த்தி யிசைசெய்தார்.

உரை.—அங்ஙனஞ் சூசை தானேரின்பப் பெருக்கத்தினுலோங்கி யிவற்றையும் பலவற்றையுஞ் சொன்பின்ன ரவற்றைக்கேட்டுச் சூழநின்ற வீரையாயிரவானவர் மிகமகிழ்ந்ததன்மையாற்பொங்கி மணிவீணைகளினிய விசைகளைத்தளிர்த்தொலிக்கத் தாமும்பாடி மனிதர்பாவவினைகளைத் தீர்க்க மனுவுடலையெடுத் தவதரித்தநாதனை நெடிதுவாழ்த்திச் சூசை சொன்னதற் கிசைகளைப்பாடாநின்றூரென்க.

60. சிறந்ததிருப்புகழார்கீதங்கேட்ட செழுந்தவத்தோன்
றிறந்தமணிக்கதவம்புக்கம்வீட்டிற் சென்றவன்போன்
மறந்தமெய்யுருகமங்குலெல்லாம் வழிவருத்தந்
துறந்ததுயிலாகத்தொடுத்ததேவ துதிவிள்ளான்.

உரை.—அங்ஙனம் வானவரினிதாய்ச் சிறந்ததிருப்புகழாகப்பாடிய சங்கீதத்தைக்கேட்ட நற்றவத்தோனுகியசூசை தனக்குமோட்சவாசலின் மணிக்கதவுதிறந்தா யதினுட்புகுந் தழகியபரமகதிவீட்டிற் சென்றவனை ப்போல வடைந்தவின்பமிகுதியால் மறந்துமெய்யுருகாநிற்க வழிநடந்தவ ருத்தத்தையாற்றுதற்கு நற்றுயிலிடமாகத்தொடுத்த தேவதுதிகளையிரா வெல்லாம்விடாதிருந்தாரென்க.

சேதையோன் வெற்றிப்படலம் முற்றும்.

ஆகப்படலம்–16–க்கு–விருத்தம்

1652.





# பதினேழாவது

# காசைசேர்படலம்.



## I. வேறு.

1. பள்ளியந்தாமரைப் பறவையார்ப்பெழத்
தெள்ளியம்வைகறை தெளிப்பவாரணம்
வெள்ளியன்றுதித்திருட் படத்தைமேதினி
தள்ளியம்முகந்தரத் தடங்கொண்டேகினர்.

உரை.— அங்ஙன மரியுஞ்சூசையுந் தேவதிருக்குமாரனைவைத்துக் கொண் டிராவெல்லாங் களரிமாபுரத்தண்டைக் கொருமண்டபத்திலிரு ந்தபின்ன ரழகிதாய பள்ளியிடமாகிய தாமரைப்பூமலாமேற் றுஞ்சியப றவை வாய்விட்டார்ப்பவுந் தெளிந்தவிடியல் யாமமாயிற்றென்று கோழி ச்சாவல்கள் கூப்பிட்டுச்சொல்லவும் வெள்ளிமீனுதித்து விளக்கவும்பூவுல கமேற்போர்த்த விருளின்போர்வையைத்தள்ளிநீக்கி யழகியமுகததைக் காட்டவு மப்பொழுதவர் புறப்பட்டுப்போகத்துடங்கினரென்க.

2. புதையொளிப்பவளக்காற் பொலியநீட்டிய
ததையொளிமரகதப் படத்துத்தைத்திருள்
வதையொளிப்பலமணி மானவாயெலாந்
துதையொளிப்பலமலர்ச் சோலைவண்ணமே.

உரை.— அவர்போகிறவழிகடோறும் விளங்கிய பவளத்தூண்கள் மேல் விரித்தகதிர்செய் மரகதமணிப்படத்திற் றைக்கப்பட்ட விருளைக் கொல்லுமொளியைவீசிய பலமணிகளைப்போலத்தோன்றின வெங்குங்கி டந்த வொளிர்ந்த பலமலர்பூத்த பலசோலைகளென்க.

3. திறைசுமந்தடிதொழுந் தெவ்வர்போன்மது
நறைசுமந்திணர்க்குடஞ் சுமந்தநாண்மலர்
நிறைசுமந்திரும்பொழி னெரிந்தபுள்ளினம்
பறைசுமந்தடித்தெனப் பாடுமோதையே.

உரை. – மீளவும் பகைவர்வந்து திறைகட்டுதற்குக் கொண்டுவந்தவற்றைக் கையிற்சுமந்து மன்னவன்பாதத்தை வணங்காநின்றதுபோல மதுவாய்விட்ட வாசனைநிறைந்தபூவிதழாகியகுடங்களையொத்த மலரைச்சுமந்துநிற்கு முயர்ந்தசோலைகடோறு மிராவிலொடுங்காநின்ற பறவையினங்க ளவர்போகிறநேரத்துச் சுமந்த பறையையடித்தாற்போலப் பாடியவோசை மிகவு முழங்கிற்றென்க.

4. தேமொழிக்கிள்ளையுஞ் செழும்பொற்பூவையும்
பாமொழிக்கையிலும் பண்செய்தேனொடு
பூமொழித்தும்பியு மருளிப்பொங்கொலி
நாமொழிக்கீதம்போ னரலப்போயினர்.

உரை.—அங்ஙன முழங்கியபலபறவகளுள்ளு மினியசொற்கிளிகளு மழகியபூவைகளும் பாங்காய்ப்பாடியகுயில்களும் வீணையிசையின்முரலும் பெண்வண்டோடு பூங்குரலிற்பாடு மாண்வண்டுகளு மிவையெல்லாமொருங்குடன்கூடித் தளிர்த்தவினியவோசைகள் பாடுவர்வாய்ச்சங்கீதமொப்ப முழங்கிவருகை லவர்போனரென்க.

5. அள்ளிலைக்கமலமே லணிச்சங்கீன்றமுத்
தொள்ளிலைக்குவளைகண் விழித்துகுத்ததே
னள்ளிலைப்புறத்திழீ நழுவப்புள்ளெழக்
கள்ளிலைக்கொழுந்தடங் கடந்துபோயினர்.

உரை.—நெருங்கியவிதழ்த்தாமரைமே லழகியசங்குகள் முன்னீன்றுகிடந்தமுத்துக்களும் விளங்கியகருங்குவளைகள்தடாகம்விழித்த கண்களாகமலர்ந் துமிழ்ந்த தேன்றுளிகளும் நடுவிதழ்களினின்று கீழேவீழ்வதற்குக்காரணமாக வங்கேயிருந்தபறவைக ளிவர்வருவதைக்கண்டு வெருவியெழும்படிமதுமலர்த்தடாகத்தைக்கடந்து போனரென்க.

6. நவிவரிநகுலமு நாவிப்பிள்ளையுங்
கவிவரிநிபுடமுங் கானக்கோழியுஞ்
சவிவரிநவிரமுங் களபத்தந்தியுங்
குவிவரிமலைச்சரி குதிப்பப்போயினர்.

உரை—அங்ஙன மவரப்புறம்போ யழகிதாகப்பொறித்த கீரிகளு நாவிப்பிள்ளைகளும் நெருங்கியகுரங்குகள்கூட்டமுங் கானக்கோழிகளு மயில்களும் யானைக்கன்றுகளு மிவையெல்லாங் கூட்டங்கூட்டமாய் மலைச்சாரலிற் குதித்துவிளையாடாநிற்க வச்சாரலினருகே யிவர்போனரென்க.

7. மட்டிடையலந்தையு மலர்பெய்சோலையு
நட்டிடையணிவய னுடுங்குன்றமு
நெட்டிடைநெறிகளு நீந்திக்கான்பொழி
மொட்டிடைநிழற்பொழின் முழைக்கணெய்தினர்.

உரை.—அங்ஙன நடந்துபோய் மதுநிறைந்ததடாகங்களையும் மலர்ந்தசோலைகளையு முடிநட்டுப்பசும்பயிரழகுடையவயலினுட்டையும் மலைச்சாரலையும் நீண்டபலவழிகளையுங்கடந்து வாசமலரைப்பூத்து நிழல்செய்யுஞ் சோலையிடத்துச்சென்முரொன்க.

8. நண்பகனெற்றிவா னடக்குங்காலையாழ்
மண்பகவூன்றிமேன் மலர்ந்தபூஞ்சினைச்
செண்பகநிழற்றிய மணறண்டிண்ணைமே
லொண்பக்லொத்தொளிர்ந் துவந்துவைகிஞர்.

உரை.- சூரியன் வானத்துச்சியினடக்கும்வேளையி லங்ஙனமவர் நிழற்சோலையிற்சென்று ஆழமாய் நிலத்தைப்பிளந்துவேரையூன்றியதன்மைத் துயர்ந்து மலரைப்பூத்தணிந்தகொம்புகளை விரித்த சண்பகமரங்கள் செய்தநிழலாற் குளிர்ந்தமணற்றிண்ணையின்மேற் சூரியனையொத்த விளங்காநின்றவ ரிருந்தாரொன்க.

9. அணிமுகத்தளியின மலம்பியாழ்செய
மணிமுகக்குயிலின மகிழ்ந்துபாடவொண்
பிணிமுகத்தினஞ்சிறை பிரித்தங்காடலிற்
பணிமுகக்கதலிநற் பழன்கண்மாந்திஞர்.

உரை.—அங்ஙன மவரிருந்தபின் பழகியதாகவரிந்தவண்டினங்கள் முழங்கிவீணைசெய்யவும் வனப்பின்மிக்க குயிலினங்களினிதாய்ப்பாடவும் விளங்கிய பிணிமுகத்து மயிலினங்களெழுதப்பட்ட தந் தோகையைவிரித்தாடவும் பணிந்தாற்போலத் தலைகுனிந்து வாழைகள்தந்த தீங்கனிகளையுண்டாரொன்க.

10. தேஞ்சினைமலர்மதுத் தின்றவண்டரு
காஞ்சினையொசிந்தினி தலம்புந்தன்மைபோற்
றுஞ்சினைமலர்த்தொடை தாளிற்பெய்துபைம்
பூஞ்சினைமுகத்திருப் புதல்வன்வாழ்த்திஞர்.

உரை.—அக்கனிகளை யங்ஙனமுண்டபின்பு வாசமலரிடத்து மதுவையுண்டவண்டுக ளதினருகுள்ளகொம்பி லொசிந்து நன்றுகப்பாடுமாப்போலே மரியுஞ்சூசையும் பூவரும்புகளைமாலையாகக்கட்டித் திருப்பாதத்திலணிந்து பைம்பூவரும்பொத்த முகத்தோடுநின்ற தேவதிருக்குமாரனைப் புகழ்ந்துவாழ்த்திஞரொன்க.

11. நூனிலங்கடந்தவந் நுண்புகழ்க்கிசை
மீனிலந்திசையிஞேர் விரும்பிப்பாடலின்
வானிலங்கலந்துயர் மதிளின்பொன்முகங்
கானிலங்கொடியிஞேன் கனிகண்டானரோ.

உரை.—அங்ஙன மிருவரொன்றூற்றிறத்தையுங்கடந்து நுணிதாய்நி னைத்ததிருப்புகழ்களைச்சொன்னதற் கிசைகளைப்பாடினாற்போலச் சூழநி ன்றவானவர் விரும்பிப்பாடிக்கொண்டுவருகையில் வாசப்பூங்கொடியுடை யசூசை யப்பாலொசிந்துபார்த்து வானத்திற்கலந்துயர்ந்த பொன்மதிலி ன்றோற்றத்தைக் கண்டானென்க.

12. தேனிரைத்தலர்ந்தபொற் குன்றச்சென்னியின்
மேனிரைத்தொழுகிய வெள்ளியாறென
வானிரைத்துயர்மணி மாடநெற்றிகட்
கோனிரைத்தசைகொடிக் கோட்டம்யாதென்றான்.

உரை.—சூசையம்மதிலைக்கண்டவளவிலே நிரைநிரையாய்த் தேன் மலரைப்பூத்த பொன்மலையுச்சிமேனின்றிழிந்தொழுகும் வெள்ளியாறு போலத்தோன்றும்படி யொழுங்குபட வானத்துயர்ந்த மணிமாடங்க டோறு முச்சிமேனிரைத்துவைத்த பொற்காம்புகளிலெழுந்தாடியகொ டிகளைவிரித்த வங்நகரேதென் றருகுநின்றவானவரைக் கேட்டானென்க.

## II. வேறு.

13. ஆசைகொண்டறைந்தமாற்ற மறஞ்சயனென்னும்வானோன்
பூசைகொண்டிறைஞ்சிக்கேட்டுப் பொழிமதுவுரையிற்சொல்லும்
மாசைகொண்டொளிர்குன்றன்ன வயங்குமங்நகரைமுன்னோர்
காசையென்றனர்முன்னாளென் காவலூரவ்வூரொன்றான்.

உரை.—அங்ஙனஞ் சூசையாசையோடு சொன்னதை யறஞ்சயனெ ன்னு மருகுநின்றவொருவானவன் வணக்கத்தோடுகேட்டு மதுவைப்பொ ழிந்த வினியவுரைகளைக்கொண்டுசொல்வான்: பொன்னாலொளியைவீசிய மலையோடொத்தவிளங்காநின்ற வங்நகரை முன்னோர் காசையென்றார், நா னுமுன்னாளிலேயாண்டவனேவலா லவ்வூருக்குக்காவலாக நின்றேனென் றானென்க.

14. தோடுண்டமணிப்பைம்பூந்தார்ச் சூசையேநீயுந்திங்கட்
கோடுண்டபதத்தினாளுங் குழவியாய்ப்பேணுநாத
னீடுண்டதிறமும்பெண்மை யின்பமென்றிருட்டுமாசை
கேடுண்டதிறமுங்காட்டக் கிளைத்ததீங்குரைப்பல்கேண்மோ.

உரை —மணிச்சாயலாய்மலரைப்பூத்தகொடியையேந்தியசூசையே! நீயு மிளம்பிறைமிதித்த பாதத்தையுடைய மரியென்பவளும் பேணுநிற் கும் குழந்தையாய்ப் பிறந்தநாதன் வல்லமையிற்கொண்ட பெருந்திறத் தையும் பெண்மையின்பமென்று மயக்குவிக்குமாசையினால்வந்தகேடுக ளின் தன்மையைக்காட்டும்படி முன்னிங்கேநடந்தசெய்திகளை நான் சொல் லக்கேட்பாயாகவென்றானென்க.

15. சேமஞ்சால்திறத்துநாதன் சிறுமையிற்பெருமைகாட்ட
வாமஞ்சால்மணியிற்சென்னி மயிர்ப்புலத்தொத்தித்தந்த
தாமஞ்சால்திறத்திறுண்மை தாங்கியசஞ்சோனென்பா
ருமஞ்சால்வழங்கத்தோர்வை நவைபெறுவரம்பெற்றுற்றுன்.

உரை.—அங்கேநடந்தகாதை யாதெனில் தன்வயத் தளவிறந்த வல்லமையுடையநாதன் சிறியவற்றைக்கொண்டு தன்பெருமைக்காட்டும்படி நீலமணியின்சாயலாய் விளங்கியதலைமயிரிடத் தொத்தித்தந்த நிறைந்தத்திறத்திறுண்மையைக்கொண்ட சஞ்சோனென்னுமொருவன் தன்னுமம்வழங்கும்படியெக்காலத்துந் தோர்வைபடாமல் வெற்றிக்கொள்ளும் வரத்தோடுபிறந்தானென்க. (சஞ்சோனென்பவற்குத் தலைமயிரிருக்குமளவும் வல்லமை பாடின்றிவழங்கவு மம்மயிரழிந்தகாலத்து வலித்திறமழியவுமாண்டவ னவற்குவரந்தந்தமையாற்றலைமயிர்ப்புலத்தொத்தித்தந்த வரமென்றுரொன்க.)

16. வல்லரிக்குழவிபோன்றே வயத்தொடுபிறந்ததோன்றல்
செல்லரிதடலோடோங்கிச் சிறுவனுய்ச்சிறுமையின்றிப்
புல்லரிதகன்றகானிற் புடைத்துணையின்றிப்போகிற்
கொல்லரியெதிர்ப்பக்கையாற் கொறியெனவகிர்ந்துகொல்வான்.

உரை.—அங்ஙனஞ் சிங்கக்குட்டிபோல வல்லமையின்வரத்தோடு பிறந்த சஞ்சோனடைதற்கரியதிறத்தோடு வளர்ந்து தான் சிறுவனுயினுஞ் சிறுமையொன்றின்றிப் போதற்கரிய வகன்றகானத்துத் துணையின்றிப்போகையிற் சிங்கங்களெதிர்த்தாலு மவற்றைக்கையாற்பிடித்துவகிர்ந்துகொல்வானென்க.

17. தனித்திருத்தகவோன்றந்த தனித்திறலவன்மாற்றுர்மே
லினித்திருத்திடனன்றென்ன வீங்குண்டபீலித்தேயர்
பனித்திருத்தடத்துத்தந்த பழமறைபகைத்தாரொன்ன
முனித்திருத்திறத்தசஞ்சோன் மொய்செயவளவின்மாய்ந்தார்.

உரை.—அங்ஙனஞ் சஞ்சோன்வளர்ந்தவளவிலே தலைமயிரோ டரியவாண்மையும் வளர்ந்தமையா லதை யொப்பின்றித்தனக்குத்தந்த தனிப்பெருஞ்செல்வமுடையநாதனைப் பகைத்தவர்மே லினி யென்வல்லமைசெலுத்துவதுநன்றென்று முன்னிந்நாட்டிலிருந்தபீலித்தேயர் குளிர்ந்த சீனுயிமாமலையின்மே லாண்டவன்தந்த பழயவேதத்தைப் பகைத்தாரொன்று அவர்மேற்போய் வலியசஞ்சோன் முனிந்து போர்செய்தவளவிலே யவர்மட்டின்றி மடிந்தாரொன்க.

18. கதிர்படும்வயலிற்செந்நெல் காய்த்தனநாளிலோர்நா
ளெதிர்படுநரிகண்முந்நூ றிவன்பிடித்திரண்டாய்ச்சேர்த்திப்
பொதிர்படும்வாலில்வாலைப் புணர்த்தலோடெரிதீப்பந்தம்
பிதிர்படும்பொறிகள்சிந்தப் பிணித்திகலூட்டில்விட்டான்.

உரை.—அங்ஙனஞ் சஞ்சோன் பீலித்தேயரைப் போர்முகத்துக் கொன்றதுமல்லாதே வயல்கடோறுங் கதிரைவிட்டுச் செந்நெல்பழுத்த நாளிலே யொருநாள் முந்நூறுநரிகளைப்பிடித் திரண்டிரண்டாய்ச் சோடாகச்சேர்த்து வாலோடுவாலைப்பிணைத்துத் தீப்பொறிகள்சிந்தும்படி யெரிந்தபந்தங்களைவாலிலேகட்டிப் பகைவர்நாட்டிலே விட்டானென்க.

19. எண்டிசைசம்புமோட வெண்டிசைபொறித்தீச்சிந்த
மண்டிசைவளியும்வீச மண்டிசைகொழுந்துத்தீயால்
விண்டிசைமலர்த்தண்காவும் விண்டிசைதவழ்நெற்போரும்
பண்டிசைபகைவர்நாடும் பழிபழுத்தெரிந்ததன்றே.

உரை.—அங்ஙனம் விட்டநரிக ளெண்டிக்கிலுமோடி வாலிற்கட்டின தீப்பந்தங்கள் பொறிகளைச்சிந்திவருகையிலெழுந்த பெருங்காற்றின்முகத்துக் கொழுந்துவிட்டெரிந்ததீயினு லுயர்ந்தமலர்ச்சோலைகளு மேகத்துட் கலந்த நெற்போர்களும் பீலித்தேயர்பழநாடெங்கு மிக்கபழியாம்படியெரிந்ததென்க.

20. முனிப்பட்டார்பீலித்தேயர் மொய்ப்படையின்றியோர்நாள்
தனிப்பட்டான்சஞ்சோனென்னத் தாம்வயவரிகள்போல
வினிப்பட்டானென்றுசீறி யெண்ணிலாரவனைச்சூழ்ந்து
தொனிப்பட்டார்த்தரியபோரைத் துடங்கினார்வயிரத்தோளார்.

உரை.—அங்ஙனந் தன்னுடெரிந்ததென்று மிகவுஞ்சினந்தபீலித்தேய ரொருநாள் கையாயுதமொன்றுமின்றிச் சஞ்சோன்றனியேநின்றானென்றுகேட்டவருள் வயிரத்தோளுடைய மட்டில்லாதார் கொடியபுலிகளைப்போலமொய்த் தினியவன்பட்டானென்றுமுழங்கி யவனைச்சூழ்ந் ததிர்ந்தார்த்துக்கொடும்போரைத்துடங்கினரென்க.

21. வீங்கினன்வெறுங்கைச்சஞ்சோன் விளிந்தவேசரிவாயென்
வாங்கினன்வயிரத்தண்ட வயப்படையென்னச்சீறி [பும்
யோங்கினனரும்போராக வொன்னலர்படைகளெல்லாந்
தாங்கினனரியேறன்ன தாக்கினன்பகைவர்மாள்க.

உரை.— அங்ஙன மவர்வருவதைக்கண்டு வெருங்கையோடுநின்ற சஞ்சோன் கோபமிகுதியா லிருபுயங்களோங்கி யங்கேகிடந்தசெத்தகழுதையின் வாயெலும்பையெடுத் ததுவேவயிரத்தண்டாயுதமாகக்கொண்டு மேலோங்கிமுழங்கித் தன்மேல்மொய்த்துப் போர்செய்து பகைவரெறிந்த பலவாயுதங்களையத்தாலேதாங்கிச் சிங்கவேறுபோல வவர்மடிந்துகெடும்படிதாக்கிப் பொருதானென்க.

22. அதிர்த்தனனதிரவான மார்த்தனன்றனிவல்மொய்ம்பான்
விதிர்த்தனனரியதண்டம் வீசினனெண்ணிலாவி
யுதிர்த்தனனுதிரவெள்ள மோடவெங்கதக்கண்வாயுங்
கதிர்த்தழலோடவோடிக் கதக்கனத்துருமின்மிக்கான்.

உரை.—அங்ஙன மொப்பில்லாத வலியோனாகிய சஞ்சோன் வானமதிரும்படி தானெதிர்த்தார்த்தான், சொன்னவரியதண்டாயுதத்தையசைத்துவீசி யெண்ணப்படாதவுயிர்களை யுதிர்த்துச்சிந்தினான், வெள்ளமாகக் குருதிகளெங்குமோடும்படி தன்கண்வழியாகச்சினந் தழல்புறப்படவிட்டங்கங்கேயோடிச் சினந்தமேகத்தினின் றிடித்துவிழுமிடியினுமிக்கானென்க.

23. இந்தினைகுனிவில்சிந்த வீர்க்கடைபகழிசிந்தக்
கந்தினைகரங்கள்சிந்தக் கரியநெய்மூளைசிந்தப்
பந்தினைசிரங்கள்சிந்தப் பல்லுயிருடலஞ்சிந்தச்
சிந்தினையெவருஞ்சிந்தச் சிந்தினகுருதிச்சிந்தே.

உரை.—சஞ்சோனங்ஙனம்பொருதமுகத்துப் பிறைபோலத் தன்மேல்வளைத்தவில்லுகளு மெய்தவம்புகளு மழிந்துகெடவு மூட்டினைவிட்டுக் கைகளற்றுப்போகவுங் கருங்குருதியோடு மூளைகள்புறபபட்டுச்சிந்தவு மெறிந்தபந்துகள்போல வாகாயத்திற்றலைகள்பறக்கவு முடலைவிட்டுயிர்கள் பிரியவு மனைவருஞ்சிந்தனைகெட்டுமயஙகவு மாறுகக்குருதிகளோடினவென்க.

24. ஆயினதன்மைத்தங்க ணாயிரமுருமிற்பாய்ந்து
பாயினவிடங்கடோறும் பரப்பினன்பிணத்தின்குப்பை
வீயினபகைவரங்கண் விழுந்தவாயிரருமன்றி
யோயினவமர்விட்டோடி யுடற்குறையிலருமுண்டோ.

உரை.—சஞ்சோனொருவன் போர்செய்யும்விசையை யாராய்ந்தகாலத் தாயிரமிடிகள் போர்செய்தனவென்னும்படி யவனங்கங்கே விசையிற்பாய்ந்து பாய்ந்தவிடமெல்லாம்பிணத்தின்குப்பைகளைப்பரப்பினான், அங்ஙனஞ் செத்தப்போர்களத்தில்விழுந்தபகைவ ராயிரம்பேருமன்றிப் போரைவிட்டோடினவருள்ளு முடற்குறையில்லாதவ ரில்லையென்க.

25. புறத்துணைகடந்தவல்லோன் போர்க்களத்தொருவனின்று
திறத்துணைவரைத்தோள்வீங்கித் திசைதிசைசுளித்துநோக்கி
மறத்துணை துணையென்றுற்ற வஞ்சகரோடக்கண்டே
யறத்துணைபெற்றுற்பெற்ற தழிவுண்டோவிடையிலென்றான்.

உரை.—அங்ஙனம் பீலித்தேயர்மடிந்தவரொழிய மற்றவரோடலினொப்பில்லாத வலியோனாகிய சஞ்சோனொருவன்போர்களத்திலே தனிநின்று மலையோடொத்ததிறத்த தன்னிருபுயங்களை யசைத்தோங்கிச்

சூழக்கோபத்துடனேநோக்கித் தம்மறமேதுணையென்றெண்ணித் தன் மேல்வந்த வஞ்சகப்பகைவரோடக்கண்டு நல்லறமேதுணையாகக்கொண் டவற் கிடையிலேயழிவொன்றுண்டோ வில்லையென்றுரொன்க.

26. கார்த்திரளனையவார்த்த கதத்தொடுகனலும்விம்மிப்
போர்த்திரளியற்றிறனுட் புலத்தெழுந்தாகமாற்றுச்
சூர்த்திரள்பயத்ததண்டஞ் சுனையினூற்றெனவென்பின்வாய்
நீர்த்திரளோடச்சால்பின் னிமலனைவாழ்த்தியுண்டான்.

உரை.—அங்ஙனம் பலமேகஙகள் திரண்டிடித்தாற்போலச் சஞ் சோன் மிகவுமுழங்கினகோபத்தோடு மிக்கெழுந்தவனலினலு நெடுங்கா லத்துக்குதித் தலறிப்பாய்ந்து செய்தபோர்மிகுதியாலுமுள்ளேகிளம்பிய தாக மாற்றமாட்டாமையிற் பகைவரைக்கெடுத்து வெற்றித்தந்த தண்டா யுதமாகியசெத்தகழுதைவாயெலும்புதானே யொருசுனையினூற்றதாக வ தினின்று திரளாய்த் தண்ணீர்புறப்பட்டோடலி னுண்டவன்றந்தவென் றவனைவாழ்த்தி நிறையவுண்டானென்க.

## III. வேறு.

27. மலைமுழ்குந்திண்டோளான்மன்னுர்வைகு மந்நகருள்
ளலைமுழ்குஞ்சுடர்போயோர்நாள்புக்கானென் றறிந்தன்னுர்
விலைமுழ்குமணிக்கோட்டக்கதவம்பூட்டி விடிந்தனபின்
கொலைமுழ்குமுயிர்ப்பழியைக்கொள்வதென்னக் கூர்த்துவந்தார்.

உரை.—இவையெல்லாமாகியபின்பொருநாள் மலையினுந்திணியபுய த்தையுடையசஞ்சோன்பிலித்தேய ரந்நாளிலிருந்த காசையாகியவந்நகரி னுட் சூரியனத்தமித்தபின்பு வந்துபுகுந்தானென்று அவரறிந்து விலைமதி யாதமணிநகர்வாயிற்கதவைநன்றுய்ப்பூட்டி மறுநாள்விடிந்தபின் னவனை வனைத்துக்கொல்வோமென்று மிகவுமகிழாநின்றுரொன்க.

28. தற்றெழில்செய்தாயினபின்னன்னுன்போகத் தாமமணிக்
கற்றெழில்செய்வாய்க்கதவமடைத்ததென்னக் கண்டொன்னுர்
புற்றெழில்செய்வலியிதுவோவென்னநக்குப் பொற்கதவ [தான்.
மற்றெழில்செய்புயத்தெடுத்தம்மலைமேலுய்த்தான் மயிர்த்திறத்

உரை.—சஞ்சோ னவ்வூரிலே தான்செய்யவேண்டியவற்றை முடித் திராவிலேதானேபோகையில் மணிக்கல்லாற்செய்யப்பட்ட வாசற்கதவு பூட்டினதென்றுகண்டு பகைவர்வல்லமைசெய்யத்தகும் புற்றொழிலிதோ வென்று மிகவுனக்குப்பூட்டழியா திருக்கதவுகளை யொன்றுய்ப்பேர்த்து வலியதன்றோள்மேலெடுத்துப்போ யங்கேதோன்றியவம்மலைமேலேகொ ண்டுவைத்தான் மயிர்ப்புலத்தரியவலியுடைய சஞ்சோனென்க.

29. போர்முகத்துநிகரின்றிப்பொலிந்தவெற்றி புனைந்துயர்ந்தோ
கார்முகத்துமணிக்கூந்தல்வலைபட்டோர்பூங் கவினல்லா [ன்
ளோர்முகத்துவயங்குழையச்சிதைந்ததன்மை யினிக்கேட்டோர்
பார்முகத்துப்பெண்மையினோர்பழியுங்கேடு மிலையென்பார்.

உரை.—அங்ஙனம் போர்முகத் தெதிரின்றி தோர்வையின்றி யரியவெற்றிகளைக்கொண்டுயர்ந்தசஞ்சோ னதற்குப்பின்பு மேகமொத்த நீலமணிக்கூந்தலாகிய வலையுட்பட்டுப் பூஞ்சாயலி னழகியதொருபெண்முகத்துமுன்னே தன்வல்லமைகுழைந்து தானுங்கெட்டதன்மை யினிக்கேட்டவரெல்லாரும் பூவுலகிற்பெண்மைவிடப் பெரும்பழியுங் கேடுமில்லையென்பானென்க.

30. கடம்புனைந்தவளையுருட்டும்பெருஞ்சீர்ச்செங்கோற் கடிவளமுஞ்
சடம்புனைந்துபெண்ணாசைச்சழக்கிற்கோனு மென்றுணரான்
விடம்புனைந்தநலம்பொறித்தவிலைமாதென்னுந் தாலிலையோர்
நடம்புனைந்தவரிவையின்மேனவையுற்றெஞ்ச நசைவைத்தான்.

உரை.—பெண்ணாசையினாற் சஞ்சோனெங்ஙனங் கெட்டழிந்தானென்னில் நீதிநன்முறைகொண்ட சக்கரத்தையுருட்டாநின்ற பெருஞ்செல்வத்துயர்ந்த செங்கோலின்வளமைமுதலாய்ப் பெண்ணாசைவிளைவிக்குங்குற்றங்களாற் கொடுமைகொண்டுவளையுமென் றவனினையாமல் நஞ்சினைக்கொண்டழகிதாகவெழுதிய விலைமாதாகிய நாடகக்கணிகையாயொருத்திதாலிலையென்பவளைத் தான் தீவினைகொண்டுகெடும்படிவிரும்பினானென்க.

31. காதளவுநீண்டுலவுங்களிக்கண்மாமை கனிந்துண்ட
போதளவுகாதலுளங்கோட்டியன்னாட் புணரியினாழ்
கோதளவுமனமூழ்கிநிலையுங்கொள்ளாக் குழைந்தலைதன்
றீதளவுமனமயங்கிச்சிறைபட்டத்தீச் சிறைவிள்ளான்.

உரை.—அவனங்ஙனங் காதளவாகநீண்டுலாவிக் களிகூர்ந்தவளிரு கண்வடிவினைத் தானின்பமென்றுண்டுவருகையி லுள்ளெழுந்தவாசை மனதைவளைத்துக் கடலினுமாழமுள்ளதாய்ப் பாவநிறைந்ததா யவள்மனத்திற்றான்மூழ்கி யதிலேநிலையுங்கொள்ளாமற் குழைந்தலைந்து தீதளாவிய தன்மனமயங்காநிற்கச் சிறைப்பட்டவனைப்போலவாகி யத்தீய சிறையுந் தான்விடமாட்டாதிருந்தானென்க.

32. அண்ணிப்பற்றன்பறிந்தவரிகர்பொற்சால் பளித்தன்னா
ணண்ணிப்பற்றருந்திறத்தின்னிலைகேளென்ன நனிகேட்டா
ஒண்ணிப்பத்தங்கையிடுமேலவைநட்பு மியற்பிறப்புங்
கண்ணிப்பற்றாதென்னைகடிதிற்செய்யாள் பெண்பிறந்தாள்.

உரை.—அடிக்கடியங்ஙன மவளண்டைக்குச் சஞ்சோன்போ யவளைப்பற்றிவைத்தவன்பினை யறிந்தபகைவராகிய பீலித்தேயர்தாலிலேகிட்டப்போய் வெகுதிரவியங்களைக்கொடுத்து நாம்வெல்லப்படாதபடி சஞ்சோனுடைய வருந்திறத்தாண்மைவகையைக்கேட்டுச் சொல்வாயாகவென்றுமிகவுங்கேட்டார், பத்துமாத்திரமே யெண்ணிக்கையிலேயோட்ட காலத்து நட்பும்பிறப்பு மொன்றுமெண்ணும வுடனேயென்னசெய்தாள் பெண்ணுய்ப்பிறந்தவளென்க.

33. கோற்கலந்தகண்விருப்பங்குளிரக்காட்டிக் கொல்லகத்தாள்
பாற்கலந்தநஞ்சன்னபணித்தீஞ்சொல்லாற் பகைக்கெஞ்சா
மேற்கலந்தவலிநிலையெங்கென்றுள்காதல் வெறுப்பாற்று
மாற்கலந்தவன்பிறலைமயிர்க்கணென்றுன் மதிகெட்டான்.

உரை.—தாலிலையோவென்னிற் பீலித்தேயர் கேட்டபடிசெய்யும் பொருட்டுத் தன்னண்டைக்குச் சஞ்சோன்வந்தவுடனே யம்பொத்த தன்கண்களாலவன்மனங்குளிரும்படி விருப்பத்தைக்காட்டாநின்று மனதிலேகொலைத்தொழிலைநினைத்த வஞ்சகத்தாளாய்ப் பாலோடுகலந்த நஞ்சினையூட்டினுற்போல வினியக்குதலைச்சொல்லைக்கொண்டு உன்பகைவர் கெடுக்கப்படாத மேலானவல்லமை யுனக்குநிற்பதெங்கேயென்றுள், அதைக்கேட்டசஞ்சோ னவளாசைவெறுக்கமாட்டாம லன்பின்மயக்கத்தினுல் மதிகெட்டு என்தலைமயிரிலேநிற்பதென்றுனென்க.

34. முதிர்சூலும்பெண்காதின்மொழியுநில்லா முறையிலவள்
கதிர்சூழுமுதயத்தன்றென்றுர்க்கெல்லாங் காட்டியபின்
பொதிர்சூழும்பின்னிரவிலின்பத்தன்னுள் பூமடிமே
லெதிர்சூழுங்கேடுணரான்றுஞ்சமயிரீர்த் திமிழ்த்தனரே.

உரை.—முற்றியகருப்பமும் பெண்காதிலேவைத்தசொல்லு முடனேவெளிவராமநில்லாதென்றமுறையோ டவளுஞ் சூரியனுதையத்திற் பகைவர்கிட்டப்போய்ச் சஞ்சோன் சொன்னதெல்லாவற்றையுஞ் சொல்லிக்காட்டினுள், அதின்பின்பு சஞ்சோன் முறையின்படி யிராவிலே யவளண்டைக்குவந் தினிதாயவள் பூமடிமேல்வருங்கேடுணராமற்றூங்காநிற்கப் பகைவர்வந்து அவன்தலைமயிரறுத் தவனைக்கட்டினுரென்க.

35. மின்னினுலெனவெரிக்கண்விழித்தியாக்கை விடறேற்று
னுன்னினுள்கொலைநட்பில்வஞ்சித்தாளென் றுளத்தெஞ்சித்
துன்னினுர்பழம்பழியாருவப்பிலார்த்துச் சுடுநகைச்சொற்
பன்னினுர்விழிகுடைந்தார்பன்னுட்கோறச்சிறைவைத்தார்.

உரை.— அங்ஙனந் தலைமயிருமறுத்தவனையுங்கட்டிப் பகைவரின் னம்பயந்தொளியாநிற்க மேகமிடித்ததற்கு மின்னினுற்போலச் சஞ்சோன்

தன்னெரிக்கண்ணைவிழித்து மயிரில்லாமையால் வலியுமின்றிக் கட்டின
கயிற்றினையறுக்கமாட்டாம லிவளென்னைக்கொல்லநினைத்தாளே நட்பி
பிற்கு வஞ்சனைசெய்தாளேயென்று மனதிலேநொந்து மெலியாநிற்பதைக்
கண் டொளித்திருந்த பழம்பழியுடைய பீலித்தேயர் புறப்பட்டு அவன்
மேல்மொய்த்துமண்டி யுவந்தார்த்து நகையாகச்சுடுங்கொடியசொல்லா
ல்வைதுயவனிருகண்ணைப்பிடுங்கி கொடுமைமிக நெடுநாளில் கொல்லும்
படி யவனைச்சிறைச்சாலையில்வைத்தாரென்க.

36. பன்னாளிற்பன்னகையிற்பழியிறைசைப் பற்றமர்ந்த
பின்னாளிற்பகைத்தனநாடொருப்பட்டொன்னார் பெரிதுவந்து
முன்னாளிற்செய்தவோர்மண்டபத்தில்வைகி முற்கொணர்கென்
றன்னாளிற்றிறஞ்சிகையோடுடைச்சஞ்சோனு மாங்கடைந்தான்.

உரை.— அங்ஙனம் பலநாளிலேபலநகைசெய்து தம்பழியாசைதீர்ந்
தபின்பு சூழப்பகைத்தநாடரெல்லாரு மொருங்குடன்கூடிப்பெரிதுவந்து
மிக்கவிசாலத்து முன்செய்திருந்தவோர்மண்டபத்திலிருந்து தம்முன்
னேயவனைக்கொண்டுவரச்சொல்லி யந்நாளிலேதலைமயிரும்வளர்ந்து வல்
லமையுமடைந்திருந்தசஞ்சோ னங்கேவந்தடைந்தானென்க.

37. மண்கவிழ்ந்தவானமெனவனாந்தமாமை மண்டபத்தின்
கண்கவிழ்ந்தசிகரந்தாங்கடுத்தவிருபொற் கம்பமிடை
கண்கழிந்தசிகைத்திறத்தோனிற்பநக்குக் கதங்காட்டி
விண்கழிந்ததெய்வமனேயின்றேகாட்டுன் மிடலென்றார்.

உரை.—எல்லாருநகூடிநின்ற பெரியமண்டபமெங்ஙன மிருந்ததெ
ன்னிற் பூவுலகின்மேல் வானங்கவிழ்ந்ததுபோல வழகிதாகவெழுதிய
மண்டபத்தின்மேற் கவிழ்ந்தசிகரத்தை நடுவிலொன்றேடொன்று நெ
ருங்கிவைத்த விருபொற்றூண்தாங்காநின்றன, எல்லாருக்கு நடுவிநிற்
கும்படி யத்தூண்களண்டையிற் கண்ணில்லாமல்வளர்ந்தமயிரால் வல்
லமையின்மிக்கசஞ்சோ னிற்க பீலித்தேயர் மயிர்வளர்ந்தகுடுமியை
ப்பாராமற் கோபத்தோடவனைநகைத்து வானுலகினின்றிழிந்த தெய்
வமொத்தவனே யிப்பொழுதுன்வல்லமைகாட்டுவாயாகவென்றாரென்க.

38. பகைவிளைத்தவினையுதைப்பநிற்பாருண்டோ பாரிலெனச்
சிகைவிளைத்ததிறமிக்கோனிருதூண்டன்கைத் திறத்தொடித்து
நகைவிளைத்தமேற்சிகரம்வீழ்த்தியெண்ணின் னள்ளரொடு
மிகைவிளைத்ததானுந்தன்வினைபட்டொன்னார் வென்றொழிந்தான்.

உரை.—பீலித்தேயர் நகைத்துரைத்தற்குச் சஞ்சோன்மறுமொழி
சொல்லிப் பகைவிளைதற்குக் காரணமாகியதன்தீவினை யொருவனையுதை
க்குங்காலத்து விழாமநிற்கும்படி வல்லவருண்டோவென்றுசொல்லி
வளர்ந்தமயிரோடுவலியின்மிக்கோனாகி முற்சொன்னவிருதூண்களைத்த

ன்கையாற்றழுவியசைத்தொடித்து நகைவேலையா யவற்றின்மேனின் றசிகரத்தையும்வீழ்த்தியெண்ணப்படாத பகைவரையுமொருப்படக்கொன்று தானுந்தனக்குவருத்தம்விளைத்த தன்தீவினையுட்பட்டுத் தன் பகைவரை வென்றவளவிலே தானுமடிந்துசெத்தானென்க.

39. இத்திறத்திலிவையெல்லாமிந்நாட்டிவ்வூ ரிடத்தாகி
மெய்த்திறத்திற்கடவுணலம்விளங்கிற்றென்ன விண்ணவன்றன்
கைத்திறத்திற்றுடொழுதுநிற்பவன்ஞர் கனிந்தெழுந்து
மைத்திறத்திற்கலந்தமதிட்காசைசூழ்தூர் மருவுகின்றார்.

உரை.—இங்ஙன மிவையெல்லா மிந்நாட்டி லிவ்வூரில்நடந்து தப்பாதவல்லமையுடையநாதன்தன்மை விளங்கினதென்று வானவனுகிய அறஞ்சயன்சொல்லித் தேவதிருக்குமாரன் பாதத்தைக் கைகூப்பித்தொழாநிற்க மரியுஞ்சூசையுமகிழ்ந்தெழுந்துபோய் மேகத்துட்கலந் துயர்ந்தமதிலுள்ள காசையென்னுமாநகரை மருவிச்சேர்ந்தாரென்க.

## IV. வேறு.

40. திலங்குன்றுநிழறேன்மலர்பூப்பநீர்ப்
புலங்குன்றுமழைபொய்யிலதூவமே
னலங்குன்றுநகர்நாடுநயந்தெழ
வலங்குன்றுதவர்மாநகரெய்தினர்.

உரை.—அங்ஙனங் குறையாத வல்லமையுடையமரியுஞ் சூசையுந் திருக்குமாரனையேந்திக்கொண்டு அந்நாட்டிலுள்ளசோலைகள் குறையாத நிழல்தந்து தேனைப் பொழிந்தமலரைப்பூக்கவு நீர்ச்செல்வங்குறையாமற் பொய்யாமழைபெய்யவு மேலானநன்மைநிறைந்த வந்நகருமந்நாடுங் களிகூர்ந்தோங்கவுங் காசைமாநகரையடைந்தாரென்க.

41. புறத்துறைப்புலம்போய்நகர் வாயிலோர்
திறத்துறைப்புலம்புக்கனர்தேர்ந்தநூ
லுறத்துறைப்புலமுங்கடந்துண்ணகர்க்
கறத்துறைப்புலமாயினரெய்தினர்.

உரை.—அங்ஙன நல்லறத்தின்துறையாகியமூவரும் நகர்ப்புறக்காவலிடங்களும் வாசல்காத்த திறந்தோரிருந்தவிடமும் பல நூல்களைப்படிப்பிக்குமிடங்களுங் கடந்து நடுநகரிற்சேர்ந்தாரென்க.

42. வேலைமாமணிப்பீடிகைவீதியுஞ்
சாலைபூம்புகைவீதியுந்தாண்டிநற்
பாலையாழிசைபாடினர்வீதியுண்
மாலைமாடத்தழுங்குரற்கேட்டனர்.

உரை.—நடுநகர்சேர்ந்தபின்பு கடல்தரும்பலமணிவிற்குங் கடையின்வீதியும் பல பூம்புகைமண்டியவீதியுங் கடந்து நால்வகைவீணைக்குரற்கிசையாகப் பாடினரிருக்கும்வீதியிற்போகையி லழகியமாடத்தினின்றழுமோசைபுறப்படக் கேட்டாரென்க.

43. திரிசுமந்திலதீபமொத்தாவிபோ
யரிசுமந்தவணைக்கிடந்தன்னைசூழ்
வரிசுமந்தவிளமயின்மானவைந்
தெரிசுமந்தகணூரழுதேங்கினர்.

உரை —அங்கேகேட்ட வழுகைக்குரலேதென்னிற் றிரியிழந் தவிந்தவிளக்குப்போல வுயிர்போய்ச் சிங்கங்கள்சுமந்தமெத்தைமேற் செத்துக்கிடந்ததாயைச் சூழவெழுதியதோகையுடைய விளமயில்கள்கிடந்தாற்போல வைந்திளம்பெண்மக்கள் சிவந்தகண்ணூலழு தேங்காநின்றாரென்க.

44. ஆங்குநானநெய்ப்பூவளகங்கெட
வீங்குநோயினிலத்தில்விழுந்தடித்
தேங்குமோதையைக்கேட்டவிணர்க்கொடி
யோங்குசூசையுளத்திலிரங்கினன்.

உரை.—அங்ஙன மவ்வைந்திளமங்கைய ரங்கே நானநெய்பூசினதம்பூங்கூந்தல் சிதறிக்குழைந்துகெடும்படி யடைந்ததுக்கமிகுதியா னிலத்தில்விழுந்தடித் தொலியெழமோதியேங்கி நொந்தழுமோசையைக்கேட்ட பூங்கொடியேந்தியசூசை தன்மனத்திரங்கினனென்க.

45. கொம்பிலாக்கொடிபோலிளங்கோதையார்
பம்பியார்த்தழும்பாசறைநோக்கென
நம்பிநாதனைவேண்டலினல்லுயி
ரெம்பிரானிடுமேவலின்மீண்டதே.

உரை.—அங்ஙன மனதிரங்கின நம்பியாகியசூசை திருக்குமாரனைப்பார்த்துச் சொல்வார் : கொழுகொம்பிழந்துதுவளும் பூங்கொடிபோலத் தாயிழந்திவ்விளமங்கையர் வலிதாய்விம்மியழும்பெருந்துயரை யிரக்கம்புரிந்துநோக்காயோவென்று நாதனைவேண்டினவளவிலே யெம்பிரானாகிய திருக்குமாரன்மனமிரங்கி யேவினதனாற் பிரிந்தவுயுர் மீண்டு விட்டவுடலுட்புகுந்ததென்க.

46. தாயெழுந்துவரந்தருகைபெறு
தாயெழுந்தவியப்பிலனைவருந்
தூயெழுந்தகளிப்பொடுதுள்ளிவான்
மீயெழுந்தவிமலனைவாழ்த்தினர்.

உரை.—அங்ஙனஞ் செத்துக்கிடந்ததால் யுயிர்பெற்றெழுந்தவளவி லே யவ்வரந்தந்தகை யின்னதென்றறியாமல் மிகவுமதிசயித் தெல்லாரு மனநிறைந்தெழுந்துகளிகூர்ந் துயர்வான்மீதாளுநாதனைத் தொழுதுவாழ்த்தினரென்க.

47. விண்ணுளோர்பணிவேலையைக்கொள்பவர்
மண்ணுளோர்மிடிமாண்புறவந்நகர்க்
கண்ணுளோர்வறியோரொனக்கையிரந்
தெண்ணுளோர்பகல்மூன்றிருந்தாரரோ.

உரை.—அதெல்லாமானபின்பு பதினாயிரம்வானர்விடாமமற்சூழ்ந்து செய்யும்பணிவூழியத்தைக்கொள்ளுந் தகவோராயினு மனிதரடைந்ததாரித்திரம் பெருமைகொள்ளும்படி தாமேயந்நகரிடத்து வறியோர்போலக் கையேந்தியிரந்து மூன்றுநாளிருந்தாரென்க.

48. வருந்திக்கையொடுகால்வழங்காதனள்
பொருந்திக்கைக்கொடையுய்த்தவர்பூமுகந்
திருந்தித்தீட்டியதேவருட்கண்டென்னோ
யிருந்திற்றுற்றுமருந்திலையோவென்றாள்.

உரை.—அங்ஙன மவரிரந்துவருகையிற் கையுங்காலும்வழங்காமல் வருந்தாநின்றவொருத்தி யருட்புரிந் தவர்க்கீகைதந்தவளவிலே யவர்பூமுகத்திலழகிதாகவெழுதப்பட்ட தேவவருளின்சாயலைக் கண்டமையாலவரறியாதொன்றுண்டோவென்றெண்ணி யென்நோயைத்தீர்க்கு மருந்தில்லையோவென்றாளென்க.

49. அணங்குதேவமகன்முகத்தாறுமென்
றணங்குபேயுறவார்தவத்தோனறைந்
தணங்குதீர்ந்தவள்வாய்ப்புகழ்க்கஞ்சின
ரணங்குமின்னெனவாங்கொளித்தாரரோ.

உரை.—அவள்சொன்னதைக்கேட்டுப் பேயினமஞ்சுதற்குக்காரணமாக நிறைந்ததவத்தையுடையகுசை மறுமொழிசொல்லி யிவ்வுலகிலொருபெண் மகனைப்பெற்றநாதன் திருமுகத்தின்முன்னே யுன்னோயாறுமென்றான், என்றவுடனேகையுங்காலும் வழங்கும்படி நோயெல்லாந்தீர்ந்ததனு லவள்மகிழ்ந் தவனை வாழ்த்திச்சொல்லும் புகழ்ச்சிக்கஞ்சினாற்போல விரைந்தொல்கி மேகத்தொளித்த மின்னல்கள்போல வவருமொளித்தாரென்க.

50. மாலைவாய்மணம்போலவும்வாசபூஞ்
சோலைவாய்நிழல்போலவுந்தூயறச்
சாலைவாயினர்தங்கியமுப்பகற்
காலைவாய்ந்ததுகாசறக்காசையே.

உரை.—அங்ஙனம் பூந்தொடைமாலை வாசனைவிட்டதுபோலவு ம ணமலர்பூத்தசோலை நிழலைச்செய்ததுபோலவும் நல்லறச்சாலையொத்தவா யையுடைய மூவரு மங்கேதரித்தமூன்றுநாட்காலத்துச் செய்தநன்மை யால் குறையொன்றின்றிமாட்சிமைநிறைந்தது காசைமாநகரென்க.

காசைசேர்படலம் முற்றும்.

ஆகப்படலம். – 17 – க்கு விருத்தம்

1702.





## பதினெட்டாவது

# சீனயிமாமலைகாண் படலம்.



### I. வேறு.

1. கோபுரமணியொளி குன்றப்பேரகழ்
நூபுரம்புலம்பமேற் கொடிநுடங்கநீண்
மாபுரஞ்சிறுமையின் வாடப்போயினார்
மீபுரங்குடியென மாட்சிமேன்மையார்.

உரை.—அங்ஙனங் காசைமாபுரத்தில் மூன்றுநாளிருந்த பின்னர் வானத்துள்ள பொன்னகர்க்குடியொப்ப மாட்சியின்மேன்பாடுடைய மரியுஞ் சூசையுந் தேவதிருக்குமாரனையேந்தி யீரையாயிரம் வானவர்புடை சூழவர வங்கிருந்து போகையி னுழைந்தகோபுரவாயிற் பதித்தமணிகள் தம்மொளிகுறையவு மதிலடிவைத்த வெள்ளிச்சிலம்பொத்தகன்றுபேரகிழலைந்துபுலம்பவு மாடங்கடோறும்விரித்தகொடிகள் துவண்டு நுடங்கவு மம்மாநகரெல்லாஞ் சிறுமைகொண்டுவாடவு மதைவிட்டகன்றுபோனா ரென்க.

2. கொன்றெளித்தெழுதிய தெனநற்கொள்கையார்
மின்றெளித்தெழுதிய செல்வம்விட்டெனப்
பொன்றெளித்தெழுதிய புரமுநாடும்விட்
டின்றெளித்தெழுதிய விவரன்றேகினார்.

உரை.— அங்ஙனமொளிமுகங்காட்டி யொல்கியொழியு மின்னலோடொத்த பூவுலகின்செல்வங்களை வீணாயெழுதப்பட்டவழகென் றுயர்ந்த குணத்தோ ரவற்றை யொருங்குவிட்டுத் துறவுகொண்டாற்போல வினி தாயெழுதப்பட்ட மேன்மையுடையவிவரு மழகிதாகப் பொன்னாலலங்கரித்தவந்நகரு மந்நாடும்விட்டுக் குறிஞ்சிநிலத்தைநோக்கிப் போனா ரென்க.

3. சூழ்விளையெனலும் பரியுந்தோரையுங்
கூழ்விளைகுலுத்தமு மிறுங்குங்கோத்திரு
நீழ்விளைநிரைத்தபற் காவுநீங்குராய்க்
காழ்விளைபழுவமுங் கடந்துபோயினர்.

உரை.—குறிஞ்சிச்சார்பிற் சூழவிளைந்ததினையும் பருத்தியுமலைநெல்லுங் கூழாகுதற்குரிய கொள்ளுஞ் சோளமும் வரகு மிவையெல்லா மொழுங்குபட நிரைநிரையாய் விளைந்தபலகொல்லைகளைக் கடந்தபின்பு வயிரம்பாய்ந்த பெருமரத்துயர்ந்த காட்டையுங்கடந்து போனரென்க.

4. நறவுசேர்பொழில்களு நாரையஞ்சமோ
டுறவுசேர் தடங்களு முவந்தவோகையின்
றுறவுசேர்மடங்களுந் துணை தணப்பரும்
புறவுசேர்வனங்களுங் கடந்துபோயினர்.

உரை.—அப்புறம்போகையில் வாசனைபொழிந்த சோலைகள்பலவும் நாரைகளுமன்னங்களு மொருப்படவிளையாடினதடாகங்களுந் தவமேயின்பமென்று வந்ததுறவோரிருக்கும்பள்ளிகளுந் தந்துணைபிரியாத புறக்கள்திரியும் வனங்களு மிவையெல்லாங்கடந்து போனரென்க.

5. பூணெறியொளியொடு புடைவிண்ணோர்வர
நீணெறிகடந்துபோய் நீண்டநெற்றியாற்
சேணெறிதவழ்மலை செல்லச்சேர்ந்திரு
கோணெறியும்பர்வந் தெதிர்கொண்டாரரோ.

உரை.— அங்ஙன மணிந்தபூணொளிபோலச் சூழிருமருங்கில் விளங்கியவுருவங்காட்டி வானவர்வரவே நெடுவழிகடந்துயர்ந்தெழுந்தவுச்சியோடுயர்வானத்திற்றவழு மலையைக்கிட்டிச்சென்றவளவிலே யிருமீனைப்பச் சேர்ந் திருவானவர்வந்தெதிர்கொண்டாரென்க.

6. பொன்னினீர்மிளிர்திருப் புதல்வன்றளினை
மின்னினீரவர்தொழ வீழ்ந்துசூசையுள்
ளுன்னிநீரொவர்சொன்மி னுற்றதென்றலுந்
துன்னிநீர்ச்சட்சதன் றொழுதுசொற்றினன்.

உரை.— அங்ஙன மெதிர்வந்தவிருவானவர் பொன்னோடொப்ப விளங்கியதிருக்குமாரன்பாதத்தைவணங்கி யிருமின்னல்போல விருவரும் விழுந்தபின்பு சூசையிதேதென்றெண்ணி நீர்யாரொன்றும் வந்ததுசொல்லு மென்று கேட்டவளவிலே யவருள்ளொருவன் சட்சதனென்பான் வணக்கத்தோடுமருவி மறுமொழிசொன்னனென்க.

7. திரைநிரைமணிகொழித் தொளிசெய்சேண்செலும்
வரைநிரைவளர்நலங் காக்கவான்றெழும்
விரைநிரைமலருரு வேய்ந்தவிப்பிரா
னுரைநிரைவதிந்தநா மென்னவோதினன்.

உரை.— சட்சதன்மறுமொழி யெங்ஙனஞ்சொன்னனென்னில் உச்சிநின்றிழியுமருவி நிரையிற் பலமணிகொழித்துவிளங்கி வானுயர்செல்லுமிம்மலையிடத்து நிரைத்துவருத்தசெல்வங்களைக்காக்கும்படி வானுலகில் வணங்கப்பட்டிங்கவதரித்து வாசனைநிரையின் மலர்ந்தபூவொப்ப மனுவுருவெடுத்தவிக்கடவுளேவியமுறையி லிம்மலையிலிருப்பவர் நாமென்று சொன்னனென்க.

8. எம்பரநாயக னேவலானுல
கம்பரநான்கையு மமரர்காத்தலி
னும்பரவிம்மலைக் குரிமையாதெனப்
பம்பரவளன்சொல வமரன்பன்னினன்.

உரை.— அதைக்கேட்டசூசை யெம்பரமநாதனேவலினலுலகினுள்ளநாற்றிசையும் வானவர் காவல்செய்திருக்கையி லுயர்ந்த விம்மலையிடத்து விசேடமேதென்று மிகுந்தவாசையோடு சூசைகேட்கச் சட்சதன் மறுமொழிசொன்னனென்க.

9. பானயினுருக்கொடு பரமனெய்திய
கானயில்மலர்முடிக் காயகாட்சியான்
மீனயில்வானினு மிகப்புகழ்ந்தன
சீனயிமாமலைச் சிறப்பிஃதாமரோ.

உரை.— மறுத்துச் சட்சதன்சொன்னதேதென்னிற் சூரியனுருவங்காட்டி யாண்டவனெழுந்தருளி வாசம்பொழிந்தமலரைப்பூத்த விம்மலைமுடியின்மேலிருந்து தந்தவரியகாட்சியினு லொளிமீன்விழும் வானுலகத்தினு மிகவும்புகழப்பட்ட சீனயிமாமலைச் சிறப்பிதென்றுனென்க.

10. தனத்திடையெழுத்தென ஞானத்தன்மையான்
மனத்திடையெழுதிய மறையினூல்பினர்
கனத்திடையொலியெழக் கல்லின்றீட்டிய
புனத்திடைகுளிர்மலைப் பொலிவிதாமரோ.

உரை.— ஆண்டவ னம்மலைமுடிமேற்றந்தகாட்சியைச் சட்சதன் வகுப்பறுத்துரைக்கத்துடங்கின னுகையின் முன்னளிலே பொற்றகட்டெழுதினற்போல வவனவன் மனதிலேஞானத்தின்தன்மையா லெழுதியிருந்தவேதநூல் பின்னளிலே மேகமுழக்கத்தோடு கல்லின்மேலெழுதப்பட்ட விடமாகையில் விழுநீரருவிமிகுதியால் மிகக்குளிர்ச்சிபெற்ற பெருமலையிதுவேயென்க.

11. ஏர்கெழுமணிவள ரொசித்துநீக்கலிற்
கார்கெழுகுவட்டுவான் கலந்தவிவ்வரை
நேர்கெழுயூதர்தங் நிரைத்தசேனைகள்
பார்கெழுவணியெனப் பரப்பிநின்றவே.

உரை.—யூதர்முன்னுளிலே யழகியமணியால் வளமைபெற்ற வெசித்துநாட்டைவிட்டுவருகையில் மேகஞ்சூழ்ந்தவுச்சியோடு வான்மேற்கலந்த விம்மலையடிகோராகநிரைத்த வவர்பெருஞ்சேனைகள் பூவுலகிற்கோராபரணம்போலப் பரப்பிநின்றனவென்க.

12. தேனிமிர்தொத்தணி திமிசுஞ்சாந்தமும்
வானிமிர்கோட்டணி வகுத்தமால்வரை
மேனிமிர்நாயகன் விளிப்பயூதர்தங்
கோனிமிர்மோயிசன் குவட்டிலேறினன்.

உரை.— அங்ஙன மிம்மலையடியில் யூதர்சேனைகளிருக்கையில் கொத்துக்கொத்தாய் மதுமலரணிந்த வேங்கையுஞ் சந்தனமும் வானத்துயர்ந்தமுடிக்கணியாக நிரைத்துவைத்த விம்மலைமேலெழுந்தருளினநாத னழைத்தவேவலினுல் யூதருட்பெருஞ்சீர்ச்செங்கோற்செலுத்தாநின்ற மோயிசனென்பவன் மலையினுச்சியேறினனென்க.

## II. வேறு.

13. கோணிகந்தாள்வானிறைவனேவல்கொண்டக் குலக்கோமா
சேணிகந்தான்சேண்சென்றகுன்றத்துச்சி செல்லுகின்று [ன்
னூணிகந்தான்றுயிலிகந்தான்வானோரொத்தாங் குறைந்தனகான்
மாணிகந்தார்மனம்போலவிருண்டியாவு மருண்டனவே.

உரை.— அங்ஙனம் நீதிக்கோல்வலைவின்றி யுலகங்கள்யாவையுமாளும் வானுலகாண்டவனிட்டவேவலைக்கொண்டு யூதருக்கரசனுகியமோயிசனெடுவழிகடந்து வான்சென்றுயர்ந்த விம்மலையுச்சியிற்சென்றான். சென்றவளவிலே யுண்ணுமலுந் தூங்காமலும் வானவரோடொருவனைப்போலவங்கேயிருந்தபோது மாட்சிமையில்லார் மனத்தைப்போல வெங்குமெல்லா மிருண்டுமயங்காநின்றன வென்க.

14. கோடொளிப்பவெழினியெனவெழிலிமொய்ப்பக் குடக்கிர
சேடொளிப்பவிராவன்னவிருள்சூழ்மண்டித் திரண்டவிரு [விச்
ளீடொளிப்பவிளக்கிட்டதேபோன்மின்னி யெரிவாய்மின்
னூடொளிப்பவொல்கியிடித்துலகமெல்லா மொலித்தனவே.

உரை.— அங்கே மலைமேல் மோயிசன் சென்றவுடனே மலையினுச்சி யொளிக்கும்படி திரைச்சீலையிட்டதுபோல மேகங்கள்சூழ மொய்த்தமையால் மேற்றிசைசென்ற சூரியன்தன் னொளிவடிவையொளித்துவந்த

விரவுபோல விருளுமண்டிப்பரந்தது, பரந்தவிருளை நீக்கப் பலவிளக்கிட்டாற்போலமின்னி யெரிவாய்காட்டித் தோன்றினமின்னு மேகத்துள்ளொளித் திடியிடித் திடைவிடாமையா லுலகமெல்லாமுழுங்கிற்றென்க.

15. புழுங்கியவாயெரிசெந்தீப்புரிசைசூழ்ந்தாற் போன்றுயாத்
தழுங்கியவாய்முகின்மின்னியெண்ணெண்ணாளுந் தாமுழவரு
மழுங்கியவாய்மெலிந்தஞ்சவிறைவன்றாட்சேர்ந் தார்ந்தமிர்தம்
விழுங்கியவாய்மோயிசனேவாழ்ந்தவண்ணம் விளம்பரிதால்.

உரை.—அங்ஙனம் வாய்சினந்தெரிந்த செந்தீக்கோட்டையாகச் சூழவளைத்தாற்போல வோய்வின்றிமுழங்கினமேகங்கள் மின்னுநிற்க நாற்பதுநாளுங் கீழேநின்றவரெல்லாரும் வருந்தி மனமெலிந்தஞ்சியிருக்கையி லாண்டவன்திருவடிசேர்ந்தமோயிசனுவெனிற் றேவாமிர்தத்தை நிறையவுண்டவனாய் மகிழ்ந்து வாழ்ந்ததன்மையை விரித்துரைப்பதரிதென்க.

16. கண்டகாலினியனவுமெவர்க்குங்காண்டற் கரியனவு
முண்டகாலாங்கண்ணுனுண்டவின்ப முயர்வீட்டைக்
கொண்டகாலதற்குவமைகுணிப்பரல்லாற் கொங்கலர்க்கோல்
விண்டகால்வரம்பூண்டோய்மதியாரிங்கண் மேதினியார்.

உரை.— அங்ஙனந் திருவடியடைந்தமோயிசன்காணும்படி யெவர்க்குமரிதாய்க்கண்டபின்பு பேரின்பத்தைப்பயக்குங் காட்சியைக்கண்டான், கண்டவற்றைமனதிலுண்டபோ தவனங்கேநுகர்ந்தவின்பத்தின்தன்மைக் கோருவமை மனிதர்நினைக்கும்படி பரமகதிவீட்டிற் கவர்சேர்ந்த பின்பு கூடுமொழியப் பூவுலகிலிருக்குமளவும் மதிக்கமாட்டார், வாசபூங்கொடி யுன்கையின்மலர்ந்தவளவிலே மட்டில்லாவரங்களை யடைந்தணிந்தருசையேயென்க.

17. முறைகெழுநற்கேள்வியினூற்புலமைமிக்க மோயிசனுங்
குறைகெழுநற்கனத்துலகங்கடந்துநிற்ப வொளியணிவான்
றுறைகெழுநற்காட்சியினோடின்பப்பவ்வந் தோய்ந்துவப்ப
மறைகெழுநற்பயனுரைத்தவிறைவனிச்சொல் வழங்கினனால்.

உரை.— அங்ஙனம் நன்முறைபற்றியகேள்வியா 'லடைந்தநூலெல்லாங்கடந்த வுணர்வின்மிக்கமோயிச னம்மலைமுடிமேற் றுளிபெய் மேகமண்டலங்கடந்திருந் தழகணியாகவொளிநிலமாகிய வானத்தின்துறையில் வழங்கியகாட்சியுமடைந்து நிறைபேரின்பக்கடலில்முழுகிக்களிகூர்ந்திருந்தவளவிலே வேதப்பயனை யுரைத்துத்தந்த நாதனிவற்றைச்சொன்னுனென்க,

18. பல்லுயிரைவியவொனப்படைத்தபின்னர் பாத்திபர்போ
னல்லுயிரையடைந்தமனுக்குலத்தோராக்கி நல்வினையும்
புல்லுயிரையடும்வினையுமறிந்திரண்டிற் புலன்றேற
வல்லுயிரையீந்துரிவேண்டுதல்வேண்டாமை வகுத்தனனே

உரை.— ஆண்டவன் மோயிசற்குரைத்ததேதெனில் மனிதரொழியப் பூவுகிலுள்ளபல்லுயிர்களை மனிதருக்கேவல்செய்வோர்போல வூழியஞ்செய்யும்படி நானேபடைத்தபின்ன ரவ்வுயிர்களையாளும்படி யரசர்போல நல்லுயிர்பெற்றமனுக்குலத்தோரையுளவாக்கி நல்வினையும் புல்லறிவாள ருயிரைக்கொல்லுந்தீவினையுமறிந் தவ்விருவினையுட் டீயவைநீக்கி நல்லவையடையும்படி யுளந்தேறுதற்கு வல்லமையுந்தந்து அதற்குரிதாய்நினைத்தவற்றை வேண்டுமென்கவும் வேண்டாமென்கவும் வல்ல மனத்தைக்கொடுத்தேனென்க.

19. தனத்தெழுதிவைத்ததெனவுறுதிஞானத் தகுதியினுன்
மனத்தெழுதிவைத்தமறைமறையத்தீமை மல்கியதாற்
கனத்தெழுதிவைத்தமினலொத்தவாழ்க்கை காதலித்துப்
புனத்தெழுதிவைத்தபொருளொத்தவ்வேதம் புறத்தொழிந்தார்.

உரை. — நானேபொற்றகட்டெழுதினுற் போல ஞானமென்னுமெழுத்தினுல் மனிதர்மனத்தி லவைையுண்டாக்கினபொழுதே யெழுதிவைத்தவேதம் பின்புமறையும்படி யவர்செய்தபாவங்கள் மிகுந்ததனுல் மேகத்தின்மேலெழுதப்பட்டமின் போலொளிதங்கொழியுமிப்பூவுலகின்வாழ்க்கை விரும்பி மலைநின்றிழியு மருவிமணல்மேலெழுகிய கல்விப்பொருளழிந்ததுபோ லவ்வேதநூலழியும்படி யதைவிட்டொழிந்தாரென்க.

20. மருள்மொய்ப்பத்தீவினையுமிருளுமொய்த்து மனுக்குலத்தோர்
ரிருள்மொய்ப்பமனத்தெழுதிவைத்த நுண்மா ணெழுத்துணராப்
பொருள்மொய்ப்பத்திரிந்தந்தோகுருட்டால்வீழ்வர் புகலிலென்
வருள்மொய்ப்பக்கல்லிடையம்மறையைத்தீட்டி யளிப்பலென்றான்.

உரை.—அங்ஙனம் மயக்கமிகுதியாற் பாவங்களு மந்தோடுளத்தினிருளுமொய்த்து மொய்த்தவிருளாகியவஞ்ஞானத்தால் மனிதர்தம்மனதிலே நுண்மையாகவெழுதப்பட்ட வேதநூலெழுத்துங் கண்டுபிடிக்கமாட்டாமற் செல்வப்பொருள்களைமாத்திரந்தேடி யஞ்ஞானக்குருட்டினு லடோறு மையோநரகத்திலேவிழுகின்றுரொன்று நான்தயைமிகும்படி யவ்வேதநூலைக் கல்லின்மே லெழுதித்தருவேனென்று னண்டவனென்க.

21. மின்னல்லானிகர்ப்பரிதோரெழுத்துத்தீட்டி விதித்திருகல்
லென்னல்லாலிறைமையுளாருமக்கில்லாவீ ரொனைமெய்மை
தன்னல்லாற்சாட்சிவையீர்திருநாளாடித் தவிர்கில்லீர்
மன்னல்லாரணமிதுவென்றிருகல்கொள்முவ் வாசகமே.

உரை.—அங்ஙனம்நாதன் சொன்னவளவிலே மின்னெப்பொழிய வுவமையில்லா தழகியகோரெழுத்தெழுதிய விரண்டுகல்லைக்கொடுத்தான். நிலைகொண்டநல்வேதமாக முதற்கல்லிலேமூன்றுவாசகமெழுதப்பட்டன, அவற்றுள் முதலாவது: என்னையொழியத் தேவத்துவத்தையு

டையோ னென்று வேறொருவரு மமக்கில்லாதேபோவதாக. 2-வது. ஆணையைக்கொண்டு மெய்ப்பொருட்கொழியப் பொய்ப்பொருட்கென் னைச் சாட்சிவையாதிருப்பீராக. 3-வது. என்னையாராதனைசெய்யும்படி குறித்த திருநாட்களைக்கொண்டாடத் தவிராதிருப்பீராக. இம்மூன்றுங் கடவுளைநோக்கி முதற்கல்லிலே யெழுதியவேதவிதிகளென்க.

22. தந்தைதாய்வணங்குமினீர்கொலையேசெய்யீர் தவிர்காம
நிந்தையாயூடில்லீர்களவீர்பொய்யீர் நிலைப்பிறரில்
சிந்தையாயிரீர்பிறர்கைப்பொருளைவெஃகீர் தீங்கிதுவென்
றெந்தையாய்ந்திரண்டாங்கல்தீட்டிவைத்த வேழ்விதியே.

உரை.— இரண்டாங்கல்லிலேயவென்னி லேழுவாசகமெழுதப்பட் டன, அவற்றுள் முதலாவது: பிதாவையுமாதாவையுஞ் சங்கித்திருப்பீ ராக. 2-வது. கொலைசெய்யாதிருப்பீராக. 3-வது. தன்றாரமொழிந்தத விர்ந்தகாம நிந்தையென்று புணராதிருப்பீராக. 4-வது. களவுசெய்யா திருப்பீராக. 5-வது. பொய்யைச்சொல்லா திருப்பீராக. 6-வது. பிறர் தாரத்தைவிரும்பாதிருப்பீராக. 7-வது. பிறர்கைப்பொருளை யபேட்சி யாதிருப்பீராக. இவையேழும் மனிதர்தம்மைநோக்கிச்செய்கடன் முறைக ளாக விரண்டாங்கல்லிலெழுதிய வேதவிதிகளென்க.

23. மின்முகத்துப்பொறித்தவணியிருகல்லேந்தி வெஞ்சுடர்போ
னன்முகத்துமோயிசன்வில்வீசிவெற்பின் னயந்திழிந்தான்
புன்முகத்துமனுமகனிந்நாதனந்நாற் பிரிந்தமையாற்
றன்முகத்துத்தாட்பணியவுற்றதென்றான் சட்சதனே.

உரை.— அங்ஙனம் பத்துவாசகமாகமின்சாயலினழகுபெற வன்றெ ழுதிய வவ்விருகல்லையாண்டவன்தரக் கையிலேந்திச் சூரியன்போல மோயிசன்தன்முகத்தொளியைவீசி யம்மலையுச்சியினின் றுளமகிழ்ந்தி றங்கினான். இக்காலத் துங்களிடத்துப் புன்முகங்காட்டி மனுமகனனவிக் கடவுள்தானே யக்காலத் தவ்வேதநூலைவிதித்தவனகையி லவன்திருமுக த்திற்சென்று மலர்ப்பாதத்தைவணங்கவந்தோமென்றான் சட்சதனாகிய வானவனென்க.

## III. வேறு.

24. பண்ணொன்றுபாடலொத்த பயனெலாமிமிழிற்கேட்டுக்
கண்ணொன்றுமகனுந்தாயுங் கண்ணிமையொன்றிக்காத்த
மண்ணொன்றுபைம்பூங்கோலான் மகவினைவாழ்த்தியாரும்
விண்ணொன்றுவெற்புவேத வெற்பெனவணங்கிச்சேர்ந்தார்.

உரை.— அங்ஙனம் வீணையோடிசைபடப்பாடினாற்போலச் சட்சத ன்சொன்னவுரைப்பயனெல்லாவற்றையு மினிதாய்க்கேட்டுத் தனக்கிரு கண்களாகத் திருக்குமாரனையு மவனையீன்றபரமதாயையுந் தான்கண்

ணிமையாகவோம்பிக்காத்து வலங்கரித்த பூங்கொடியேந்தியருசைமகிழ்ந் து திருக்குமாரனைவாழ்த்தி யொருங்குடன்கூடி வானத்தொன்றிவளர்ந் தமலையினடியிலே வேதமலையென்று வணக்கத்தோடுசேர்ந்தானென்க.

25. நீர்தவழ்தழலிற்கஞ்ச நிரைத்தநீள்வாவியங்கண்
ணோர்தவழ்முகைகடண்டா திழிந்ததேனினிமைவெஃகி
வார்தவழ்முரசுவாட்டி வண்டொடுதேனுமார்க்குங்
கார்தவழ்சினைகணீண்ட காவிடைவதிந்துநின்றார்.

உரை.—சீனயிமாமலையடியிற்சேர்ந்து நீரிற்றவழு நெருப்புப்போல வொழுங்குபடச் செந்தாமரைமலர்ந்த நீண்டதடாகத்தப்புறத்தழகியவ ரும்புகள் விரித்த குளிர்ந்தபூந்தாதுமிழ்ந்த மதுவின்மதுரத்தைவிரும் பி வார்கட்டியமுரசொலியினு மாண்வண்டும் பெண்வண்டுமொய்த்து மு ழங்காநிற்க மேகங்கள்தவழ்ந்துசூழு முயர்ந்தகொம்புகளைநீட்டிய சோ லையிடத்து வந்திருந்தானென்க.

26. பார்கெழுமடந்தையீன்ற படர்தருகைத்தாயாம்வான்
கார்கெழுமுலைதழீய கரமெனச்சினைகணீட்டி
நீர்கெழுபாலுண்டப்பா னிழன்றுதன்றாயைக்காக்க
வேர்கெழுகைத்தாய்நோக விகன்றெளியொளிக்குங்காவே.

உரை.— அவரங்கிருந்த வப்பூஞ்சோலைவனப் பெத்தன்மையதென் னிற் பூமியாகியமடந்தைபெற்ற மரங்களைவளர்த்த கைத்தாயென்று வா னமாகி யம்மரங்கள் வளர்ந்து கைத்தாயாகிய வானத்தின் முலையென்னு மேகங்களைக் கையாற்றழுவினாற்போலக் கொம்புகளை மேகத்துள்ளே நீட் டியம்முலையாகியமேகங்கள்பொழிந்தபாலாகிய மழைநீருண்டு செல்வத் தோங்கியபின்பு தம்மைப்பெற்றதாயாகிய பூமியைக்காத் ததற்குநிழலைச் செய்யும்பொருட்டுத் தம்மைவளர்த்தவழகியகைத்தாயாகியவானின் மனம் நோகும்படி யதைப்பகைத்து வானொளிதோன்றாதபடி மறைத்தொளி க்குஞ் சோலையதுவென்க.

27. சிலைவளர்நாணிற்கையின் சேர்ந்தடர்ந்திறுகப்பின்னிக்
கலைவளருணர்விணோங்கிக் கள்ளுண்டார்தலையினாடி
விலைவளர்மகளிர்நெஞ்சின் வெயிற்பகலிருளிற்றாகி
யலைவளரொலியினார்க்கு மலர்முகத்தலர்ந்தகாவே.

உரை.—மீளவும் வில்லினாணிபிடித்த விரற்போற்கிட்டித் தம்மி லட ர்ந்திறுகப்பின்னப்பட்டுக் கற்றோருணர்வுபோலுயர்ந்து, உயர்ந்தவுச்சி யிற்கள்ளையுண்டவர்போலத் தலையேயாடி விலைமாதர்நெஞ்சினைப்போல வுச்சிப்பகலினுமிருண்டதாகிக் கடலொலிபோலவண்டுகளாலும் பறவை களாலு மிடைவிடாமல்முழங்காநிற்கு மகன்றபூஞ்சோலையது வென்க.

28. பூவிடையளிகடுஞ்சப் பொதும்பிடைமயில்கடுஞ்சக்
கோவிடையன்னந்துஞ்சக் கொம்பிடைக்குயில்கடுஞ்ச
மாவிடைமுசுகடுஞ்ச மருளிடையிரவுதுஞ்ச
நாவிடையுரைகடுஞ்ச நலமெலாந்துஞ்சுங்காவே.

உரை.— மீளவு மப்பூஞ்சோலையிற்பயமின்றிப் பூவிடத்து வண்டுகளுமரப்பொந்திடத்துமயில்களு மங்கங்கேமாருதுநின்ற நீரிடத்தன்னங்களுங் கொம்புகளிடத்துக் குயில்களு மாவிடத்துக்கரியகுரங்குகளு மிவையெல்லாமினிதாய்த்துயில் கொள்ளவே தன்பகையாகியகதிரொளிநுழையப்படாத விடமாகையி லிருளின்மயக்கத்திடத்துப் பயமின்றியிராத்தூங்கவும் மனிதரண்டாத விடமாகையில் வாய்மொழிகிளம்பாமற்றூங்கவும் பலவழகெல்லாங்குடியாய்நின்று தூங்குச்சோலையதுவெனக.

29. இணங்கியமலர்க்காவங்கண் ணெரிமுகத்தனுங்கிற்றன்ன
வுணங்கியதருவைக்கண்டா ருவந்துதாம்வதிந்தபின்ன
ரணங்கியந்திலையும்பூவு மணிந்தவத்தருவேதம்மை
வணங்கியதன்மைகோலி வனப்பரிதணியக்கண்டார்.

உரை.— அத்தன்மைத் தலர்ந்தசோலைக்கப்புறத்தருகே தீப்பட்டெரிந்து வாடினாற்போல வுணந்ததொருமரத்தைக்கண்டார். மீளவு மவரங்கிருந்தபின்ன ரழகியவிலையும்விட்டுப் பூவும்பூத்த வம்மரந்தானே தம்மை வணங்கினாற்போலத்தலையைவளைத்து மிக்கரியதோர்வனப்போடு நிற்கக் கண்டாரென்க.

30. தீய்நிறப்பவளக்கொம்பின் மரகதவிலைகடீர்ந்து
தூய்நிறத்தரளமொட்டுந் தூய்மணிமலரும்பூத்துக்
காய்நிறத்திலங்கவெண்பொன் கனகநற்கனிகள்காய்த்து
மீய்நிறத்தருவின்வண்ண மீவளர்வண்ணம்போன்றே.

உரை.— அம்மரமணிந்த வரும்வனப்பெங்ஙனமென்னில்: தீப்போற்சிவந்த பவளக்கொம்புகடோறு மரகதமணியேயிலைகளாகத்தளிர்த்துத் தூயவெண்முத்துக ளரும்பாகவு மாணிக்கமணியேபூவாகவும்பூத்து வெள்ளியாற்காயும் பொன்னாற்கனிகளும்பழுத்து மேலெழுந்துயர்ந்த வம்மரத்தழகுவானத்தில் வழங்குமழகின்தன்மையிதாயிற்றென்க.

31. நளிவளர்மலர்க்கோற்சூதை நயந்திவைவியந்துநோக்கிற்
களிவளருவப்புமாறக் கதத்தவான்றிசைகளுன்கில்
வளிவளர்பகையில்வீசமரங்குழைந்தழுங்கிவாடி
வெளிவளர்சினைகளூறி வீழ்வதுபோலக்கண்டான்.

உரை.— குளிர்மலர்ப் பூங்கொடியேந்திய சூதையதிசயித்துளமகிழ்வெய்தி யங்ஙனமரிதழகணிந்தமரத்தைப் பாராநின்றவளவிலே யவனுட்கொண்டமகிழ்ச்சிமாறும்படி நாற்றிசையில் வானங்கோபித்தாற்போல

மிக்க பகையோடு பெருங்காற்றதிர்ந்தடித்தமையா லம்மரங் குழைந்து பொலிவழிந்தொருங்குவாடி மேல்வளர்ந்துயர்ந்த கொம்புகளெல்லாம் முறிந்துவிழுந்தாற்போலக்கண்டானென்க.

32. படம்புனைபொறித்தமாமை பட்டறவிலையுமின்றி
விடம்புனைபட்டகாலால் வியன்றருக்கெட்டதென்று
வடம்புனைதவத்தைப்பூண்டோன் மதித்துளத்தனுங்குங்காலை
சடம்புனையணிலங்கையாற் றகைத்தெனநின்றதன்றே.

உரை.—எழுதப்பட்டசித்திரப்படம்போ லம்மரத்தழகெல்லா மங்ஙனம்பட்டறும்படி யிலையுமின்றித் தீண்டினநஞ்சுபோலப்பட்டகாற்றினா லம்மரங்கெட்டதென்று மணிவடமாகத்தவத்தைப்பூண்டசூசை மனததிலெண்ணிவருந்தாநிற்கக் கொடுமையோடடித்தகாற்று கையாற்றடுத்துமறிபட்டாற்போலநின்றதென்க.

33. அற்றதென்றலைந்தசாகி யணிலமற்றொழிந்தபோழ்து
செற்றதென்றரிந்தகீடந் தீண்டியகனிகளெல்லான்
மற்றதென்றொன்றுங்குன்றா வனப்பெழியிலங்கச்சூசை
யுற்றதென்றுணர்த்தியென்றா னுவந்துசட்சதனுஞ்சொன்னான்.

உரை.— அங்ஙன மடியற்றழிந்ததென்று நின்றமரமேகாற்றுநின்றொழிந்தவளவிலே கெடும்படி குடைந்தபுழுதீண்டினகனிகள் விழுந்தனவொழிய மற்றொன்றுங்கெடாமல் முன்னிருந்தவழகோடம்மரம் விளங்காநிற்கக்கண்டசூசை யிதேதென்றுசொல்வாயாகவென்றுகேட்கச் சட்சதன் மறுமொழிசொன்னானென்க.

## IV. வேறு.

34. எல்லுடைச்சரங்களிரவறவெழுதி யிரவிசேருதயமாமலை
போன்
றல்லுடைப்பாவமருளறப்பரம னருளியசுருதிநூலுதித்த
செல்லுடையணிந்தெங்கணும்பெயர்சிறந்த சீனயிமாமலைச்சார்
பிற்
றொல்லுடைச்சுருதிமாண்பியல்காட்டத் தோன்றியதருவிதாம
[ன்றே.

உரை.— சட்சதன்சொன்ன மறுமொழி யாதென்னில்: இராவிருள் கெடும்படி வெங்கதிர்ச்சரங்களைத்தொடுத்துச் சூரியன்வந்துதோன்றினவுதயகிரியேபோலப் பாவத்தால்வந்தமயக்கத்திருளேகெடும்படி பரமநாதனருளிச்செய்தவேதநூல் ஞானவொளிவிட்டுதித்தவிடமாய் மேகங்கள் போர்வையாகச்சூழ்ந் தெங்கும்பெருஞ்சிறப்பில்வழங்கிய சீனயிமாமலைச்சார்பிலேமுன்னைத் துலகோடுபிறந்த வேதத்தரியமாட்சியினியல்பினைக் காட்டும்படி தோன்றினமரமிதுவென்றானென்க.

35. திட்டியவிருகல்லேந்திமோயிசன்போய்த் திசைகளுன் [ருவு
குறைத்தநன்மறைநூல்
காட்டியநெறிசென்றெழுகமன்னுயிர்கள் களிப்பிலிக்காவிலித்த
நீட்டியசினைவிட்டுறைமுகினக்கி நிகர்ப்பரிதெழுதியமாமை
யீட்டியமணிப்பூஞ்சினைகளைப்பரப்பி யிருநிலநிழற்றிநின்றதுவே.

உரை.— அம்மரமெங்ஙனம் வேதத்தியல்பினைக்காட்டினதென்னில்: முன்சொன்னபடி நாதனெழுதினவேதக்கல்லிரண்டுங் கையிலேந்தி மோயிசனிம்மலையினின்றிறங்கி நாற்றிசையிலுஞ் சொன்ன வத்திருவேதநூல்வழி மனிதரெல்லாரும் வழுவாமலொழுகிவந்தமகிழ்ச்சியா லிக்காவிடத்திம்மரமு மக்காலத்து சீளயாய்த்தாழவேர்விட்டு நிகரிலலாதழகிதாகவெழுதப்பட்ட மணிப்பூங்கொம்புகளைத் துளிபெய்மேகங்களை நக்கினாற்போல வுயர்ந்துபரப்பிப் பூமியைக்காத்த குளுநிழல்செய்யாநின்றதென்க.

36. இன்புறவுயிர்செய்யித்தருக்கனிக ளியாமுணப்பிறர்கையி [ங்கா
லிரந்து
துன்புறப்போவலென்னெனப்பலருஞ் சூழ்ந்துதங்காவினஞ்சுகு
யன்புறவினிதென் றருந்தெனப் பலபொய் யாரண மெங்கணும் விதித்த
பின்புறமலர்ந்தவித்தருநொந்த பெற்றிபோன்மெலிந்ததுமாதோ.

உரை.— பலநாள்கழிந்தபின்பு மனிதர்பலரு முயிர்தருமிம்மரத்தினியகனிகளையுண்ணும்படி நாம்பிறர்கையிலவற்றையிரந்துவாங்க வருந்திப்போவதென்னவென்று தங்காட்டிலே காய்த்தநஞ்சுக்காய்களையாசையோடின்பமென்றுண்டாற்போலத் தாமேபலபொய்ச்சமயங்களை வேதமென்றுவிதித்தபின்பு மலர்ந்தவிம்மரம் நொந்தாற்போல மெலிந்ததென்க.

37. மனத்தெழுஞ்சுருதிமெலிந்தனவளவில் வனப்பெலாமொழி [க்க
ந்துதாமெலியக்
கனத்தெழுங்கொம்பர்வாடலேகண்டீர் கருணையோடிப்பிரான்மா
வினத்தெழுந்தெங்குமிம்மறைவழங்கு மென்றிவனெய்தியமுகத் [டீர்.
திற்
றனத்தெழுமலருங்கனிகளும்பூத்து தருவெலாமுவந்ததுகண்

உரை.— அங்ஙன மனிதர்மனதிலே வேதமெலிந்தவளவதாக விம்மரந்தானுந் தன்னழகொழிந்து மெலிவுகாட்டி நீர்வரும்பொழுது மேகத்துயர்ந்தகொம்புகள் வாடாநின்றனவென்றுகண்டீரல்லோ? இனிநற்கருணைபுரிந் திக்கடவுளவதரித்து மனிதனுகியதன்மையா லிவ்வேதமெங்கும் பரம்பி வழங்குமென்றதனு லிவன்வந் திங்கே தன்திருமுகத்தைக்காட்டினவுடனே யிம்மரமும் பொன்னழகொத்தமலரும் பூத்துக் கனிகளும்பழுத்து மகிழ்ச்சியடைந்ததுகண்டீரல்லோவென்க.

38. செல்லின்மேல் வரையில்வரைந்த நூலிவன்றன் றீட்ட வோர்விலங்கலுமேறிக் [ச்சுருதி
கல்லின்மேல்வரைந்தவெழுத்தொழிந்தாகக் கண்டருந்தயையின
யெல்லின்மேல்மிளிர்தன்னுடலமேடாகவிருப்பயிலாணியாற்பொ றித்து [ய்வான்.
வில்லின்மேலவிர்செம்புனலின்மையிட்டு மெலிவறவிளங்கலேசெ

உரை.— அவதரித்தகடவுளால் வேதமெங்ஙனம் பரம்புமென்னில்: முன்னாளிலே மேகங்களைக்கடந்த விம்மலையுச்சிமேலெழுதப்பட்டவேத நூலிக்கடவுளால் மீட்டெழுதும்படி தானுமொருமலையுச்சிமேலேறிக் கல்லிலேபதித்தவெழுத்துகளொழிந்தனவென்று கண்டு தான்தயைபுரிந் து சூரியனைப்பவிளங்கிய தன்திருமேனியேயேடாகக்கொண்டு கூர்ந்த விருப்பாணிகளா லவ்வேதநூற்பொறித்தெழுதிச் சிந்தின தன்திருக்கு ருதியென்னும் விளங்கியமையையிட்டுப் பிற்காலத்துமெலியாதபடி வே தம்விளங்கவே செய்வானென்க.

39. நனைமுகத்துவந்துநக்கவித்தருப்போ னரதெய்வகுமாரனீங் கருளும் [யெழுந்து
வினைமுகத்தெழீயமறைவனப்பெய்தி வெருண்டநாற்றிசைவளி
முனைமுகத்தடித்ததன்மையின்மறையை முருக்கிடப்பலமதத்தா ருங் [னவே.
கனைமுகத்துலகுமலகையுமுடனுங் கதத்தநாற்பகைகள்மொய்ப்ப

உரை.— அங்ஙன மிவன்திருமுகத்து மலர்ந்துமகிழ்ந்தவிம்மரம்போ ல நரதேவனாகியவித்திருக்குமாரன் செய்யுமருளின் வினைகளாற்பொலி வுபெற்றவேதமு மரும்வனப்படையவேகத்தோடு நாலுதிசையிலெழுந் த பெருங்காற் றரும்போர்பொருதாற்போலவடித்ததன்மையா லிவனால் வழங்கியவேதத்தைக்கெடுப்பதற்கெதிர்த்த நாலுபகைகளாகப் பலபுறச் சமயத்தாருமுலகின்தீயவியற்கையும் பாவம்விளைவிக்கும்பசாசுகளும் பெ ண்ணாசை பூணாசையென்றிருபுறதாவழுவி நன்னெறிநிற்பதறியாவுடலு மென் றிவைநான்குமொய்த்து வேதத்திற்குப்பகைசெய்வனவென்க.

40. வேரறவடித்தவளியெனவெங்கும் விளைத்தபற்பகையிவன ருளா
னேரறநீங்கிக்கிருமிதீண்டியகாய் நிகர்த்தபற்றெஞ்சினரல்லாற்
பேரறநல்லோர்சிதைவுறவாழ்ந்து பெயர்கிலமறையொடுபொலி ந்து [ன்.
சூரறநிற்பாரித்தருப்போன்றித் தோன்றல்செய்யுறுதியாலென்று

உரை —அங்ஙன மந்நான்கு மிவ்வேதத்தைதப்பகைத்தாலும் வே ரோடிம்மரத்தைப்பிடுங்கும்படி யடித்தபெருகாற்றுநின்றதுபோல வெ ங்கும்விளைந்த வேதபகையெல்லா மிவன்தன்தயையால்நீங்கிப் பலபுழுத் தீண்டின காயொன்றேகாற்றுமுகத்து விழுந்ததுபோல வேதத்தின்மே

லுறுதிபற்றுதலில்லாதவரொழிய நல்லறவியல்பினோ ரொருவருங்கெடாமல்வாழ்ந் தெக்காலத்தும்விட்டுப்பிரியாத §வேதத்தோடுபொலிவடைந் திம்மரம்போல வித்திருக்குமாரனுதவியால் குளிரமலர்ந்து துன்பமின்றி நிற்பாரென்றான் சட்சதனென்க.

41. இனையனகேட்டவிருந்தவத்திறைவ னேந்தியமகவினைநோக்கித்
தனையனவுலகம்படைத்திநின்கருணை தளிர்ப்பநற்சுருதிநூலுரைத் [த்தி
யனையனபோராமைந்தனுயுதித்தி யம்மறைவழங்கநோயுற்றி
முனையனவுலகத்தோருனைப்பகைத்துமுதிர்துயரமுழந்துதியந்தோ.

உரை.— சட்சதனென்னும்வானவனுரைத்த யாவையுங்கேட்டநற்றவத்திறைவனாகியசூசை தானப்பொழுதேந்திய தேவசூழ்ந்தையைநோக்கிச்சொன்னான்: திருக்குமாரனே! நீயே யுலகங்கள்யாவையு முண்டாக்கினாய், நீயே யுன்தயைதளிர்த்துமிகும்படி வேதநூல்விதித்துரைத்தாய், இவையெல்லாம் போதாதென்று நீயே யிக்காலத்தவதரித்து மகனாய்ப்பிறந்தாய், இனிநீ யையோ வவ்வேதம்வழங்கும்படிநோய்கொண்டுவருந்திச்சினந்தவுலகத்தோருன்னைப்பகைத்துப் பெருந்துயர்க்கடலிலமிழ்ந்துவாயே யென்றானென்க.

42. இன்னொளிமகவேநினைப்பகைக்கினுநீ யீந்தநூற்பகைக்கினுங்கயவர்
பொன்னொளிசுடரச்சுடுந்தழலினையப் புன்கணாற்பொலிவுறப்பெருகி [ருகி
நின்னொளிகுன்றாநின்மறைகுன்றா நினைத்தநின்னருட்டொழில்முடிப்பாய்
மன்னொளிமதுகையோயெனக்கண்ணீர் மலரடிக்கணியெனப்புனைந்தான். [னைந்தான்.

உரை.—இன்பஞ்செய்கதிர்வீசிய திருமுகமகனே! அங்ஙனம் பாவிகளுன்னைப்பகைத்தாலும் நீயுரைத்தவேதத்தைப்பகைத்தாலும் நெருப்புச்சுடச்சுடச் சுடரும்பசும்பொன்போல வவர்களால்வந்த துன்பங்களைக்கொண்டு பொலிவாகப்பெருகிவளரு முன்னொளிப்புகழுங்குறையாது, உன்வேதத்தியல்புங்குறையாது, நீ நினைத்ததயையின்றொழிலை யிடையூறின்றிமுடிப்பாயே, நிலைகொண்டுயர்ந்தபுகழின்மிக்கவல்லமையுடையோனே யென்று சூசைதானழுதுதிர்த்த கண்ணீரோ யவன்திருமலர்ப்பாதத் தாபரணமாகப் புனைந்தானென்க,

## V. வேறு.

43. சினைவருங்கனிதீஞ்சுவையுண்டபின்
னனைவரும்பொழினின்றுநடந்துபோய்க்
கனைவருங்குளிர்கால்சவரஞ்செயச்
சுனைவருஞ்சுருதிக்கிரிநீங்கினார்.

உரை.— இவையெல்லாமாகிக் கொம்பிற்பழுத்த வினியகனிகளையுண்டபின்பெழுந்து மலர்பூஞ்சோலையினின்று போயொலிபடக்குளிர்ந்து வீசினதென்றல் வெண்சாமரையாகச்சுனையூற்றொழுகிய வேதமலையை நீங்கினானென்க.

44. நீங்கியாயினயாவையுநீங்கில
ளோங்கியார்வமுணர்ந்துடிபூண்டனள்
பாங்கியாழிளகிப்பரிவோதைகொண்
டேங்கிறாலெனவேங்கியியம்பினாள்.

உரை.— அங்ஙனஞ் சீனயிமாமலைநீங்கியகாலத்துமங்கேயானதெல்லா மறவாமற்றன்மனத்தோங்கியவன்பினையுணர்ந்து வான் மீன்களை முடியாகச்சூழ்ந்த மரியென்பவள் வீணைநரம்புகளிளகித் துக்கவோசையோடேங்கினாற்போல வவளுமனதிலேங்கிச் சொன்னாளென்க.

45. நாதனோதியநன்மறைநாகமேற்
சாதவாரணச்சாகியென்கோவியா
னாதனாயினபூம்பொழிலாங்குள
தேதமீருயிர்ச்சாகியென்கோவியான்.

உரை.—நாங்கண்ட வழகிற்சிறந்தமரமே பரமநாதனுரைத்த வேதமலையிலுள்ள மெய்யானவேதமர மென்பேனோ, முன்னாளிலாதிமனிதனாகியவாதனென்பவ னிருந்தபூங்காவனத்திலுள்ள குறைதீர்ந்தவுயிர்மர மென்பேனோ வென்றாளென்க. (ஆதனிருந்தபூங்காவன நடுவில் வைத்த வொருமரத்தின்கனிகளையுண்பவ ரெக்காலத்துஞ்சாவின்றி வாழ்வரென்றதற்குயிர்மரமென்னும் பெயராயிற்றென்க.)

46. உம்பரின்சுவையிக்கனியுண்டுநீள்
கொம்பரின்னிழற்கீழுறைகோதிலா
ரம்பரின்புறுமண்டலொன்கோவியா
னிம்பரின்னுயிர்வாழ்வரொன்கோவியான்.

உரை.— வானவரமிர்தச்சுவைபோ லினியவிவ்வேதமரத்தின்கனிகளையுண்டு நீண்டுபரந்தவதின்கொம்புகள் செய்யும்நன்னிழற்கீழிருக்குங் குறையற்றவரெல்லாரையு மவ்வுலகில்வாழும் வானவரொன்பேனோ! இவ்வுலகிலினிதாய்வாழ்பவரொன்பேனோ வென்றாளென்க.

47. அறத்துச்செவ்வழியாரணமெந்தைகைத்
திறத்துத்தீட்டியசீர்பெரிதென்கனோ
மறத்துத்தேரிலமாக்களதுட்கொளாப்
புறத்துப்போக்குபுரைபெரிதென்கனோ.

உரை.— நல்லறத்தொழுக்கம்வழுவா நன்னெறியாகிய வேதநூலை யாண்டவன் தன்கையாலெழுதித் தந்ததையின்னன்மைபெரிதென்பே ளே? செய்தபாவமயக்கத்தாற் றெளியமாட்டாத மனித ரங்ஙனமெழு திய வேதமுட்கொள்ளா ததைப்புறத்து நீக்கியபாவம் பெரிதென்பேனே வென்றுளென்க.

48. தொல்லின்றம்மனத்தாசறத்தோன்றிய
வெல்லின்ஞெண்மறையிற்றெழுதினானெனச்
செல்லின்ஞேங்கியவின்னசிலம்புமேற்
கல்லின்றீட்டியவாண்டைகைகாட்டினான்.

உரை.— முன்னாளி லவனவன்தன் மனதிலே குறையின்றித்தோன் றிக் கதிரினும்விளங்கியவேதத்தை யவர்விட்டொழிந்தாரென்று மீளவு மதை மேகமண்டலங்கடந்த விம்மலையுச்சியி லிருகல்லின்மேலெழுதிய நாதன் மனிதர்க்கதைக்காட்டினானென்றுளென்க. (இது நாதன்தயை யைக் காட்டறகுரைத்ததென்க.)

49. தீட்டிக்காட்டியதிவ்விய நூல்புற
நாட்டிற்கற்றதெனுநரர்பற்கதை
பூட்டிப்போற்றருநூலெனப்பொற்பறங்
கோட்டிக்கோதுலகார்ந்தனகொள்கையே.

உரை.—அங்ஙனம் நாதனெழுதிக்காட்டின தேவநூலாகியவேதம் பு ற நாட்டிலேபடித்தநூலென் றதை நிந்தையாகத்தள்ளி மனிதர்தாமே ப லவீண்கதைகளைப்பூட்டி யதுவேபோற்றற்கரியவேத நூலென்றுசொல்லி நல்லறம்வளைந்துகெடும்படி பூவுலகிற் பாவங்கணிறைந்தனவென்றுளெ ன்க. (இதுவேதமுட்கொள்ளாத பாவத்தின்மைகாட்டற் குரைத்தெதெ ன்க.)

50. நஞ்சிதேயமுதிஃதெனநாடுதற்
கஞ்சியேநரர்தேறிலராதலா
னெஞ்சிலேயருணோரியவெந்தைநீ
யெஞ்சியேமறைகாட்டிடவெய்தினாய்.

உரை.—அங்ஙனம் நாதனுரைத்த வேதமொன்றொழிய மனிதர்பூட் டிய பலகதைகளும் வேதமென்றுவழங்கினதினா லவற்றுள் நஞ்சாகிய பொய்யிது வமிர்தமாகியமெய்யிதுவென் றுென்றினைத்தேடுதற்கஞ்சி ம னிதர்தெளிவின்றித் தேறமாட்டாமையி னீயே யென்னாண்டவனே! ம னதிலருளைநினைத்துமெலிந்தாற்போல மனிதனாய்ப்பிறந்து அப்பலவேத ங்களில்மெய்வேதமின்னதென்றுகாட்டும்படி வந்தாயே யென்றுளென்க.

51. பொய்யைக்காட்டியநின்னையும்பொய்யற
மெய்யைக்காட்டியவேதமுநூக்கினர்
கையைக்காட்டியுரைப்பவர்காதையே
மையைக்காட்டினுநூலெனவவ்வரோ.

உரை.— அங்ஙனம் பொய்யானவேதங்களைக்காட்டிய வுன்னையும் பழுதில்லாமெய்யைக்காட்டிய வுன்வேதத்தையுமனிதர்தள்ளித் தமக்கேதாகிலுந்தரச்சொல்லிக் கையைக்காட்டிச் சிலர் தம்மூதியத்தைப்பற்றிச்சொன்ன வீண்கதையை யதிலேகுறையுண்டென்றுகண்டாலும் வேதநூலென்று மனிதர்கொள்வாரோ வென்றாளென்க.

52. காவிவாட்டியகண்மணிக்காதலே
யோவிவாட்டியயுன்னுடல்புண்பட
வாவிவாட்டியகோடையின்மானிட
ராவிவாட்டியடும்பகைசெய்வரோ.

உரை.— பூங்கருங்குவளைமலரினு மழகியகண்மணியாகியவென்னன்பே! உன்திருமேனி வருநதி வாடிப்புண்படும்படி தடாகங்கள் வற்றுதற்குக் காரணமாகியகொடுங்கோடைபோல வெஞ்சினங்கொண்டமனிதருன்னுயிர்வாட்டிக்கொல்ல மனம்பொருந்தி யுன்மேற்பகைவைப்பாரோ வென்றாளென்க.

53. சுடரப்பொன்சுடுந்தீயெனத்தொன்மறை
படரப்பொங்கிவரும்பகைப்பாசறை
யடரப்பொன்றிலவாரணமெங்கணுந்
துடரப்பொம்மிவளர்ந்துவிளங்குமே.

உரை.— ஆகிலும் பொன் ஞெளிபெறும்படி சுடுந்தீப்போலத் தொல்லையுள்ளவேதம் படருங்காலத்துப் பொங்கிவரும்பகைசெய்யுந் துன்பவிடையூறுகளடர்ந்துமிகவே யுன்மொழிவேதங்கெடாம லெஃகுந் தொடைத்துடர் பாகப்பரந்துவளர்ந்து விளங்குமேயென்றாளென்க.

54. வேண்டியாவையும்வேண்டுவதன்மையா
லீண்டிலாக்கியவீடுளநின்னருட்
டாண்டிமாற்றுவரீங்கிலதாரணி
யாண்டியாருமளிக்குமிஞேவென்றாள்.

உரை.—வேண்டுமெல்லாவற்றையும் வேண்டுமென்றமாத்திரத்திலுடனேயாக்குதற்கு வல்லமையுடைய வுன்தயையைக்கடந்துமாற்றும்படி வல்லவ ரிங்கேயொருவருமில்லை, ஆகையா லென்திருக்குமாரனே! தயையாற் பூவுலகாண்டுகொண் டெல்லாரையுங் கரையேற்றி யிரட்சிக்கும்படி செய்வாயாகவென்று மரியென்பவள் தன்தேவகுமாரனை வணங்கினாளென்க:

55. கன்றொளித்தகறவையினின்னண
நன்றொளித்தநமக்கினைந்தாய்க்கதிர்
நின்றொளித்தவினேமியுமெய்ம்மறை
யென்றொளித்தமனத்தினிருண்டதே.

உரை.— மரியென்பவ ளிவற்றைச்சொல்லி யொளித்ததன்கன்றை நினைத்திரங்கினகறவைபோல விங்ஙனம்நன்மையிழந்தநமக் கவளிரங்கின பொழுதே சூரியனத்தமித்தொளித்ததனாற் பூவுலகும் மெய்யானவேதத் தைவிட்டறியாதவர்மனம்போல வெங்குமிருண்டதென்க.

56. அணிநிறத்தசினைப்படத்தாரொளி
மணிநிறத்தலர்ப்பந்தரில்வந்துபே
ரணிநிறத்தமரர்புடையார்ந்தரும்
பணிநிறத்தறம்பற்றினர்வைகினர்.

உரை.— அத்தமித்தவிடத்துச் சூழெழுங்குழூரில்லாமையாலழகிதா கத் தளிர்த்தமரக்கொம்புகள் விரித்தமேற்கட்டியாகவிளங்கியமணிச்சாய லின் மலர்ந்தபூம்பந்தற்கீ ழொதுங்கிப்பேரணியாகப் பதினாயிரம்வானவ ர்சூழக் காத்திருக்க வரியதோராபரணமாக நல்லறமெல்லாம்பற்றி யணி ந்த விம்மூவரவ்விராவிலே யிருந்தாரென்க.

சீனயிமாமலைகாண்படலம் முற்றும்.

ஆகப்படலம்–18–க்கு–விருத்தம்

1758.



## பத்தொன்பதாவது

# பாலைபுகுபடலம்.



### I. வேறு.

1. காரொழுநிசிகோன்மை கடியவில்லொளியம்பாற்
றேரொழுசுடர்வெம்போர்ச் செங்கொடியுயர்தோன்றப்
பாரொழுகளமெங்கும் பறவைகள்முரசார்ப்பப்
போரொழுபொழுதாகப் புலரிவந்திவர்போனார்.

உரை.— அங்ஙனம் மரியுஞ்சூசையுந் தேவதிருக்குமாரனைவைத்துக் கொண்டொருமரத்தடியி லிராவெல்லாமிருந்தபின்ன ரிருண்டவிராவின் கொடுங்கோன்மைகெடும்படி செஙகதிராகிய வம்புகளையேந்தித் தேர்மே லெழுந்து போர்செய்யவருஞ் சூரியன்முன்னர் சிவந்தகொடிகளையேந்தி முற்பாளையந்தோன்றினாற்போலக் கீழ்திசைவானஞ்சிவக்கவும் போர்க்களமாகியபூமியெங்கும் முரசடித்தாற்போலப் பறவைகள்முழங்கவும் போர்க்காலமாகியவிடியற்காலம் வந்தவளவிலேயிவரெழுந்தப்பாற்போனாரென்க.

2. வான்பயில்மதியேந்தும் வடிவடிவடிவாளுந்
தேன்பயில்மலர்வாகைத் திருமறையறையோனு
மூன்பயிலுருநாத னொளியடிதொழுதேந்திக்
கான்பயில்மலர்பூத்த கடிவனநெறிபோனார்.

உரை.— அங்ஙனம் வானத்திற்றோன்றியசந்திரன் தலைமேலேந்திய வடிவுள பாதத்தழகின்மிக்க மரியென்பவளுந் தேன்மலர்பூத்த கொடியை யேந்தி வேதம்வாழ்ந்திருத்தற்கமைந்தவறையாகியசூசையு முன்பொழியு டலையுடுத்து மனிதனாய்ப்பிறந்த நாதனைவணங்கிக்கையிலேந்தி வாசமலர்கள்பூத்தவழியே போனாரென்க.

3. துயிலெனவிரிபூங்காத் தும்பிகள்குழலாகக்
குயிலினமுழவாகக் குளிர்பொழிலரங்காக
மயிலினநடமாடு மதுவழிவழிநீக்கி
யயிலெனவழல்வீசு மருஞ்சுரநெறிபோனார்.

உரை.—எழுதியநற்பூம்புடவை கீழ்விரித்ததுபோ லிடைவிடாதுமல ர்ந்த பூங்காவிலெங்கும் வண்டுகள் வீணையாகவும் குயில்கள் பல வாத்தி யங்களாகவுங் குளிர்ந்தபூஞ்சோலைகள் நாடகசாலையாகவும் மயில்களாடா நின்ற மதுவைப்பொழிந்த வழியைவிட்டுக் கொடியவேலொத்தவழலை யெறிக்கும் பாலைசேரருஞ்சுரத்துப் போனானென்க.

4. நண்ணியபொருணீங்கி நல்குரவெதிருற்ற
புண்ணியமரபோருட் புலனயர்விலர்போன்றே
மண்ணியவனநீங்கி வசுகுடியுறைகானங்
கண்ணியநெறிபோகக் கண்டழுதனகாவே.

உரை.— அங்ஙனம் முன்னிருந்தசெல்வப்பொருள்போய்த் தரித்திர மெதிரேகொண்டவறவோ ருள்ளே மயங்காததுபோல விவருமகிழ்வோ டு மலராலலங்கரித்தபூஞ்சோலைவழியைவிட்டு நெருப்புக்குடியாயிருக் குங் கானத்தைநோக்கப்போவதுகண்ட பூங்காவெல்லா மிரங்கியழுதன வென்க.

5. பூவிடையழவண்டு பொதும்பிடையழமஞ்ஞை
காவிடையழவம்பூக் கடிமலர்தவழ்யாறு
தாவிடையழவந்தோ தகாதெனவழயாவுங்
கோவிடையரசாள்வோர் கொடுவனமருகுற்றார்.

உரை —அங்ஙன மிரங்கிப் பூவிடத்தொதுங்கிய வண்டுகளழவு மரப் பொந்திடத்தொதுங்கிய மயில்களழவுங் காவிடத்தெங்குமலர்ந்தபூவின மழவும் வாசமலரிடத்தொழுகுந்தவழுமாறுபாய்ந்தவிடமெல்லாம் மொ ல்லெனவழவு மையோபாலைவழிதருந்துன்ப மிவர்க்குத்தகாதென்று மற் றெதல்லாமழவும் வானுலகரசுடையோரிவர் கொடியபாலைநிலத் தண்டி னாரென்க.

## II. வேறு.

6. மேற்சபையாகவானோர் விருப்பெழீமருங்கிற்சூழ
நூற்சபையாகக்கற்றோர் நுதலியபுகழின்மிக்கோர்
கோற்சபையாகமூவர் கொடுந்துயர்குடியாய்வைகும்
பேற்சபையென்னுங்கானம் பெற்றுளந்தளராப்புக்கார்.

உரை.—அங்ஙனம் யீரையாயிரம்வானவர் விருப்பத்தோடிருமருங்கி ற்சூழ்ந்துவரவே கற்றநூலோ ருணர்ந்தபுகழின்மிக்கவிராசகோத்திரத்தி ன்மூவர்கொடியதுயரெல்லாங்குடியாயிருக்கும் பேற்சபையென்னும் பா லைவனத்துள் மனமயங்காமற் புகுந்தாரென்க.

7. காட்டியவிரலைத்தீக்கக் கண்டகண்விழியைத்தீக்கச்
சூட்டியகொடியகானஞ் சுடுமெனிலெனும்வாய்தீக்க
வீட்டியவழலையெண்ணி லெண்ணியமனத்தைத்தீக்கக்
கோட்டியமனத்திற்றீக்குங் கொடியதோர்சுரமதன்றே.

உரை.— அங்ஙன மவர்புக்க வனத்துக்கொடுமை யெத்தன்மைய தோவென்னில்: அதை விரனீட்டிக்காட்டினாற் காட்டியவிரலைச்சுடவுங் கண்டால்கண்டகண்ணைச்சுடவுமதுசுடுமென்றாலென்றவாயைச்சுடவு மங் கேகூடியசெந்தீ யிருதியைநினைத்தா னினைத்தமனத்தைச்சுடவும் வஞ் சத்தால்வளர்ந்தகொடியர்மனத்தைப்போல வேகுங் கொடியசுரமதுவெ ன்க.

8. புனப்பசையிழந்தகானிற் பொழிதுளியுள்ளிவந்தாற்
கனப்பசையிழந்துதாமுங் கார்த்திரள்கனன்றுவேக
வினப்பசையிழந்ததீயோ ரிரவலர்தம்மைக்கண்டு
மனப்பசையிழந்தகோர மானியசுரமதன்றே.

உரை.—நீரில்லாவப்பாலைவனத்தில் மேகங்கள் நீர்த்துளிபொழியு ம்படிவந்தாற் றாமுமீரமின்றித் தீந்துவேகவு மினத்தன்பில்லாததீயோ ரிரப்போரைக்கண்டவளவிலே மனத்தீரமின்றிக் காட்டியகொடுமையோ டொத்த சுரமதுவென்க.

9. தீய்வயிறார்ந்தகானுஞ் செஞ்சுடர்க்கதிருஞ்செந்தீ
மேய்வயிறார்ந்துவேகும் விரிமணற்பரப்புந்தீயாய்
நோய்வயிறார்ந்தகான நுடைநலமாதர்வஞ்சங்
காய்வயிறார்ந்தவாயுங் கண்களுமனமும்போன்றே.

உரை.—அவ்வனத்திடத்துத் தீநிறைந்துண்டு வீசியகாற்றுஞ் சூரிய ன்விட்டகதிரு நிறைவயிறுண்டகொடுந்தீயார்சுடும்விரிவாய்ப் பரப்பினமண லு மிம்மூன்றுந் தீயொத்தனவாகையிற் றுன்பநிறைந்தகானக மெத்த ன்மையதென்னில் விலையாகும்படி யழகினைப்பேணிய மாதர்போலாகி நி றைந்தவஞ்சத்தாற்சுடு மவர்வாய்ச்சொல்லொத்ததக்காற்று மவர்கண்பார் வையொத்த தக்கதிரு மவர்மனமொத்த தம்மண லுமென்க.

10. போர்முகத்தழன்றவீரர் புகைந்தெனப்புகைந்தகான
மேர்முகத்தெழுந்தழுவ லொய்தியவேலைதானுந்
தார்முகத்துவந்தமன்றற் றகும்புதுமகளிர்போன்று
நீர்முகத்திவரன்பார்ந்தநெஞ்செனக்குளிர்ந்ததன்றே.

உரை.—அங்ஙனம் போர்முகத்தழலெழ வீரர்கோபித்தாற்போலப் புகைந்தெரியுமவ்வனமே யழகியமுகத்திம்மூவர்வரக்கண்டு தானும் மாலை யணிந்து புதுமணஞ்செய்தமகளிர்போலுள்ளுவந்து தயைநிறைந்தவிவர் மனம்போல நீர்கொண்டுகுளிர்ந்ததென்க.

11. அயின்றெழும்விரைவாய்த்தாழை யலர்மடற்பள்ளிபண்ணுட்
டயின்றெழுமிளநல்வேனில் துதித்தபங்குனியிற்செல்லக்
குயின்றெழுங்குயில்கள்காட்டக் கோதறமகிழ்பூங்காவிற்
பயின்றெழும்புகழின்மிக்கோர் பணிமுகத்துவந்தபாலை.

உரை.—அம்மூவர்வந்தவளவிலேயவ்வனமெங்ஙன மூவந்ததென்னி
ல்: உண்டவாசனையெழும்படி வாய்மலர்ந்ததாழைப் பூமடற்பள்ளியிடத்
துக் குளிர்காலத்துறங்கின பின்பெழுந்தெவரும்புகழ்கின்ற பங்குனிநா
ளிலேயிளவேனில்வரவேவந்தசெய்தியைக் கூவியகுயில்கள் காட்டாநிற்
கக் குறையொன்றின்றிமகிழ்வெய்திமலரும் பூஞ்சோலையொப்பச் சொல்
லிலடங்கியபுகழினுயர்ந்தமூவர்வந்து காட்டியவழகியமுகத்தப்பாலையுமு
வந்ததென்க.

12. மைவ்வினையழுன்றநெஞ்சின் மருவியவருளின்மாட்சிச்
செவ்வினைபுக்கபாலாற் றீதறச்சிறந்ததன்மைத்
தவ்வினைசெகுத்தமூவ ரணிமுகத்தருளினாலே
வெவ்வினையுடன்றகானம் விரைமுகத்துவந்ததன்றே.

உரை.— மீளவுங் கொண்டதீவினை கொடுமையாலழன்றுமெலிவு
டைநெஞ்சத்திடத்திற் றேவதிருவருள்வந்தமையால் மாட்சிமைபொரு
ந்திய நன்னெறியொழுக்க முட்புக்கதன்மையாற் றீதொன்றின்றியந்நெஞ்
சருஞ்சிறப்புற்றதுபோலத் தீவினைகெடும்படிவந்தமூவர் தம்மழகியமுகத்
தையங்கேகாட்டியவருளினால் வேகாநின்றவனம் வாசமலர்முகத்துக்
குளிர்ந் துவந்ததென்க.

13. நிறைமலரொழுக்கத்தாட்கீழ் நித்திலப்பரப்பிற்றாய
நறைமலர்பரப்பினாற்போ னளிர்படவொழுகிச்சூழ
வுறைமலர்மணவாய்த்தென்ற லுளைத்தமங்கலத்தின்வீச
மறைமலர்பூண்டமார்பர் மகிழ்வலர்மனத்திற்போனார்.

உரை.— அங்ஙன மாறினவனத்தி னீதியொழுக்கநிறையின்மலர்ந்த
விவர்திருப்பாதத்தின்கீழ் முத்துக்களைப்பரப்பி யதின்மேற் றாயவாசமல
ரைப்பரப்பினாற்போலப் பாதங்குளிர நடந்து சூழமலர்ந்தபூவிடும்வா
சனைகொணர்ந்து மணக்கும்வாயுள தென்றல் மங்கலவாழ்த்துரைத்தாற்
போலவீசி வேதமே மலர்மாலையாகவணிந்தமார்புடைமூவர் மகிழ்ச்சியால்
மனமலர்ந் துவந்துபோனாரென்க.

14. மின்னிறக்கொடியைச்சூட்டி விளங்கியமணியின்வில்செய்
நன்னிறத்தாரம்பூண்டு நாடிவந்தணியிற்றோன்றுஞ்
சென்னிறக்குடையிற்கொன்ற செழித்தசெங்கதிரின்வெப்பத்
தின்னிறக்குளிர்பூநீழ லியங்கியசிறப்பிற்போனார்.

உரை.— மீளவு மின்னென்னு மழகிய கொடியைச்சூடி யொளிசெய் மணியோடொத்த வான்வில்லென்னும் நல்லணிப்பூணையணிந்து விருப்புட னிவரைநாடிவந்தொழுங்குபட மேற்றோன்றிய மேகங்களென்னுங் குடையினால்மறைத்த சினந்தசூரியன்கதிரகோரத் தினியகுளும்பூநிழலே கூடநடக்குஞ்சிறப்போடுபோனாரென்க.

15. பாகிளஞ்சுவைபெய்வில்லார் பவளவாய்த்துறையில்வைத்த
நாகிளந்தரளங்காட்டி நகைதருமடந்தைபோல
வாகிளம்பனிப்பூங்கானத் தழகணிசெய்தாலென்ன
வாகிளஞ்சுடர்செய்மேனி வானவர்காட்டிநின்றார்.

உரை.— மீளவு மினியசுவைச்சொல்லுமிழ்ந்து விளங்கும்பவளவாய்த்துறையிடத் தொழுங்கில்வைத்த சங்குகளீன்றவிளமுத்தொப்பப் புல்லெயிறுகளைக்காட்ட வொருநன்மடந்தைநகைகொண்டாற்போலநின்ற விளம்பனிதோய்ந்த புதுப்பூமலர்ந்த வவ்வனங்கொண்ட வழகிற்குமேலலங்காரமிட்டாற்போலச் சூழநின்றவரூபியானவானவர் பதினாயிர மழகியசுடரைவிடும் பலவுருவங்களை யெடுத்துக்காட்டி நின்றாரென்க.

16. ஈரொழுவகுப்பிற்றேர்ந்த வினமணிநல்யாழ்வாங்கி
யோரொழுகுரலினோசை யுரிக்கிளை களிர்ப்பப்பாகி
னேரொழுமிடற்றினோசை நெறிகள்மூன்றியக்கிக்கூட்டிப்
பாரொழுநடங்கள்வாட்டப்பாடினர்சிறப்பின்வானோர்.

உரை.— கண்ணுக்கின்பமாம்படி யங்ஙனமுருவோடுதோன்றியவானவர் மீளவுங்காதிற்கின்பமாம்படி பதினால்வகைமணிவீணைகளைவாங்கி நூலின்முறையி லுழைமுதலேழிசைகிளைத்துத்தளிர்க்க விசையுட னோசை யெல்லாங் கடைபிடித்தேற்றித் தேன்பாலொப்ப வினியமிடற்றினோசை மெலிவும்வலிவுஞ்சமனுமென் றிம்முந்நெறி வேறுவேறாய்நடத்தியும் நூற்படியொருப்படக்கூட்டியும் பலவீணைகளோ டிசைபடப்பாடலேயி யற்றிப் பூவுலகேற்றிய நாடகசாலைவனப்புமின்பமுமாறிமறைக்கும்படியே பாடாநின்றாரென்க.

17. காமஞ்சால்வியப்பிலோங்கக் கண்டவையுள்ளிப்பைம்பூந்
தாமஞ்சால்கொடியோன்விண்ணோர் தளங்களுடலைவனென்ன
வேமஞ்சாலின்பத்தோர்ந்த விரும்புகழ்களித்துத்தேவ
நாமஞ்சால்வழங்கநல்யாழ் நடையொடுபாடினானே.

உரை.— இவையெல்லாமாகையிற் காண்டலினாசைமிக்கவதிசயித் தோங்கியமனதி லவற்றையாராய்ந்தெண்ணி மலர்க்கொடியேந்தியனை சொன்னவானவர்தளங்களுட் டானொருகலைவன்போல வுள்ளுண்டவின்பமிகுதியி லுணர்ந்ததிருப்புகழ்களித்துத் தேவதிருநாமங்கள்வழங்கும்படி வானவரோற்றிய வீணையிசைகளினடையேமாறு தவனும்பாடாநின்றானென்க.

## III. வேறு.

18. பாலையின்வெப்பம் பனிமருதத்தாக்கினையே
மாலையின்றுமத் தருணீதிவல்லோ
யருணீதிவல்லோ னடிசென்றாரிங்கண்
டெருணீதிநீங்காதார் தீதிடும்பைநண்ணுரோ.

உரை.— தீச்சுடும் பாலையினிலத்தைப் பனியிற்குளிர்ந்தமருதவேலியின்தன்மையதாக்கினுயே, மாலையினெழுங்குபடத்தம்முட்டுடார்புவிபடாததயையு நீதியுமுடையவல்லோனே, இவ்வல்லமையுடையோன் திருப்பாதத்தை யடைந்தவ ரெல்லாரு மிவ்வுலகிற்றெளிந் தறநீதிநெறியிற்றளராமற் றீதுசெய் துன்பங்களை யெக்காலத்துமடையாரென்றுனென்க. (இச்செய்யுள்முதல்மூன்றும் வெண்பாவிற்குரியசெப்பலோசையோடுவருவனவென்றறிக.)

19. வீங்கோதநீர்நிலையாம் வெய்யநஞ்சின்னமுதா
மீங்கோதவொப்பிறந்த வெந்தையடிசென்று
லெந்தையடிசென்று ரெங்குமிடர்மொய்த்துலவச்
சிந்தைமகிழத்தாந் தீதிடும்பைநண்ணுரோ.

உரை.—பொங்கலைக்கடலும் நிலைக்களமாகும், கொடியநஞ்சுமுயிர்தருநல்லமுதாகும், நாமிங்கே சொல்லும்படியொப்பில்லாத வென்னுண்டவன்பாதத்தைச் சென்றேமாயி னப்பாதத்தைச்சென்றயாவரும் பூவுலகெங்கு மிடையூறுகள் வெள்ளமாகப்பரந்துமூடினகாலத்து மவருளமகிழ்ந்து தீதுசெய துன்பங்களையடையாரென்றுனென்க.

20. வான்வாழமரார் வணங்கித்தலையேற்றுந்
தேன்வாழடிசென்றார் தீதிடும்பைநண்ணுரோ
தீதிடும்பைநண்ணுவரிச் சீறடியைநாடாதால்
வாதிடும்பைவாழ்க்கை வழுககிவறுந்தீயோரே.

உரை.— வான்மேலுலகில்வாழும்வானவர் விடாமல்வணங்கித்தலைமேலேற்றிய தேன்பொழியுமிவன்மலர்ப்பாதத்தைச்சென்றவர் தீதுசெய்துன்பங்களையடையாரே, அத்துன்பங்களையடைவாரித்திருப்பாதத்தைத்தேடாம லாஙகாரத்திடும்பைவிளைவிக்கு மிப்பூவுலகில்வாழ்க்கையின்பொய்யானநன்மைகளைவிரும்பின பாவிகளென்றுனென்க.

## IV. வேறு.

21. ஏழிசைக்குழலினே டினியபண்டொனியினேடிசைவிடாத
யாழிசைக்கிளைவெலா மிணர்நறுங்கொடியினேனறையநாதன்
கேழிசைத்தொளிறுதாள் கெழுவவம்பலர்நருமழையைவாரிச்
சூழிசைத்திடையுலாந் தொகையிழந்தமரரோதொழுதுபோனர்.

உரை.—அங்ஙனம் வாசமலர்க்கொடியேந்தியகுசை யிவையெல்லாம் வானோர் வாசியாநின்ற வேழிசைக்குரியவேழுதுளையுள்ளகுழலு மினி யபண்ணு மிவற்றோடிசைந்தவீணையு மிவையெல்லாங்கிளைத்துத்தரும் பல வோசையோ டிசைபடத் தானும்பாடலியற்றிச்சொன்னபின்ன ரவத ரித்தநாதனிறப்பட வொளிசெய்திருவடிமேல் மது வாசமலர்மழைபொ ழிந்து சூழிருபுடையிற் றொகையின்றியுலாவிய வானவரோயாமல்வணங் கிவர வவர்நடந்துபோனானென்க.

22. இன்னவாய்மருதமொத் திணர்நறுவுமிழ்வனத்திவர்கள்பன்
டுன்னவா னுலகினிற் றுறுவினானையவுட்சுவையில்விள்ளா [னாட்
வுன்னவாய்மகிழ்வுதுய்த் துணவுனாநினைவுமற்றொழுகியோர்நா
ளன்னவாயமராருற் றணுகிவா னுரிவிருந்தமைதல்செய்தார்.

உரை.—அங்ஙனம் மருதநிலத்தொத் தலைப்பூத்து வாசனைபொழி யாநின்ற பாலைவழி யிவர் பலநாட்செல்ல வானுலகடைந்துவாழ்பவரைப் போல விடாதபேரின்பத்து மனத்தின்வாயால் மகிழ்ச்சியையுண்டதொ ழிய வுடற்கேற்றவுணவின்றியதின்மேனினைவுமின்றி நடந்துவருகையி லொருநாளங்கே சிலவானவர்வந்தணுகி வானுலகிற்குரியதோர் விருந்தி னையமைத்துக் கொடுத்தாரென்க.

23. கொழுநிலாமரகதக் கொடியின்மேன்மணிகள்பூத்தயருபங்
விழுநிலாவிளையுமுத் தனையமீன்விரிவுசெய்விரிவிதானத் [தர்
தெழுநிலாமணிநிரைத் தெழினிவீழ்ந்திணர்நறுவமளிபாய்த்திச்
செழுநிலாமணிமுகத் திருவினோரமளியிற்பொலியநின்றார்.

உரை.—அவர்க்குவானவ ரவ்வனத் தெங்ஙனம் விருந்தினையமைத் தாரென்னில் விளங்கியமரகதமிளிர்மணி கொடியாய்ப்படர்ந்து பலநிறம ணிகளை மலராய்ப்பூத்துப் பந்தலாய்த்தோன்றி யதின்கீழ் நன்னிலாமுத் துகளொப்ப வான்மீன்பரவப்பதித்து வகுத்தமேற்கட்டியைவிரித்து மி க்கொளிமணிகளைநிறைத்துச்செய்த நெடுந்திரைச்சீலை சூழத்தூக்கி நடுவே வாசமலர்ப்பூமெத்தைபரப்பி யதின்மே லழகிய மணியின்சாய்லாய் வில் வீசியமுகத்தோ டவர்பொலிந்திருந்தாரென்க.

24. விற்கலத்துருநிலா விலகவிட்டமரர்சூழ்வியவராகப்
பொற்கலத்தலர்நறுப் புனலுமுய்த்தகிலவர்புகையுமாட்டிப்
பற்கலத்தமிர்தமே பலசுவைக்கமையவானவர்பரப்பிச்
சொற்கலத்திணையிலாச்சுவையிலத்தகவினோர்துதியொடுண்டார்.

உரை.— அங்ஙனமங்கவரிருந்தபின் னொளிக்கலமணிந்துகதிரைப்ப ரப்பிவீசியவானவ ரேவல்செய்வோர்போலச் சூழத்திரிந்து பொற்கலத் தேந்திய் வாசபன்னீராட்டி வெந்தகில்தந்தபுகையைச்சூழக்காட்டிப் பல

மணிக்கலங்களிற் பலசுவைதோன்றும்படி பலவிதத்தமைத்த வமிர்தத்தை வானவர்முன்னேபரப்பிச் சொல்லிலடங்காதவின்பத்தோ டப்பெருமையோராகிய மரியுஞ்சூசையு மாண்டவனைவாழ்த்தியுண்டா ரென்க.

25. சால்வருந்தயையுணர்ந் தினிதுணும்பொழுதருந்தகுதிவா
கால்வருங்கவரியுங் கமழ்வரும்புகையையுங்கனியவாரி [னோர்
நால்வருங்கலநரம் பிசைநயந்தெழநருநளினவாயாற்
பால்வருஞ்சுவைவரும் பலநரம்பிசையொடும்பாடினரே.

உரை — மரியுஞ்சூசையுமங்ஙனந் தமக்குநாதன்காட்டிய மிகுந்ததயையுணர்ந் தினிதாயுண்ணும்பொழுதே யாசாரத்தோடு நின்றசிலவானவர் வெண்சாமரைவீசவுஞ் சிலர் வாசப்புகைகளைக்காட்டவுஞ் சிலர் நால்வகைவீணைகளைத்தரித்து நரம்பின்வழி யேழிசைகள் கைபிடித்திசைந்துவந்தெழுப்பவுஞ் சிலர் வாசதாமரைவாயினுற் பாலோடொத்த வினியமிடற்றினோசை வீணையோடிசைபடவேற்றிப்பாடாநின்றாரென்க.

## V. வேறு.

26. தன்றோலுரித்தபாம்பொத்த தவத்தின்வாளாற்பொறியைந்
கொன்றோனுளம்பற்றிருள்புக்காக் குன்றாச்சிலவிளக்கேற்றி [தூங்
நின்றோன்வருங்கால்கடந்துரைக்கு நிறைசொல்வல்லோன்பாப்பு
கழும்
வென்றோனெலீயமாமுனிவன் விருந்துண்டுவந்தவனமிதுவே.

உரை.—தன்றோலைப் பாம்புரித்தாற்போல வாசையெல்லாங்கழற்றிவிடுதற்குக் காரணமாகிய வருந்தவத்தை வாளாகக்கொண்டு பஞ்சேந்திரியங்களைக்கொன்றவனு யாசைபுகைந்து செய்யுமிருளுட்புகாதபடி யவியாதசீலமென்னும் விளக்குள்ளேற்றிநின்றவனும் வருங்காலத்தைக்காட்சியாற்கடந்து வரும்பொருளைச்சொல்லிக்காட்டுந் தப்பாத நிறைசொல்லுடையவனும்ப் பாவலர்சொல்லும்புகழைவென்று மேனின்றவனு யெலீயமாமுனியென்போன் தானும்விருந்துண்டு மகிழ்ந்தவனமிதுதானென்றுரென்க.

27. கான்வாழ்சுவைத்தேன்றுளிநக்கிக் கதிவாழ்மாருவாழ்வொ
ழிந்து
வான்வாழிறையோன்றனைமறுத்து வசைப்பற்றேவர்தொழக்கண்
தேன்வாழ்காவுமன்னுயிருந் தேம்பிவாடமுவ்வருடந் [டு
தான்வாழுறைகொள்முகின்முகமுந் தகைத்தசாபமாமுனியே.

உரை.—சொன்னவெலீயமாமுனி யெத்தன்மைத்தானென்று வானோர்காட்டத்துடங்கினராகையால் அம்முனியிருந்தநாட்டி லெல்லாரும்

காட்டிலுள்ளதேன்றுளிநக்கிறுற்போல விவ்வுலகுள்ள நீசவாழ்வுகளைவி ரும்புவதொழியப் பரமகதியிலுள்ள மாருதவாழ்வுகளைவிட்டிழந்து வா னத்தில்வீற்றிருக்கின்ற மெய்க்கடவுளைமறுத்து பலபொய்யான நீசதேவ ர்களைவணங்கினர், அதைத்தான்கண்டு அந்நாட்டிற்காக்கினையாகச் சூழ க்காடெல்லாமு மெல்லாவுயிருநொந்துவாடும்படி தான் மூன்று வருடமு மழைமேகமுகமுங்காணுதபடி மழையைத்தடுத்த சாபவல்லமாமுனியவ னுமென்முரென்க.

28. அன்னுளெல்லாந்தானுமைழவா யசலமுழைழயுட்புக்குறைந்த
பன்னுளெல்லாமுறைதவிராப் பறந்தோர்காகமுணவுய்ப்ப
முன்னுளில்லாவரத்துயர்ந்து முதல்வனடிசேர்ந்தானென்ன
வென்னுளெல்லாங்கோடாத வியல்பிற்சீலமாமுனியே.

உரை.—அங்ஙனமழையில்லாதமூன்றுவருடமு மவனோர்மலையி னு ழைவாய்க்குகையுட்புகுந் தங்கிருந்தநாள்மட்டு நாடோறுந் தப்பாமலொ ருகாக்கைபறந்துவந் துணவுகொடுக்க முன்னரொருவரு மடையாவரங்க ளைப்பெற்றுயர்ந் தாண்டவன்றிருப்பாதத்தைச்சேர்ந்தவனைப்போலக் க ளிகூர்ந் தெஞ்ஞான்றும் வழுவாதவியல்போடு நற்சீலமாருத மாமுனி யவனுமென்முரென்க.

29. பிழையிற்கொடுங்கோன்றுறவரொலாம் பின்முச்சினத்துக்
கொன்றபினர்
முழையிற்கிடந்தவிம்முனியு முரிக்கக்கொணர்மினெனவிட்ட
வுழையிலொருமூவைம்பதுவே லுழவரொருங்கும்வாய்மொழி
யான்
மழையிற்கனலைவான்பொழிய வைதென்றெரித்தமாமுனியே.

உரை.—அக்காலத்திறைமுறைபிழைத்தகொடுங்கோன் மழைபெய் யாததைக்கண்டு பின்வாங்காதவெகுளியிற்பொங்கித் தன்னுட்டிலிருந்த மற்றமுனிவரெல்லாரையுங் கொன்றபின்பு முன்சொன்னபடி குகையிற்கி டந்த வெலீயமாமுனியையுங்கொல்லக் கொண்டுவாருங்களென்று ஐம்ப தைம்பதாக முவ்வகுப்பாய்விட்ட சேவகரெல்லாரையுந் தன்வாய்மொழி யாற்பெய்வித்தநெருப்புமாரியோ டுடனேயெரித்த மாமுனியவனு மென் முரென்க.

30. கொழுகொம்பிழந்தகொடியன்ன கொழுநனிழந்தவிளங்கை
செழுகொம்பன்னவூன்றுதற்குத்திதியினின்றவோர்மகனும் [மை
விழுகொம்பன்னவீழ்ந்திறந்து விம்மியழுந்தாய்நனியுவப்ப
வெழுகொம்பன்னவம்மகனையெழுப்பித்தந்தமாமுனியே.

உரை.—மீளவுங் கொழுகொம்பிழந்த கொடியைப்போலப் புருட னையிழந்தவிளங்கைம்பெண்ணொருத்தி தானூன்றுங்கொம்பாகத்தன்ன

ண்டையினின்ற வொருமகன்றனும் பூங்கொம்பொடிந்து விழுந்தாற்போல விழுந்திறந்தமையால் விம்மியழுதிருந்ததாய் களிகூறும்படி விழுந்த கொம்பெழுந்துதுளிர்த்ததுபோலச் செத்தமகனையெழுப்பித் தாய்க்குத் தந்தமாமுனியவனுமென்க.

31. வலம்புங்கவனிமாமகடன் மருங்குல்மணிநீண்மேகலையோ
சிலம்பும்பசியபொற்சிலம்போ சிறந்தசோர்தானதிசேர்ந்து
புலம்புந்திரையைக்கம்பளத்தாற் புடைப்பவரிதிற்பிரித்துநளிர்ந்
தலம்புந்திரையிலடிதோயா தப்பாற்கடந்தமாமுனியே.

உரை.—மீளவும் வல்லமையினுயர்ந்த பூமிமாமக ளிடையிலணிந்த நீண்டமணிமேகலையோ! காலிலணிந்த வொலிப்பொற்சிலம்போவென் றுதோன்றிச் சிறந்த சோர்தானென்னுமாற்றில்வந்து முழங்கிச் சுருண்டோடுந் திரைகளைத்தானேந்திய கம்பளியாலடித்ததன்மையா லொலித்ததிரையிரண்டாய்ப்பிரித் தவற்றுட் கால்தோயாம லப்புறங்கடந்தமாமுனியவனுமென்றுரென்க.

32. அப்பால்கடந்தபோழ்திருளை யகற்றிவீசுஞ்சுடர்கண்டால்
வெப்பாலிரவியிரதமென வேய்ந்துகுளிர்ப்பவிடுங்கதிரி
னுப்பால்மதிதன்னிரதமென வுயர்கின்றிழிந்ததேறோறி
யெப்பாலனைத்துமணுகாதோ ரிடத்திற்சேர்ந்தமாமுனியே.

உரை.—அங்ஙன மவ னந்நதியைக்கடந்த பின்ன ரிருளைநீக்கிப்ப்ரப் பின செஞ்சுடர்மிகுதியாற் சூரியன்தேர்போலவு மக்கதிரின்குளிர்ச்சியாற் சந்திரன்றேர்போலவும் வானத்தினின்றிறங்கின பொற்றேரையேறி யெத்திசையோர்க்குமண்டாதவிடத்துச் சேர்ந்திருக்கின்ற மாமுனியவனு மென்றுரென்க.

33. இன்னுமிந்நாணன்னுயிரீ றின்றியின்பக்கடனின்றேன்
பின்னுமிறைவன்றனிற்குணித்த பின்னுடனிலிவ்வுலகெரிந்து
மன்னுமுயிரோடுகமுடிதல் வருங்காலக்கால்மீட்டொளியான்
மின்னுமுருவோடிவ்வுலகில் விளங்கத்தோன்றுமாமுனியே.

உரை.—அங்ஙன மண்டாவிடத்துப்போ யொளித்திருக்கின்றவ னின்னு மிந்நாள்வரைக்குஞ் சாகாமலின்பக்கடலினின்றவனு யினியாண்டவன்குறித்தநாளிலே யுலகெல்லாமெரிந்து மனிதரெல்லாருஞ்செத்துக் கடையுகமுடியுங்காலத்துத் திரும்பியொளிவடிவா யிவ்வுலகிற்றேன்றவரு மாமுனியவனுமென்றுரென்க.

34. ஒல்காத்தவத்தின்வரத்தொகையோ னொருநாள்சுடுமிவ்வனத்திடையே
செல்காற்றளர்ந்தோர்வானவனுஞ் சென்றுதந்தவடையருந்தி
யல்காத்திறத்துநாற்பதுநா ளருந்தாப்பசியாநெடுநெறிபோய்
நல்காத்திருநல்கியமலைவா னண்ணிமுகிறேய்முடிசேர்ந்தான்.

உரை.— அங்ஙனந் தளராதருந்தவத்தடைந்தவரத்தொகையின்மிக்க விம்முனி யொருநாளிப்பாலைவழிவரும்போது பசியாலும் வெப்பத்தாலுந்தளர்ந்துகிடக்க வொருவானவன்வந்து தந்தவவடையையருந்தினன், அருந்தினவுடனே குறையாததிறத்தையடைந்து வேறொன்றுண்ணாமலும் பசியாமலு நாற்பதுநாளோயாமல் நெடும்வழிநடந்து மற்றெங்குமில்லாதசெல்வங்களைவிளைத்துச் சிறந்தவொரேபுமாமலையின்வான்மேல் முகிலிற்றோய்ந்தவுச்சியின்மிசை யேறிச்சேர்ந்தானென்க.

35. எஞ்சாத்திறத்தையம்முனிக்கன் றீங்கோணிங்கணின்று மக்கே [சோ
துஞ்சாத்தயையின்வான்விரும்புஞ் சுவையிவ்விருந்தீந்தவன்யா
யஞ்சாத்திறத்தின்மூவுலகு மாண்டும்மிடத்துமகனாகி [தார்.
விஞ்சாத்துதிமேனின்றதயை விளக்குமிவன்றனெனத்தொழு

உரை.— அங்ஙனமன்று குறையாததிறத்தை யம்மாமுனிக்குத்தந்து மீளவுமிங்கேதானே யின்றுமக் கென்றுந் தூங்காததயையோடு வானுலகத்தோர்விரும்புஞ் சுவையுளவிருந்தினைத்தந்தவனுமொன்னில்: எப்பகைக்குமஞ்சா தொருவனு யளவிறந்தவல்லமைகொண்டு மூவுலகங்களனைத்தையு மாண்டவனு யுங்களிடத்தவரித்து மகனாகி யெத்துதியுமைத்தாலு மிஞ்சாமலும் போதாமலு மதின்மேனின்றதயையை விளைவிக்கு மித்தேவகுழந்தைதானேயென்று வானவரவன்றிருப்பாதத்தைவணங்காநின்றனரென்க.

## VI. வேறு.

36. தேன்றிறத்தின்னவை செவியிற்கேட்டனர்
வான்றிறத்தின்புறி வையநாதனென்
றான்றிறத்திளவலை யாசியோதினர்
கான்றிறத்தையெழு காதம்போயினர்.

உரை.—அங்ஙனம்வானவர் தேனின்பத்துளாந்தயாவையுங்கேட்டமரியுஞ்சூசையும் வானுலகுரியபேரின்பத்தை யடைந்து உலகநாமுறுயவதரித்தெடுத்தவுடலின்வகையாற் குழந்தையாய்நின்றதிருக்குமாரனைமிகவும்வாழ்த்தி யெழுந்துபோய்ப் பாலைவழியின் முப்பதுங்காதநடந்துபோனாரென்க.

37. ஐயெழுகாவத மேகியப்புறங்
கையெழுசூலத்துக் கவர்க்குமுந்நெறி
பொய்யெழுவழியெனப் போதல்கண்டுளி
மெய்யெழுமிக்கயேல் விளம்பினனரோ.

உரை.—அங்ஙனமுப்பத்தைங்காதங்கடந் தப்புறத்துப்போர்முகத் தேந்தியசூலம்போலக் கவராய்ப்பிரியு மூன்றுபாதை யொருமுகமாயிரா மற் பொய்யானது பலவழிபிரிவதுபோலப் போகிறதைக்கண்டார், அப் பொழு தருவங்காட்டிநின்ற மிக்கயேலென்னும் வானவன் சொல்லத் தொடங்கினனென்க.

38. நீர்விளைமாரமு நிழல்செய்யோமையு
மேர்விளைமுகத்திடங் கிடந்தவிந்நெறி
பார்விளைவாழ்வெனப் பனிமுகத்தழற்
சூர்விளைகொடியதோர் சுரமதாமரோ.

உரை.— மிக்கயேல்சொன்னதேதென்னில்: நீரில்விளையுங்கடம்பும் படர்ந்து நிழல்செயுமாமரமு மழகுபடமுன்முகத்திற்றோன்றியிங்கேயிட த்திற்கிடக்கு மிவ்வழிபூவுலகுள்ளவாழ்வுகள்போலக் குளிர்ந்தமுகத்தை க்காட்டித் தீயாற்சுடுந்துன்பங்களைவிளைவிக்குங் கொடியசுரத்தின்வழிய தாமென்றானென்க.

39. வலம்படக்கிடந்தவவ் வழியுமுன்னிலை
நலம்படக்காட்டிய சிறியர்நட்பென
வலம்படச்செலச்செல வஃகிக்கோறுமாத்
திலம்படப்புகுந்துகற் சிலம்பிற்செல்லுமால்.

உரை.— மீளவும் வலத்திற்கிடக்கு மவ்வழிதானுமுன்னிலையி னன் மைகாட்டிய கீழ்மக்கள் நட்புபோல முன்னகன்றமைந்த வவ்வழிபோக ப்போக மிகவுங்குறைந்து நெருங்கியுயிரைக்கொல்லும் பலகொடியமிரு கங்களிருக்கும் பெருங்காட்டிடத்திற்புகுந்து கொடுங்கல்மலையிற் செல்ல விடும்வழியதாமென்றானென்க.

41. நிலத்திடத்தரசர்கை நீதிக்கோலென
வலத்திடத்தெங்கணும் வழுவிலாநடுப்
புலத்திடத்துறைவழி பொருள்பொய்யாமறை
நலத்திடத்தெசித்தினை நல்குமாமென்றான்.

உரை.— மீளவும் பூவுலகிடத்து நீதிமுறைபிழையாவரசரோச்சுஞ் செங்கோல்போல வலத்திலு மிடத்திலும் வளையாம லவ்விரண்டிற்குநடு வேகிடந்தவழி பொருள்பொய்யாமற் சொன்னதைத்தப்பாதவேதம்போ ல வழுவாமலெசித்துநாட்டிற்கொண்டுவிடும்வழி யதாமென்றான் மிக்க யேலென்க.

41. செவ்வழியுளத்தினோர் சிறந்துசெவ்விய
வவ்வழிநடந்தொளி யரசன்றாழ்ந்துபோய்
மெய்வ்வழியொளிகரச் சூழ்ந்தவிண்ணவர்
மைவ்வழியிராவொரு மரத்தொடுங்கினர்.

உரை.—வளையாதமனத்தையுடைய மரியுஞ்சூசையு மிக்கயேல்சொன்னதைக்கேட்டுச் செம்மையிற்கிடந்த நடுவழிபிடித்துநடந்து சற்றுத் தூரம்போனபின்பு சூரியனத்தமித் திருண்டவிராத்திரியெல்லாஞ் சூழநின்ற பதினாயிரம் வானவரொளிசெய்திருக்கத் தாமொருமரத்தின்கீழொடுங்கினரென்க.

பாலைபுகுபடலம் முற்றும்.

ஆகப்படலம் – 19 – க்கு விருத்தம்

1799.





இருபதாவது

# சித்திரக்கூடப்படலம்.

## I. வேறு.

1. மாயிருள்விழுங்கவான் வாயங்காந்தெனச்
சேயிருந்தைந்திரி தெளிந்தகாலெழீத்
தாயிருகரத்தொழுத் தனையற்போற்றினர்
போயிருபுடைநிழற் பொலிசெல்வேகினார்.

உரை.—அங்ஙன மரியுஞ்சூசையு மங்கேயிராவெலாம்போக்கி யிருளைவிழுங்கும்படி வானந் தன்வாய்திறந்தாற்போலக் கீழ்திசைசிவந்து தெளியுங்காலத் தெழுந்து தாய்கையிலேந்தியதிருக்குமாரனைவணங்கி யிருபக்கத்து நிழலைப்பொருந்தியவழியே போனாரென்க.

2. ஊன்வழங்கியபிரா னுறலிற்போற்றல்போல்
வான்வழங்கியதரு வளைத்தநெற்றியிற்
றேன்வழங்கியகனி கலந்ததேமலர்
கான்வழங்கியபொழி லெதிர்கண்டாரரோ.

உரை.— அங்ஙனம்போகையி லுடலெடுத்தவதரித்தநாதன்வருவதைக்கண்டு வணங்கினாற்போல வானிலுயர்ந்தமரங்கள்வளைத்த வுச்சிக் கொம்புகடோறுந் தேனைப்பொழிந்தகனிகளும் வாசம்பொருந்தியமலர்களு நிறையாநிற்ப மணவாய்ப்பெருஞ்சோலையெதிராநிற்பக் கண்டாரென்க.

3. பொற்கலத்தலர்முகை பொழிந்தவாசனை
தற்கலத்துயிர்த்தன தண்ணங்காலெதிர்
சொற்கலத்திமிழெழுந் தூதுரைத்தென
விற்கலத்தெழினலோர் விளிப்பவீசியே.

உரை.—அங்ஙன மப்பூங்காடவர்கண்டவுடனே யங்கேநின்றுபுறப்பட்டெதிர்வந்த குளிர்ந்தகாற்று வழங்கியவிதழைமலர்ந்த வரும்புகள் விட்டவாசனைதான்கொண்டுவிட்டது, அதெங்ஙனமிருந்ததென்னி லினியசொற்கொண்டுதூதுசொல்லவந்து விளங்கியவழகியமுகத் திம்மூவரையுமழைத்தாற்போலத் தோன்றிவீசினதென்க.

4. தேரொழுமரமெனச் சிலைத்தடுதெண்டிரை
நீரொழும்பருதிதன் னெடுங்கதிர்க்கணை
பாரொழுமிருட்கெதிர் பரப்பியோட்டலிற்
காரொழுமிருளெலாங் கரந்தகாவதே.

உரை.—அவர்சென் றடைந்தபெருங்கா வெத்தன்மைத்தோவென்னில்: தேரின்மேலெழுந்தவிராசாவைப்போல வொலித்தகடலின் மேலெழுந்தசூரியன் விடியறகாலத்துநெடியதன்கதிராகிய வம்புகளைப் பூமியிற்படர்ந்த விருளின்மேலெய்ததனையோட்டிவருகையிற் கரியவிருளெலாமஞ்சி யொதுங்கி யொத்திருக்குங்காவதுவென்க.

5. கள்ளூறமலர்ந்தகாக் கலந்தநீழலோ
டள்ளூறமலியிரு ளிருகண்ணட்டதாற்
றெள்ளூறவுளத்தெழீத் திளைத்தஞாபக
முள்ளூறத்தவங்கனிந் துறையுங்காவதே.

உரை.—மீளவுந் தேனைப்பொழிந்துமலர்ந்த வப்பூங்காவிலுள்ள நிழலின்மிகுதியாலடர்ந்தவிரு ளிருகண்ணைக்கொல்லு மதனுற் றெளிந்த மனதிலெழுந்தஞானவறிவோடு தவமேயினிதாய்க்குடியிருக்குங்காவது வென்க.

6. சீர்விளைபுவியெழின் முகத்தின்சீர்மையா
லேர்விளையெசித்துநாட்டருகிலேந்திய
தார்விளைகுழலெனக் கமழ்தண்டாதவிழ்
கார்விளைநிழலொடு கரியகாவதே.

உரை.—மீளவுமக்காவெசித்துநாட்டெல்லையி லுளதாதலின் செல்வப்பூமியி னழகியமுகம்போலத்தோன்றிய வெசித்துநாட்டிற்கருகே யம்முகத்தின்மேற்பூமாலைசூடினகூந்தலைப்போலத் தோன்றுங்குளிர்ந்த மலரைப்பூத்து நெருங்கியநிழலைச்செய்யுங் கரியகாவதுவென்க.

7. காழகத்தள்ளிருட் கதிர்குளித்தொளி
வாழகத்தெழுந்தமா மதிப்புத்தேளெனச்
சூழகத்திருண்டகாத் தோன்றல்தோன்றியன்.
பாழகத்தகவினோர் நுழைந்துள்ளாயினர்.

உரை.— அங்ஙனங் கருமையினெருங்கிய விராவிருளினடுவே தன் கதிர்குளிக்கும்படி யொளிமுகத்தெழுந்தவிளம்பிறைபோலச் சூழிருண்டகாவிடத்துத் தேவதிருக்குமாரன்றோன்றி யன்பினுழ்ந்த தகைமையுடையமரியுஞ்சூசையு மக்காவினுள்ளே நுழைந்தாரென்க.

8. இழையிடைக்குளித்தத மிளவலேந்தினர்
மழையிடைக்குளித்தமின் னென்னவந்துபூந்
தழையிடைக்குளித்தனர் மலர்ந்ததாதுதேன்
கழையிடைக்குளித்திழி கள்ளொத்தோடவே.

உரை.—அங்ஙன மிருவர்சிலைசுருட்டித் திருக்குமாரனையேந்தி மேகத்துள்ளொளித்த மின்னலைப்போலத்தழைந்து பூத்தகாவிடைநுழைந்தார், நுழைந்தவளவிலே கரும்பினின்றிழிந்தசாறுபோலப் பூந்தாதுகள் தேனைப்பொழிந்தனவென்க.

9. கண்சிறைபடுத்திய நிழல்செய்காவிடை
மண்சிறையொழித்தற வந்தமூவரைப்
பண்சிறைபடுத்திசை பாடிவாழ்த்தின
வொண்சிறைபுடைத்தபுள் ளுவந்தவீட்டமே.

உரை.— நிழலின் மிகுதியாற் கண்களைச்சிறைபடுத்து மக்காவிடத்துப் பாவத்தாற் பூவுலகங்கொண்ட சிறையைத்தீர்க்கவந்த விம்மூவர்நுழைந்தவளவிலே யழகியசிறைகளையடித்தபறவையெல்லா(ம)கிழ்வெய்தி வீணையைச்சிறைபடுத்திருற்போல வீணையிலுமினியகுரலோ டவரை வாழ்த்தினவென்க.

10. பணிவளர்பூந்துறை பருகுந்தேனுகத்
தொனிவளர்யாழெனப் பாடத்தும்பிகள்
கனிவளர்சினைதொறுங் கரியயூகங்கள்
நனிவளராரிய நடஞ்செய்தேகினர்.

உரை.—அங்கவர் நுழைந்தவளவிற் குளுமைபொருந்திய பூந்துறையிலிருந் துண்டதேனைவிடும்படி வீணையோசையோடினிதாய் வண்டுகள் பாடாநிற்கக் கனிகள்பழுத்த கொம்புகடோறுங் கரியகுரங்குகள் களிமிகுந் தொருகொம்பிலிருந்தொன்றிலேபாய்ந் தாரியக்கூத்தாடிவருகையிலிவர்நடந்துபோனரொன்க.

## II. வேறு.

11. பரவக்கதிர்வீசுமிகத்திம்மூவர் படர்பூங்காக்
கரவக்கடிதேகக்கனிகள்கொய்தங் கண்டிரிந்த
குரவத்துகிற்குளித்தகுரம்பைமுனிவ ரெதிர்கொண்டு
விரவக்கனிவோங்கவிருந்தோம்பினர்போல் விளம்புகின்றார்.

உரை.—அங்ஙனம் பரந்தகதிரைவீசி விளங்குமுகத்திவர்மூவரு மகன்றவப்பூங்காவிடத்துமறைந்து விரைந்துபோகையி லங்கே கனிகளைப் பறித்துத்திரிந்த பேரீந்திரனாற்பின்னின சீலையுள்ளொளித்த மேனியையுடைய விருமுனிகளெதிர்பட்டு விருந்தோம்பினானைப்போல மிகவுமினியவன்பினைக்காட்டிச்சொன்னானென்க.

12. மண்சேரினஞ்சேராவனத்திற்சேர்ந்த வான்வடிவீர்
விண்சேரினந்தானோமாக்கட்குலமோ விழைவோங்கிப்
பண்சேரிசைப்பறவைபாடித்தவஞ்சேர் பதிசேர்ந்து
கண்சேரணிகடந்தகவினீர்சொன்மின் வந்ததென்றார்.

உரை.— அவ்விருமுனிகள்கேட்டதேதென்னில்: பூவுலகுள்ளோர் சேராதவனத்திற்சேர்ந்துவந்த வானுலகுரிய வடிவினையுடையோரோ; நீர் வானுலகத்தாரோ? மக்கட்கூட்டமோ? மீளவுமகிழ்வெய்தி வீணையினிசையோடு பறவைகள் பாடாநிற்கத் தவமேகுடியாய்நிற்கும்பதியாகிய விப்பூங்காவிடத்துக் கண்ணாற்காணப்பட்ட வழகெலாங்கடந்த வடிவத்தையுடையநீர் வந்ததேதெனறுசொல்வீராகவென்று கேட்டானென்க.

13. நசைசேர்வான்பதியோர்நாமேயுடல்சேர் நடலையரு
வசைசேர்மண்பதியோர்நாமேயூதர் மண்டிலத்தின்
மிசைசேர்பிரான்பணியாலெசித்துநேடி விரும்பியபுள்
ளிசைசேர்வனஞ்சேர்ந்தோமென்றான்பூந்தா தெழிற்கொடியான்.

உரை.— முனிவர்கேட்டதற்குச் சூசையெங்ஙனமறுமொழி சொன்னானென்னில்: எங்களாசையைப்பார்க்கில் வானுலகத்தோர்நாங்களே, இவ்வுடற்குரியதுன்பங்களை விடாதுநுகர்தலைப்பார்க்கில் வசையுளபூவுலகத்தோர்நாங்களே, மீளவும்யூதர்தேசத்தினின்று வானுலகநாதனே வலினாலெசித்துநாட்டைநோக்கிவருகையிற் களிகூர்ந்தபறவைபாடு மிவ்வனத்திடத்துச்சேர்ந்தோமென்று பூமலர்ந்தழகுபெற்ற கொடியையேந்தியசூசை சொன்னானென்க.

14. வைத்ததிருவீங்குமெசித்துநாட்டின் வாயிலிதே
பொய்த்தவழிகாட்டிப்பொழிற்கண்மயங்காப் புடைவம்மின்
றுய்த்தவருளுமிழுமுகநல்லீரென்று சொற்றிமலர்
மொய்த்ததேன்றுளிக்கும்வழியம்மோனர் முன்னடந்தார்.

உரை.— அவற்றைக்கேட்டவவ்விருமுனிவர் மீளவுஞ் சொன்னார்: செல்வச்சிறப்பிறபொலிந்த வெசித்துநாட்டிற்குவாசலிதுதான், ஆயினும் பொய்யானபலவழிகளைக்காட்டு மிக்காவிடத்து மயங்கப்போகாதபடி யுள்ளநுகர்ந்தவருளை முகத்திற்கொப்பளித்துவீசுநல்லோரே! எங்களைச்சேர்ந்து வாருங்களென்றுசொல்லிப் பூத்தமலர்வாய் துளிந்ததேனாற் குளிர்ந்தவழியே யவ்விருமுனிவர் முன்னேநடந்தாரென்க.

15. கானார்மலர்முகைக்கண்விழித்துநோக்கிக் கனிநகைத்த
தேனார்காவினெடுநெறிபோய்த்தீஞ்சொல் செல்குறைய
மானார்மனமெனமுள்மலிந்தவேயார் வனங்கடந்து
பானார்கதிர்கண்டவெளியேகண்டு பரிவற்றார்.

உரை.— அங்ஙனம்போகையில் வாசவரும்புகளாகியகண்களைவிழித்திவரைநோக்கிச் சிரித்தாற்போல மலர்ந்து மதுப்பொழிபூங்காவிடத்து நெடும்வழிநடந்து தம்முட்சொல்லுமினியமொழிகளால் வழிதுலைந்து பகைவர்மனத்தைப்போல முள்ளுநிறைந்தமூங்கிற்காடுங்கடந்து சூரியன் கதிரைக்கண்ட வெளியைக்கண்டு வழியின்துன்பத்தைத் தீர்த்தாரென்க.

16. கமுகும்படர்கதலிக்கனிகணக்குங் கரும்பொருபால்
கமுகும்பூகமுமார்கனிமுத்தணிந்த காவொருபா
லமுகுஞ்செங்கமலவாவியொருபா லணிசெய்க
வமுகுஞ்சித்திரநற்கூடஞ்சென்றா ரத்தகவார்.

உரை.— அவ்வெளிகண்டபின்பு உச்சியிற்பழுத்த வாழைப்பழங்களைநக்காநிற்குங் கரும்பின்றோட்டமொருபாலுங் கமுகுகளுங் கூந்தற்பனைகளுங் காய்த்தபழங்களை முத்தணியாகவணிந்ததோட்டமொருபாலும் நீரில்விளைசெந்தாமரைக்குளமொருபாலு மழகாகநிற்ப நடுவேநின்றவழகியசித்திரக்கூடத்தை யப்பெருமையுடையோர் சென்றாரென்க.

17. வினைகள்மாறியவண்டவஞ்செய்மோனர் விழைந்திருப்பச்
சுனைகள்கண்குவளையிமையாநோக்கச் சுனைக்கரைமேற்
சினைகளாகியவாயிரதூணாட்டிச் சித்திரங்கள்
நனைகள்தெளித்தெழுதிவனைந்தகூட நடுவதிந்தார்.

உரை.— அக்கூடமெத்தன்மைத்தோவென்னில்: வினைகளைத்தீர்க்கும் நற்றவத்தைச்செய்யுமுனிவர் விரும்பியங்கிருக்கும்படி மலர்ந்தகருங்குவளைகள் பூந்தடாகத்தின் கண்களாகவிமையாமனோக்காநிற்ப வத்தடாகத்தின்கரைமே லுறுப்பாகவாயிரந் தூண்களைநாட்டி யெடுத்தசுவரிடத்துப் பூவரும்புகளைத்தெளித் தவற்றைக்கொண்டழகுபெறச்சித்திரங்களை யெழுதியலங்கரித்த வக்கூடத்துநடுவே யிருந்தாரென்க.

## III. வேறு.

18. குடம்புரையிற்றோன்றுமதிகொழித்தகற்றைதெளித்துமணி
வடம்புரையிற்சித்திரங்கள் வரைந்துதோன்றும்வடிவமதோ
படம்புரையிற்றீட்டியபொற் பாங்கார்நோற்றபான்மையதோ
சடம்புரையிற்றோன்றியவான் றளமோதேறல்சால்பரிதே.

உரை.— அச்சித்திரங்களையெழுதின வடிவேதென்னில்: பாற்குடமொப்பத் தோன்றியசந்திரன் விரித்தகதிர்களைத்தெளித்துக் கோர்த்தமணிவடமொப்பச் சித்திரங்களையெழுதியகோலந்தானே சித்திரப்படத்தின்றன்மையா லெழுதியவழகுளமேனிய ரசையாமற் றவஞ்செய்யும் பாவனைதானேவுருபியாய்நின்ற வான்றளங்களுருவத்தையெடுத் தங்கே வந்திருக்குந்தன்மைதானேவொன்றிலேதேறிச் சொல்லுவதரிதென்க.

19. காவியங்கண்கிளர்வியப்பா னிமையாநோக்கிக்கனிவோங்கி
யாவியங்கண்ணுண்டெனினு நெடுநாள்மோனரண்டியதா
லோவியங்கண்மோனமுறி யவைகண்டாருமோவியமாய்
மேவியங்கண்பிறழாது விளைத்தவின்பால்வியப்பவரோ.

உரை.— மீளவு மச்சித்திரங்களையெழுதியநுண்மையா லவைநிமையாமலும் பேசாமலு மிருந்தாலுமுயிரில்லையென்று சொல்லக்கூடாமற்றோன்றினதன்மையேதென்னில்: அச்சித்திரங்கள் தம்முளொன்றொன்றினைப்பார்த்துப் பட்டவதிசயத்தாற் கருங்குவளையொத்தகண் ணிமையாதென்றும் நெடுநாட்பேசாதமுனிவரோடுபழகி நல்லுயிரங்கேயிருந்தாலு மச்சித்திரங்களு மவுனமாய்ப்பேசாதென்றுந் தோன்றியவற்றைக் கண்டவருஞ் சித்திரங்களைப்போலத் தோன்றும்படி யாசையோடங்கே யசையாமலு மதிசயித்துநிமையாமலும் நிற்பாரென்க.

20. அணிச்சாயலீரறஞ்சேர்த் தணிந்தமார்பேந்தருந்தவத்தோ
பணிச்சாயல்வாைந்தவுருப் பலவுஞ்சூழப்பார்த்தனகாற் [ன்
பிணிச்சாயல்வாட்டியமெய்ப் பிணைவின்மாண்பார்நூறடிகள்
துணிச்சாயல்மலர்முகத்துத் துன்னியாசிசொற்றினரால்.

உரை.— அங்ஙன மாபரணவடிவினுலெழுதப்பட்ட வப்பலவுருவுகளை மணிமாலையாக வில்லறமுந்துறவறமுமென்றீரறங்களைச்சேர்த்தி மார்பிலணிந்த வருந்தவத்தோனுகியசூசை பார்த்துக்கொண்டுவருகையிற் பிணியால் வாடினாற்போலத் தவத்தான்மெலிந்தவுடலோடு பெருமாட்சிமையுடையநூறுமுனிக ளொளியோடுமலர்ந்தமுகத்தோடண்டி யாசியைச்சொன்னாரென்க.

21 துன்புமிகவைம்பொறியைத் துமித்ததன்மைசுடர்ஞானத்
தன்புமிகப்புடைசூழ்ந்த வரியமோனருந்துதிறொன்
றின்புமிகக்கனிந்தகனி யிளந்தீங்கந்தத்தோடளித்த
பின்புமிகவருள்மூத்தோன் பெயர்ந்தநாடென்னுடென்றான்.

உரை.—அங்ஙனம்வந்த முனிவர் மிகவும்வருந்திப் பஞ்சேந்திரியங்களைத் தவத்தாற்கொன்றதன்மைத் தெழுந்ததெளிந்தஞானத்தளவி லன்புமுள்ளேமிகுந்து சூழநின்று வினியகனிகளையு மிளநீழங்குகளையுந்தந்து

பசியாற்றுங்களென்று பின்பவருள்ளருளினேங்கிய மூத்தோரொருவன் அதிட்டனென்பா னீர்வந்தநாடெந்நாடென்று கேட்டானென்க.

22. திருப்புகழேழுபுகழ்ம்மறையே திருவேறாலேகுடிவைகும்
மருப்பொழிலேவிளைப்பணேயே வளர்யூதேயநாட்டிலிருந்
தருப்புகைவெம்வனச்சுரம்வந் துவப்பவிங்கண்சென்றனமென்
றிருப்பெனவேமறையுந்து மிரதமொர்பன்வளன்சொன்னன்.

உரை.—அதிட்டன்கேட்டதற்குச் சூசைமறுமொழிசொல்வான்: நற்புகழும் புகழப்பட்டவேதமுஞ் செல்வமு மற்றநூல்களுங் குடியாய் நின்று வாசபூஞ்சோலைகளும் வாசமலர்வயல்களும்வளர்ந்து சிறப்புசெய்யும் யூதேயநாட்டிலிருந்து புகைந்துவேகும்வனத்துவழிவந் துளங்குளிர்ந்துவக்கும்படி யிங்கேசென்றேமென்று தனக்குரியிடமென்று வேதமெழுந்திருக்கு மிரதமொத்தமார்பினையுடையசூசை சொன்னனென்க.

23. நாகத்தாலுண்டமதி நாளுக்குன்றுநவையொப்ப
மோகத்தாலுண்டமனம் முதிர்பற்செல்வமுரிந்துகெடும்
போகத்தால்விளைநசைத்தீப் பொறுதுதண்காப்புக்கனமென்
றுகத்தாரருள்மிக்க வதிட்டனென்பானறைகின்றான்.

உரை.—அப்பொழுது மூத்தோனாகியவதிட்டன் றமு மக்காவிடத்துவந்திருந்தகாரணஞ்சொல்வான்: கரும்பாம்புண்டுமிழுங்கியசந்திர னொளியைவிடாதுகெடு மதுபோல மோகத்தால்மிழுங்கியமனமு முற்கொண்டவருட்செல்வம் பொருட்செல்வங் கல்விச்செல்வ மிவையெலாங் கெடுமென்றுபோகநுகர்ச்சியால்விளையு மாசையின்வெப்பம் பொறுக்கமாட்டாமல் நாங்களு மிக்குளும் பூங்காவிடத்து நுழைந்துவந்தோமென்று மனநிறைந்தவருளின்மிக்க அதிட்டன்சொன்னனென்க.

24. சிக்குருவைவித்தியபின் றிண்காழச்சாவிளைவாமோ
சொக்குருவையுண்டுண்டு துகளோடாசைவளர்ந்தனபின்
னிக்குருவைக்காட்டியபூ வெழுதுங்காவுஞ்சுடுமன்றே [யான்.
வொக்குருவையொழித்துநசை யொழியுமென்றான்மலர்க்கொடி

உரை.—மோகநுகர்ச்சியால்வந்த வாசைவெப்பத்தையாற்றக் குளுங்காவிடத்துவந்தோமென் றதிட்டன்சொன்னதற்குச் சூசைசொல்வான்: முருங்கைவிளையைவிளைத்து ஆச்சாவயிரம்விளையுமோ? அழகியவுருமேனிகளைக் கண்ணாலுண்டுண்டு பாவமுமாசையும் வளர்ந்தபின்பு தேனைப்பொழிந்த பூங்காவிடத்துவந்தாலு மதுவுமுட்சுடுமே, தன்னுடலுமொக்கவிட்டகாலத்தாக்கு முட்கொண்டதீயவாசையு மொழிந்துவிடுமெ

ன்றான் பூங்கொடியோன் ரூசையென்க. (ஆகையாற் பாவத்திற்பழகாமலுந் தீயவாசையிற்பழகாமலுந் தவஞ் செய்யல் வேண்டு மென்பது கருத்து.)

25. பிறந்தநாள் துயரொக்கப் பிறந்துபோராத் துணைவைகிச்
சிறந்தநாட்கலாநாற் றிறங்கொண்டாசையகன்றனரோ
விறந்தநாளுய்வரலா விருந்தநாட்டிற் றுயராற்றார்
பறந்தநாள்கூண்டொழியும் பறவையென்றானதிட்டனென்பான்.

உரை.—மனிதர்பிறந்தபோது துன்பமுங்கூடப்பிறந்து பெயராத துணையாகநின்று நாட்டிலிருந்தநாள்மட்டு மாசையுட்கொள்ளாதிருப்பாரில்லை, இருந்தாலுமவர்செத்தபோது துன்பமொழிந்துவாழ்வரொழிய நாட்டிலிருந்தநாள்மட்டுந் துயரையாற்றமாட்டார், பறவைகள் முதலாய்ப் பறக்கும்பருவம்வந்தவுடனே தங்கூட்டைவிட்டுப் போவனவென்றான திட்டனென்க. (ஆகையால் மனிதராசைப்படாதிருப்பதுமரிது, கொண்டவாசையாறக் காட்டில்வருவதும் நல்லதென்பதுகருத்து.)

26. நசையட்டுநசைகடந்த நயஞ்செய்வான்றாளணுகின்மெய்ப்
பசையட்டுவாழ்வரலாற் பகைத்தபாரில்வதிந்தனநாள்
வசையட்டுவாழ்பவரோ மழுநீர்சூழ்ந்தமலைநண்ணி
யசைவட்டுநிலைபெறாத லன்னவென்றான்மறைவடிவான்.

உரை.— நாட்டிலாசையின்றியிருப்பது துன்பமிகுமென்றதற்குச் சூசைசொல்வான்: ஆசையைக்கொன்றுநீக்கி யாசையைக்கடந்த பேரின்பத்தைத்தரு நாதன்றிருப்பாதத்தையணுகினு லவருடலைவிட்டுச்செத்த பின்பு பெரும்வீட்டில்வாழ்வாரொழியப் பகைக்கபூவுலகிடத் தவரிருந்த நாளும் வசையொன்றின்றிவாழ்வார். அதெங்ஙனமென்னில் நீர்க்கடல் சூழ்ந்த வுயர்மலையையண்டினவ ரலைவின்றி நிலைபெற்றிருப்பதுபோல வென்றான் வேதவடிவாகநின்ற சூசையென்க.

27. போரோங்கிப்பகைத்தனபோற் புணரிபன்றைட்புடைபுடை-
வாரோங்கிமுகிற்புகைத்த வயிரக்குன்றங்குன்றுமன்றே [ப்ப
தாரோங்கிவசையேந்துஞ் சடக்கமண்ணோர்தளிர்க்கடலைக்
கூரோங்கிநிற்பரோவர் சொன்மினென்றான்றொல்லுணர்வான்.

உரை.— நாட்டிலிருந் தாசையில்லார் கடலாற்சூழ்ந்த மலையையண்டினர்போல நிற்பரென்றாயே, ஆயினும் போர்பொருதாற்போலப் பலநாளுங் கடலலைபுடையின் மோதமோத மேகத்தோடு கலந்துயர்ந்த யிவரமலையுங்கரைந்துகெடுமே. அக்தன்மையான் மாலையோடு வசையணிந்த வஞ்சகமார்புடையபாவிகளறத்தோடைப்பகைத்துத் தளிர்த்த துன்பத்துநிற்பவருண்டோவென்று னல்லுணர்வுடையசூசைதோழனதிட்டனென்க.

28. நீரோங்கிமலர்மிதக்கு நிகராவல்லோன்கையருளின்
சீரோங்கியெவர்நில்லார் தெறுநர்தெவ்வுந்திருப்பயத்த
லேரோங்கிவரைந்திட்ட வின்னகாதைகாட்டுமென்முன்
பாரோங்கியணிதிலத மெனநற்சீலப்படலையினான்.

உரை.—நீர்மலரெல்லா நீர்மேன்மிதக்கும்போல நிகராவல்லமையுடையநாதன் றன்றனையக்கையா னம்மையேந்தியகாலத் தெவர்நில்லார், சத்துருக்களொருவற்குச் செய்யும்பகைமுதலா யாண்டவனுதவியா லவற்குச்செல்வங்களைப்பயக்குமென்று இங்கேயழகுபெறவெழுதப்பட்ட கதைதானேகாட்டுமென்முன் பூவுலகணிந்ததிலதம்போலநின்று சகலநற்சீலங்களைக்கோர்வையாகவணிந்த சூசையென்க.

29. பொற்சாயலரிதங்கண் பொறித்தகாதையென்றனகால்
விற்சாயல்கண்கனிய விரும்பிநோக்கிமதிப்புத்தே
டற்சாயல்மதிவல்லோய் தளிர்த்தவையந்தீர்சிறிது
புற்சாயல்சொல்வலெனப் புகல்மீண்டுற்றான்றவமூத்தோன்.

உரை.— அங்ஙனம் பொற்சாயலாக வரிதி லங்கேயெழுதப்பட்ட சித்திரக்கதையென்று சூசைசொன்னவளவிலே யதிட்ட னின்பத்தாற் றன்கண்விளங்க விருப்பத்தோடு சூசையைப்பார்த்துப் புதுவாய்முளைத்த திருச்சந்திரனைப்போலமதிவல்லோனே! என்மனதிற்றோன்றிய சந்தேகந்தீரும்படி நான்புற்சொல்லாற் சிறிதுசெய்தியைச்சொல்வேனென்று மீளவுஞ்சொல்லத்துடங்கினான் றவத்தின்மூத்தோ னதிட்டனென்க.

## IV. வேறு.

30. புதிவளர்திங்கட்கோட்டுப் புரைவளரசனிவில்லான்
கதிவளர்வளிமுன்பாய்மா கடந்தபோர்முகத்தேறன்று
னிதிவளர்மகுடம்பூண்ட நீபகனென்னுங்கோமான்
றுதிவளர்துறவுவெஃகித் துணர்வளர்காவில்வந்தான்.

உரை.— அதிட்டன்சொல்லத்துடங்கின கதையேதென்னில்: வளரிளம்பிறைக்கொம்பொப்ப வளைவாகவளைந்து வானிடியொப்பக்கொடியவம்புகளையெய்யும் வில்லையுடையனாய்ப் பலவகைநடைகொண்டு காற்றுமுன்னேபாயுங் குதிரைவிட்டுக் கடந்தபோர்முகத்தரியசிங்கத்தொத்தவனாய்ப் பொன்முடிசூழ்ந்தவரசனாகிய நீபகனென்பான் புகழப்பட்டதுறவினையான் மலர்ந்தவிக்காவிடத்துவந்தானென்க.

31. நீளரிமதர்க்கண்ணார்தம் நெடும்பகைதுறத்தலுள்ளி
வேளரிதமர்ந்தபோரில் வெற்றிகொண்டுவந்துமீண்ட
கோளரிநடப்பதேபோற் கோன்மையுநகருநீக்கி
வாளரிதிடையிற்பூட்டி வந்திவண்டணித்துச்சேர்ந்தான்.

உரை.— சிவந்தவரியிற்பொறித்த நீண்டகளிக்கண்மாத ரிவற்காசை விளைவித்து நெடுநாள்செய்தபகையைத் துறக்கும்படி மன்மத னரிதாய்த் தனக்குச்செய்தபோரில் வெற்றியைக்கொண்டு மகிழ்வோடுதிரும்பினாற் போலச் சிங்கநடையாற்செங்கோலரசுந் தன்னகருநீக்கி யிடையில்வாளைக்கட்டித் தனியேயிவ்விடத்து வந்துசேர்ந்தானென்க.

32. தெள்ளூறமின்னியார்த்த செல்லுறும்படர்ந்தநெற்றி
கள்ளூறமலர்ந்தகானங் காண்டருகுறுங்கால்வேட்கை
யுள்ளூறப்புதியதென்ற லுந்துவேளெதிர்கொண்டன்ன
வள்ளூறவாசங்கான்ற வனிலமாங்கெதிர்கொண்டானே.

உரை.—அங்ஙனம்வருகையிற் றெளியமின்னிமுழங்குமேகங்களுட் கலந்த வுச்சிக்கொம்புகளின் மதுப்பொழியமலர்ந்த விப்பூங்காவை யவன்கண் டருகணுகிவருகையில் வேட்கையைமனதினுள்விளைவிக்கப் புதியதென்றலாகிய தேரேறிவந்தமன்மத னெதிர்பட்டாற்போலப் பூமலர் வாசனை மிகவுமுமிழ்ந்துவருங்குளிர்காற்றெதிர்கொண்டானென்க.

33. புலம்புறைகேட்டுநண்ணிப் பூம்பொழிலொருங்குஞ்சூழ்ந்
ரலம்புறைமுகைத்ததேன்பூ வலரிருகரையில்விம்மிச் [தி
சிலம்புறைசிலம்பியோடத் திந்திரைசுருட்டுங்கங்கை
கலம்புறைமணிப்பொன்மார்பன் கண்டதைக்கடக்கலாற்றான்.

உரை.— அங்ஙனம் நீபகன்கிட்டவருகையிற் காவினுட்புலம்பினாரோசையைக்கேட்டுவந்து நுழையும்வழிவிடாம லிக்காவெல்லாம்வளைத் துச்சுற்றியணிந்த விருபூமாலைபோலப் பூத்தவிரண்டுகரையினுட் சிலம்பினோசையின்முழங்கித் திந்திரைசுருட்டியோடிவரு மோராற்றைக்கண்டு கலமொத்தகன்ற மணிமார்புடையநீபக னதைக்கடக்கமாட்டாதேநின்றானென்க.

34. அவ்வாவுறிநொந்துநிற்ப வம்புலிக்குழவிவெண்கோட்
டுவாவுறியமைவநோக்கி யுரங்கொடுவுந்தியப்பா
லிவாவுறியிழிந்தபின்ன ரியைந்ததன்மதத்தமாவைச்
சுவாவுறிவிழுங்கல்கண்டான் றுளங்குபொற்குன்றத்தோளான்.

உரை.— இக்காவினுள்வர வாசைப்பட்டவனுற்றைக்கடக்கமாட்டா மனெனுந்துநின்றவளவிற் பிறைபோலவளைத்த வெண்கொம்புள்ளவொரு யானைவந்து தானேறும்படியமையக்கண்டு வீரமோங்கியதின்பிடரிமே லேறி யாற்றைக்கடந் தப்பாற்சென் றிறங்கினபின்பு தானேறிவந்த மதயானையை யோரெறும்பு விழுங்கினதுகண்டான் விளங்கியபொன்மலை யொத்ததோளா னீபகனென்க.

35. மலைபுறங்கண்டமார்பன் மனம்வியந்தயிர்ப்பினோக்க
வலைபுறங்கண்டகங்கை யரவெழுவளவில்விம்மிச்
சிலைபுறங்கண்டகூலஞ் சிவணிமேற்பிரளக்கண்டே
யிலைபுறங்கண்டகாவுள் ளியைந்தவாளேந்திப்புக்கான்.

உரை.—அங்ஙன மலையினுந் திண்ணியமார்பனீபக னதிசயித் தயிர்ப்போடுபாராநிற்பத் தான்முன்கடந்ததிரைகளைச்சுருட்டிவரும்புன லொலிமிக வளவின்றிப்பொங்கிக் கற்கரைகிட்டி மேற்பிரண்டோடக்கண்டு துணிவோடு தழைத்தபூங்காவினுள் வாளையேந்தி நுழைந்தானென்க.

36. பொற்கலத்தரிட்டமேந்திப் பூத்தகா நுழையும்போழ்திற்
சொற்கலத்தினியபாடல் துடர்ந்தகின்னரம்பண்மற்றப்
பற்கலத்தெழுந்தவோதை பரிவறவிமிழிற்கேட்டு
விற்கலத்தலர்ந்தவிக்காவிரும்பிவந்தனராரொன்றான்.

உரை.—அங்ஙன மவன் பொற்பாத்திரத்து மதுவையேந்தினாற்போல மதுபொழிந்து மலர்ந்தவிக்கா நுழையும்போது மனிதர்குரலாலினிய பாடலு மப்பாடற்கிசைபடக் கின்னரமும் பண்ணு மற்றப் பலவகைவீணைவாயெழுந்தவோசையு மகிழ்வெய்திக்கேட்டு வொளிமுகத் தினிதின் மலர்ந்தவிக்காவிடத்துவந்தவராரொன்று னீபகனென்க.

37. காவெலாமுகைத்துப்பூப்பக் காலெலாஞ்சவரம்வீசப்
பூவெலாநறுந்தேன்றாவப் புள்ளெலாம்விளித்துப்பாடக்
கூவெலாநிகராவண்ணக் கோலநீணெறிபோயப்பால்
மேவெலாவனப்புவாட்டும் வியன்றவோர்வெளியுட்சென்றான்.

உரை.— அங்ஙனம் நீபகன் றுணிவோ டிக்காவினுள்வருகையிற் காவெல்லா மரும்பின்வாய்மலர்ந்து பூக்கவுஞ் சூழவீசினகாற்றெல்லாம் வெண்சாமரையிரட்டவு மலர்ந்த பூவெல்லா மதுவைப்பொழியவும் பறவையெல்லாம்வரச்சொல்லியழைத்தாற்போலப்பாடவும் பூவுலகினிகராத வண்ணக்கோலத் தழகுபெற்ற நெடியதோர்வழிகடந்தபின்பு விரும்பினவலங்காரமெல்லாம் வென்றவழகினோ டகன்றவோர்வெளியையடைந்தானென்க.

38. மோட்டிளந்தேறல்தூவி முகைத்தருவொழுங்கிற்சூழ
நாட்டிளம்பிடியார்சாயல் நகைமயிலகவியாடச்

சேட்டிளஞ்சினைகடோறுந் திருமணிச்சாயற்பைம்பூ
வேட்டிளம்விழிகள்விண்ட விளந்தருநடுவிற்கண்டான்.

உரை.—நடுக்காவிடத்து நீபகன்கண்டவெளி யெங்ஙனமிருந்ததெ ன்னில்: உச்சிக்கொம்புகளிடத்தி லிளமதுப்பொழியு மலரைப்பூத்த பலமரங்களொழுங்குபடச் சூழநிற்பவுநாட்டிளம்பெண்களின்சாயலாக வழகியமயில்கள் கூப்பிட்டாடவு நடுவேயழகியவிளங்கொம்புகடோறு மணியின்சாயலாய்ப்பூத்த வாசமலர்கள் தம்மிதழாகியகண்ணை விழித்து நோக்கினாற்போல மலர்ந்தவோரிளமரமேநிற்பக் கண்டானென்க.

39. மீனிறத்தலர்ந்தபைம்பூ விரைநிறத்தொழுகத்தீந்தேன்
கோனிறத்திடையில்வாய்ந்த கொழுந்தருவனுநோக்கிக்
கானிறத்தலர்ந்தசாந்தக் கடிமரமென்றுநிற்பப்
பானிறத்தினியபண்சேர் பாடல்கேட்டொல்கிப்பார்த்தான்.

உரை.— அப்பொழுதவன்போய்வான்மீனைப்பமலர்ந்த பூவெலாம் வாசத்தீந்தேனைப்பொழியாநிற்ப மரங்களுள் ளிராசாபோல நடுவேசிறப்பிற்பொலிந்துநின்றமர மெம்மரமென்றறியக் கிட்டப்போய்ப்பார்த்தவளவிலே மணவாய்மலர்ந்த சந்தனமரமதுவென்றுகண்டு நிற்கும்போது சூழப்பாலின்பத்தினியவீணையோ டிசைபடப்பாடலைக் கேட்டுச் சீக்கிரமாய்த் திரும்பிப்பார்த்தானென்க.

40. சூழகமரங்கடோறுஞ் சூலுளைந்தீன்றதேபோற்
காழகம்பிளந்துசாய்ந்த காழகமுகிலிற்கூந்தல்
கேழகவுடுக்கண்மின்னிற் கெழுநுசுப்பணித்தூசேந்தி
வாழகமலர்ந்தநூறு மாதரோவருவகண்டான்.

உரை.— திரும்பிப்பார்த்த நீபகன்கண்டவதிசயமேதெனில்: அவ்வெளிசூழ வொழுங்குபடநின்றமரங்களெல்லாஞ் சூலுளைந்துபிள்ளையைப்பெற்றாற்போலவயிரமுள்ளவடிமரம்பிளந்து பிளந்தவழியால் நூறுபெரியபெண்மாதரிருண்டமேகத்தொத்தகூந்தலையு நிறவான்மீனோடொத்தகண்களையு மின்னலோடொத்த நுண்ணிடையையு மழகியபொன்னுடையையுமிவையெல்லாவற்றையு மணிந்தேந்தி மகிழ்வோடு மனமலர்ந்து கிட்டிவரக்கண்டானென்க.

41. நிழலெடுத்துலவுவிண்மீ னிறைமதிசூழ்ந்ததேபோ
லழலெடுத்தெரிக்குங்கண்ணு ரரசனைவளைத்துவீணை
குழலெடுத்தினியவோதை குயிலெனக்குயிலநூறுங்
கழலெடுத்தாடிப்பாடிக் கனிவெடுத்திணையசொன்னார்.

உரை.— ஒளியைவிட்டு வானிலுலாவியமீன்கள் முழுமதியைச்சூழ்ந்தாற்போல நெருப்பினைவீசி யுமிழாயாசையாலெரிக்குங்கண்ணையுடையம்மாத ரங்ஙனங்கிட்டவந்து நீபகனைச்சூழவளைத்து வீணையுங்குழலு மற்றனவுங் கிளைத்தவேழிசையோசையோ டிசைபடக்கடைபிடித்தேற்

றிய பலகுரலோசை குயிற்குரலாகவினிதாய்க்கிளம்ப நூறுபேருங் கா லெடுத்தாடிப்பாடி யின்பமா யிவற்றைச்சொன்ஞரென்க.

42. தூசனைமரங்கள்சூழ்ந்த துணர்ப்பொழின்முன்னிவில்செய்
காசனைவிருப்பம்பூண்ட கருத்துனைமறவாவெஃகுஞ்
சாசனையுவப்பவந்தாய் சாசனையுவப்பிற்காவு
மீசனைக்கண்டதேபோ லின்பெழக்காணுயென்ருர்.

உரை.—அவர்சொன்னதேதென்னில்: மன்னனே! நீமுன்னேயன்பு வைத்திருந்த சாசனையென்பவள் பொன்மணியாடையுடுத்தாற்போல மல ர்ந்தமரங்களாற்சூழ்ந்த விப்பூங்காவிடத்துனக்குமுந்திவந்து விளங்கியம ணியாக வுன்மேல்வைத்தவிருப்பத்தைவிடா தணிந்தகருத்தோ டவனு ன்னைமறவாமல் விரும்பினவளாகையி லவள்மனமகிழும்படி நீயிங்கேவந் தாய். அவள்மகிழ்ந்தவின்பத்தல்லோ விக்காவுஞ் சுவாமியைக்கண்டாற் போல வுன்னைக்கண்டவளவிலே மலர்ந்துகளிகூரவும் பாரென்ருரெ ன்க.

43. பாணெறியிவற்றைப்பாடப் படர்ந்தசந்தனமும்வீறி
வாணெறிபழித்தநீண்கண் மடந்தையேபுறப்பட்டெய்த
வேணெறியொழுகித்தான்முன் விழைந்தசாசனையின்சாயற்
கோணெறிமுகத்திற்கண்டு குலைந்தயிர்ப்புற்றுநின்ருன்.

உரை.— அங்ஙனமாடியநூறுபேரும் பாவாகவிவற்றைச்சொன்னபி ன்பு நீபகனருகுநின்ற சந்தனமரமு மடியிற்பிளந்து வாளின்கொடுமை யைப்பழித்த நீண்டகண்ணையுடையவோர்மடந்தை புறப்பட்டுவருகை யில் மீனெத்தமுகத்தையுற்றுப்பார்த்த நீபகன் முன் முன்மன்மதன்கா ட்டிய காமவழியாலன்புவைத்திருந்த சாசனையின்சாயலென்றுகண்டு ம னதிற்குலைந்தையப்பட்டு நின்ருனென்க.

44. வாளணிகயற்கண்மின்ன மணியணிக்குழைவில்வீச
நீளணிதயங்கிநாற நிறத்துகிலொளிகள்விம்மக்
காளணியெறிவேற்சாயற் கனிவுகுத்துயிருண்டஞ்சொல்
வேளணிதிலதமொத்தாள் வீணைநற்குரலிற்சொன்ஞள்.

உரை.— அங்ஙனஞ் சந்தனமரத்திற் புறப்பட்டபெண்ணேவென் னில்: வாளையேந்தியகயல்மீனெத்தவிருகண் மின்னவுமணியாலழகுபெ ற்றகாதணி யொளியைவீசவு நீளமாய்மார்பிற்றூங்கியமணிவடங்க ளசை ந்துவிளங்கவுமுடுத்தபொன்ஞடை சுடர்களைச்சூழவிடவுநிற்பநஞ்சுதோ ய்ந்தவெறிவேலொப்பவின்பத்தைக் காட்டியுயிரைக் கொல்லுமினியசொ ல்லைக்கொண்டுமன்மதனணிந்த நெற்றித்திலதமொத்தவள் வீணைபேசினு ற்போல விவற்றைச்சொன்ஞளென்க.

45. மடங்கலேறுன்னையென்ருர் மடங்கலிற்கொடியனுனுய் [ன்
தடங்கையேகொலையில்விஞ்சித் தளர்ந்தவென்னுயிர்கொன்ருயெ

குடங்கையேமறந்தாயுன்னைக் குணித்துனுன்றேடமுன்னி
முடங்கலேவிளைகான்வந்தேன் முற்றவோவிரங்காயென்றாள்.

உரை.— அவள் நீபகனைநோக்கிச் சொன்னதேதென்னில்: சிங்கரா யனுன்னையென்றோ சிங்கத்திலுங்கொடியனுனுய், உன்றடக்கையே போர்முகத்துயிர்களையுண்டு கொலையிற்பழகியிப்பொழுதுமிஞ்சித் துன்ப த்தாற்றளர்ந்தவென்னுயிரையுங்கொன்றுயே, இனிதாய்நீ முன்சாய்ந்திரு ந்தவென்குடங்கையைமறந்தாயே, நானுன்னைமறவாமற்றேடி மூங்கில்சூ ழ்ந்த விக்காவிடத்துனக்குமுந்திவந்தேனே, நீயோமுற்றமுடிபோக வெ னக்கிரங்காதிருப்பாயோ வென்றுளென்க.

46. மட்டுயிர்ப்பதுமவாயாள் வயிரக்குன்றுருகத்தேம்பி
நெட்டுயிர்ப்புயிர்த்துவிம்மி நெய்த்திடைதுவண்டுவாட
வட்டுயிர்ப்பசையுண்பேய்க ளருந்தவந்தவிர்க்கமாயை
நட்டுயிர்ப்பனவென்றெண்ணி நரபதிதேறினுனே.

உரை.— மதுவுக்குயிர்தருந் தாமரைவாயையுடையா ளிவற்றைச் சொல்லி வயிரமலையுமுருகும்படிதேம்பிப் பெருமூச்சுவிட்டழுது நொந் த நுண்ணிடைதுவண்டுவாடாநிற்ப நரபதியாகியநீபகன் சாசனையிங்கேவ ந்ததேதென்று நல்லுயிருண்ணும் பேய்களாக்கு நானினைத்த தவத்தைத் விர்க்கும்படியிவற்றைநட்டுச் செய்தமாயைவித்தை யிதுவென்றெண்ணி மனதிலேதேறினுனென்க.

47. தேறினுன்சுழற்றும்வாளாற் சினைதவுகமுளைத்தசாகி
நூறிநான்றுமிப்பலென்ன நுண்ணிடையணங்குநீந்தே
னூறிநான்றெரிந்தசாந்த மொழியவோசெய்வாயென்று
கூறினுளொருங்குகையாற் கொழுந்தருத்தழுவினுளே.

உரை.— அங்ஙனந்தேறியநீபகன் வாளைச்சுழற்றி யெனக்குக்கேடு விளைவிக்கும்படி முளைத்தவிம்மரத்தையழித்து வெட்டுவேனென்றுன், என்றவுடனே யருகுநின்றநுண்ணிடைப்பெண்ணு நானிருக்கும்படிதெ ரிந்த தீந்தேனூற்றதாகியசந்தனமரத்தை வெட்டுவாயோவென்றுசொல் லிப்போய் வெட்டாதபடி யம்மரத்தை யொருங்குடனிருகையாற்றழுவி னுளென்க.

48. பூங்கணையுழுதநெஞ்சம் புண்படவுருவிப்பின்னர்
பாங்கணைமரங்கொய்தொக்கப் பகைத்தசாசனையுங்கொல்வாய்
தீங்கணைகொடியோயென்றாள் செல்வனுநகைத்துன்மாயை
யீங்கணைகொடுமைகற்றே னென்றுவாள்வீசினுனே.

உரை.—அங்ஙன மன்னுள் கையால்மரத்தைத்தழுவிச்சொல்வாள்: உன்னைவேண்டி மன்மதன்முன்னெய்த பூவம்புகளாலுழப்பட்ட வென் னெஞ்சு புண்ணும்படி யதிலேயுன்வாள்பட்டுருவினபின்ன ரழகியவிம்ம ரத்தைவெட்டியொருங்குடனீபகைத்த சாசனையாகிய வென்னையுங்கொ

ல்வாயாகத் தீயகொடியோனேயென்றாள், அவற்றைக்கேட்ட நீபகனை கைத்து நல்லதுன்மாயை யிங்கேசெய்யநினைத்தகொடுமையை நன்றாய்க் கற்றேனென்று துணிவோடுமரத்தடிமேல் வாளைவீசினானென்க.

49. நாறுசெம்மணியின்சாயல் நயப்பெறநின்றாள்கொண்டூ
கீறுமையுருவங்காட்டிக் கிளைத்ததோளிருநூறாக்கி
நூறுகைவடிவாள்வீச நூறுகைகிடுகையேந்தச்
சீறுநெய்யெயிற்றுநீண்கூன் றிங்களேதோன்றநின்றாள்.

உரை.—அங்ஙன மவள் நயங்காட்டியவளவி லவன்மனங் கலங்காமையாற் பயங்காட்டினு லவன்மனங்கலங்குமென்று விளங்கிய செம்மணிச்சாயலாக மகிழ்வினைச்செய்யும்படி நின்றவள் பயமிடும்படி மேகங்களைச் சென்னியாற்கீறு முயர்ந்தகரியவுருவத்தைகாட்டினளாய்க் கிளைத்த விருநூறு கையையோங்கினளாய் வலக்கைநூறு நூறுவாள்களைவீசினளா யிடக்கைநூறு நூறுகேடயங்களை யேந்தினளாய்ச் சீறுவாயினளா யூனூழுகுமெயிற்றினளாய் வளைந்தபிறையொத்த பெரும்பல்லைக்காட்டிநின்றாளென்க.

50. பண்கிளைத்திசையிற்பாடல் பணித்தமற்றரிவையாருங்
கண்கிளைத்தெழுந்தசெந்தீக் கதத்தநூறரக்கராகி
விண்கிளைத்திடியேறஞ்ச விபுலைசூழ்நடுங்கவார்த்துப்
புண்கிளைத்தொழுகுநெய்த்தோர் பொழிபடையேந்திநின்றார்.

உரை.— வெருவிடுமுருவோடு மவளங்ஙனநிற்ப வீணைவாய்கிளைத்த பற்பலவிசைபிடித்தேற்றிய வினியபாடல் முன்னியற்றிநின்ற மற்றநூறுமாதரும் கண்வழிகிளைக்குத் தெரித்தசெந்தீயுமிழுங்கோபத்து நூறிராக்கதரைப்போலவாகி மேகங்களைக்கிழித்துப் பலவாயிடித்துவிழு மிடிமுழக்கங்குறையப் பூவுலகெல்லாநடுங்கும்படி வலிதாயார்த்துப் புண்வழியோடினவிரத்தத்தைக் கொப்பளித்த பலவாயுதவகைகளையேந்திச் சூழநின்றாரென்க.

51. காரொழுந்தன்மைவான்செய் கதிர்புதைத்திருளவான்மேற்
போரொழுந்தன்மைமின்னிப் புயற்கிழித்திடிகளார்ப்ப
நேரொழுந்தன்மைபூங்கா நிரையநேர்வெருவுவீங்கச்
சூரொழுந்தன்மைத்தஞ்சாத் துளங்கிறன்வயிரநெஞ்சான்.

உரை.— அவரெல்லாருமங்ஙனம் வெருவிடச்சூழநிற்பக் கருமுகமேகங்களெழுந்து வானொளியெல்லாத்தையும் புதைத்துச் சூழிருள்மிகவும் வான்மேற் போர்பொருதாற்போலமின்னி மேகங்களைக்கிழித் தெண்ணப்படாதவிடிகள்விழுந்துமுழங்கவு மதற்குநேர் பூங்காவெல்லா நரகம்போலமிகவும் வெருவிடநிற்பவு மிவையெலாமிங்ஙனமாகியு மிவ்வகைத் துன்பமெல்லா மெழுந்தவளவிற் கவனும் வீரத்தெழுந்தஞ்சாமல்விளங்கிநின்றான் வயிரநெஞ்சுடையநீபகனென்க.

52. உன்னியதவத்தைப்பேண வொழிந்ததீயினிமைவெஃகேன்
றுன்னியவிடுக்கணஞ்சேன் சுருதியிதெனக்கென்றோங்கி
மன்னியதுணிவிற்றேர்ந்த மண்ணைகள்நரகில்வீழ்க
மின்னியவடிவைவாளால் வியன்றருவீழக்கொய்தான்.

உரை — அங்ஙனங் கலங்காதிருந்த நீபகன் தேறிச்சொல்வான்: நானினைத்ததவத்தைக் குறையின்றிப்பேணி முடியும்படி நான்முன்விட்டொழிந்த தீயவின்பங்களை யினிவிரும்பாமலும் வருந்துன்பங்களுக்கஞ்சாமலுமிருப்பதே யெனக்குவேதமாகிற்கு முறுதியிதுவென்று மனதிலோங்கிக் கொண்டவசையாத துணிவினாற் றேர்ந்து முன்சொன்னதெல்லாங்காட்டவந்தபசாசுகள் நரகத்தில்விழும்படி யவன்றன்வாளாலச்சந்தனமரத்தை விழத்தாட்டிவெட்டினனென்க.

53. கொல்வினையலகைபோய்த்தற் கொள்கையிற்கானங்தோன்
புல்வினையறுப்பநோற்றான் பொலிந்தநீபகனென்பானே [றிப்
நல்வினைபகைத்தபேய்கள் நயமொடுவெருவுகாட்டி
மல்வினையொழிக்கவோர்ந்த மாயையேயின்றுமெஞ்சா.

உரை.— அங்ஙன மதெல்லாமாயைவித்தையாற்காட்டவந்த வுயிரைக்கொல்லும்பசாசுகள்போ யிப்பூங்காவு முந்தினவரியவழகுமின்றிப் பிந்தினவெருவுவடிவுமின்றித் தன்சுபாவத்தன்மையாற்றோன்றிப் புல்வினையாகியதீவினை கெடும்படி யருந்தணத்துயர்ந்தநீபகனிங்கே தவத்தைச்செய்தான், நல்வினைகளைப்பகைத்த பசாசுகள் நயமும்பயமுங்காட்டி மல்வினையாகிய வவன்றவத்தைக்கெடுக்கும்படி யன்றுநினைத்தமாயைத்தொழிலே யிந்நாளையிலுங் குறைவின்றிச் செய்துகொண்டுவருவனென்க.

54. வெங்கணேரிரவியொத்த விடலையேநெடுநாணோற்ப
விங்கணேயுறைந்தபோழ்தி லிவையெலாம்வளைவித்தாறு
லங்கணேயொழிற்பார்த்தல்லா லறிகிலேமெறிதியேல்வெண்
டிங்கணேர்தெளித்தநூலோய் செப்புதியென்றான்மூத்தோன்.

உரை.— அங்ஙனம் வானத்திற்கொரு வெங்கண்ணுகதிற்குஞ் சூரியனையொத்த மன்னனாகியநீபக னிங்கேயிருந்து நெடுங்காலத்துத் தவஞ்செய்திருக்கும்பொழுதி லவன்முனிச்சித்திரங்களையெழுதுவித்தானும், நாங்களோவெனி லெழுதினவழகினைப்பார்த் ததிசயப்படுவதல்லா லெழுதிய சித்திரங்கள்காட்டியசரிதை யின்னதென்றறியோம், சந்திரன்பொழிந்தபாற்கதிரொப்பத் தெளிந்தவுணர்வினையுடையோய்! நீயச்சரிதையறிந்தாயாகிற் சொல்லுவாயாகவென்றான் மூத்தோனாகிய வதிட்டனென்க.

V. வேறு.

55. பண்காவிசைபடுத்திப் பகர்ந்தவுரைவளன்கேட்டு
மண்காவலற்காய முறையிலறமலிநீரார்

விண்காவலனருளால் வினைகொள்ளாரெனக்காட்டத்
தண்காவெழுதியவை சாற்றுதுமென்றுரைகொண்டான்.

உரை.— அங்ஙனமதிட்டன் வீணைவாயெழு மின்னிசைகளைவென்ற வின்பத்துரைத்தயாவையுஞ் சூசைகேட்டு மன்னனாகியநீபகன் றனக்குவந்தமுறையான் மலியறத்துயர்ந்தோர் வானரசனாகியகடவுள்செய்யுந் தயையினுதவியால் வினைக்கொள்ளாரென்று காட்டும்படி யிக்குளுங்காவிடத்தெழுதுவித்தகதையை நான் சொல்லிக்காட்டுவேனென்று சூசை சொல்லத்துடங்கினனென்க.

56. மின்னார்கதிர்தெளித்தீங் கோவியமாய்வேய்ந்தெழுதிப்
பொன்னார்மணிக்குப்பை போன்றுநிழலுமிழ்ந்திலங்கு
மின்னொன்குலத்து முந்தையராமிவர்சரிதை
முன்னோர்மொழிபிறழா மொழிகுதுநான்கேண்மினென்றான்.

உரை.— மின்னல்வாயொழுகுங் கதிர்களைத்தெளித்துச் சித்திரமாகத்தோன்றும்படி யெழுதப்பட்டுப் பொன்னிடத்தழுத்திப் பதித்தமணிகளின்குப்பைபோலச் சுடர்பொழிந்தொளிரு மிவரொலாமென்குலத்தின்முன்னிருந்த பிதாக்களே, இவர்கதை முன்னோர்சொன்ன முறைதப்பாம னான்சொல்லக்கேட்பீராகவென்றான் சூசையென்க.

57. ஐயைஞ்ஞூறுதொடர் நானூற்றுருண்டுமுனர்
பொய்யைநூறுபுகழ் பொலிவேதநெறிவழுவா
மெய்யைநூறுதவம்விளைத்தவரும்வரத்தொகையான்
மையைநூறுவப்பில் வாழ்ந்திருந்தான்யகோபென்பான்.

உரை.— இரண்டாயிரத்துத் தளாயிரத்தாறுவருடமுன்னே பொய்யையொழித்துப் புகழிற்பொலிந்த வேதநெறியில்வழுவாம லுடலையுருத்ததவத்தால் விளைந்த வரங்கள்மிகுதியால் மயக்கமில்லாத மகிழ்ச்சியோடு வாழ்ந்திருந்தான் யகோபென்பவனென்க. *

58. சீரார்புகழ்மிக்கோன் செய்தவத்தான்முற்கொண்ட
தாராரணங்களித்த தனையருமீரைந்துபினர்
காரார்பிற்குழலாள் களித்தீன்றவிருவரினுள்
ளோரார்மூதுனனா யாணரனென்றிவன்றனே.

உரை.— அங்ஙனம்பெருஞ்சீர்ப்புகழின்மிக்கோன் யகோபென்பவன்செய்ததவத்தினால் முதற்றாரந்தந்த பத்துமக்களையன்றிப் பின்புகொண்டமேகக்கூந்தலா ளிருப்பிள்ளைகளைப்பெற்றான், இவ்விருவருள்ளேமூத்தவனாகிய ஆணரனென்பவ னிவன்றானென்று விரலாற்சித்திரங்களுக்குள்ளே காட்டினன் சூசையென்க (ஆணரனெனினும் வடமொழியாற் சுசேப்பனெனினு மொக்கும்.)

* Genesis cap. 37. சனிப்பாகமத்து – 37 –ம் அதிகாரம்...

59. அறங்கொண்டிவன்வளர்ந்தே யாங்குவனைந்திட்டனபோ
லுறங்கும்பொழுதீரைந் தொருமீனுமிருசுடரு
மிறங்குந்தன்மையில்வந் திறைஞ்சுவபோலிணைத்தன்றுள்
பிறங்குங்கதிர்தவழும் பெற்றியைக்கண்டேனென்றான்.

உரை.— சொன்னவாணரனென்பா னல்லறத்துணையாய்வளர்ந்தபி ன்ன ரங்கேயெழுதினபடி தானுறங்கும்போது வான்மீன் பதினொன் றுஞ் சந்திரசூரியனும் வானத்தினின்றிங்கித் தன்னிருபாதத்திற் பெருங்கதிர்தவழும்படி தன்னைவணங்கினற்போலக்கண்டான், அங்ஙனங் கண்டேனென்று மற்றவர்க்குச் சொன்னானென்க.

60. தெரியானாந்தந்தை தாயுனையோதெண்டனிட
வெரியார்சுடர்தொழுத தெனப்பகைத்தார்மூதுனரோ
பெரியாருடைச்செல்வங் காண்சிறியார்பெரும்பகையே
யுரியாராவரொன வுரைத்தார்நூலுடைநீரார்.

உரை.—ஆணரன் கண்டகனவைக்கேட்ட வவனண்ணன்மாரெல்லாருங்கோபித்து இதேதோமதிகெட்டு நாங்களு மெந்தாய்தகப்பனு முன்னைத் தெண்டனிடுவோமென்றதுபோலவோ நீயவ்வான்மீன்களு மிருசுடர்களு முன்னைத்தொழக் கண்டதென்றாயென்று மிகவும் பகைத்தார், அங்ஙனம்பெரியோர்கொண்ட செல்வங்களைக் கண்டசிறியோர் பெரும் பகைகொள்வாரென்றார் நூலிற்பெரியோரென்க.

61. தேறாப்பகைமுற்றித் திலத்தவனைவரக்கண்டே
யீறாய்க்கண்டகன வெவன்செய்யுங்காண்மினென
வாறாச்சடத்தன்ன ரவனையடவோர்ந்துபினர்
கோறாக்கொல்வதற்குக் கூவலினுள்வீழ்த்தினரோ.

உரை.—அங்ஙன மவர்கொண்டபகைதேறாமல் முற்றி யொருநாளாணரனைக் காட்டிலேவரக்கண்டு சிறிதுநாள்முன்னே யிவன்கண்டகனவென்னசெய்யுமென்றுபாருங்களென்று நகைத்து மாறாதவஞ்சனையுடையரா யவனைக்கொல்லநினைத்தார், பின்பு கொல்லாமற்கொல்லும்படி யவனைப்பாழாய்நின்றவொருகிணற்றினுட் போட்டாரென்க.

62. அழுவானடிவீழுவா னயர்ந்தொருங்குகைகூப்பித்
தொழுவானனிதுதிப்பான் சுழன்றேங்கிவிம்முவனும்
விழுவானெனவுதைத்து வேங்கையனார்வெகுண்டறநூல்
வழுவானைத்தூக்கி வற்றியதாழ்குழிபெய்தார்.

உரை.—அப்பொழுதாணர னழுவா னவரடிமேலேவிழுவா னேங் தேங்கி முழுதுங்கைகூப்பி யவரைவணங்குவான் றுதிப்பா னேங்கிவிம்மு வான் றம்மடியில்விழும்போதவரவனையுதைத்துக் கொடியபுலிகளைப்போலக்கோபித்து நல்லறவழியில்வழுவாத வாணரனைத்தூக்கி வற்றிய தாழ்ந்தகிணற்றிற்போட்டாரென்க.

63. இப்பால்வரைந்தகிணற் ருணரணையிட்டனபின்
னப்பால்வரித்தபடிய தர்வரவாணிகர்கண்டு
துப்பாலீங்கொழிந்தாற் றுறும்பொலிசையாதிவர்க்கு
விப்பாமெனவெடுத்து விற்றளித்தாரக்கொடியார்.

உரை.— விரலாற்சித்திரங்களைக்காட்டி யிங்கேயெழுதப்பட்டகிண ற்றி லாணரணைப்போட்டபின்ன ரங்கேயெழுதினபடி சிலவாணிகர்வழி வரக்கண்டு இவனுணவின்றியிஙகேசெத்தா னமக்குவருமிலாபமென்ன வருகின்றசெட்டிகள்கையிலே விற்றுப்போடுவோமென் றவனையெடுத் த க்கொடியநெஞ்சினர் வாணிகர்க்குவிற்றுக்கொடுத்தாரென்க.

64. நிந்தைக்கஞ்சாதா ராணரன்முன்னீடுடுத்த
விந்தைக்கெழுதியது சிற்றுதிரமேற்சிதறித்
தந்தைக்கதுகாட்டித் தம்பியுடையோவிதெனுச்
சிந்தைக்கிரங்கினர்போற் சினப்புலியோசெறித்ததென்ருர்.

உரை.— அங்ஙனந் தம்பியைவிற்றபின்பு நிந்தைக்குச்சற்றுமஞ்சா தவ ரவன்முன்னீளமாயுடுத்திருந்த வழகுபெறவெழுதின சட்டையைக்கி ழித் தங்கங்கே யிரத்தத்தினுற்றோய்த் ததனைத்தகப்பனுக்குக்காட்டி யிதுவெந்தம்பியுடுத்திருந்தசட்டைதானேவென்று தாமுநொந்திரஙகினு ற்போல வையோகொடியதோர்புலி யவனைக்கொன்றதோவென்ருரெ ன்க.

65. ஆங்குபொறித்தபடிக் கவைகேட்டமுதிர்தாதை
தீங்குபொறித்ததுகில் திளைப்பங்கண்ணீர்பொழியப்
பாங்குபொறித்தமுகப் பாலனுக்கன்றிரங்கியழு
மீங்குபொறித்தமுறை காண்மினென்ருனிணர்க்கொடியான்.

உரை.— அவரங்கேயெழுதினபடி சீலையுங்காட்டிச் சொன்னதைக் கேட்டவயதின் முதிர்ந்ததாதை யவர்கொடுமைகொண் டிரத்தத்தாலெ ழுதப்பட்ட சீலையைக்கையிலேந்தி விட்டகண்ணீரால்முழுதும் நனைத்து வழகிஞலெழுதப்பட்டமுகத்தையுடையபாலனுக் கவனெந் தன்றுமன திலேயிரங்கி யழுததன்மை யிங்கேயெழுதினசித்திரத்திற்பார்ப்பீராக வென்றுசொன்னதை விரலாற்காட்டினுன் பூங்கொடியேந்தியகுசையெ ன்க.

## VI. வேறு.

66. ஏங்கெழுமொலியோடியாவருமிரங்க வினமணித்தவிசின் மேலெழுந்து [குழையப்
தூங்கெழுநரையம்பூந்துகில்குழையத் துளிமதுப்புயற்குழல்
பாங்கெழுமணிகள்குழையவாய்குழையப் பதுமவாண்முகநலங் குழைய [சொன்னுன்.
வாங்கெழுதியபொற்சாயலாளாரொன் றதிட்டன்கேட்டிவைவளன்

உரை.— அங்ஙனஞ்சொன்னதைக்கேட்டுச் சூழநின்றவிருடிகளெல்லாரு மொலியெழவேங்கி யிரங்காநிற்ப வதிட்டன் சூதையைநோக்கிச் சொல்வான்: ஐயா நவமணியாற்செய்தலங்கரித்த மெத்தையின்மேலெழுந் துடுத்தநுரையின்மெல்லியபூந்துகில் தூங்கிக்குழையாநிற்பவு மதுவைத்துளித்தமேகத்தொத்தகூந்தலு மழகுசெய்யத்தூங்கினமணிவடங்களும் வடிவுள்ளவாயுந் தாமரைமுகத்தினழகுமிவையெல்லாங்குழையாநிற்கவு மங்கேபொற்சாயலாகவெழுதப்பட்டவ ளியாரையா வென்றுகேட்கச் சூதை மறுமொழிசொன்னானென்க.

67\. விரையுமிழ்நெடுங்கான்வாணிகர்கடந்து விளைதிருவெசித்து நாடடைந்து [னிற்
வரையுமிழுயிர்ப்பென்றகிற்புகையுமிழ்ந்த மாடநீள்கோனகர்தன்
சிரையுமிழ்கனிசொல்லாணரன்சென்று திருத்தகும்பூத்திபாற்காளாய்ப் [ந்தான்.
புரையுமிழ்துயர்நீத்தறத்துணைபிரியாப் புவிநுதற்றிலதமாய்வளர்

உரை.—முன்சொன்னபடி யாணரனைவிலையாகக்கொண்டவாணிகர் வாசமலர்ப்பூங்கானகவழியைக்கடந்து செல்வங்களைவிளைவிக்கு மெசித்துநாட்டிற்சேர்ந்து பொன்மலைபெருமூச்சிட்டாற்போல வகிற்புகையுமிழுமுயர்ந்தமாளிகைச்சிறப்பி னீண்ட விராசதானிநகரில்வந்து வீணைநரம்பின்வாய்க்குரலொத்த கனிந்தசொல்லி னணரனங்கே பெருஞ்சீர்ச்செல்வத்துயர்ந்த பூத்திபானென்பவற்கடிமையாகிப் பாவத்தால்வருந் துன்பமின்றி யறநற்றுணையைப்பிரியாமற் பூவுலகிற்கு நுதலணிதிலதமாக வளர்ந்தானென்க.

68\. திடம்புனைந்தமைந்தவறந்தரும்பயனே செய்தவர்க்கன்றியுமவர்தம் [த்தருமால்
புடம்புனைந்தவர்க்கும்வான்சுடரொளியாற் பூமியுமொளிர்ந்தெனை
படம்புனைந்தென்னவாணராணரனைப் பதியகத்தெய்தியபின்னர்
தடம்புனைந்துயரப்பூத்திபான்றானுஞ் சால்புயர்திருப்பயனடைந்தான்.

உரை.— வான்மேற்றிரியுஞ்சுடர்களினொளியா லிப்பூவுலகும்விளங்குவதுபோல வுறுதிவிடாதோங்கிய நல்லறம்விளைத்தபயனே யவ்வறத்தைச்செய்தவர்க்கல்லாமலு மவரைச்சேர்ந்தவர்க்குந்தருமாம். அங்ஙனஞ் சித்திரமெழுதினவழகோடுதோன்றிய வாணர னம்மனையிடத்தூச் சேர்ந்தபின்பு அவனையடிமையாகவைத்திருந்த பூத்திபானு மாட்சிமையிற் பொலிந்துயரும்படி செல்வப்பெரும்பயன் மிகவுமடைந்தானென்க.

69\. பாணெறிவழுவாதாடலேயின்பம் பயக்குமாமுடவர்க்கும் போலக்
கோணெறிவழுவாதிலங்கறத்தொகுதி குணிக்கருமாணரன்மாட்சி
சேணெறிவழுவாநாய்கனேகண்டுசிறந்தவன்பியல்பிலோர்மகவின்

மாணெறிவழுவாத்திருந்தியசெல்வ மனையெலாமவன்கையிற்
பணித்தான்.

உரை.— பாடலோடுவழுவாம லியன்றுடலே யாடமாட்டாதமுட வர்க்கு மின்பத்தைதப்பயக்குமாறுபோல வான்மீனொப்ப வழுவாமல்விள ங்கிய வறத்தின்றுருதியா னினைப்பதற்கரியமுறையி லாணரன்காட்டி யமாட்சிமை நெடுநாளும்வழுவாததென் றவளுயகளுகியபூத்திபானுங்க ண்டு மகிழ்வெய்தி யவனையடிமையென்றெண்ணும லன்பின்சிறப்பினு லொருமகளுக விடாதபெருமையோடுநடத்தித் திருந்தியசெல்வநிறைந் த தன்வீடெல்லா மவன்கையிலொப்புக்கொடுத்தானென்க.

70. தோள்கடைந்தழுத்தியணிமணிச்சாயற் றுளங்கியவாண ரன்மாமை
வாள்கடைந்தழுத்திமதர்விழிநாய்கி மருளுறக்கண்டுகண்டுளத்தை
வேள்கடைந்தழுத்தியேவியகணையால் விருப்புறிக்கற்பெழில்சோர [வையோடொத்தாள்.
கோள்கடைந்தழுத்திக்கொழுஞ்சுதைக்கோலங் கொண்டமட்பா

உரை.— அங்ஙனமாணரனடந்துவருகையி லவன்றேளிரண்டையு ங்கடைந்து மணிகளையழுத்திவைத்ததுபோல விளங்கிக்காட்டியவழகினை யவளுயகி மயக்கமுறும்படி வாளழுத்திய தன்கண்ணாற் பார்த்துப்பார்த் துநிற்க மன்மதனவளுள்ளத்தைக்கடைந்தாற்போல வப்பொழுதவள்மே ல்விட்டவம்புகளா லாசையுட்கொண்டு கற்பினழகுசோர்ந்தழிய வதில்லா மையான் மீன்களைக்கடைந்தழுத்திச் சுதையா லொப்பனைசெய்த மட்பா வையைப்போல நின்றுளென்க.

71. பணிநிறத்தருகின்மருவிடவிளித்துப் பணித்தவையவன் செயுங்காலை
மணிநிறத்தலர்ந்தவாணரன்முகத்தின் மயணிறத்தருந்தியநஞ்சாற்
பிணிநிறத்தெழுந்தவிரகநோயாற்றுப் பெண்மையின்காணியா நாண [சோர்வாள்.
மணிநிறத்தமைந்தசால்பினுற்பேசா வயர்ந்துநெட்டுயிர்ப்பொடு

உரை — அங்ஙன மவளுட்கொண்டவாசையாற் பணியூழியமிட்ட பாவனையாக வடிக்கடி யாணரனைக் கிட்டவரவழைத்துப் பணித்தவேலை யை யவன்செய்யும்பொழுதில் மணிநிறத்தொளியிட வலர்ந்தவாணரன் முகத்திலே மயக்கத்தோடுண்டநஞ்சினுற் பிணியைக்கொண்டாற்போல வுட்கொண்டவிரகநோயாற்றுமற் றுன்மணிவடத்தொப்பப் பெண்மையி ன்காணியாகிய நாணத்தைக்கொண்டமிகுதியாற் பேசக்கூசிவருந்திப் பெருமூச்சுகளை விட்டுச் சோர்ந்து நின்றுளென்க.

72. வீங்கியவுயிர்ப்பிற்பொங்கியகாம வெந்தழல்வீக்கலுமாற்று
தேங்கியதன்மைவினாகமழ்மதுப்பெய் யிளமுகைச்சேக்கையிற் சாய்ந்து

தாங்கியதோட்டியழுத்திவெல்பாகன் சாய்த்துவீழ்த்துவாவென
நாண [ன்.
நீங்கியவவாவுட்பொங்கலின் விளித்தநினைவுணராதவன்சேர்ந்தா

உரை.— அங்ஙனமவளயர்ந்துவிட்டபெருமூச்சினூ லூதிநூற்போலப் பொங்கியகாமச்செந்தீமிகுதியைப் பொறுக்கமாட்டாதவளேங்கி வாசமது அப்பொழி யிளம்பூவரும்புகளாற்செய்தமெத்தையின்மேற் சாய்ந்தனளாய்க் கையிலேந்தியவங்குசத்தை மத்தகத்தழுத்திப் போர்முகத்தருஞ்செயங்கொள்ளும்படி நடத்திவரும்பாகனைக் கீழேவீழ்த்தினமதயானைமுறிந்தாற்போலப் பாகனாகியநாணத்தைப்போக்கிய யானையாகியகாமத்தாசையுட்பொங்கி முறிவாகநின்று வரச்சொல்லி யாணரனையழைத்தா ளழைத்தநினைவினையறியாமலவனும்வந்தானென்க.

73. பார்த்தனள்பார்த்தவுவப்பொடுநாணிப் பகைத்தநாணமுஞ்
சினந்தாற்போற்
கூர்த்தனல்பொங்கிமுகமெலாஞ்சிவந்து குயிலினுங்குழலினுமினி
தாய் [சொன்னூ
நீர்த்தனகுதலைச்சொற்கொடுநெடுநா ணினைத்தவைமறைவறச்
ளார்த்தனவிடிபட்டனையநின்றனபின் பாணரனுணிநொந்துரைத்
தான்.

உரை.— அங்ஙனம்வந்தவாணரனையினிதாய்ப்பார்த்தாள், பார்த்தவின்பத்தோடுள்ளேநாணினாள், பின்னை தன்னினைவினைப்பகைத்தநாணத்தைக் கோபித்தாற்போல மனதிலேயழல்பொங்கி முகமெலாஞ்சிவந்து மாங்குயிற்குரலினும் பேசும்வீணைக்குரலினு மினியமழலைச்சொல்லாற் றூனெடுநாளுமனதிலேநினைத்த காமவுணர்வினை மறைவின்றிச்சொன்னாள். சொன்னவளவிலே யவன்முழங்கிவிழு மிடிபட்டதுபோல வொன்றுமுறையாமனின்றபின்பு நாணிநொந்துசொன்னானென்க.

74. ஆர்முகத்தெனக்கோரையனூநாய்க னனைத்துமேயுனையலா
லளித்த
சீர்முகத்தின்னூதவற்குநான்கருதச் சிந்தையுமியலுமோவென்றிப்
போர்முகத்தோடியொளித்தனர்வெற்றி புணர்ந்துய்வாரொன்னயு
ட்டேறிக் [மாதோ.
கார்முகத்தொளித்தமின்னெனவொல்கிக் கரந்துய்யல்கருதினூன்

உரை.— அப்பொழுதாணர னெனங்ஙனமறுமொழிசொன்னூனென்னில்: அன்பினிறைந்தமுகத்தைக்காட்டி யெனக்குத்தகப்பன்தன்மைந்தாகியநாயகனுன்னையல்லாது மனையிலுள்ளயாவையு மென்கையிலேதந்ததன்மைத்து நானவற்குப்பொல்லாங்குசெய்யும்படி நினைவாயினும்வருமோவென்றான், மீளவுங்காமப்போரிடத்தோடியொளித்தவர் வெற்றியைக்கொள்வாரென்று மனதிற்றேறி மேகத்துள்ளொளித்தமின்னலைப்போலவொல்கியொளித்துப்போகநினைத்தானென்க.

75. பூங்கணையாயென்னெஞ்சமீர்த்தனபின் புகர்விழியொளிப்ப
வோவென்று [க்கெனப்பிடித்தாள்
வோங்கணையையென்றெழுந்துபாய்ந்தவன்றன் னுடைத்துகில்சி
பாங்கணைதுகிலும்பகையெனவெறிந்து பகழியும்பின்றமுன்னோ
டித் [ன்.
தீங்கணைமடவாட்கிரங்கியதல்லாற் செயிர்நகைக்கிரங்கிலாதானு

உரை.— அங்ஙன மாணரனொளித்தோடும்படி திரும்புகையி லவள் நயங்காட்டிக் கோபித்தாற்போல உன்னெழிற்கண்ணே மன்மதனெய் யும்பூங்கணையாகி யென்னெஞ்சினைப்புண்படுத்தியபின்ன ரக்கண்ணை யிப்பொழு தொளிப்பாயோவென்று சீக்கிரமாயிருந்த வுயர்பூமெத்தைநீ க்கி கீழேகுதித்தன ளவனுடுத்தசீலையைச்சிக்கெனப்பிடித்தாள், அப் பொழுதவ னஞ்சி யிச்சீலையுமெனக்குப் பகையோவென்றதனையெறிந்து வில்லின்வாய்விட்டவம்பும் பின்றிநிற்கத் தானதற்குமுன்னோடித் தீவி னைநினைத்தமடந்தைக் கிரங்கினனொழியத் தீயவாசைக்குச் சற்றுமிடங் கொடா திருந்தானென்க.

76. நகைத்தனதன்மைத்தொளித்தனனென்று நகைகெடப்பெ
ரும்பகைவீங்கி [கொடியான்
முகைத்தனதன்மைத்தென்முகம்வெறுத்து முயங்கலுமறுத்ததீக்
பகைத்தனதன்மைத்தென்னையேயெண்ணிப் பணிகுவானெனக்
கொடிதுணர்ந்தா [மடவார்.
ளகைத்தனதன்மைத்தன்பிற்கும் பகைக்குமளவிலாப்பொங்குவர்

உரை.— அங்ஙன மாணரன்போனபின் பவள்வெட்கிப்போ யிங்ங னமோ வவனென்னைநகைத்தாற்போல வொளித்தானென்று முன்வைத் தவாசைகெட்டு மனதிலேபெரும்பகைபொங்கித் தன்னிற்சொல்வாள்: பு திதாய்ப்பூத்த மலரொனவழகினன் மலர்ந்தவென்முகத்தைவெறுத்துத் தானென்னைத்தழுவமாட்டாம லென்மொழிமறுத்த தீயகொடியோ னி னி நானவன்மேல்வைத்தபகையாலென்னையெண்ணி யெனக்குப்பணிவா னென்று கொடியதோ ருணர்வினைநினைத்தாள். அங்ஙனமல்லேர் மடந் தையரெல்லாருந் தாமன்புகொண்டாலும் பகைகொண்டாலு நீதிமுறை முறிவாக மட்டொன்றறியாரென்க.

77. வேட்கையுஞ்சிதைந்தநாணமுஞ்சோர்ந்த மேனியேயறத்தி
ற்சோர்ந்தென்னப் [லஞ்சிந்திப்
பூட்கையுமெஞ்சக்கொடியவெஞ்சினத்தாள் புருடன்முன்குழன
பீட்கையுமிருகண்புதைத்தழுதிந்தோ பிரியநின்றெழும்பனேயெ
ந்தம் [ருள்.
வாட்கையும்புகழுமெஞ்சவின்றென்னை வழுவுறநினைத்தனனென்

உரை.— அவனுள்நினைத்த கொடியவுணர்வினைச்செலுத்தும்படி கா மவேட்கையினுலு மழிந்தநாணத்தாலுஞ் சோர்ந்ததன்மேனியே கற்பு

ணர்ந்தவறநினைவினுற் சோர்ந்ததென்றுகாட்டி வெஞ்சினத்துணர்வினுள் முகவடிவம்வாடாநிற்கத் தன்புருடன்வந்தவுடனே தலைமயிர்குழையச்சிந்திவிளங்கியகையா லிருகண்ணைப்புதைத்து மூடிவிம்மிநொந்தழுது ஐயாவிந்தோ வுன்பிரியவடிமையாகிய வாணாரனின்று நமதுவாழ்க்கையுங் கீர்த்தியுங்கெடும்படி யென்னையிகழ்ச்சிசெய்ய நினைத்தா னென்றுளென்க.

78. முற்றுபுகனன்றமுகத்தெழும்வெகுளி முரட்கொடும்பூத்திபானுரத்துப் [னச்
பற்றுபுசிறையிற்கதுமெனப்பெய்மின்பகைவரிற்கொடியனையென்
சொற்றுபுகொடியார்மாசிலாணாரனைச் சுளித்தடித்திழிவுறக்கச்சிற்
சுற்றுபுகொடுபோய்ச்சிறையினுட்டிங்கள் துளிமுகிற்புக்கெனப் புக்கான்.

உரை.— அவளங்ஙனஞ் சொன்னதைக்கேட்ட பூத்திபானழன்றுமுற்றி முகத்திலெழுந்த கோபத்தார்த்துமுழங்கிப் பகைவரினுங் கொடியவனைப்பிடித்துத் தாமதமின்றிச்சிறைச்சாலையிற் போடுங்களென்று சொன்னவளவிலே சிலகொடியநெஞ்சர்வந்து குற்றமில்லாதவாணாரனைக் கோபித்தடித்து நிந்தைபடக் கச்சைகளாற்கட்டிக்கொண்டுபோய்த் தூயசந்திரன் றுளிகொள்மேகத்துட்புகுந்தாற்போலத் தானுஞ்சிறையினுட்புகுந்தானென்க.

79. மின்னிறத்திங்கணெழுதியமங்கை விளம்பியமங்கைதானைங்கண்
கன்னிறத்தரியிற்கொடியரோசிறைசெய் கசடிலவாணரனெழுதி
யின்னிறத்திலங்கக்காண்மினீரொன்ன விவைவளனிசைத்துனிகொடியவருஞ் [டியதேயென்றூர்.
சொன்னிறத்தழன்றுபெண்மையைப்பெண்மை சொற்றினீர்கொ

உரை.— இங்கே மின்னலையொப்ப வெழுதப்பட்டமடந்தை யிப்போதுநான்சொன்னமடந்தைதானே, அங்கே கல்லொத்தநெஞ்சினையுடையசிங்கத்திலுங்கொடியர் சிறைசெய்யு மாசில்லாதவாணரனெழுதப்பட் டினிதாய்விளங்கினதன்மை யதோபாருங்களென்று சித்திரங்களிடத் திவையெல்லாவற்றையும் விரலாற்காட்டிச் சூதைசொன்னவளவிலே சூழநின்றயாவரும் பலவுஞ்சொல்லிக் கோபத்தழன்று பெண்மையையினிப் பெண்மையென்கவொண்ணுது கொடியதோர் பொருளென்னத் தகுமென்றுரென்க.

80. மடநடைபெண்மைநட்பெனவுரைத்தார் வளருணர்வுயரியநீரார்
தடநடைநிகரானிழிவுறியெஞ்சச் சால்பவளன்புகாட்டியபின்
விடநடைவஞ்சத்தடும்பகைசெய்தாள் வினையிதேவினிதெனப்பெண்மை [ன்.
படநடையெழிலைவிரும்பினீரொன்னப் பாணிகமாமுனிசொன்ன

உரை.— அம்முனிகளினுட் பாணிகமாமுனியென்பவன்சொல்வான்: மடந்தையர்நட்பு மடநடையா யறிவில்லாநட்பென் றுயர்ந்த வுணர்வின்மிக்கபெரியோர் முன்சொன்னாரே, ஆயினும் பெருமைமிகாத வாணர னிகழப்பட்டுக்குழையும்படி யம்மடந்தை முன் மிகுந்தவன்பினைக்காட்டினபின்பு நஞ்சினையுமிழும் வஞ்சநெஞ்சத்தா ளவனைக்கொல்லும்படி பகைவைத்துச்செய்தவினையிதென்னி லினி யவனவன் கேடுறுதபடி பெண்மையின்பமென்று படத்தின்தன்மையாலெழுதப்பட்டவுழுகினை விரும்பாதிருக்கக்கடவதென்றான் பாணிகமாமுனியென்க.

81. முற்படவுரைத்ததன்மையினல்லோ முழுவதுநாடொழிந்தல்லால்
விற்படவழங்கிவளம்பெறலரிய வினையெனவதிட்டனுங்கூற
மற்படநிமலன்செய்யருடன்னால் வரும்பகைதிருநலம்பயத்தல்
நற்படவருளிக்கேண்மினீரென்ன நறுமலருயர்த்தனனவின்றான்.

உரை.— அப்பொழுது தம்முனிவர்மூத்தோராகிய லதிட்டனுஞ் சொல்வான்: நான்முன்சொன்னபடியல்லோ முழுதுநாட்டைவிட்டொழிந்தாலொழிய வொளிபடவழங்கிமாட்சிமைபெறுவதரிதென்றான், என்றதற்குச்சூசை நாம் வல்லமையடையும்படி நமக்காண்டவன்செய்யுந்தயையினால் வந்தபகையு நன்மைபயக்குமென்று காட்டுதற்கு நீர்மனம்பொருந்திக்கேட்பீராகவென்று மீளவுஞ்சொல்வான் மலர்க்கொடியையேந்திய சூசையென்க.

## VII. வேறு.

82. நறைபட்டாவிசெய்நல்லகில்வெந்தகால்
சிறைபட்டச்சிறைபட்டிலதோறத்
துறைபட்டாணரன்றானுந்துளங்கினான்
குறைபட்டாரெவர்க்குங்குறையாற்றினான்.

உரை.—வெந்தகாலத்தல்லோ வகிலங்கட்டை வாசநற்புகையைவீசும், அத்தன்மைத்தே யாணரன் சிறைபட்டிருந்துமச்சிறையிற் சிறைபடாதுயர்ந்து தேர்ந்தவறத்துறையாக நின்று தானும்விளங்காநின்று னச்சிறையினுட் குறைபட்டுநின்றயாவர்க்குந் தானேகுறைதீர்த் தாதரவாக நின்றானென்க.

83. தேரெழுஞ்சுடர்சேரிடமவ்விடம்
பேரொழுங்கதிர்பெற்றுவிளங்குமா
லேரொழுங்கதிவிட்டினின்றனுறை
சூரொழுஞ்சிறைதோன்றியதாமரோ.

உரை.— தேரின்மேலெழுந் துதித்தசூரியன் சேர்ந்தவிடமெலாம் பெருங்கதிர்பெற்றுவிளங்குவதுபோல ஆணரனிருந்த துன்பத்திடமாகியசிறையு மழகியமேற்கதிவீட்டின்தன்மையாய்த் தோன்றினதென்க.

84. ஒளிபடப்பசும்பொன்னுலைபெய்தெனத்
தெளிபடச்சிறைபெய்தனவாணரன்
களிபடக்கருத்தேந்தியகாட்சியா
லளிபடக்கனிந்தும்பரொத்தாயினான்.

உரை.— பொன்செய்கொல்லர் பசும்பொன் மிகவொளிபெறும்படி யதனையுலையிற்போட்டதுபோல மிகத்தெளிவுறும்படி சிறையிற்போட்டவாணரனு மயக்கமின்றிக்களிகூர்ந்தகருத்திலோங்கி யடைந்தவுணர்வின்காட்சியால் வான்மேலன்போ டினிதாய்வாழு மும்பரொப்பாயினானென்க.

85. நீர்புதைத்தொளிநேமியெழுந்தவிர்
சீர்புதைத்தசிறைநெடுநாளுறி
யேர்புதைத்தவிவ்வோவியத்தீங்கவன்
கார்புதைத்தமினொத்தெழக்காண்மினே.

உரை.—மீளவு மத்தமித்துக் கடலிற்புகைத்தவிரவியின்றேருதயத்தக்கடல்விட்டொளிசெய்வதுபோல நெடுநாளச்சிறையிற் புதைத்திருந்தவாணரனு மச்சிறைவிட்டழகுபெறவிங்கே யெழுதினபடி மேகத்துட்புதைத்திருந்தமின்னலெழுந்து தோன்றியவொளியோ டவனுமெழுந்து விளங்குந்தன்மைபாருங்களென்க.

86. மன்னனன்றுமனங்கெடக்கண்டவை
சொன்னதன்மையிற்றொல்லுரைநூலினர்
தன்னமைச்சர்தபோதனர்கேள்விய
ரின்னதென்றுகண்டெய்திலராயினார்.

உரை.— ஆணரன் சிறைவிட் டொளிபெறவெழுந்ததன்மை சூசை சொல்லத்துடங்கினான் அதெத்தன்மைத்தோவென்னில்: அந்நாளிலேயங்கேயாண்ட வரசன்தன்மனங்குழைந்துகெடும்படி கண்டவதிசயத்தைத் தான் சொல்லிக்காட்டினவளவிலே நூலுரைப்போருந் தன்மந்திரிமாரு முனிவரும் நற்கேள்வியுடையோரு மட்டின்றிக்கூடி யாராய்ந்தவிடத்தி லதின்னதென்று கண்டுபிடிக்கமாட்டாதிருந்தாரென்க.

87. குலையமன்னவனூற்குரவர்தமின்
மலையமுன்சிறைவைகியமைக்குணன்
கலையதிந்தெனவாணரன்கண்டறிந்
துலையவேண்டிலவென்றுமற்றோதினான்.

உரை.— அரசனங்ஙனமஞ்சாநிற்க நூலுடைப்பெரியோர் தம்முளொவ்வாமற் பொருதாநிற்க வதற்குமுன்சிறைச்சாலையிலிருந்த 'மைக்குணனென்பவ னங்கேயாணரன் சந்திரன்கலையினுந் தெளிந்தவுணர்வுடையனாகக் கண்டறிந்தமையாலஞ்சிவருந்தவேண்டாமென்று மீளவுஞ் சொன்னானென்க.

88. தூயதன்மையுளத்துறுங்காட்சியா
லாயதன்மையிலாவதறிந்துளாய்த்
தீயதன்மையிலாச்சிறைபட்டுறை
நேயவாணரற்கூவுமினீரொன்றான்.

உரை.— தூயதாகத்தெளிந்த மனத்திலோங்கியகாட்சியாற் போன பொருளையறிந்ததன்மையோடு வரும்பொருளையறிந்தவனாய்க் குற்றமொன்றின்றிச் சிறைச்சாலையுட்கிடந்தவனா யென்றோடுசிநேகமுள்ளவனா யாணரனென் றொருவனையழையுங்களென்றான் மைக்குணனென்பா னென்க.

89. மன்னனுட்படவையகம்வாழ்வுற
வன்னவத்தெழுமெல்லையொத்தாணரன்
சொன்னவச்சிறைநீத்துத்தொழக்கலன்
மின்னமிக்கெழும்வேந்தன்விளம்பினான்.

உரை.—மைக்குணன்சொன்னதற் கரசன்சம்மதித்த மையாற் பூவுலகெல்லாம்வாழும்படி கடலைவிட்டெழுந்த பருதியைப்போல வன்று சொன்னசிறையைவிட்டாணரன்வந்து மன்னவனடியைவணங்காநிற்க வணிந்தவாபரணங்கள்மின்னும்படி சிங்காசனத்தெழுந்திருந்த வரசன் சொன்னானென்க.

90. ஒளிபட்டொள்பளிங்கொத்திழிவின்றிநீ
களிபட்டேற்றியதேவன்செய்காட்சியாற்
றெளிபட்டீங்கிவர்தேரிலகண்டவை
வெளிபட்டோதவிளம்புவல்கேளென்றான்.

உரை.— அரசனெங்ஙனஞ் சொன்னானென்னில்: செஞ்சுடரொளி படவொளிவிடுங்கண்ணாடியொப்ப நீகுறையின்றி மகிழ்ந்துவணங்கிய கடவுள்தந்தகாட்சியாற் றெளிந்தவுணர்வுடையோனே! இவரெல்லாரு மொருங்குடன் கூடியுணராவழி நான் கண்டவற்றை நீவெளியாக்கும்படி நான்சொல்லக் கேட்பாயாகவென்றானென்க.

91. பூமலிந்தபொழிற்கணின்மேய்ந்தவே
ழாமலிந்ததுகண்டதவ்வாவெலா
மீமலிந்துமெலிந்தபின்னேழ்பசு
காமலிந்துவிழுங்கல்கண்டேனென்றான்.

உரை.— பூமலர்மலிந்தகாவிடத் தேழுபருத்த பசுக்களைமேயக்கண்டேன், அதின்பின்ன ரிமொய்த்த வேழினைத்தபசுக்கள்வந்து முன்கண்ட நல்லபசுக்களெல்லாவற்றையு மிழுங்கவுங்கவுங்கண்டேனென்றா னரசனென்க.

92. பொழுதெலாந்தனக்கோர்பொழுதாயெலாம்
பழுதிலாவுணரும்பரநாதன்செய்

வழுதிலாத்தெருளால்வகுப்பேனெனுத்
தொழுதவாணரன்பின்னிவைசொற்றினன்.

உரை.— அரசன்சொன்னதைக்கேட்ட வாணரனவனைவணங்கிமறு மொழிசொல்வான்: நிகழ் வெதி ரிறப்பென்னுமுக்காலமுந் தனக்கொரு காலமாகப் பழுதொன்றின்றியெல்லாவற்றையுந் தெளிவோடறிந்தபரம நாதன் தந்த பொய்யாததெருட்சியோ டிங்ஙனம் நீகண்டதின்னதென்று சொல்லுவேனென்று மீளவுஞ்சொன்னனென்க.

93 பருத்ததென்றுமுன்பார்த்தவேழாவெனிற்
கருத்தரும்புயல்காலம்பொய்யாமையா
லுருத்தகாவிளைவோங்கியேழாண்டொரு
வருத்தமின்றியும்வாழுமிந்நாடன்றே.

உரை.— நீமுன்கண்ட பருத்தவேழுபசுக்க ளேதென்னில்: மழைதக ருவாகக்கொண்டமேகங்கள் பொய்யாமற்பெய்து காடெல்லாமிகவுமேழு வருடமாய்விளைந்து வருத்தமொன்றின்றி யிந்நாடெல்லாம் வாழுமென்று காட்டினவென்க.

94. மெலிவொடுற்றபின்னேழ்நிரைவேய்ந்துதா
மலிவொடுற்றமுன்னேழ்நிரைமாந்தலாற்
பொலிவொடுற்றவேழாண்டுளபூரியைக்
கலியொடுற்றவேழாண்டுகறிக்குமால்.

உரை.— மீளவும் பின்புகண்டமெலிந்தவேழுபசுக்கள் வந்து முன் றோன்றிய வேழுபருத்தபசுக்களை விழுங்கினதனால் விளைவிற்பொலிந்த முன்சொன்னவேழுவருடத்துப் பெருஞ்செல்வமாகவிளைந்து மிஞ்சின தெல்லாவற்றையும் பின்புவிளைவின்றிப் பஞ்சமுகமாய்வரும் வேறேழுவ ருடமுண்ணுமென்று காட்டினதென்க.

95. கண்டதெண்ணிக்களங்கமற்றுற்றலே
மண்டவண்மையின்மன்னரியல்பரோ
வண்டமன்னனளித்தவிக்காட்சியைக்
கொண்டதன்மையிற்கோதறவாண்மினே.

உரை.— கண்டவற்றைமனதிலெண்ணிக் களங்கா ததற்குரியதான காரியங்களைநடத்தலே மிக்கவல்லமையுள்ள வரசர்க்கியல்பாம், வானர சாகியகடவுளுனக்குத்தந்த விக்காட்சியைக்கொண்டு குறையின்றிநடந் தாள்வாயாகவென்க.

96. மலிந்தவாண்டினிலீட்டலுமற்றவை
மெலிந்தவாண்டில்வகுத்தலுமிக்குறும்
பொலிந்தவாண்மைபொருந்திடத்தெருதி
வலிந்தநாட்டுயிராயமன்றவென்றான்.

உரை.— அக்காட்சியைக்கொண்டெங்ஙனம் நடத்தல்வேண்டுமென்னில், மலிவோடுமுன்வருமேழுவருடத்தில் மிஞ்சினதைக்கூட்டவும் மீளவுங்கூட்டியவற்றை மெலிவோடுபின்வருமேழுவருடத்தில் வகுக்கவும் வேண்டு மித்தன்மைத் தனக்குவரும்பொலிந்தவாண்மையின்மாட்சிமையடையும்படி தெளிவாயாக வாண்டுதாங்கிய நாட்டிற்குயிராகநிற்கு மன்னவவென்றுசொன்ன னுணரனென்க.

## VIII. வேறு.

97. நூல்வழியுரைத்ததீஞ்சொல் நொய்யிதழவிழ்ந்ததேன்போல்
வேல்வழிமின்கைவேந்தன் வியப்பினோடிமிழிற்கேட்டுப்
பால்வழிநுரையம்பைம்பூப் பழித்தபொற்றுகிலைப்போர்த்து
நால்வழியணிகள்பூட்டி நயப்பெழத்தழுவினானே.

உரை.— அங்ஙன மாணரன்தேவநூலின்வழியா லறிந்துசொன்னவினியசொற்களை மலர்ந்தபூவிதழ்கொப்பளித்த தேனெப்பாக வேந்திய வேலின்வா யொளிவிடுங்கையின்வேந்தனதிசயப்பட் டினிதாய்க்கேட்டுப் பாலினுரையினு மழகியபூவினு மெல்லியபொன்னுடை யாணரன்மேலேபோர்த்து நால்வகையாபரணங்களைப்பூட்டி மகிழ்வெழ மார்போடணைத்துத்தழுவினனென்க. (நால்வகையணிகளாவன: காதணி, மார்பணி, கையணி, காலணியென்னுமிவைநான்கு மென்க.)

98. உன்னலால்தெய்வமல்லா னுணர்வரும்பயன்கள்சொன்னாய்
நின்னலால்பிறர்கள்யாரோ நிறைந்திவைசெலுத்தும்பாலா
ரொன்னலால்பிறர்கள்யார்க்கு மிறைவனீயுலகங்காக்க
மன்னலாலெவையுந்தந்தேன் வாய்ந்தநூல்வடிவோவென்றான்.

உரை.— அங்ஙன மாணரனைத்தழுவி யரசன்சொல்வான்: உன்னையல்லாமலு மொருதெய்வமல்லாமலு மொருவ னறிதற்கரிய வுரைப்பயன்களைச் சொன்னாயே யினியுன்னையல்லாதிவற்றை நிறைவேற்றும்படி வல்லவரொவருண்டோவில்லை, ஆகையா லினிநானுண்டவுலகமெங்கு மென்னைத்தவிர மற்றவர்க்கு மிராசாநீயேயாகி நன்றாயுலகங்காக்கும்படியரசொழிய மற்றதெல்லாவற்றையு முன்கைவசமாக்கித்தந்தேன் மாட்சியிற்சிறந்த நூலின்வடிவாக நின்றவனே யென்றா னரசனென்க.

99. வார்வளர்முரசிற்சாற்றி வளர்சிறப்பியற்றிப்பின்னர்
போர்வளர்சேனைசூழ்கப் புகர்முகத்தெருத்திற்பைம்பொன்
னீர்வளர்தவிசினேற்றி நிரையினீங்கெழுதப்பட்ட
சீர்வளர்வண்ணத்தங்கண் சிதைவிலான்றோன்றினானே.

உரை.— அங்ஙன மரசன்சொன்னதை யெவரு மறியும்படி பறையடித்தெங்குமறிவித்து மிக்கசிறப்புகளை யாணரற்குச்செய்ததற்பின்பு போரிற்சிறந்ததானை புடையிற்சூழ்ந்துவர மதயானை யெருத்தத்துப் பசும்பொன்னணையின்மே லவனையேற்றி யொழுங்குபட விங்கேயெழுதப்

பட்டபடி சிதையாமரபிற்சிறந்த வாணரனங்கே விளங்கித்தோன்றினு னென்க.

100. அருளொன்றுஞ்சார்ந்தநல்லோ னருஞ்சிறைபட்ட போழ்தும் [போழ்தும்
பொருளொன்றுஞ்செங்கோலோச்சிப் பொருனனுப்பொலிந்த
மருளொன்றும்புலம்பல்தானு மகிழ்வுமுட்டோன்றலின்றித் [ன்.
தெருளொன்றுமுணர்வின்மிக்கோன் றிருவுளமெனவுட்டோர்ந்தா

உரை.—இவையெலா மிங்ஙனமாகையி லாண்டவன்செய்யுந்த யையொன்றிலே மனஞ்சார்ந்த நல்லோனுகியவாணரன் குற்றமின்றிச் சிறையிற்கிடந்தபொழுதும் பின்பொளிர்ந்த பொற்செங்கோலேந்தியா ளுஞ் சிறப்பிற்பொலிந்தபொழுது முள்ளமயங்க முன்புலம்பாமலும் பின் மகிழாமலுந் தெளிந்தவுணர்வின்மிக்கவனுகி யத்துன்பமு மிவ்வின்பமு மிரண்டொன்ருகத் திருவுளமென்றுமனதிற்றெளிந்தானென்க.

101. பொலந்தருவளர்ந்ததன்மை புடையெலாநிழற்றும்போல
நலந்தருமணிசெய்பைம்பொன் னற்றவிசுயர்ந்ததானும்
வலந்தருசெல்வத்தன்பும் வளர்ந்தெலாவுயிர்கள்பேணி
நிலந்தருமினிமையுண்டு நின்றதேழாண்டுசேர்த்தான்.

உரை.—அப்பொழு துயர்ந்தபூமரம் வளர்ந்ததன்மைத்தெங்கு நிழ லைச்செய்வதுபோல வாணரனுந் தானழகுபெறும்படி மணியாற்செய்த பசும்பொற்சிங்காசனத்துயர்ந்து வல்லமையோடுதனக்குச்செல்வம்வளர் ந்தவளவிற்குத் தயையும்வளர்ந் துயிரெல்லாவற்றையும்பேணிக் குறை யின்றி யேழுவருடமும் பூமிவிளைந்து மிகவுந்தந்தவினிமையெவரும் நிறை யவுண்டுமிஞ்சிநின்றதெல்லாவற்றையுஞ் சேர்த்துவைத்தானென்க.

102. பால்கலந்துணுமேழாண்டாய்ப் பசியுயிருணுங்காலாகிக்
கால்கலந்தொழுகுமாரி கான்றவோர்துளியுமின்றி
நூல்கலந்துரைத்தவண்ண நொந்துயிரொவையுமெஞ்சச்
சேல்கலந்திழிநீர்நாட்டிற் சேர்த்தவைவகுத்தல்செய்தான்.

உரை.—அங்ஙனம் பாலோடுண்டமலிந்தகாலத் தேழுவருடமுமாங் ப்போனபின்பு வுயிர்களையுண்ணும்பசிக்காலம்வந்து காற்ருேடுபொழியு மாரிக்காலந்தருமழைத்துளி யொன்றின்றி யாணரன்றேவநூற்படி முன் சொன்னதன்மைத்தெல்லாவுயிரு நொந்துநைந்துமெலியாநிற்க வப்பொ ழுதவன் முன் மச்சங்கள்குதித்தோடுநீர்ப்புனற்பெருக்கத்து மிகவிளைந்த வந்நாட்டிடை தான்சேர்த்தியயாவையு முறையோடெவர்க்கும்வகுக்கத் துடங்கினுனென்க.

103. பார்முழுதுண்ணுங்கூர்த்த பசிதனையுண்ணுமன்னுன்
சீர்முழுதகன்றவன்பிற் சிறப்புறவளித்தநாடே

சூர்முழுதழுங்குமற்றத் தொலைத்தநாடுய்யவெய்தித்
தார்முழுதிலங்குமார்பன் றமையராங்கிருவருற்றார்.

உரை.— அங்ஙன மந்நாளிலே பூவுலகெல்லாத்தையும் பசிதானுண்ணுநிற்க வப்பசியையுண்ணுமாணா னளவிறந்தவன்பின்சிறப்பிற்றானுண்டளித்த வெசித்துநாட்டைநாடிப் பசித்துன்பத்தால்வருந்திய மற்றத் தொலையினின்ற நாடெல்லாரு முயிர்பிழைக்கும்படிவந்து மணிமாலையணிந்திலங்கியமார்பனாகியவாணரன்தனது தமையனுருள் ளிருபேரும்வந்தாரென்க.

104. உற்றவர்தம்மைத்தானே யுணர்ந்துகண்டிருப்பத்தன்னை
மற்றவருணர்கிலாமை மதித்தனனெவர்நீர்நும்மைப்
பெற்றவொவொருநாடு பிறந்ததெத்துணையென்றேத
விற்றவர்கேட்டுத்தாளை யிறைஞ்சவீழ்ந்தொருவன்சொன்னான்.

உரை.— அங்ஙனம் வந்ததமையனுளை யாணா னறிந்துஅவர்தன்னையறியாரென்று மனதிலெண்ணித் தானுமறியாதவனைப்போல நீங்களாரென்று முங்கள்தாய்தகப்பனுரென்று மிருந்தநாடெந்நாடென்று பிறந்தவரொத்தனையென்றுமவன்கேட்க விதெல்லாங்கேட்டவரவன்பாதத்தைவணங்கி யவருளொருவன்சொன்னானென்க.

105. எற்கொண்டகனயநாட்டி லியூதர்நாமியாக்கோபென்பான்
முற்கொண்டகுழலாளீன்ற முளைகளீரைந்துமானும்
பிற்கொண்டநல்லாடந்த பிள்ளையொன்றகன்றான்பின்னர்
விற்கொண்டதாளமொப்ப மீளவொன்றுதித்ததென்றான்.

உரை—ஆணரன்கேட்டதற் கொருவ னெங்ஙனமறுமொழிசொன்னானென்னில்: நாமழகியகனயநாட்டிலிருக்கும் யூதர்குலத்தோ ரெங்கள்பிதா யாக்கோபென்பவன்கொண்டமுதற்றாா மீன்றபத்துமக்களினுட்பிறந்தோம் நாங்களிருவரும் தகப்பனுக்குவந்த பின்றாரத்துப்பிறந்த வொருபிள்ளைகாணுதேபோன னவன்போனபின்பு விளங்கியமுத்துப்போல வேறேபிள்ளைபிறந்ததென்றானென்க

106. இனையனகேட்டுத்தன்னை யீன்றனள்பின்னரீன்ற
தனையனைக்காண்டவெஃகித் தந்தபின்மகன்வந்தல்லா
லினையனநாட்டிற்போக்கே னுணவினியளியேனென்று
வனையனசெல்வன்கூறி யமுங்கிமற்றொருவன்போனான்.

உரை.— சொன்னதெல்லாவற்றையு மாணரன்கேட்டுத் தன்றாய் பின்புபெற்ற தம்பியைக்காணவேணுமென் றாசையினால் மறுமொழிசொன்னவனைப்பார்த்துரைப்பான்: எல்லாருக்கும் பின்புபிறந்தபிள்ளை யிங்கேவந்தாலொழிய வுன்னையந்நாட்டிற்குப்போகவொட்டேன். மீளவுமுங்களுக்குவேண்டியவுணவுகளையு மினிக்கொடேனென்றான், 'செல்வனாகியவாணரன் சொன்னதைச்கேட்டு வேறொருவன் வருந்திப்போனானென்க.

107. வெறிபட்டார்மதுவினுட்டில் விளைந்தநோய்கேட்டதந்தை
பொறிபட்டாலலர்பூவையும் போனுளமழுங்கவாடி
மறிபட்டான்மீட்கவேண்டு மறுவுணவடையவைவே
லெறிபட்டாருயிர்பேர்ந்தென்ன விளமகன்போதலென்றான்.

உரை.— அங்ஙன மொருவன் தன்மனையிற்சென்று வாசனைபொழி மதுநிறைந்தவெசித்துநாட்டி ஞெய்வினை தற்காரணமாகநடந்தசெய்தியை க்கேட்டு முதிர்ந்ததாதை தீயிற்போட்டபூமலரையுமாறுபோலத் தானு மனதில்வருந்திவாடி யங்கேமறிபட்டவனை மீட்கவுந் திரும்பித்தமக்கு வேண்டியவுணவுகளையழைப்பிக்கவும் வேண்டி யெறிந்தகூர்ந்தவேல்பட்டு நிறையுயி ருடலைவிட்டுப்பெயர்ந்தாற்போல விளமகனைப்போகட்டென்றான் தகப்பனென்க.

108. எஞ்சநொந்தழத்தாய்தந்தை யிரிந்ததந்நாளில்வந்த
பெஞ்சமினென்னுந்தோன்றல் பெயர்ந்துபோய்ப்பவளக்குப்பை
யஞ்சமின்முகத்துநிற்ப வாணரன்முகமனோக்கி
விஞ்சவன்புருகிப்பின்னர் விருந்திவர்க்கோம்பினானே.

உரை.—அங்ஙனந் தாய்தகப்பன்மெலிந்துநொந்தழாநிற்கச் சாய்ந்த தம்வயதிலேவந்த விளமகனாகியபெஞ்சமினென்பான் சிலதமயனாரோடு கூடப்பெயர்ந்துபோய் யெசித்துநாட்டிற்சென்று பவளக்குப்பையினும் விளங்கியமுகத்திலாணரன்முன்னேவந்துநிற்க வவனையாணரனினிதாய் நோக்கி மனதிற்பொங்கிய வன்பினுலுருகித் தானின்னானென்றுகாட்டா மலவர்க்கு விருந்தோம்பினானென்க.

109. ஓம்பியவிருந்தில்வைத்த வொளிமணிக்கலமுமன்னோர்
சாம்பியவிலையின்பொன்னுந் தம்பிகண்ணொளித்துவைப்பக்
காம்பியவவரும்போகிற் களவர்கைப்பிடிமினென்னக்
கூம்பியபடைவர்மொய்ப்பக் குழைவுறக்குலைந்துநின்றார்.

உரை.—அங்ஙன மாணர னவர்க்கோம்பியவிருந்திலேவைத்திருந்த மணிப்பாத்திரமு மவருணவுகளைக்கொள்ளும்படி வ்லையாகக்கொண்டுவந்தபொன்னுந் தன்தம்பிகிட்ட வவனுமறியாம லொளிவாகவைக்கச்செய்து அவரையனுப்பியொடுங்கி யவரும்போகையிற் சேவகரைவிட்டுக் கள்ளரைப்பிடியுங்களென்று சேவகர்மேலேமொய்க்க வவர்குழைந்தஞ்சி நின்றாரென்க.

110. புரந்தநாடொழியேமென்பார் பொதியெலாநோக்கிரொன்
கரந்தநாமல்லவென்பார் களவனைக்கொன்மினென்பார் [பார்
பிரந்தமானவர்சூழ்நாடிப் பெஞ்சமினிடைக்கள்வுண்டாய்ப்
பரந்சமாமுகில்விட்டேறு பட்டெனமயங்கிநின்றார்.

உரை.—அங்ஙன மவருளத்தஞ்சிநின்றபின்பு வுணவுகளைத்தந்து நமமையிரட்சித்த விந்நாட்டைவிட்டின்னம்போனதில்லையே யென்பார், எங்கள் பொதிகளைச் சோதித்துப்பாருமென்பார், திருடினகள்ளர் நாங்

களல்லவென்பார், கள்ளனகப்பட்டா லவனைக்கொல்லுங்களென்பார், இவையெலாஞ் சொல்லிக்கொண்டுவருகையிற் கூப்பிட்டுத்திரிந்தசேவக ரெல்லாவற்றையுஞ்சோதித்தவளவிற் பெஞ்சமினென்னுமிளையவனிடத்துக் களவிருந்ததனாற் பரந்தமேகத்தினின்றுவிழுந்தவிடிபட்டாற்போல வெல்லாரு மயங்காநின்றாரென்க.

111. தணர்ந்தவிம்மகனும்போகிற் றுதைதாயுய்யாரென்பார்
புணர்ந்தவெங்கொடுமையால்முன் புலம்பியாணரன்கையேற்றி
யுணர்ந்தசொற்கேளேமென்பா ருயிர்கொல்லாக்கொன்றேமென்
மணர்ந்தவெஞ்செயிர்க்கிதென்பார் வந்ததீங்குரியதென்பார்.[பார்

உரை.— வந்தசேவக ரவரெல்லாரையும்பிடித் தாணரன் முன்பாகக்கொண்டுவிடப்போகையி லவர்தம்முட்பேசி முன்னுணரன்போனதினால்மிகவும்வருந்தின தாய்தகப்பனிவ்விளையமகனும்போனா லவர்பிழைக்கமாட்டாமற் சாவாரென்பார் ஐயோ! முன்னேநாஞ்செய்தகொடுமையானுந்து புலம்பி யெங்கள்தம்பியாணரன் கைகூப்பி நம்மைவணங்கிச் சொன்னவார்த்தைக்கிரங்காமற் கேளாதிருந்தோமேயென்பார், அவனுயிரைக்கொல்லாமலன்றுகொன்றோமேயென்பார், அன்றுசெய்தபாவத்துப்பயனிதுவென்பார், வந்தவிப்பொல்லாங்கெல்லாநமக்குரியதாய்த் தகுமென்பாரென்க.

112. பேர்நலம்பொறித்தகுன்றிற் பெருவிளக்காகப்பைம்பொன்
றார்நலம்பொறித்தசிய வணையிலாணரனின்றோங்கத்
தார்நலம்பொறித்தமார்பிற் றழற்சினம்புழுங்கினுற்போற்
கூர்நலம்பொறித்தவன்பிற் கொடுத்தநன்றொழிந்தீரொன்றான்.

உரை.—அங்ஙன மவரெல்லாரு மாணரன்சந்நிதியில் வந்துநிற்க, அழகுபெரிதுற நன்றாய்ப்பொறித்த மலையினுச்சிவைத்த பெருஞ்சுடர்விளக்குப்போலப் பொன்னாலெழுத்திட்டாற்போல மணியலங்கரித்த சிங்காசனத்துயர்ந்து பொலிந்தசிறப்பிலாணரனிறக, ஒளிமணிமாலையு மதுமலர்மாலையுங் கலந்தவடிவோடெழுதப்பட்டதன்மார்பிலே யழன்றசோபமெழுந்து புழுங்கினதன்மைகாட்டி நானுங்களுக்குகாட்டிய மிக்கவன்பிற்பொங்கிச் செய்தநன்மையொழிந்து மறந்தீரோயென்றா னுணரனென்க.

113. உய்வகையின்றியண்ண ருயிரிலாதடிவீழ்ந்தேற்றிப்
பொய்வகைச்செயிரிதேனும் புகரிலோர்தம்பிநோக
மைவகைக்கொடுமையால்யாம் வஞ்சமேமுடித்தபாவ
மெய்வகைப்பயத்ததீமை விளைந்ததின்றையாவென்றார்.

உரை.— அங்ஙனங் கோபித்தவாணரன்முகத்து அவனையறியாமலண்ணன்மாரெல்லாருந் தப்பிப்பிழைக்கும்வகையின்றி யுயிர்கெட்டாற்போலவேங்கி யவன்பாதத்தில்விழுந்துவணங்கி, ஐயா விக்குற்றமெங்கள்மேலிராமற் பொய்யானகுற்றமிதுவென்றாலு முன்னாளிலே குற்றமில்லாதவெங்கள்தம்பியொருவன் மிகவுநோகும்படி மயங்கி நாங்கள் கொடியதா

யவற்குவஞ்சனைசெய்து நாமன்றுமுடித்த மெய்யானபாவம்பயத்த பொ ல்லாங்கு நீதியின்படி யின்றுவிளைந்ததென்றுசொன்க.

114. மணித்திறத்தெழுந்ததோளான் மயங்கிவர்துயரங்கண்டு
பிணித்திறத்திசைத்தசொல்லும் பெட்பெழக்கேட்டுத்தானு
மணித்திறத்திலங்குமார்பி லன்பினையொளிக்கவாற்றுத்
துணித்திறத்தலர்ந்தபூங்கண் டுளித்தநீர்தூறிற்றன்றே.

உரை.—அப்பொழு தொளிமணியாற் றிரண்டுயர்ந்ததோளா னுண ரனண்ணன்மார் மயங்கிவருந்தாநிற்குந் துயரத்தைக்கண்டும் பொங்கிய நோய்மிகுதியா லவர்சொன்னதை யன்போடுகேட்டுந் தானு மெரிமணி மாலையால் விளங்கியமார்பிலன்றோமட்டு மொளிவாகவைத்த வன்பினை யினித் தாநொளிக்கமாட்டாம லொளிமுகத்தலர்ந்த மலரொத்ததன்க ண்கள்துளித்தநீரவ்வன்பினைப் புறத்துக்காட்டித் தூறிற்றென்க.

115. அட்டெனநீவிர்விற்ற வாணரனவன்றானெனன்
றிட்டெனத்துணுக்கென்றன்னு ரிடித்தகார்கிழித்தவேறு
பட்டெனவுயிர்பட்டாற்போற் பாசறைகுளிப்பவின்னீர்
மட்டெனமலர்க்கண்டீவ மார்புறத்தழுவினானே.

உரை.— கொன்றதன்மையா னீங்கள்விற்ற வரணரனன்றானேயெ ன்றவன்சொன்னவளவிலே யவரெல்லாருந் துணுக்கெனவஞ்சி யிடித்த மேகத்தைக் கிழித்துவிழு மிடிபட்டதுபோல வுயிர்கெட்டுத் துன்பசாக ரத் தமிழ்ந்திநிற்க மதுவின் தன்மையானமலர்ந்த தன்கண்ணினிதாய்நீ ரைப்பொழிய வாணரனவரைமார்போடணைத்துத்தழுவினானென்க.

116. தீதுநீர்விதைத்தவேலி செல்வநீர்விளைத்ததன்றே
கோதுநீர்நினைத்தவண்ணங் கோதுநான்குணிக்கல்செய்யேன்
றுதுநீரொழுகுஞ்சாகி தனைக்கொய்வார்நிழற்றும்போல
யாதுநீரஞ்சல்வேண்டா வியல்புறவளிப்பலென்றான்.

உரை.— ஆணரனங்ஙன மவரைத்தழுவிச்சொல்வான்: என்னைக்கெ டுக்கநீங்கள் நினைத்தவழியே செல்வத்துடையனானேனென்றற்போல நீ ங்கள் பொல்லாங்கு விரையாகக்கொண்டு விரைத்தவயலே செல்வத்தின் தன்மைவிளைந்ததல்லோ, நீங்களெனக்குத்தின்மைசெய்யநினைத்தபடி யு ங்களுக்குநான்தின்மைசெய்யேன், பூத்தமலர்வாய்மதுப்பொழிமரமே த ன்னைவெட்டுவார்க்குங் குளுநிழற்செய்வதுபோல நீங்களொன்றிற்கு மஞ் சவேண்டாம் நானுமினிதாயுங்களை யிரட்சிப்பேனென்றானென்க.

117. தூம்புடைத்தடக்கைமாவுந் துரகமுந்தசமுஞ்சாடுங்
கூம்புடைக்கொடிஞ்சித்தேருங் கொடிகுடைபலவும்போக்கி
வீம்புடைப்புலமைநீரான் விளித்ததாய்தாதைதந்தாள்
தேம்புடைக்கண்ணிசாற்றித் தெண்டனிட்டுவப்பச்செய்தான்.

உரை.— அங்ஙன மாணரன்சொல்லி யவர்க்காறுதலைச்செய்தபின்னர் துளைத்தகையுடையயானைகளுங் குதிரைகளுந் தண்டிகைகளும் வண்டில்களு மொட்டுயர்ந்த கொடிஞ்சித்தேர்களுங் கொடிகளுங் குடைகளும் மிருதியாய்ப்போகவிட்டுப் மேன்மையிற்சிறந்த வுணர்வுடையாணரன் தாய்தகப்பனை யழைப்பித்து வந்தவர்பாதத்து வாசமதுமலர்மாலையைச்சாற்றித்தெண்டனிட்டு மனமகிழும்படிசெய்தானென்க.

118. தான்மலர்முகத்திலோடித் தாதைதாய்தமர்கள்யாருங்
கோன்மலரடிமுன்காட்டிக்கோன்றமராகநோக்கித்
தேன்மலர்மருதவேலிச் சிறப்பெழுநாட்டைத்தந்து
கான்மலர்விரிகாவன்ன கடவுள்செய்நிழலில்வாழ்ந்தார்.

உரை.—மீளவுமாணரன் மகிழ்ச்சிமலர்ந்தமுகத்துடனேபோய்த் தன்தாய்தகப்பன் கூடப்பிறந்தாரெல்லாரையு மிராசாமலர்ப்பாதத்திற்கொண்டுவிட்டுக் காட்டியவளவிலே யிராசாவு மவரைத்தன் னுறவின்முறையாரைப்போல வினிதாய்நோக்கி மதுப்பொழிமலரவிழ் மருதவேலிச்சிறப்பிற்பொலிந்த நாட்டைத்தந்து வாசமலர்பூத் தகன்றசோலையின்தன்மையா லாண்டவ னவர்க்குச்செய்தநிழலிலே மகிழ்வோடுவாழாநின்றுரொன்க.

119. பணிமுகத்துறைத்தநீராற் பைங்கதிர்தெளித்தகோலான்
மணிமுகத்தெழுதப்பட்ட வளங்கதையொழுங்கிஞேக்கீர்
பிணிமுகத்திறைவன்செய்யும் பெரும்பயனருளிஞட்டி
லணிமுகத்தொருவன்செய்த வறமுலகளித்ததென்றுன்.

உரை.— நான்சொல்லிக்காட்டியதன்மைத்துக் கதிரைத்தெளித்தாற்போலச் சித்திரக்கோலா லிங்கேமணியின்சாயலாயெழுதப்பட்ட விக்கதையாவையு மொழுங்குபடப்பார்த்துக்கொள்ளுங்களென, அங்ஙனந் துன்பநோய்வந்ததன்மைத் தாண்டவன் செய்யுந்தயையின் பெரும்பயனு லல்லோ நான்முன்சொன்னபடி நாட்டிலிருந்தொருவனழகுபெறச்செய்தவறமே யுலகெலாங்காத்ததென்றுன் சூசையென்க.

## IX. வேறு.

120. சேற்றுறைதாமரை விரிசெவ்வேடுவான்
வீற்றுறைவெங்கதிர் விழுங்கிற்றுமென
நூற்றுறைப்புலமையோ னுண்டன்வாயுரை
யூற்றுறையினிமையம் முனிவருண்டுளார்.

உரை.— அங்ஙனம் விரிவாகச் சூசைசொன்னதெல்லாவற்றையு மம்முனிவ ரெங்ஙனம் விரும்பிக்கேட்டாரொன்னில்: சேற்றிற்கிடந்த தாமரை தன்செவ்விதழ்வாய்திறந்து வான்வீற்றிருக்கும் பருதியின் கதிரையுண்டதுபோல நூலின்றுறையாம் புலமையிற்சிறந்தசூசை தன்வாயவிழ்ந்த நுண்ணுரையூற்றதாகி யுமிழுமின்பத்தை யங்கேயிருந்தமுனிவர்களெல்லாருமுட்கொண்டு விரும்பிக்கேட்டாரொன்க.

121 உண்டதேனருகுநின் றுருத்தியாமொலி
கொண்டதேனினிதிசை பாடுங்கொள்கைபோற்
கண்டதேயுணர்ந்தெனக் கனிந்துகேட்டன
பண்டதேயுணர்ந்துபற் பலவுமோதினர்.

உரை.— அங்ஙனமவர் சுவைவாய்மொழியினிதாய்க்கேட்டபின்னர் மலர்வாய்மதுவையுண்டபின் பதினருகேநின் றம்மதுவைக்கொப்பளித்தாற்போல வீணைவாய்க்குரலோடுவண்டினமினிதாய்ப்பாடுந்தன்மையாலம்முனிவருங்கண்டறிந்தாற்போலத்தெளிவோடுகனிந்து கேட்டபழங்கதையையுணர்ந்து பற்பலவுஞ்சொல்லத்துடங்கினரென்க.

122. கோன்செயுந்துணையுயிர் கொல்லுங்கூற்றமாங்
கான்செயும்வனஞ்சுடு மமிழ்துங்காளமாம்
வான்செயுமருளிலான் மனத்ததுள்ளதே
வூன்செயுங்கோட்டிடை யுய்வதாமென்பார்.

உரை.— அம்முனிவரொங்ஙனஞ் சொல்லத்துடங்கினரென்னில்: வானுலகாண்டவன்தன்தயை யுதவியில்லாதாயிற் பூவுலகரச ராதரவுதவாமலதுதானுயிரைக்கொல்லுங் கூற்றனுமே, வாசமதுமலர்ச்சோலையுங் குளிராமற்சுடுமே, நல்லமிர்தந்தானுநஞ்சாமே, ஆண்டவனருளுண்டாயி னூனையுமிழு மதயானைக்கொம்புகணுனியிற்பட்டும பிழைத்துத்தப்பும்படி வழியுண்டாமென்பாரென்க.

123. வீடுறவேண்டில் நீ விதித்தநூலலாற்
காடுறவொளிக்குதல் கயங்குளிக்குதல்
நீடுறவிழுசடை நீட்டல்மற்றவை
யீடுறப்பயனிலா வெளிறிதாமென்பார்.

உரை.— மீளவும் பரமகதிவீட்டைச் சேருதற்காசையுண்டாகி நீ சொன்னவிதிநூலன்றிக் காட்டில்வந்தொளித்தலு நாண்முறைபலமுறை பலநீர்குளித்தலும் பெருஞ்சடைநீண்டு தொங்கவளர்த்தலு மித்தன்மைத்துள்ள மற்றவையு மாட்சிமைபெறும்படி பயனில்லாதறியாத்தன மறுவென்பாரென்க.

124. சடைவளருருக்கொடு தவிர்கினீர்குளித்
தடைவளர்வனத்திடை யகன்றிலாத்திரிந்
திடைவளர்கனிகளோ டிளங்கிழங்குணு
முடைவளர்காடிகள் முனிவரோவென்பார்.

உரை.— நீள்சடைவளர்ந்த வுருவனவாய்த் தப்பாது நீரைக்குளித்தனவாய்த் தழைத்தகாட்டிலகலாதுதிரிந்தனவாயிடையிலுள்ளகனிகளையு மிளங்கிழங்குகளையுமுண்டனவா யூத்தைநிறைந்தகாடிகளு மதனுன்முனிவரோனவோ வென்பாரென்க. (அறத்தினல்வரு மனமாட்சிமையில்லாதாற் சடைமுதல் மற்றதியாவும் பயனில்லையெனக் காட்டலேகருத்து.)

125. சுரத்திடைத்தழலொடு துறும்புருக்களு
மரத்திடைத்தூங்கிநற் கனியுண்வாவலு
முரத்திடைத்துறவரோ வுளத்தின்மாண்பலாற்
பரத்திடைக்கிளர்வினை பரியுமோவென்பார்.

உரை.— மீளவுஞ் சுடும்வனத்திடத்து நெருப்போடுநின்று திரியும்பு ருக்களு முயர்ந்தமரத்திடை தலைதாழத்தொங்கிக்கனிகளையுண்ணும் வவ்வால்களும் வல்லமைபொருந்திய துறவோரெனவோ? மனத்திற்கறத்தி ஞல்வரு மாட்சிமையின்றி முன்கொண்டபாவவினைகளொழிந்து கெடுமோவில்லையென்பாரொன்க.

126. செம்பொறிச்சினத்தபோர்ச் செறுநர்க்கஞ்சலாற்
பைம்பொறியெயிலின்வாய் படியப்பூட்டியுள்
வெம்பொறியெழத்தமை வெட்டிவீழ்த்தெனு
வைம்பொறியடக்கியுள் ளவாக்கொண்டாலென்பார்.

உரை.— மீளவுமொருவன் தன்பஞ்சேந்திரியங்களையடக்கி மனதிலாசைவைத்திருந்தால் மிக்கசினத்தோடு போர்செய்யவந்த பகைவர்க்கஞ்சிப் பொறித்தமதிலின் கோட்டைவாசலெல்லாம் நன்குய்ப்பூட்டினபின்பு தாமேயுள்ளிருந்து பொறியெழக்கோபித்துத் தம்மை வெட்டிக்கொண்டாற்போலவாகுமென்பாரொன்க.

127. கோலமேவீணடா குளித்தல்வீணடா
சூலமேவீணடா துறவுவீணடா
காலமேமந்திரங் கதைத்தல்வீணடா
சீலமேகெடநசை செருத்திலாலென்பார்.

உரை.— முன்னுரைத்தவை மெய்யாகையி லறத்தின்சீலங்கெடும்படி மனத்திலெழுந்தவாசையை யறுத்துவிடாதிருந்தகாலத்துக் கொக்கிற கணிந்து மக்குமணிவடந்தரித்தும் பீலிப்பிச்சமேந்தியு நீறுபூசியுஞ் சடையைவளர்த்து மற்றப்பலமுறையோடு பலகோலங்களெல்லாம்வீணே, பலதுறைநீரைக்குளித்தலும்வீணே, சூலமேந்தலும்வீணே, எல்லாவற்றையும் துறத்தலும்வீணே, காலமேயெழுந்து பலமந்திரங்களையோதலும்வீணே யென்பாரொன்க.

128. புரைவளர்பகைநமைப் புழுங்கிப்போரொழ
விரைவளர்வனத்திலும் வினைசெய்துட்சுடுங்
கரைவளர்கடற்கணுங் கலக்கமில்லதால்
நிரைவளருளத்தருள் நிறைந்தகாலென்பார்.

உரை.— பாவத்தால்வளர்ந்த பகையேமுற்றி நம்மைக்கோபித்தரும் போர்செய்யுங் காலத் தலர்முகத்துமிழும் வாசபூவனத்தொதுங்கியிருந்தாலு முளத்தைச்சுடுமே, நல்லொழுக்கத்துயர்ந்தமனதிற் றேவதயையினருள்நிறைந்திருந்தகாலத்தோவெனி லிருங்கரைசூழ்ந்த பெருங்கடலிடத்துங் கலங்காம னிலைகொண்டிருக்கலாமென்பாரொன்க.

129. பன்னெறியிசைத்தசொற் பயன்கண்டேவளன்
முன்னெறியொழிந்தவம் முனிவர்யாவரு
நன்னெறியடைந்தன நயப்பிற்கோதறு
மன்னெறியுறுதிகள் வகுத்துக்காட்டினன்.

உரை.— அங்ஙனம் பலமுறையோ டவர்சொன்னபயன்களைக்கண்டு சூசையம்முனிவரெல்லாரு முன்பிடித்த பொய்த்தவநெறியைவிட்டு நன்னெறியடைந்தாரென்று தானுற்றமகிழ்ச்சிமிகுதியாற் குறையின்றி நிலைபெற்றவறநெறியுறுதிகளைச் சொல்லிக்காட்டினனென்க.

130. காட்டியவுறுதியுங் கதிர்தெளித்தவண்
டீட்டியசரிதையுஞ் செய்தஞானமுள்
ளூட்டியநயத்தவ ருளங்குளிர்ந்தெனக்
கோட்டியகதிர்கள்போய் நிலங்குளிர்ந்ததே.

உரை.— அங்ஙனஞ் சூசைசொல்லிக்காட்டிய வுறுதிகளுங் கதிர்தெளித்தங்கேயெழுதப்பட்ட வாணரன்கதையும்பயத்தஞானமே யவர்க்கூட்டினவின்பத்தினு லவர்மன மினிதாய்க்குளிர்ந்ததே, அவர்மனங்குளிர்ந்ததன்மையாற் சாய்ந்தபருதியின்கதிர்போ யத்தமித் துலகெலாங்குளிர்ந்ததென்க.

131. அவ்வியமொழிந்தவ ரசைவுதீர்ந்தனர்
வவ்வியநெறிவிடாமனநிலைப்பெற
நவ்வியமுகத்துறை நாதன்வேண்டினன்
செவ்வியவுளம்புரை தேன்பெய்கோலினன்.

உரை.— அங்ஙன மனக்கோட்டமொழிந் தம்முனிவரெல்லாரு மசைவுதீர்ந்து துயிலைக் கொண்டார், செம்மையிற்சிறந்த தன்மனம்போலத் தேனைப்பொழி மலர்க்கொடியையேந்திய சூசையோவென்னி லன்றம்முனிவர்பிடித்தநன்னெறிவிடாமல் மனநிலைகொள்ளும்படி யழகியமுகத்தோடுநின்றவவதரித்தநாதனுகியதேவகுழந்தையை வேண்டிக்கொண்டுநின்றுரென்க.

132. ஞானமேதெளித்திவர் மனத்தின்ஞாயிறு
வானமேலெழுந்தொளி வழங்கிற்றுயபின்
னீனமேயொழித்தியென் றெவருமேற்றியக்
கானமேகழிப்பநேர் வழியைக்காட்டினர்.

உரை.— அங்ஙன மிராவெலாம்போயடைந்தஞானத் தம்முனிவர்மனத்தெளிந்தொளிர்ந்ததுபோலச் சூரியன்வானத்திலெழுந்து கீழ்திசைவிளக்கினபின்ன ரம்முனிவரெல்லாருமொருங்குடன்கூடி நீயேயெங்கள்குறைகளைத் தீர்த்தாயென் றுபசாரங்களைச்சொல்லிச் சூசையைவணங்கியப் பூங்காவனத்தைக்கடக்கும்படி செவ்வழியைக்காட்டப்போனுரென்க.

133. தொன்முகத்ததிட்டனுந் தொகைத்தமோனரும்
பொன்முகத்தடைந்தவிம் மூவர்போதலான்
மின்முகத்திடியென வாற்றிவிம்மிமேற்
சென்முகத்தெழுந்தகாக் கடந்துசெல்கின்றார்.

உரை.— அவருள் மூத்தோனாகியவதிட்டனும் மற்றமுனிவர்யாவரு மழகியமுகத்துவந்த விம்மூவர்பிரிந்துபோகையில் மின்னியிடித்தாற்போல விம்மிநைந்தழாநிற்க மேகத்துட்புகுந் துயர்ந்தபூங்காவனத்தை மூவருங்கடந்துபோனாரென்க.

சித்திரக்கூடப்படலம் முற்றும்.

ஆகப்படலம் – 20 – க்கு விருத்தம்

1932.





# இருபத்தோராவது

# நீர்வரமடைந்தபடலம்.

## I. வேறு.

1. கார்முகத்தகன்றதிங்கள் கதிர்செய்போரேறன்றல்தோன்றப்
போர்முகத்தளிகளார்க்கும் பொழிலகன்றிருவர்போகிற்
பார்முகத்திருகணைத்தார் படர்வழிகடந்தபின்னர்
நீர்முகத்தரும்பொன்சிந்து நெடும்புனலெதிர்கொண்டுற்றார்.

உரை.— பூவுலகிற்கிருகண்களாகநின்ற மரியுஞ்சூசையு முன்னுழைந்த மேகமுகத்தைவிட்டகன்றதிங்க ளொளியைவிடுவதுபோலத் தாமேந்தியதிருக்குமாரன் தோன்றும்படிபொருதவண்டுகள் முழங்காநிற்கு முன்சொன்ன பூஞ்சோலைவிட்டு நெடும்வழிநடந்து கடந்ததன்பின்னர் கொழித்தவலைகளோடு பசியபொன்னைச்சிந்து மொருநீள்புனலை யெதிர்கொண்டடைந்தாரென்க.

2. பொய்செலச்செல்லும்வாயிற் பொலிவொடுபெருகும்போல
மைசெலச்செல்லும்வாரி மருளிவந்தளவிற்பொங்கி
மெய்செலச்செல்லுநன்றேக் தெக்கணும்விளைவுய்த்தோடிப்
பைசெலச்செல்லுநாகப் பரிசெனச்செல்லுமாறே.

உரை.— அவ்வாறெத்தன்மைத்தோவெனில்: ஒருவனுரைத்தபொய்யைப் பலர்கேட்டுரைக்கப் போகப்போக வவனவன்வாயிலே யப்பொய் பெருகுவதுபோல மேகங்கள்வந்து பெய்தவளவிலே யோடிவரும் பலவாரிகள் வழியிற்கலந்து கூடியகளுலாறும்போகப்போக வளவின்றிப்பெருகிப்பொங்கி யுரைத்தமெய் யெங்கும் நன்மைதருவதுபோல வப்புனல்தானுஞ் சென்றவிடமெலாம்விளையும்படி யினிதோடிப் படத்தைவிரித் தூர்ந்தொழுகும் பாம்பின்தன்மையாய் வளைந்தோடுமாறதுவென்க.

3. விரைவளர்மலர்விள்சோலை வெயிலறநிழற்றிக்கவ்வுங்
கரைவளர்புனலைக்காட்டிக் கபிரியேல்தொழுதுகூற
வரைவளர்மாடத்தேந்தல் வைகுமாபுரங்கண்டேடித்
திரைவளர்மணியும் பொன்னுஞ் சிந்துகையாறிதென்றான்.

உரை.— அப்பொழுதவரைச்சூழ்ந்துவரும் பதினாயிரம்வானவருள்ளே கபிரியேலென்பவர் வாசமலர்ப்பூஞ்சோலைகள் வெயிலைமறைத்து நிழலைச்செய்து கவ்வாறிற்கு முயர்ந்தகரையுள்ளபுனலையிவர்க்குக்காட்டிச் சொல்வார்: மலையோடொத்தமாளிகையிடத் தெசித்தாரு மன்னவனிருக்குமிராசதானிமாபுரத்தண்டையிலோடிவந்து தன்றிரையிடத்துவளரு மணிகளையும் பொன்னையுஞ் சிந்தாநிற்கும் கையாறிதுவென்றுரொன்க.

4. நூனெறிவழுவாயூதர் நொந்தெசித்துறைந்தகாலை
கோனெறிவளைத்தகோனக் குலத்தினைப்பகைத்ததன்மை
சூனெறிபிறந்தமாந்தர் துணிக்குமினென்றுதந்தாய்
பானெறியுயிருண்ணுமுன் பகைநெறிசிந்துவாரால்.

உரை.— இவ்வாற்றில்முன்னடந்தவொருகதை கபிரியேல்சொல்லத்துடங்கினு ராகையில் வேதநூல்காட்டியவழியில் வழுவாத யூதர்நடந்து முன்னரொசித்துநாட்டில்வருந்தியிருந்தநாளிலே யக்காலத்து நீதிச்செங்கோல்வளையும்படி கொடிதா யநகேயாண்டவரசன் யூதர்குலத்தின்மேல்வைத்தபகையாலவர்க்குச்சூலின்வழியாயினிப் பிறக்குமாண்மக்களெல்லாரையும் வெட்டிக்கொல்லுங்களெனறேவினான். அவ்வண்ணமே யதின்பின் பக்குலத்திற்பிறந்த வாண்பிள்ளையெல்லாந் தமதுதாயார்முலைப்பால்வழியே யுயிரையுண்ணுமுன்னர் பகைவர்கையி லவ்வுயிரைச்சிந்தாநின்று ரொன்க. *

5. காவினுட்கொடியின்பூவோ கமலமேலன்னப்பார்போ
பூவினுட்டிரண்டதேனோ பொன்வலம்புரியுண்முத்தோ
வாவியுட்பதுமமொட்டோ வானுலாங்கோளினொன்றோ
கூவினுட்டனிநீர்த்தன்றக் குலத்திலோர்குழவிவேய்ந்தான்.

உரை.—அங்ஙன மரசனேவல்நடந்துவருகையில் யூதர்குலத்திலொருபிள்ளைபிறந்து பூஙகாவிடத்துப் பூங்கொடிபூத்த மலரைப்போலவோ தாமரையிதழ்மே லன்னத்தின்குஞ்சுபோலவோ மலர்ந்தபூந்தாதிடத்துத்திரண்டதேன்றுளிபோலவோ வலம்புரியிடத்துமுத்துபோலவோ தடாகத்திடத்துக் கமலததினரும்புபோலவோ வானிடத்துலாவியநவக்கிரகங்களினொன்றுபோலவோ பூவுலகிடத்து நிகரின்றித் தனியழகுள்ளமுகத்துத் தோன்றினனென்க.

6. அங்கதிர்மணியின்சாய லத்திருமகனைநோக்கி
வெங்கதிர்வேலினார்தாம் வெட்டவும்விடவுந்தேற்றாச்
செங்கதிர்திரைமூழ்கன்ன செய்தமஞ்சிகத்துட்பெய்தே
யிங்கதிர்புனற்கணுய்கென் றிரங்கிவிட்டேகினாரால்.

உரை.— அங்ஙன மொளியைப்பரப்பின மணியின்சாயலா யழகுபெற்றவப்பிள்ளையைநோக்கி வெங்கதிர்வீசும்வேலையேந்தியசேவகரவன்முகத்தழகினாலிரங்கி யவனைவெட்டிக்கொல்லவு மரசன்கொடுமையால

* Exodi cap. II. புறப்பாடாகமம், உ-ம் அதிகாரம்.

ஞ்சி யவனைக்கொல்லாதுவிடவுந் துணியமாட்டாமற் சூரியன் கடலின்மூ ழுகியொளித்ததுபோலச் செய்தவொருபேழையினு ளப்பிள்ளையையொ ளியவைத்து இங்கேயதிரு மிம்புனலிடத்துப் பிழைக்கடவதென்று மனதிலிரங்கி விட்டுப்போனாளென்க.

7. தாளெழுங்கமலநீரிற் றளம்பியதென்றேமுத்தம்
பீளெழுஞ்சங்கமென்றே பேழைமேலலைந்துபோகிற்
றாளெழும்புரத்தின்கண்ணே தூரொழுநாணல்மாட்டி
வாளெழுங்கணினாளீன்ற வண்ணநற்குழவிநின்றான்.

உரை.— அங்ஙனம் பிறந்தகுழந்தை யொருபேழையிலேவைத் தா ற்றிலேவிட்டவளவிலப்பேழை நெடுந்தாள்மேலெழுந்ததாமரை நீர்மேற் றளம்பும்போலவோ முத்துசூலாகக்கொண்ட சங்கு நீர்மேல்மிதந்தாற் போலவோ வலையின்மேல்மிதந்தலைந்துபோகையிற் றேர்பரியானை மனி தர்நெருங்கிய புழக்கத்தாற்றாசிமிக்கெழு மிராசதானிமாபுரத்தண்டையி லே தூரிலுயர்ந்தநாணலில்மாட்டிக்கொண்டு வாளொத்தகண்ணையுடை யாள்பெற்ற வழகியவக்குழந்தை பேழையோ டங்கேநின்றானென்க.

8. அன்றொளித்திங்களனை வங்கதிர்முகத்துநல்லாள்
குன்றொளித்திடுந்திண்டோளிற் கோனினிதீன்றகோதை
சென்றொளித்திரையைமாதர் திரளினோடிமிழிலாட
நின்றொளித்திருந்தபேழை நிமிர்ந்துகண்டெடுமினென்றாள்.

உரை.— அப்பேழையாற்றிலேபோட்டு நாணலிலேமாட்டிநின்றவ ன்றுதானே ஒளியைவீசியமுழுமதி நாணும்படி யதிலும்விளங்கியமுகத்து நல்லாளொருத்தி மலையைமறைக்குந் திண்டோளுடையமன்னவனீன்றகு மாரத்தி யஙகேவந்து தெளிந்துவிளங்கியவாற்றுநீர் பலமடந்தையரோ டாடாநிற்க வங்கேயொளித்திருந்தபேழையை யவள்தானே நிமிர்ந்துபா ர்த்தவிடத்திலேகண்டு அதையெடுத்துத் தாருங்களென்றாளென்க.

9. எடுத்தமஞ்சிகத்துநோக்கி யிளமதிமுகத்திற்றண்ணீர்
விடுத்தபைம்பனியோகஞ்சம் விள்முகத்துதிர்த்தமுத்தோ
கடுத்ததுன்பாற்றுக்கண்ணீர் கான்றகால்முகத்தைக்கண்டு [ள்.
தொடுத்ததன்னணிகள்பெய்தென் றேன்றலென்றரசிகொண்டா

உரை.— அவளேவினபடியெடுத்துக்கொண்டு முன்வைத்தபேழை யைத்திறந்துள்ளேபார்த்தவிடத்தி லிளம்பிறைமுகததிற் குளும்பனி யொழுகினாற்போலவு மலர்ந்ததாமரை முகத்திலுதிர்ந்த முத்துபோலவும் பேழையுள்ளிருந்தகுழந்தை தன்னுள்ளங்கடுத்ததுயர்களைப்பொறுமற்க ண்ணீர்விட்டழாநின்றவழகியமுகத்தை இராசகுமாரத்திகண்டு மகிழ்வோ டுகொண்ட வன்பின்மிகுதியாற் றன்தொடுத்திருந்தவாபரணங்களையக்கு ழந்தைக்குப்போட்டு இவனென்மகனென்று கைக்கொண்டாளென்க.

10. பானலமுலையினுளைப் பாலனுக்கழைமினென்னுத்
தானலமாடத்தெய்தித் தையலார்கமழ்நீராட்டிச்
சேநலமெழப்பொன்னுழி சிலம்புகிண்கிணிகள்பூட்டி
மீனலமணிந்தநாகு விதுவெனத்தோன்றினுனே.

உரை.— மீளவும் முலைபாலுள்ள வொருத்தியைப் பிள்ளையை வளர்க்கும்படிகூட்டிக்கொண்டுவாருங்களென் றவ்விராசகுமாரத்தி சேவகரைவிட்டுத் தானுடனே தனதுமாளிகைக்குவந்து பலமடந்தையரப்பிள்ளையையெடுத்துப் பூங்கமழ்நீரையாட்டி யுள்ளவழகுமிகும்படி யொளிப்பொன்னுழியும் பொற்சிலம்போடு பொற்கிண்கிணிகளு மவற்குப்பூட்டி வான்மீன்களாற் சூழப்பட்ட விளம்பிறைபோலக் குழந்தைதோன்றினுனென்க.

11. தாயெனவுணராத்தாயைத் தனையனைவளர்க்கக்கூட்டிச்
சேயெனவிமிழிற்கண்டாள் செறிந்துதன்னுளத்திற்றைத்த
நோயெனவறுத்தொன்றென்னு நுனித்தவன்பியல்பிறப்பன்னுள்
தூயினமணியின்சாயற் ருேன்றலைவளர்த்திட்டாளே.

உரை.— முலைப்பாலுடையவொருத்தியைத் தேடப்போனசேவகரோவெனில், தாயென்றறியாம லக்குழந்தையைப் பெற்றவளைத்தானே கூட்டிக்கொண்டுவந்துவிட்டார், அவள்வந்து தன்பிள்ளையென்றுகண்டு முன்னவனைவேண்டித் தன்மனதிற்றைத்த மிக்கதுயரைநீக்கி யவன்றன் பிள்ளையென்ருென்றுஞ்சொல்லாமல் மிகுந்தவன்புடன் பலநாளுந்தூயமணியின்சாயலாகநின்ற பிள்ளையை யினிதாய் வளர்த்தாளென்க.

12. வளர்ந்தவெண்மதியொத்தன்னுன் வளர்ந்துமோயிசனென்
தளர்ந்தன்குலத்தையோம்பத் தற்பரன்பணிப்பவங்க [ருேதித்
துளர்ந்தபன்முயற்சியாவு மொழுங்கினீருணர்தீரன்றே
கிளர்ந்தநல்லறிவினோர்க்குக் கிளர்க்கநானுரைப்பதென்னே.

உரை.— அங்ஙனம் வளர்பிறைபோலவளர்ந்தவன் மோயிசனென்னும்பெயரும்பெற்று அதின்பின் பவன் தன்குலத்தையோம்பும்படி யாண்டவனேவலினு லெசித்துநாட்டிலே நடத்தியகாரியமெல்லா மொழுங்கோடு நீரறிந்திருப்பீரொழிய நிறைந்தவுணர்வினையுடையவுங்களுக்கு நான்சொல்லுவதென்னவென்க.

13. ஐயெடுத்தொளிரத்தோன்றற் கன்பெடுத்துயிரைக்காக்கக்
கையெடுத்தளித்ததென்றிக் கங்கையைக்கையாறென்னு
மெய்யெடுத்திசைத்தநாம விதியிதேயென்ருன்வாஞேன்
மையெடுத்திரைத்தயாறு வலத்திலிட்டவரும்போனுர்.

உரை.— அங்ஙன மழகோடுவிளங்கிய வக்குழந்தைக்கன்புகாட்டியவனுயிரைக்காக்கும்படி கைதந்தேந்திறுற்போல விவ்வாறவனைக்காத்ததென்று முன்னே ரிப்புனலைக்கையாறென்று மெய்யானகதையைக்கா

ட்டும்படி யிப்பெயர்வந்தகாரணமிதுவென்றான் கபிரியேலென்னும்வா னோன், அவருங்கருந்திரை சுருட்டிமுழங்கியோடுமெப்புனலை வலத்தில்வி ட்டுப் போனாரென்க.

## II. வேறு.

14. மீன்சொரிந்தமுடிவேய்ந்தொளிர்தாயுந்
தேன்சொரிந்தகொடியந்திறலோனு
நான்சொரிந்தநவைதீர்மகவேந்திக்
கான்சொரிந்தசுனைகண்டருகுற்றார்.

உரை.— அங்ஙனமவர்நடந்துபோய் மீன்முடிசூடிவிளங்கியதாயாகி யமரியென்பவளுந் தேன்பொழி மலர்க்கொடியேந்திய திறலோனாகியசூ சையுநாஞ்செய்தபாவங்களைத்தீர்க்கவந்த திருக்குமாரனையேந்தி நெடுவழி நடந்ததன்பின்னர்வாசமலர்ப்பூந்தடாகத்தைகண்டுகிட்டினாரென்க.

15. மக்கடங்குவடுநீத்தவர்வைகிச்
சொக்கடங்குசுதனைத்துதிபாட
மிக்கடங்குகுயில்பாடலின்விள்ளி
யிக்கடங்குமலரின்புறல்கண்டார்.

உரை.— அங்ஙனங் கண்டசுனையின்கரைமேல் மனிதர்பாவத்தை த்தீர்க்குமிம் மூவர்வந்திருந்து சூழநின்றமரங்கள்மேலிருந்தகுயில்க ளழ கிற்பொலிந்ததிருக்குமாரனைத்துதித்தாற்போல வினிதாய்ப்பாடிவருகை யில் பூவெல்லாந்தேனைக்கொண்டதந்தாதுகளைவிரித் தின்புறக்கண்டா ரென்க.

16. கரைகிடந்தவிவர்காட்டருளன்ன
நிரைகிடந்துநிழனீண்டருவெல்லாம்
விரைகிடந்தமலர்விள்ளியகாலை
நுரைகிடந்தனகள்நுண்மணலார்ந்தே.

உரை.—அங்ஙனங் கரைமேலிருந்த மூவர் நமக்குக்காட்டுந் தயையி ன்தன்மையா லொழுங்கினின்று நிழலைச்செய்த நீண்டமரமெல்லாம் வாச மலரைப்பூத்தவளவிலே கீழேகிடந்தமணலெலாம்நனைந்து நுரைநுரையா ய்விழுந்த மதுக் கிடந்ததென்க.

17. கோளையுண்டகுழல்மென்கொடியீன்ற
காளையுண்டவதனக்கவின்காண
வாளையுண்டசுனைவாவிமலர்ந்தே
தாளையுண்டமலர்தன்விழியாமால்.

உரை.— மீளவு மொளிவான் மீன்களைச்சூழ்ந்த மென்கொடியாகிய மரியென்பவளீன்ற திருக்குமாரனது முகத்தழகினைக் காணும்படிவாளை மீன்திரியுந் தடாகந்தன்விழியாகத் தாளின்மேலெழுந்த தாமரையாம் பல் கருங்குவளை மற்றப்பூவெலாமலர்ந்தனவென்க.

18. சொற்கலத்தினுயர் வோர்சுவைமாந்தப்
பொற்கலத்திலமுதேபொழிவார்போல்
விற்கலத்திலொளிர்பூவிரிதாது
தற்கலத்தினிறைதந்தனதேனே.

உரை.—அங்ஙனம் விரிந்தநீர்மலரெல்லாஞ் சொல்லுந்தன்மைத்து யர்ந்தமுவ ரினிதாயருந்தும்படி பொற்பாத்திரத்தி லமுதினையேந்தித் த ந்தாற்போல வொளிமுகத்தலர்ந்த பூவெல்லாந் தந்தாதென்னுங் கலத்தி ன்மேற் றேனைநிறையவுமிழ்ந்து தந்தனவென்க.

19. நான்கலந்தநவைதீரருணல்லோர்
கான்கலந்தகனிகட்கனிவுண்டு
வான்கலந்தவுடுமான்மலர்கான்ற
தேன்கலந்ததெளிதீங்கயமுண்டார்.

உரை.— அப்பொழுதிங்கே நாஞ்செய்தபாவங்களை யறுக்கும்படித யையோடுவந்த நல்லோராகிய மரியுஞ்சூசையும் வாசகனிகளையுண்டபின் வான்மீனொத்ததாமரைமுதற் பல நீர்மலருமிழ்ந்த தேன்கலந்து தெளிந்த தடாகத்தினியதண்ணீரையுண்டாரென்க.

20. மணிநிறத்தவெழின்மைந்தனைமூடு
மணிநிறத்தநுரையந்துகிலாடை
பணிநிறத்தவொளிர்பாணியினல்லாள்
புணிநிறத்தமலர்பூண்சுனைதோய்த்தாள்.

உரை.—அதின்பின் பாபரண நகையொப்பவிளங்கு மழகியகையை யுடையாள் மரியென்பவள் மணியின்சாயலாய்நின்ற தன்திருக்குமாரனை மூடிவைத்திருந்த வழகிற்பொலிந்த நுரையொத்தசீலையை மணிமுடிசூழ் ந்தாற்போலச் சூழமலரைவிரித்த வப்பூந்தடாகத்திற்றோய்த்தாளென்க.

21. தோய்ந்ததன்மையொடுமச்சுனைநன்னீர்
மேய்ந்ததன்மையொடுவெம்பிணியாவும்
வாய்ந்ததன்மையொடுமாறவுநாத
னீய்ந்ததன்மையுளதின்றுமதெஞ்சா.

உரை —அங்ஙனந் திருக்குமாரனைமூடினசீலை யங்கேதோய்த்ததனால ச்சுனைத்தண்ணீரையுண்டமாத்திரத்திற் பிணிநோயெல்லாம் நன்றாய்த்தீ ரும்படி யதற்கு நாயகன்வரத்தைத்தந்தான், தந்தவர மிந்நாள் மட்டுங் குறையாமல்நடந்துவருமாமென்க.

22. அருளின்வீங்குவரமஃதெனவோர்ந்து
தெருளின்வீங்கிநறுதீங்கயவாவி
சுருளின்வீங்குதிரைசூழ்கரைமோதிப்
பொருளின்வீங்குமடிபோற்றுவபோன்றே.

உரை.— அங்ஙன மிக்கவருளினோ டாண்டவன்தனக்குத்தந்தவரத் தையறிந்தாற்போல வாசத்தெண்ணீர்த்தடாகம் நன்றியறிந்துசுருட்டின வலைகள் கரையில்மோதும்படியலைந்து மூவர்பொற்பாதத்தில்விழுந்து வணங்கினதன்மைபோலத் தோன்றிற்றென்க.

23. அலையொருங்குதமுளாடியபாலா
விலையொருங்குவிரியேரலராடத்
தலையொருங்குமிசைதன்கரமேந்து
நிலையொருங்குசுனைநீரியதோற்றம்.

உரை.— மீளவுந் தண்ணீரெல்லாமலைந்துவருகையில் மலர்ந்தபூவெலாமொருங்குடனாடாநிற்க வவளைவணங்கும்படி தன்கையெல்லாந்தலைமேலேற்றின தன்மைபோலத்தோன்றிநின்ற தத்தடாகமென்க.

## III. வேறு.

24. பானேரிளநிலவூறிய பணிமாமதிமுகமுன்
வானேரிளபணிமானிய மதுமாதருவடியத்
தேனேரிளகுரலோடிள வளிபாவிசைதிருக
மீனேரிளசிறைமாமயி னடமாடினமிகவே.

உரை.— அக்குளத் தாண்டவன் தந்தவரத்தா லெல்லாமுங்களிகூர்ந்தனவெனப் பாலொத்த விளங்கதிருமிழு மழகியமாமதிமுகத்தில் வான்தருமிளம்பனிவிழுவதுபோலக் கரைமேலிருந்த மரமெலாந் துளித்துளியாய் மதுவைப்பொழியாநிற்கத் தேனொத்தினியவோசையோடு வண்டுகள்பாடாநிற்க மீன்பதித்ததன்மையி லழகியதோகையைவிரித்தமயில்கள்மிகவும் நாடகமாடின வென்க.

25. கயலொத்தனவிழியுற்றன களிமாதர்கள்கருவிட்
புயலொத்தனதிரையுட்களி விளையாடினபுனைகண்
டியலொத்தனகயமுட்டிரி யிறகாருயிரினமும்
வியனுற்றனசிறைவிட்டயல் விளையாடினவினிதே.

உரை.—மீளவு மன்னமுத னீர்வாழும்பறவையெல்லாங் கயல்மீனொத்த கண்ணையுடையமாதர்கள்வந்து சரியமேகமொத்ததண்ணீரில்முழுகியினிதாய்விளையாடினதன்மையைப் பலநாளுந்தாங்கண்டுபடித்துக் கண்டதன்மைத்துத் தாமுந் தஞ்சிறகைவிரித்து மூவர்காண வருகேநின் றினிதாய்விளையாடினவென்க.

26. புள்ளும்பலகுருகும்பக வினமுங்கவின்பொருவா
வள்ளும்பரிசனமும்பகை விலகுங்களிவிளைபோ
ருள்ளும்படிகுறுகும்படி யுகளும்படியுளவே
துள்ளும்பரியெனவங்கெதிர் துடர்கின்றவைதுறுமால்.

உரை.— அங்ஙனம் பலபறவையன்றி நாரைகளுங்கொக்குகளு மழ கிற்பொருவாது மலர்ந்தவிறகுடையன்னங்களும் பகையில்லாமல் மகிழ்ச்சியால் விளைந்தவரும்போருள்ளவுந் தம்முட்குறுகவுங் குதிக்கவுஞ்செய்து துள்ளிப்பாயுங்குதிரைகளைப்போலத் தாமும்வந்தெதிரொதிராய்த் தம்மைத்துடர்ந்து வருவனவென்க.

27. தேங்காவியொடுளமற்றலர் திளைதேறலையுணவந்
தாங்காயினவளிபற்பல வரவத்தொலியதிரத்
தூங்காவொலிமுரசொத்தெழு தொனியிற்றமுடேர்போர்
நீங்காதனபறவைக்குல நிகருஞ்சமர்நெடிதே.

உரை.— அங்ஙனம் பறவைக ளொருங்குடன்கூடி யணியணியாகவருகையிற் கருங்குவளை முதல் மற்றநீர்மலர்நிறைந்துள்ளதேனை யுண்ணும்படி திரண்டங்கே கூடினவண்டுதம்பலவினங்களும் வாய்விட்டார்த்துச் செய்யுமுழக்க மோயாதமுரசிஞ்சைசையாக வெழும்பத் தம்முட் டுடர்ந்த விளையாட்டுப்போர் விடாமற் பறவையெல்லாம் நெடுங்காலஞ் சமனாய்ப் பொருதனவென்க.

28. இரியும்பலகுறுகும்பல வெதிரும்பலவிறகை
விரியும்பலவறையும்பல மெலியும்பலவிளைபோர்
புரியும்பலமுரியும்பல பொலியும்பலபுடையிற்
பிரியும்பலகுமுறும்பல தொனியும்பரம்பெறவே.

உரை.—அங்ஙனமணியாய்த்திரியவுந் தம்முட்குறுகவு மொன்றோன்றோ டெதிர்க்கவு மிறகினைவிரிக்கவும் மடிக்கவும் போரில்மெலியவும் போர்விளைவிக்கவு முறியவும் வெற்றிக்கொண்டாற்போலப்பொலியவும் பக்கத்திற்சாய்ந்து பிரியவும் மிக்கொலிமுழக்கவும் பற்பலமுகத்துப் பற்பலபறவைசெய்துவருகையில் வானமட்டு மோசையெழும்பின வென்க.

29. பறைசிந்தினவொலிசிந்தின பகைசிந்தினபறவை
நறைசிந்தினமலர்சிந்தின நனைசிந்தினநறுதே
னுறைசிந்தினவிதழ்சிந்தின வுயர்சிந்தினவுணுநீர்
முறைசிந்தினமுனைசிந்தனை முயல்சிந்திடமுடியா.

உரை.— அங்ஙனம் பறைவாயோசையொப்ப முழங்கிப்பகைத்தாற்போலப் பொருதபறவைகள் வாசம்பொழிந்துமலர்ந்தபூவு மலராவரும்புஞ்சிந்தித் துளியாய்நறுந்தேனையுமிழும் பூவிதழ்களைக்கிழித்துச் சிந்தி மூக்கால்முகந்தநீரை யுயரவுஞ்சிந்திச் சிந்தனைகெட்டாற்போல முறையைத்தவிர்ந்து செய்தவிளையாட்டுப்போர் முடிவொன்றில்லதென்க.

30. வந்தோடியவொருகோவன மதுவோடியமலரின்
னந்தோடினிதலகோடாது கவர்வாயினவளவின்
முந்தோடியபெடைமீமிசை முருகார்துளிமுடுகப்
பந்தோடியைமணநீர்களி மடவார்விடுபடியே.

உரை.— அங்ஙனம் பலபுள்ளினங்கள் விளையாடிக்கொண்டுவருகையி லோரரசன்னம்வந்தோடி மதுப்பொழி வழகிய தாமரைமலரை மூக்காற்கவ்வி முன்னோடினபேடைமேல் வாசநீர்த்துளிநிறையச்சிதறும்படி வீசி வட்டத்திருத்தியால் மணப்பன்னீரைவீசி மடந்தையர்விளையாடினது போலத் தோன்றிற்றென்க.

31. பெடைநாணினதெனநாணறை பிளிர்தாமரைநெடுங்காக் கடைநாணினவனமேவுபு கரவாயினமுறைகண் டிடையாயினபலபூமுகை யினநக்கெனமலரா நடையாடினபறவைக்குல நணியார்த்தனநகவே.

உரை.—அங்ஙனமப்பேடையன்னம்நாணினாற்போல வாசம்பொழிந்ததாமரைநெடுங்காட்டின்முடிவிலே யவ்வன்னம் போயொளித்ததென்று கண்டதனாலிடையி லிருந்தமலராதவரும்புகள் சிரித்தாற்போலமலர்ந்தன, சூழக்கூத்தாடாநின்ற மற்றப்பறவைகளும் மிகவுமுழங்கிச் சிரித்தனவென்க.

32. பங்தொத்தனபனிமுற்றலர் பறவைக்குலமெறியச் சந்தொத்தனமதுரத்துளி சரியப்புயறருநீர்ச் சிந்தொத்தனசிதறிப்பினர் தெளியத்தடமதனூ டிந்தொத்தனவுடுவொத்தன விணர்மற்றுகுமியலே.

உரை.— மீளவும் பறவைகளெல்லாம் பூம்பந்தொத்த பனிநிறைந்த பெரும்பூமலரை யடியிற்கிழித்து மேலேவிசைபடவெறிதலிற் சந்தனத்துளிபோல வம்மலரினின்று வாசபனித்துளிவிழவும் மேகங்கள் தூறினாற்போல வந்துளியெங்குமிகுதியாய்ச்சிதறவு மதின்பின்பு வானத்தினின்றுவிழுந்த சந்திரனைப்போலவும் வான்மீன்களைப்போலவு மேலெறிந்த மலரொலா மப்பூந்தடாகத்துநடுவே விழுவனவென்க.

33. அளியாரலரரவேபட மனையாட்டினபலவுங் களியால்விரிசிறையூடது கரவாற்றினபலவுந் துளியார்முகிலுறமீவிசை துறவோட்டினபலவு நளியாரலர்விளையாடின நயமெல்லையுமிலையால்.

உரை.—மீளவும் பலபறவை நிறவண்டுகள் நிறைந்திருக்கு மலரைக் கொய்து மூக்கிற்கவ்விப் பொறியுளபாம்பின்படத்தைப்போல மேலாட்டினவும் பலபறவைகளிகூர்ந்தெடுத்த மலரைவிரித்ததஞ்சிறகிலுள்ளொளித்தனவும் பலபறவை வானத்துலாவிய மேகங்களைச்செல்லும்படி விசைபடவெடுத்தமலரை மேலேயெறிந்தனவு மங்ஙனங் குளிர்ந்தமலரைக்கொண்டு விளையாடினமகிழ்ச்சி மட்டின்றிமிக்கனவென்க.

34. மேனின்றொருநடநோக்கினர் விரிவண்புகழொலிபோல் வானின்றகல்கனைசூழ்நிழன் மரமுந்தியபறவை தேனின்றலர்சுனையாடின திறநோக்கியகளியாற் பானின்றினிதிசைபாடுளி புகழ்பாடினபரிசே.

உரை.—இவையெலாங் குளத்திடத்தாகையில் மேலாங்கிடத்து நின்று கீழேயினிதாயாடினகூத்தைப்பார்த்தவர் புகழுமோசைபோல வானத்துயர்ந்த கொம்புகளாற் களைசூழநிழற்றின மரங்கள்மே லேறியிருந்த பறவைகளோவென்னிற் றேன்பொழிந்தலர்ந்ததடாகத் தாடினமுறையைக்கண்ட மகிழ்ச்சியாற் பாலொத் தினியவிசைகளைப் பாடலினுடின நீர்ப்பறவைகளைப் புகழ்ந்துபாடினதன்மையிற் றோன்றினதென்க.

## IV. வேறு.

35. பற்றலாற்செயிர்பற்றிருண்மாக்களே
கற்றநூற்பயனின்றியுங்காசினி
யுற்றநாதனைத்தாமுணராமையி
னிற்றெலாமறிவில்லவைசெய்தவே.

உரை.— அங்ஙனமாசையால் வரும்பாவத்தைப்பற்றி வந்தவிருளைக்கொண்டமனிதர் தாம்படித்தநூலின் பயனொன்றின்றித் தம்மையிரட்சிக்கப் பூவுலகில்வந்தநாதனைத் தாமறிந்துவணங்காதிருக்கையி லறிவொன்றில்லாதபொருளாகிய வப்பறவைகளிதெல்லாவற்றையுஞ் செய்தனவென்க.

36. அறிவிலாவுயிர்தாமறிந்தாலெனச்
செறிவிழாவணியிற்சிறப்பாடின
நெறிவிடாக்கனிநோக்கியநேரிலார்
முறிவிலாசிமொழிந்தெழுந்தேகினார்.

உரை.—அங்ஙன மறிவில்லாதவுயிராயினு மப்பறவைநாதனையும் நாதனக்குளத்துத்தந்தவரத்தையு மறிந்ததன்மையிற் றிருவிழாநடத்தினாற்போலவிளையாடினதன்மையை யினிதாய்ப்பார்த்திருந்தமூவர் குறையாதவாசிர்வாதத்தைத் தந்தெழுந்துபோனாரென்க.

37. ஈய்ந்தநல்வரத்தேந்தியவாவிநின்
றுய்ந்தமாண்பினர்போகையிலல்லனுட்
பாய்ந்ததன்மையிலப்பறவைக்குலம்
வேய்ந்தவானுறவார்த்தனவிம்மியே.

உரை.—அங்ஙனம் நாதன்தந்தவரத்தினால் பெருமையிற்பொலிந்ததடாகத்தினின்று தேர்ந்தபெருமையுடைய மூவர்போகிறதைக்கண்டு தம்முளத்துவருந்தினாற்போல வப்பறவையெல்லாம்விமமியழுததன்மையில் வானத்தொலியெழும்படியே மிகவுமார்த்துமுழங்கினவென்க.

நீர்வரமடைந்தப்படலம் முற்றும்.

ஆகப்படலம்–21–க்கு–விருத்தம்

1969.





# இருபத்திரண்டாவது

# எசித்துசேர் படலம்.

## I. வேறு.

1. அருளுலாவுமிதயத்திலிருந்தே யன்பியற்றியரிதாயெனையா
மிருளுலாவுமுயிர்யாவுமளிப்ப வின்பியற்றியுலகெய்தியமூவர் [ளு
தெருளுலாவுமவர்பூவடிசூடித் தெள்ளியற்றியவர்பாவிசைகூறப்
பொருளுலாவியவெசித்தெனுநாடு புக்கியற்றியவையான்புகல்கிற்
பேன்.

உரை.— சேசுமரிசூசையென்னு மூவர்செய்தவையயானிறைந்த வெ ன்னிதயத்திற் ருமிருந்தன்புகாட்டி யரிதிலென்னையாண்டு பாவத்திரு ண்ட மனிதருயிர்கள்யாவையு மிரட்சிக்கும்படி யின்பங்காட்டிப் பூவுல கிற் ருேன்றினவராகித் தெளிவோடுபூத்த வவர்பாதத்தின்மலரை யென் தலைமேற்சூடி யவர்தாமெனக்குத் தெளிந்தபாவிசைகளைத் தருவாரென் று செல்வத்தோங்கியவெசித்துநாட்டிலவர்புகுந்தங்கேசெய்தவைசொல் லுவேனென்க.(எசித்துநாட்டி லம்மூவர்வாசதிருந்தநாளினடந்த வதிசயச் செய்திகளைப் பற்பலபடலமாகவகுத்து விரிவாய்ச்சொல்வானென்றமை யா லீண்டுமீளவு மருமைபற்றிப் பாவமுவின்றி நன்ருய்முடியும்படி கடி வுள்வாழ்த்துரைத்ததென்க.)

2. மீமலிந்தசுடர்மூன்றணிமீன்போல் விண்மலிந்ததளமூவரை நண்ணக்
காமலிந்தமணம்வீசியதிந்தண் கள்மலிந்தமலரோடினைவிள்ளத் [ப்
தேமலிந்தகனியார்தருயாவுஞ் சென்மலிந்ததலைதாழ்ந்துவணங்கு
பூமலிந்தநெறிமூவருமேகிப் புரைமலிந்தவினை தீர்க்குவபோனர்.

உரை.— சந்திரசூரிய னக்கினியென்னுமுச்சுடரை யொளிவான்மீ ன்கள்சூழ்ந்தாற்போல வான்தளமாகிய பதிஞயிரம்வானவ ரிம்மூவரைந ண்ணிச்சூழ்ந்துவரவுங் காவிலுள்ள வாசமதுப்பொழிபூவெலாமலரவுமினி யகனிகளைக்காய்த்தமரமெலாம் மேகங்கள்தவழுந் தம்முச்சிக்கொம்புகளை வளைத்து மூவரைவணங்கவும் பூந்தடத்தவர்போய்ப் பாவத்தால்வந்த வி னைகளைத்தீர்க்கும்படி நடந்துபோனரென்க.

3. மிக்கடங்கியதிறந்தகுவேந்தன் வெருவினெலனவொளிக்கு
புவந்து
தொக்கடங்கியவெசித்துயிர்யாவுந் துகளொழிப்பவவணெய்திய
நாதன்
றிக்கடங்கிலுமறுதருள்செய்யச் செவ்வனுயவழிகூட்டிலர்நாடு [ர்.
புக்கடங்கியபுரம்பலசேரும் புடைவளைந்தவழிகாட்டினர்வானே

உரை.— அங்ஙனம்போகையி லளவிறந்ததிறத்தின் மிக்கவேந்தனு கிய வத்திருக்குமார னெரோதனென்பவற் கஞ்சினுற்போல வொளித்து வந்து எசித்திலுள்ளமன்னுயிர்யாவும் பாவத்தைநீக்கியுய்யும்படிவந்த நாதனுகையி லங்கேநாலுதிக்கி லெங்குங்குறையாதவருளைச்செய்யும்படி வழியைக்காட்டி முன்போகிறவானோர் செவ்வழியி லவரைக்கூட்டிக்கொண்டுபோகாம லந்நாட்டிற்புகுந்ததன்பின்பு பற்பலநகரிற்சேரும்படிசுற்றினவழியைக்காட்டினுரென்க.

## II. வேறு.

4. விண்மேலெழுவைகறைவெங்கதிரோ
மண்மேலெரிகோடைவருந்துளியோ
பண்மேலுரையோர்பனிமேலருளோ
ரொண்மேலெழுநாடவணெய்தினரால்.

உரை.—அங்ஙனம்விடியற்காலத்து வான்மேலெழுந் திருளைநீக்குஞ் சூரியனைப்போலவுங் கோடைநாளிலே காய்ந்தபூமிமேல்விழு மழையைப் போலவும் வீணைவாய்க்குரலினு மினியசொல்லையும் பனியிலுங்குளிர்க்குந்தயையையுமுடையவன்னு ரந்நாடெண்ணப்படாதசெல்வத்துயரும்படி யங்கேசென்றுரென்க.

5. ஈனந்தவிரீரறமீரமருள்
ஞானந்தகவூக்கநயம்புகழ்சீர்
தானந்தவநூல்பொருடந்தனபின்
வானந்தருவாழ்வுகவெய்தினரால்.

உரை.— அங்ஙனமவ ரந்நாட்டிற்குறைபாடெல்லாந்தீர்க்கு மில்லறந்துறவறமென்றீரறங்களு மிரக்கமுந்தயையும் ஞானமும்பெருமையு மனத்தினூக்கமு மகிழ்ச்சியும்புகழுஞ்செல்வங்களுந் தானமுந்தவமும் வேத நூலோடுபலநூலும்வேண்டியபொருள்களுங் குறையொன்றின்றி வழங்கும்படிதந்தபின்பு வான்வீட்டிலுள்ள முடியாதவாழ்வுகளை யாவர்க்குங் கொடுக்கும்படி யங்கேசென்றுரென்க.

6. கனைமஞ்சுபொயாதுகயம்பொழிய
நனைவிள்வயல்நான்குபயன்விளைய
வினைநொந்தழுவெம்பகைநீங்கியழ
வனையாதவராங்கடிவைத்தனரால்.

உரை.— மீளவுமிடித்துமுழங்கிய மேகங்கள் பொய்யாமற் பருவத்துப்பெய்யவு மலர்ந்தவயல்களெல்லாம் வருடந்தோறும் நாலுபயன்களைத் தந்து விளையவுந் தீவினையழியுங்காலெமிதென்றுநொந்தழவு முயிர்ப்பகையெல்லா நீங்கியழாநிற்கவு மிவையெலா நன்குருகும்படி நிகரில்லாதழூவருமங்கேதம்மடிவைத்தாரென்க.

7. அடிவைத்தனவன்பினொடாங்கெவணுங்
கடிவைத்தனபூமலர்கான்றமதுப்
பொடிவைத்தவழிப்புடைசேறுலவ
விடிவைத்தனகாரிணைதூறினதே.

உரை.— அவரங்கேயடியைவைத்த வன்பினைப்பற்றி யெங்கும்வாசமலர்பூத்துப் பொழிந்தமதுவின்றிரளை பொடியாய்க்கிடந்தவழியெலாஞ்சேருகும்படி யிடித்தமேகம்பொழிந்ததுளியின்தன்மை தூறிற்றென்க.

8. கானேந்தியகாவுகடோறுமயில்
மீனேந்தியதோகைவிரித்துலவி
யூனேந்தியநாதனுறப்பறவை
தேனேந்தியதீம்புகழ்பாடுவன.

உரை.—மீளவும் மலர்ப்பாத்திரத்தேந்திய வாசனைவீசாநிற்கும் பூஞ்சோலைகடோறு மயில்கள் மீன்களொத்தகண்களையேந்திய தமதழகிய தோகைகளைவிரித்தாடி யுலவாநிற்க வூனுடலேந்தி யவதரித்தநாதன்வருவதுகண்டு மற்றப் பறவைகள் தேனின்பத்திசைகளையியற்றி யவனைப்புகழ்ந்தாற்போலப் பாடுவனவென்க.

9. கயல்பாய்ந்துகளக்கமலங்கிழிபட்
டயல்பாயொளிமுத்தறலோடொழுகி
வயல்பாய்ந்துநெல்முத்தமொடேமருளி
யியல்பாய்நிலமின்புறிநக்கெனவே.

உரை.— மீளவுங் களிகூர்ந்தகயல்மீன்கள்பாய்ந்து குதிக்கையிற் கிழிந்ததாமரையினின் றருகேவிழுந்த வொளியைப்பரப்பினமுத்துக்கள் தண்ணீரோடுபோய்க் காய்ந்தவயலிலேபாய்ந்து செந்நெல்லின்முத்துக்களோடு கலந்துகிடக்கவந்நிலமெல்லாங் கொண்டகளிப்பினால் முத்துக்களாகியவெயிறுகளைக்காட்டிச் சிரித்தாற்போலத்தோன்றிற்றென்க.

10. கண்டாரெவருங்கனிகண்வழியா
லுண்டார்நிறையின்பமுளத்திலெனத்
தண்டார்மிசைசாயளிமொய்த்தனபோன்
மண்டாரறவோர்மிசைமல்கியகண்.

உரை.—மீளவு மிவரைக்கண்டயாவரு மினிதாய்க் கண்ணின்வாயாலிறைந்த பேரின்பத்தையுண்டமையா லெல்லாக்கண்ணுங்குளும்பூமாலை

யின்மேலே வண்டுகள் சாய்ந்துமொய்த்தாற்போலமலிந்தவறத்திற்சிறந்த விம்மூவரின்மே னெருங்கிவிழுவனவென்க.

11. நீர்மேலெழுமாலிநெடுங்கதிர்முன்
பார்மேலெழுநீளிருள்பட்டொழியுஞ்
சீர்மேலெழுமூவர்கள்சிந்தருளாற்
சூர்மேலெழுதீது துடைத்தனரோ.

உரை.— அங்ஙனமெல்லாருந் தம்மை யன்போடுநோக்கலி னிவருங் கடலின்மேலெழுந்தசூரியன் பரப்பின கதிரின்முன்னே பூமியைமூடின விருள்பட்டொழியுந்தன்மையின்மேலும் வந்தமூவர் தம்முகத்தில்வீசின வருளினாற் றுன்பம்விளைவிக்கும் பாவத்தைத்துடைத்து நீக்கினரென்க.

## III. வேறு.

12. நீணெறிகடந்தங்குய்ப்ப நினைத்தவான்பயனைநல்கக்
கோணெறிமுகத்துநாதன் கூர்ந்தருள் தளிர்த்தலுள்ளிச்
சேணெறியிறங்கிக்காத்த தேவராய்த்தொழுதபேய்கள்
மாணெறிசிறந்தநாட்டின் வயினின்றோறுமோட்டினானே.

உரை.— அங்ஙனம்போகையி லவதரித்தெடுத்தவுடலோடுநவக்கிரக ங்களிலொன்றுபோல விளங்கியமுகத்து நாதன்நெடுவழிகடந்து எசித்து நாட்டிற்செய்யும்படிமுன்மனதிலேகுறித்த நன்மைகளை யிப்பொழுது செ லுத்தற்காரணமாகத் தன்தயைதளிர்த்துவிளவிக்கு நினைவினைக்கருதி வானுலகினின் றிறங்கி யுயிரைக்காத்த தேவனென்னும்பெயர்பெற் றங்கே வணங்கப்பட்டபசாசுகளெல்லாவற்றையும் பெருமையிற்சிறந்த வந்நாட் டினின்றுபோக வெங்குமோட்டினானென்க

13. புரந்தருந்தயையைக்காட்டிப் புரைதருநரகிலுய்ப்ப
வரந்தருந்தேவராக வணங்கியவலகையீட்ட
முரந்தருந்திறத்திற்றம்மை யுதைத்தனனறியாதஞ்சி
நரந்தரும்வேகத்தோடி நரகிடைப்புதைத்தன்றே.

உரை.— அங்ஙனம் மனிதரையிரட்சிக்குந்தன்மையிற் றயையைக்கா ட்டித் தாம்விளைவிக்கும் பாவமேதரும் நரகத்திலவரைக்கொண்டுவிடும் படி யங்கேவரந்தருந்தேவனென்று வணங்கப்பட்டபசாசுகளெல்லா மள விறந்தவல்லமைகொண்டு தம்மையுதைத்துத்துரத்தினவனென்றறியா ம லுள்ளேமெலிந்து மிகவுமஞ்சினதன்மைத்துவிரைந்தோடிக் கீழ்நரகிட த்துப் புதைத்தனவென்க.

14. கொன்றெளித்திறத்தினின்ற குணுக்கினநரகில்வீழ்கப்
பொன்றெளிக்கோயில்யாவும் பொதிர்மணியுருவுந்தேரு
மின்றெளிச்சாயற்கெட்டு வீழவுங்கண்டயாரு
மன்றெளித்திறத்தநாதன் வழியுருவியந்துநின்றார்.

உரை.— அங்ஙனம் பயனில்லாதவொளியைக்காட்டி நின்றபசாசுகள் நரகத்தில்விழுந்தவளவிலே யவற்றைவணங்கக்கட்டின பொற்கோயில்களும் மணியுருவங்களு முயர்ந்ததேர்களும் மின்னலொளியைக்காட்டி முழுதுங்கெடுவதுபோல வடியோடுகெட்டுவிழுந்தன, அவற்றைக்கண்டவெசித்தாரெல்லாரும் நிலைகொண்டசையாதவல்லமையுள்ளநாத னிவற்றைநடத்தின்வழியையறியாம லதிசயப்பட்டுநின்றாரென்க.

15. நம்பியவுயிரைக்கொல்ல நாட்டியதேவராக
வெம்பியபகையிற்றீய வினைவிளைத்திருந்தபேய்கள்
பம்பியமுகத்தின்முன்னர் பதைப்பவீழ்ந்தொளிப்பநோக்கி
யம்பியமலர்வாய்க்கோலா னகத்துணுஞ்சுவையின்விள்ளான்.

உரை.—அங்ஙன மவையெல்லாந்தகர்ந்துவீழ்ந்து தம்மைநம்பினவரைக்கொல்லும்படி யங்கேநாட்டினதேவரொன்று மனிதரைப்பகைத்துத்தீவினைவிளைதற்காரணமாயிருந்த பசாசுகளெல்லாந் தம்மைச் கோபித்தநாதன்முகத்தி னிற்கமாட்டாமற் பதைத்துப் பதறிவிழுந்து கீழ்நரகிடத்தொளித்தனவென்றுகண்டு மதுமலர் பூத்தகோலாஞ்சியகுசை மகிழ்ந்தமனத்தி லுண்டபேரின்பத்தைவிடாதிருந்தானென்க.

16. பொய்த்திறத்தரசற்கஞ்சிப் போதல்போலொளிப்பவெய்தி
யத்திறத்துணர்ந்தசூட்சி யருட்பயனிதுவோவிங்கண்
ணித்திறத்தன்பின்மாட்சி யெய்துவருண்டோவென்னக்
கைத்திறத்தலர்த்தாணீவிக் கண்ணினீராட்டினானே.

உரை.—அங்ஙனம் மகிழ்ந்தசூசை திருக்குமாரனைநோக்கிச்சொல்வான்: பொய்யானவல்லமையுள்ள வெரோதனுக்கியமன்னவற்கு நீபயந்தோடிப்போவதுபோல வொளித்துவந்ததன்மைத்துணர்ந்தசூட்சியால் நீகுறித்ததயையின்பய னிதுதானோ? இத்தன்மைத்தரியவுன்னன்பின்மாட்சியை யிவ்வுலகிடத் தெவர்கண்டுபிடிக்கவல்லவரொன்று திருக்குமாரன்மலர்ப்பாதத்தைத் தன்கையாற்றடவி யின்பத்தாலுமிழ்ந்த கண்ணீராற்கழுவினானென்க.

17. சோலையினிழல்வாயன்பு துளிர்த்தபூமுகத்தினாதன்
மாலையின்றுமத்தங்கண் வயின்றொறுநிறைப்பவீந்த
வேலையினிறைந்த நன்றி விளைத்துநாடுலவிப்போன
காலையினேருமென்றோர் கடிநகரண்மினாரே.

உரை.—அங்ஙனம் நெடும்பூஞ்சோலை நிழற்றுந்தன்மைத்தாயிரெலாங்குளிர்ப்ப வன்பென்னுந்துளிரைவிட்ட பூமுகத்தைக்காட்டினநாதன் பூமலர்மாலைகோத்ததுபோல வொழுங்குபடத் தான்சென்றவிடங்கடோறுஞ்செய்த கடலினுநிறைந்தநன்மைவிளையும்படி யந்நாடெல்லா முலாவிப்போகையி லேருமாபுரமென்னு மொருநகரிடத்துச்சென்றாரென்க.

18. மின்முகம்புதைத்தகொண்மூ விரும்பிமேறவழவானின்
னன் முகம்புதைத்தமீன்போ னறைமுகத்தலர்ந்தபைம் பூத்

தன்முகம்புதைத்தபாலாற் றயங்குமோர்மரமேயங்கண்
பொன்முகம்புதைத்தவாயிற் புறத்தெழிற்பொலிந்ததன்றே.

உரை.— மின்னல்கள்புதைத்திருக்குங் கரியமேகங்களுச்சிக்கொம்புகளைச்சூழவிரும்பித் தவழாநிற்க வானத்திற்புதைத்த மீன்களைப்போல மதுப்பொழிந்தலர்ந்த பூமிகுதியால் மரத்தின்முகத்தைப் புதைத்தது போலத்தோன்றி விளங்கியவொருமர மந்நகரிற் பொன்னாலலங்கரித்த வாசற்புறத்து வடிவினாற்பொலிந்துநின்றதென்க.

19. பேர்நலமேன்மையானும் பெயரறியாமையானு
மார்நலமரத்தின்சாயற் காங்குவேறிலாமையானுங்
கூர்நலம்வியந்தபின்னர் கொழும்புகைகாட்டிநன்னூற்
சீர்நலமொழிந்தவன்னார் தேவனென்றிறைஞ்சினாரே.

உரை.—அம்மரம் பெரிதாய்க்காட்டிய வழகின்மேன்மையினாலு மதின்பெயர்தாமறியாததினாலு மவ்வழகுள்ளமரத்தின்சாயலாய் வேறொருமர மங்கேயில்லாததினாலு மந்நகரத்தாரெல்லாரு மதினழகதிசயித்துப் பார்த்தபின்பு படித்தநூற்பயனின்றிமயங்கிப் பலவகைப்பூம்புகை யருச்சனையாகக்காட்டி யம்மரமொருதெய்வமென்று வணங்காநின்றாரென்க. (அறிவுயிரில்லாதமரமே மனிதரையிரட்சிக்குந் தெய்வமென்பது கல்விக்கு நல்லறிவுக்குமொத்திராமையா லம்மரத்தை தேவனென்றுவணங்கினவர் நன்னூற்சீர்நலமொழிந்தனரென்றாரென்க.)

20. மடநடைகண்டபேயும் வடுவளரமைதியென்னத்
தடநடைவளர்ந்தபைம்பூந் தருவிடைக்குடியாய்வைகிப்
படநடைபொறித்தநச்சுப் பாந்தளினுருவிற்கான்ற
விடநடைநெடுநாள்யார்க்கும் விடைமொழிகூறிற்றன்றே.

உரை.— தேவனென்றுமரத்தைவணங்கி யறிவிலாமனிதர்காட்டின மடமைகண்டபசாசு பாவங்கள்வளர்தற்குச் சமயமிதுவென்றெண்ணி மாட்சிமைபெறவளர்ந்த வப்பூமரத்தினிடத்துத்தானே குடியாயிருந்து பொறியுளபடத்தைவிரித்த நச்சுநாகத்தினுருவத்தையெடுத்து மரத்திலிருந்து தன்னஞ்சினையுமிழ்ந்தாற்போல நெடுங்காலத்துவந்து வினாவினவர்க்கெல்லா மறுமொழி சொல்லிக்கொண்டிருந்ததென்க.

21. கொழுந்தனமுகத்துநாதன் குறுகவொன்றறியாச்செந்தீ
விழுந்தனபேயுநீங்கி வினையரிந்துவந்ததேபோ
லெழுந்தனமரந்தன்னெற்றி யிறைஞ்சியதிறத்துமூவர்
செழுந்தனவடியிற்செல்லச் சிறப்பொடுவளைத்ததம்மா.

உரை.— அத்தன்மைத்திருந்த மரத்திற்கணுகி யரும்பொன்னொளிமுகத்தெழுந்ததிருக்குமாரன் வருகையிற் காரணமொன்றுமறியாமற் றள்ளுண்டு செந்தீநரகத்தி லங்கேபாம்பினுருவாய்நின்றபசாசு விழுந்துபோனபின்பு தன்துன்பவினையெலாநீங்கிப்போய் மகிழ்வடைந்தாற்போ

ல வம்மரந் தன்னுயர்ந்தவுச்சிக்கொம்புகள் மூவர்பொற்பாதத்திற்செல்லு ம்படி வணங்கினதன்மையால் வளைந்ததென்க.

22. மைவ்வகைத்திறப்பேய்மாக்கள் வளங்கெடத்தெரிந்தசாகி
யுய்வ்வகைத்திறத்தில்வாய்ப்ப வுயர்வரங்கடவுளீந்த
மெய்வ்வகைத்திறத்திலுண்ட விரிந்தபாசிலைநோயாவுங்
கொய்வ்வகைத்திறத்திந்நாளுங் குன்றிலாவிளங்கிற்றம்மா.

உரை.— அப்பொழுதாண்டவனாகியதிருக்குமாரன் மயக்கத்தின்வகையாற் றிறத்தைக்கொண்டபசாசு மனிதருயிர்கெட் டவர்பெருமைகெடும்படி தெரிந்துகொண்ட மரந்தானே யவருடலும்பிழைக்கும்படி வல்லதாய்ச் சிறப்புறும்பொருட்டுத் தானதற் கப்பொழுதுதந்த வரத்தின்தன்மையா லதினிலையுண்டமாத்திரத் தெப்பிணியாவு மறுத்துநீக்கும்வல்லமைபெற்றுப் பெற்றவிவ்வர மிந்நாள்மட்டுங்குறையால் விளங்கிற்றென்க.

23. நடையொடுவிளக்கிவான்மேல் ஞாயிறுநடப்பதேபோற்
புடையொடுவானோர்மல்கப் போயிவர்திறந்தவன்பின்
மடையொடுபாய்ந்தநன்றின் வளைவிலநீத்தமெங்குந்
தொடையொடுவளர்ந்தபாப்போற் றுடர்பருவழங்கிற்றன்றோ.

உரை.— அங்ஙனம் நடந்ததன்மைத் தெல்லாவற்றையும் விளக்கிக்கொண்டு சூரியன்வான்மேனடப்பதுபோல விவருமெசித்துநாட்டிற்பதினாயிரம்வானவர் புடையிற்சூழ்ந்துவரும்படிபோகையிற் றமதன்பாகிய மடையைத்திறத்து தந்தவழியிற் பாயந்தோடின வளையாதநன்மையின் வெள்ளமெடுத்ததொடையே மாறுதினிதாய்வரும்பாட்டியல்புபோல விடைவிடாதெங்கும் வழங்கினதென்க.

## IV. வேறு.

24. வான்முகத்துவந்தனம் வட்டமிட்டபின்
றேன்முகத்தலர்த்தடஞ் சேர்ந்தபான்மையாற்
கான்முகத்தலர்ந்தநா டுலவிக்காசணி
நான்முகத்தொளிநடு நகர்சென்றாரரோ.

உரை.— அங்ஙனம் மகிழ்ச்சிகொண்டவளவிலே யன்னங்களெழுந்து வான்மேற்பறந்து சூழவட்டமிட்டுவந்தபின்பு வாசமதுமலர் பூத்ததடாகத்திடத் திறங்கிச்சேர்வதுபோல விம்மூவரும் வாசபூமலர்ந்தநாடெலாமுலாவிச்சுற்றினபின்பு பதித்தமணிகளா னாலுமுகத்திலுமொளிவிட நடுநாட்டிலிருக்குநகரிற் சேர்ந்தாரென்க.

25. தாமஞ்சூழ்மணிநிரைத் தரிகடாங்கணை
வாமஞ்சூழ்முடியணி மன்னன்வீற்றுறை

யேமஞ்சூழெயிற்பொலி யிரவிமாபுர
நாமஞ்சூழழகெழு நகரதாமரோ.

உரை.— அந்நகரொந்நகரோவெனில்: ஒளிசூழ்தவழு மணிகளையொழுங்குபட நிரைத்தழுத்திச் சிங்கங்கள்தாங்கிய வாசனத்தின்மேல்விளங்கிய பொன்முடியைச்சூழ்ந்த வந்நாட்டரசன் வீற்றிருக்கும் பொன்னுலெடுத்தமதிளிற் பொலிந்த இரவிமாபுரமென்னும் பெயரையுடையதா யழகிஞேடுயர்ந்த நகரதுவென்க,

26. கார்செயுங்குழலைங் கவிழ்ந்தகோபுரத்
தேர்செயுமுகமலர்ந் தெயிலின்றூசுமேற்
சீர்செயும்பயோதர ஞாஞ்சிற்சேர்த்தகழ்
நீர்செயுமேகலை யணிந்துநீர்த்ததே.

உரை.—மீளவுங் குழலாகியகருமேகங்கள்கவிழ்ந்துநிற்கும் கோபுரமாகிய வழகியமுகமலர்ந்துசூழ மதிளாகிய வுடுத்த சீலையின்மேற்றேன்றி யழகுசெய்யுங்கொங்கையாகிய பொம்மைகளைச்சேர்த்து யகழின் றெண்ணீராகியமேகலை யிடையிலணிந்து செல்வக்குணம்பெறு நகரதுவென்க

27. கேழ்முகநகரடி கிளர்சிலம்பென
வேழ்முகம்பிரிந்தநீ லென்னுந்தீம்புனல்
கூழ்முகநிலங்கெடப் பேய்முன்கொண்டவேழ்
காழ்முகவரவெனக் கவர்கொண்டோடுமால்.

உரை.—நிறமுகத்துயர்ந்த வந்நகரடிச் சிலம்பொப்பவொன்ருய்ப்பிறந்து பின்பேழுமுகமாய்ப்பிரியும் நீலுமாநதியென்னுந் தீம்புனல் முன்னுளிலே பசாசிவ்வுலகங்கெடுக்கத் தாமெடுத்தவுருவமாகிய வேழுநச்சுத்தலைப்பாம்பொப்பக் கவர்கவராயந்நகரைச்சுற்றியோடு மாறதுவென்க.

28. வரையுயிர்ப்பெனப்புகை மாடநெற்றிமே
னுரையுயிர்ப்பெனவிடா நுடங்கும்பூங்கொடி
யுரையுயிர்ப்புறுதென வொளிர்கைநீட்டியே
விரையுயிர்ப்பொடுமிவர் விளித்தல்போலுமால்.

உரை.— அத்தன்மைத்துள்ளநகரை மூவரண்டினபொழுதே பொன்மலைவிட்ட மூச்சுபோல வகிற்புகைவிட்ட வுயர்ந்தமாடங்கடோறுந் தம்முச்சிமேனுரையினுவிபோல விடைவிடாதாடிய வழகியகொடிகளெத்தன்மைத்துத்தோன்றினவென்னில்: மூவரையழைக்கும்படி வாய்விட்டுக்கூப்பிட்டாலு மவரிருக்குந்தூரத துரைத்தசொல் செல்லாதென்று அக்கொடிகளாடிச்செய்யு மணம்வீசியதென்றலைப்போக்கியுந் தம்மழகியகைகளைநீட்டியும் மூவரைவரச்சொல்லி யழைத்ததன்மைபோலத் தோன்றினவென்க.

29. நீரகம்பொதிர்மணி நிறத்தகாரொனப்
பாரகங்குளிர்ப்பவான் பயன்பெய்தேகியன்
பாரகந்துகைத்திவர் நடந்தெல்லேம்பதா
யேரகங்கிளர்பதி தங்கவேகினுர்.

உரை.—அப்பொழுதவரும் நீர்ப்புனற்சுமந்து நீலமணியின்சாயலினி றத்த மேகம்போலப் பூவுல கினிதாய்க்குளிரும்படி வானுலகுள்ள பயன் களைப் பொழிந்துபோ யன்பினுனிறைந்த தம்மனம்வருந்தும்படி துன்ப நிறைந்தவழியே யைம்பதுநாளும்நடந்தபின்ன ரழகியநகரிற் பதியாய்த் தங்கியிருக்கப்போனுரென்க.

30. சீர்வளரறந்தவந் தியாகமற்றநன்
னீர்வளர்மறைபுடை புக்குநீணகர்
வார்வளர்முரசொலி வழங்கப்புக்கன
ரோர்வளர்முகத்தினு மிலங்குமாண்பினேர்.

உரை.— அந்நகருள்ளிருக்கப் போகையிற் செல்வங்கள்விளைதற்கா ரணமாகிய வறமுந் தவமுந் தானமு மற்றநன்மையெல்லாம விளைவிக்கும் வேதமு மவர்புடையிற் கூடப்புகுந்து முரசுமுழங்காநிற்க வழகியதம்மு கத்தொளியினும் விளங்கியமனத்தின்மாட்சிமையுடையமூவரு நீண்டநக ருட்புகுந்தாரென்க.

31. பால்வழிசுவையெனப் படத்தைத்தீட்டிய
கோல்வழியழகெனக் குறையிற்கேள்விசெய்
நூல்வழிபுகழெனு நுழையன்னுர்புடை
மேல்வழிவளமெலாம் விளையப்புக்கனர்.

உரை.—அங்ஙனம் பால்வழியாக வின்பம்விளையும்போலவுஞ் சித் திரங்களையெழுதுங் கோல்வழியாகப் படங்களழகுபெறுவதுபோலவுங் குறையாக்கேள்விதந்த நூல்வழியாக மிகும்புகழ்வளர்வதுபோலவு மந்ந கருள்ளேநுழைந்த மூவர்வழியாக மேலானபெருமையெல்லா மங்கேவி ளையும்படியுட்புகுந்தாரென்க.

32. கொடியொடுகுடைபொருங் கொள்கைத்தாரிருள்
முடியொடுபொதிர்மணி முனிந்தங்கிர்த்தலால்
வடிவொடுபகல்செயு மாடநீங்கிபோர்
மிடியொடுகுறுமனை விரும்பிப்புக்கனர்.

உரை.— அங்ஙன மந்நகரினுட்புகுந்து அங்கேவிரித்த கொடிகளு மேந்திய குடைகளுந் தம்முள்நெருங்கி யொன்ருென்ருேடுபொருததன் மையிற் சூரியனைமறைத்து நிறைந்தவிருளேமொய்க்க மாடங்கள் முடி மேல் நெருங்கிப்பதித்தமணிகள்விட்டவொளியா லவ்விருளைக்கோபித்தீ ர்த்துக்கொன்றதனுல் வடிவுளபகலைச்செய்யு மந்நகருள்ளமாளிகைகளே, அம்மாளிகைகளெல்லாவற்றையுங்கடந்துநீங்கிவெறுத்துத்தரித்திரம்பொ ருந்திய வொருசிறுமனையிற் ருமேபுகுந்தாரென்க.

33. தான்வளர்கதிரழற் ருங்கினைதருக்
கான்வளர்நிழற்கொடு வெவருங்காத்தென
வான்வளர்வாழ்வினை வகுப்பநாதன்வந்
தூன்வளர்பாசறை யுவந்துநாடினான்.

உரை.— அங்ஙனமதுமலர்பூத்த வுயர்ந்தமரந்தான் வாடினையும்படி மேற்சூரியன்விட்ட வெங்கதிரகோரத்தைத் தாங்கி வாசனைவீசுநிழலை யெல்லாருக்குஞ்செய்துகாத்ததுபோலப் பரமநாதனாகிய வத்திருக்குமாரனும் மனிதரென்னப்பட்டயாவர்க்கும் வான்வீட்டுள்ளமுடியாவாழ்வுகளைத்தந்தெல்லாரையுங் காத்திரட்சிக்கும்படிவந்து தானவதரித்தெடுத்தவுடலின்வழியே தரித்திரமுதற் றுன்பங்கள்யாவையு மின்பமென்றுவிரும்பித்தேடித் தனக்குத் தெரிந்துகொண்டானென்க.

எசித்துசேர்படலம் முற்றும்.

ஆகப்படலம் — 22 — க்கு விருத்தம்

2002.





# இருபத்துமூன்றாவது

# குணுங்குமந்திரப் படலம்.

## I. வேறு.

1. மின்னுதிடித்தேறிரிந்தன்ன வெருவிப்பதறிப்பாய்ந்துருண்ட
றின்னுவிளக்கும்பேயினங்க ளெசித்துநீங்கித்திநிரையம் [ன்
பன்னுடியரிலெண்மடங்காய்ப் பணிப்புற்றார்ப்பவீழ்ந்தனகாற்
றன்னுடையர்வுற்றயர்ந்தரசன் றருமினுற்றகொடிதென்றான்.

உரை.— அங்ஙனம் தேவதிருச்குமாரனேவலின் லெசித்தார்வணங்கிய தேவராகநின்று பாவம்விளைவித்தபசாசுகளெல்லா மின்னுமலிடித்துவிழுந்தவிடிபோல வெருவிப்பதறிப்பாய்ந்துருண் டன்றுவொருங்குடன் கூடி யெசித்தினின்றுசெந்தீ நரகம் பலநாளநுபவித்ததுயரிலு மெண்மடங்காய் நொந்துநடுங்கி வலிதாய்முழங்கும்படி யங்கேவிழுந்தவளவிலே நரகரசனாகியமுதற்பசாசு தன்னுடைந்த வருத்தத்துத் தானும்வருந்தி வந்தகொடியதேதென்று சொல்லித்தாருங்க ளென்றானென்க. (தம்மைப்பகைத்துத்துரத்தினவனொன்றறியாமலு மவ்விடையூறுவருமுன்னேயடையாளமொன்றறியாமலு மிருந்தாப்போலே விழுந்ததினால் மின்னுமலிடித் திடிவிழுந்ததுபோலப் பசாசுகள்விழுந்தனவென்றானென்க.— மீளவும் பசாசஃறிணையாயினு மிங்கேயாண்பாலுருவு மாண்பாற்பெயருமெடுத்தமையா லாண்பால்வினையுமுரைப்பது முறையேயென்க.)

2. தெள்ளுண்டமுதாரெசித்திறைஞ்சுந் தேவர்யாமேமேல்வயத்தாற்
றள்ளுண்டெரிவாய்நரகிடத்திற் சரிந்தோமென்னவறிந்ததலால்
வள்ளுண்டெம்மைச்சிதைத்தழித்தவலக்கையறியோமன்னவெனு
வுள்ளுண்டிழுந்தசினத்தலறி யுரைசெய்தனவக்குணுக்கினமே.

உரை.— பேய்களரசன்கேட்டதற் கங்கேவிழுந்தபசாசுகள் சொல்லுவன: தெளிந்தவமிர்த மூறுதற்காரணமாகியவெசித்துநாட்டில் வணங்

கப்பட்டதேவர் நாங்களே, அங்கிருந்தொரு மேலானபெலத்தினாற் கீழே தள்ளுண்டு செந்தீயெரிவாய்நரகத்தில் விழுந்ததறிவோமொழிய வல்லமைகொண்டெங்களைக்கெடுத்துத் துரத்தினவலக்கையை யறியோமையாவென்று மனதிற்கொண்ட கோபத்தை யுமிழ்ந்தாற்போல வலறியார்த்துமறுமொழிசொல்லினவென்க.

3. பின்றாவஞ்சத்தரிதுண்டோ பெயர்க்குந்திறங்காணாதிரிந்து
குன்றாவஞ்சத்தென்வலியுங் குணிக்கிலீரோவெனச்சினந்து
பொன்றாவுணர்விற்றிறன்காணப் போவல்யானென்றூர்த்தெசித்திற்
சென்றான்சிதைவெங்கணுஞ்சிந்தச் சிந்தைசிந்தாக்கொடுங்கோனே.

உரை.— அதைக்கேட் டரசன் பின்வாங்காதவஞ்சனை யுள்ளதாயிற் செய்தற்கரியதுண்டோ வுங்களைப்பெயர்த்துத்துரத்தின காரணமுங் காணாமற் பதறிவிழுந்து குறையாதவஞ்சத்தெனக்குளவலிமையு மெண்ணாதிருந்தீரோவென்று மிகவுஞ்சினந்து மீளவு நானே தளராத வென்னுணர்வின்மிகுதியாலிவ்விடையூறு வந்தகாரணமேதென்றறிய வங்கேபோவேனென்றுமுழங்கிப் புறப்பட் டொருகணத்தி லெசித்துநாட்டிற்சென்றான் கேடுகளை யெங்குஞ்சிந்தும்படி தீயநினைவினைவிடாத கொடுங்கோனென்க.

4. அண்டாதனயாவையுமண்டி யாய்ந்தான்கண்டான்றேவுருவும்
பண்டாயினதேவாலயமும் பணிப்பொற்றேருந்துகளென்னக்
கண்டான்பலரோர்கடவுளைக் கருதிவணங்கக்கண்டான்கண்
டுண்டாயினவோர்காரணமு முணராதெரிதீவீழ்ந்தயர்ந்தான்.

உரை.— பேயரசனெசித்துநாட்டிற் சென்றவளவிலே யண்டாதனவிடங்கள் யாவையு மண்டியாராய்ந்தான், பார்த்தான், பார்த்தவளவிலே தேவருருவங்களு மவர்க்குப்பழமையிற்கட்டின கோயில்களு மணிப்பொற்றேர்களுந் தகர்ந்துவீழ்ந்து புழுதியோடுபுழுதியாய்க் கிடப்பதுகண்டான், பலருமிதைக்கண்டு பொய்யானதேவர்வணக்கத்தைவிட்டு ஒன்றானமெய்க்கடவுளை வணங்கக்கண்டான், கண்டவளவிலே தானுமதற்குக் காரணமொன்றுங்காணாம லெரிதீநரகில் விழுந்து மிகவும்வருந்தினானென்க.

5. இருவாயுருவும்பேயினத்திற் கில்லாதெனினும்வேண்டுநிலைக்
குருவாய்த்தோன்றவுளவயத்தா லுருவாங்கெடுத்தகடிக்கரசன்
பொருவாவுருமின்னார்த்தலறிப் பொருக்கென்றலகைப்பொருநரெலாம்
வெருவாயுளைதன்மனமெரிக்கும் வினைதீர்ப்பதற்குவிளித்தனனால்.

உரை.— அங்ஙன நரகில்விழுந்தபேயரசன் பஞ்சேந்திரியங்களுக்குரிய விருவகையுருவமும் பசாசுகளுக்கில்லாதாயினுந் தாம்வேண்டுந்தன்மைத் துருவாய்த்தோன்றும்படி தமக்குளவல்லமையினாலன்றங்கே யவனுருவத்தை யெடுத்துப் பொருவாதபடி வானிடியினுமுழங்கி யஞ்சி யு

ளைந்த தன்மனத்தையெரிக்கும் வினையைத் தீர்க்கும்படி சீக்கிரமாய்ப் ப சாசுக்களிற்பெரியோரெல்லாரையுமழைத்தானென்க. (இருவகையுருவங் களாவன: மனிதர்முதற் பலவுயிர்க்குள சனிப்பின்வழியாய்த்தோன்றி யழியு முருவமுஞ் சூரியன் முதலியனபொருள்களுக்குள்ள வழியா தொ ருநிலைநிற்குமுருவமுமென் றிருவகையுருவமென்க.)

6. திருகிமேடமருப்பீரேழ் செறிசெஞ்சடைநீட்டேழ்சிரத்தா
பருகியெரியைக்காலிரத்தப் பருதித்தடத்தவிழிக்கண்ணு [ன்
னுருகியொழுகுநஞ்சுமிழ்மா லோங்கனெடுங்கைத்துண்டத்தான்
பெருகியழலோடேன்பிளிரும் பிறைக்கூனெயிற்றுவாயுருவான்.

உரை.— அன்றுபேயரசனெடுத்துக்காட்டினவுருவ மெத்தன்மைத் தோவெனில்: செம்மறிக்கிடாய்க்கொம்பொப்பத்திருகிக்கோணிப் பெரு ங்கொம்புகளோரர்பதினாலும் நெருங்கிநீண்ட செஞ்சடையுமுள்ள வேழு தலைகளு முண்டசெந்தீயைக்கொப்பளியாநிற்கு மிரத்தம்பாய்ந்த வட்ட ப்பெருங்கண்விழியு மதமாகநஞ்சுருகிவிடு மதயானைத்துதிக்கையொப்ப நீளமாய்த்தூங்கும் பெருமூக்கும் பெருகிப்புறப்பட்டோடும்படி யழலையு மூனையுமுமிழும் பிறையொப்பவளைந்த பெரும்பல்லின்வாயுமென் றித்த ன்மைத் துருவந்தோன்றும்படி நின்றுனென்க.

7. வேனேர்நிறுவிவேசரிநேர் விரிந்துதிளைத்தமயிர்ச்செவியா
னூனேரொழுகிப்பிணக்குப்பை யுதட்டுநாறும்பகுவாயான்
கானேர்நெருங்கித்தெங்கிலைநேர் கழுநீள்சிவந்ததாடியினுன்
றூனேரிலமாசொருங்கனைத்துந் தரித்தகுரக்குமுகவடிவான்.

உரை.— மீளவும் வேலைப்போலச்செம்மையாய்நிறுவிக் கழுதைக்கா தைப்போல விரியாநின்று மயிர்கணிறைந்த செவிகளு மூத்தையொழுகு ம்படி யுதட்டிடத்துப் பிணங்கள் குப்பையாய்த் தூங்கித் தூர்க்கந்தநாறு மகன்றவாயும் பெருங்காடுபோலநெருங்கித் தென்னிலைகளைப்போலச் செவ்வேநீண்டுசிவந்ததாடியுந் தனக்கொப்பில்லாதபடிக் கருவருப்புள்ள மாசெல்லாந்தரித்த குரங்கின்முகவடிவுமென்று தோன்றும்படி யுருவத் தைக்காட்டிநின்றுனென்க.

8. விண்டிக்கிழந்தபழியுளத்தான் வியன்றீக்குடியேற்றருங்கத்தான்
மண்டிக்குயிரைச்சிதைத்துண்ண வஞ்சம்விளைக்குநெஞ்சகத்தா
னெண்டிக்கசைக்குமாணையினு னிப்பார்நடுக்குஞ்சூலத்தான் [ன்.
பண்டிற்போர்த்தவுருவெனவெம் பகுவாய்ப்பாந்தட்கேதனத்தா

உரை.— அவ்வுருவெடுத்துத் தோன்றின பசாசெக்குணத்ததென் னில், தான்முன் வானுலகிழந்த பழியைவிடாத மனமுமகன்றநரகிற்குடிக ளையேற்றும்படி யுரியகோபமும் பூவுலகுள்ள மனிதருயிர்களைக்கெடுத் துண்ணும்படி வஞ்சனைவிளைதற்காரணமாகிய நெஞ்சு மெண்டிக்குகளு

மொருங்குடனசைப்ப வல்லவாளையும் பூவுலகெல்லாம்நடுங்கச்செய்யுங் கையிற்சூலமு மூலகந்துவக்கினநாளிலே தானெடுத்தவுருவென்று வகன் றவாய்ப்பாம் பின்கொடியுமென் றிவையெல்லாவற்றையுமுடைய வப்பே யரசனென்க.

9. இன்னானின்னவுருக்காட்டி யெரிசூழ்பீடத்தெழுந்தோங்கி
யுன்னாதனயாவையுமுன்னி யொத்தவுருவோடிடைசூழ்ந்து
துன்னாழுவம்போற்கடிக்குழுவைச்சுளித்துநோக்கிச்சூளையின்வா
யன்னான்கொழுந்துவிட்டெரிக்கு மார்ந்தவழல்கான்றார்த்தறைந்
தான்.

உரை.— சொன்னதன்மைத் தங்கே தோன்றிநின்றபேய்க்கரசனெ ருப்பினாற்செய்தபீடத்தின்மே லெழுந்திருந்துமுன்னினையாதவெல்லாவ ற்றையு மன்றுநினைத்துத் தன்னுருவோடொத்தவுருவுகளையெடுத்துச் சூ ழவொழுங்கொன்றில்லாமையா னெருங்கியகாடுபோல நெருங்கிநின்ற பேய்களின்கூட்டத்தைச் சினந்துநோக்கி யெரியுஞ்சூளை வாய்திறந்தாற் போலக் கொழுந்துவிட்டெரியுஞ் செந்தீப்புறப்படும்படி வாய்திறந்து வ லுவாயார்த்துச்சொன்னானென்க.

## II. வேறு.

10. பீடுடைவரத்திலொவ்வாப் பெருந்தகைநாம்வான்வாழ்ந்த
வீடுடைப்பெருஞ்சீர்மாட்சி விட்டிழந்தெரிதீத்தாழ்ந்துங்
கேடுடையனவொன்றெண்ணாக் கிளர்வயத்துணர்வின்பாலா
லீடுடையரசும்பேரு மெடுத்துவீற்றிருந்தேனன்றோ.

உரை.— வல்லமைபொருந்தியடைந்த வரங்களா னிகரொன்றின் றிப் பெருமாட்சிமையோடு நாமுன்வாழ்ந்திருந்த வான்வீட்டிலுள்ள பெ ருஞ்சீர்ச்செல்வங்களையிழந்து தீயெரிநரகிற் றாழ்ந்தாலு மிதுநமக்குவ ந்தகேடென்றுந் துன்பமென்று மனதிலெண்ணாம னிறைந்த வெனதுவ ல்லமையு முணர்வின் சூட்சியுமுதவியதன்மையாற் பெருமையுள்ள வர சும் பெருங்கீர்த்தியுமடைந் திந்நாள்வரைக்கும் வீற்றிருந்தேனல்லோ வென்க.

11. ஓரொன்பான்பகைசெய்தாலு முலகின்பால்கொற்றங்கொண்
டேன்
சீரின்பால்வணக்கங்கொண்டேன் றிருமணிச்சிகரங்கொண்டே
காரின்பால்மின்னின்மின்னுங் கனகவாலயமுங்கொண்டேன்
பாரின்பாலின்றென்னாண்மை பகையிலாக்குறையக்கண்டேன்.

உரை.—அங்ஙனமொன்றானகடவு ளெனக்குப்பகைசெய்தாலும் நா னேபூவுலகிடத்து வெற்றியைக்கொண்டேன், மனிதரென்னை வணங்கச் செய்தேன், மணியாற்செய்தசிகரமேகத்துட்பாய்ந்து மின்னலொப்பவிள ங்கின பொற்கோயில்களையெனக்குக் கட்டச்செய்தேன், இவையெலா மிங்ஙனமாயபின் பின்பு பூவுலகிடத்துப் பகையின்வழியைக்காணாமலெ ன்வல்லமை குறையக்கண்டேனென்க.

12. கதிருண்டமணியிற்சேர்த்துக் களியுண்டவெசித்துநாட்டி
லெதிருண்டபகையொன்றின்றியியலுண்டாண்டொருவனின்றே
முதிருண்டவிறைவராக முயலுண்டவணக்கங்கொண்ட [ன்
பொதிருண்டவெனதுசேனை பொருக்கெனவிரியக்கண்டேன்.

உரை.—விளைந்தவொளிசெய்மணியாற் சிறந்து களிகூர்ந்தெழுந்த வெசித்துநாட்டி லெதிரும்பகையுமின்றி யியல்பெறநானொருவனாளாநின் றேன், இப்பொழுதங்கே பழமையிற் றேவராகவணங்கப்பட்ட வெனது நிறைந்தசேனைகளெல்லாந் துணுக்கெனவெருவி யிங்கே விழவேகண்டே னென்க.

13. கார்தவழ்வரைகடோறுங் கடிமலர்ப்பொழில்கடோறு
மேர்தவழ்புரங்கடோறு மெண்ணருமிடங்கடோறுஞ்
சீர்தவழ்சிகரத்தோங்கிச் சிறந்தவாலயங்கள்யாவும்
போர்தவழ்களங்கநீவும் பூமியென்றாகக்கண்டேன்.

உரை.—மீளவு மேகங்கள்தவழுமலைகடோறும் வாசமலரைப்பூத்த சோலைகடோறு மழகிற்பொலிந்தவூர்கடோறு மற்றெண்ணப்படாத பல விடங்கடோறு மழகுபெறக்கட்டியிருந்த சிகரத்திற்சிறந்த கோயில்கள் யாவும் போர்க்களத்தெழு நுண்டூசியொப்பத் தகர்ந்து தூளாய்ப்போன தாகக்கண்டேனென்க.

14. பொன்முகத்தொளியைத்தும்மும் பூஞ்சுதையுருவும்பூண்ட
மின்முகத்தெறிக்குங்கற்றை விரிமணிமுடியுந்தாரு
மன்முகத்தணிப்பொற்றேரு மற்றணிசிறந்தயாவுங்
கொன்முகத்தலகையோடுங் குழைந்தழிந்தாகக்கண்டேன்.

உரை.— மீளவும் பசும்பொன்வாயாலொளியைத்தும்மி யழகுபெற நற்சுதையாற்றீர்ந்த தேவருருவங்களு மவ்வுருவங்களையணியாய்ப்பூண்ட மி ன்னிவிளங்கிய மணியொளிமுடிகளு நெடுமணிவடங்களு மங்காதழகுள் ளபொற்றேர்களு மற்றச்சிறந்தவணிகள்யாவும் வீழப்போ யிங்கேவிழு ந்த பேய்களோடுந் தாமும்விழுந்தழிந்ததாகக்கண்டேனென்க.

15. நரந்தருங்குலைவிளைந்து நாடொழிந்தோடினாரை
வரத்தருந்தேவராக வணங்கவோவென்னயாருஞ்
சரந்தரும்பூவுஞ்சாத்தாச் சாந்தமும்புகையுங்காட்டாப்
பரந்தருங்கமழ்நீராட்டாப் பலிதலொன்றிலையுங்காணேன்.

உரை.— மீளவு மெசித்துநாட்டிலுள்ளவரெல்லாரு மாலைதைக்கண் டு பயந்து மெலிவெய்தி நாட்டைவிட்டோடினவரை யினிநாம் வரந்தரு ந்தேவரென்றெண்ணவும் வணங்கவுஞ் செய்வோமோவென்று நமக்கு ம துமலர்மாலைகளைச்சாத்தாமலுஞ் சந்தனமும் பூம்புகைகளையுங்காட்டாம லு முன்னேபோல வாசநீராட்டாமலு மொருவழக்கத்தையு நடத்தக்கா ணேனென்க.

16. பணிமுகத்துயிர்கட்கேடாய்ப் பண்டுளியெருமுபோற்றி
யணிமுகத்தலர்ந்தசாகி யரிதெலாப்பிணிகடீர்ப்ப
மணிமுகத்திறைவன்றந்த வரத்துறைந்தனபேயோடித்
துணிமுகத்திவையோர்ந்தன்னுர் தொழுதல்விட்டிருப்பக்கண்டேன்.

உரை.—மீளவும் எருமுமாபுரத்தண்டையிலிருந்த மரத்திற்குச்செய் தவணக்கத்தா லுயிர்கள் பாவங்கொண்டு கெடும்படி நெடுநாளவர்வணங்கி யழகிதாகமலர்ந்தமரமே யிப்பொழுதரிதாய் நோய்பிணியாவையுந்தீர்க்கும்படி யதற்காண்டவன்றந்தவரத்திறு லம்மரத்திற்குடியாய்நின்றபேயுமோடி யிவையெல்லாவற்றையுந் தெளிவாக வவரராராய்ந்து அம்மரத்தையும் வணங்காமலிருக்கக்கண்டேனென்க.

17. இத்திறத்தெவணத்தாரு மென்னைநகைத்திகழ்ச்சிகூற
மைத்திறத்துயவொன்கோன்மை வசையினேடழியக்கண்டே
யத்திறத்தனைத்துமாக்கி யடும்பகையணுகிப்பார்க்கின்
மெய்த்திறத்துயவொன்காட்சி மெலிதரவொன்றுங்காணேன்.

உரை.— இவையெலாமாகையி லெவ்விடத்தாரு மென்னைநகைத்து நிந்தையைச்சொல்லும்படி மனிதரைமயக்குவிக்குந் திறத்திற்பொலிந்த வெனதுகோன்மை வசைபடவழியவுங்கண்டு, அங்ஙனமத்தனையுஞ்செய்த நம்மைக்கொல்லும் பகையையறியும்படி யங்கேபோ யாராய்ந்துபார்த்தவிடத்துத் தப்பாதவெனதறிவாண்மை மெலிவெய்தி யொன்றுங்காணேனென்க.

18. காட்சியாறெளிந்துபார்க்கிற் காரணமியாதோநாடி
மாட்சியாலுயரந்நாட்டில் வந்திருயூதர்கண்ட
சூட்சியானவமிதொன்றே துளங்கறத்துயர்ந்தோரோனும்
பூட்சியாலுளேந்தோராகிப் புரியுமோர்கருமமுண்டோ.

உரை.— அங்ஙனம் நானென்னறிவின்கூர்மையா லெல்லாவற்றையுமாராய்ந்து திரிகையி லேதோகாரணத்தைப்பற்றி மாட்சியிற்பொலிந்த வெசித்துநாட்டி லிரண்டியூதராகிய மரியுஞ்சூசையும்வந்ததாக வென்சூட்சியா லங்கேகண்டநூதனமிதொன்றே யவ்விருயூதர் விளங்கியவறத்திறுலுயர்ந்தோர்தானேயாயினு மவர் தரித்திரராயுடல்மெலிந்துளேந்து திரிவராகையி லவராலாவதுண்டோவென்க. (திருக்குமாரனையறியாமையாலவனையெண்ணும லிருயூதரொன்றுனென்க.)

19. நான்விளேவஞ்சத்தொல்கா நஞ்செனவின்பம்வெஃகா
வூன்விளேதுயரிற்குன்று வுரைவிளேபுகழினேராக்
கான்விளேதவத்திலொவ்வாக் காத்தமாண்பிருவரோனும்
வான்விளேபகைக்குந்தேவ வயத்தலாலஞ்சேனேனே.

உரை.— அவ்விருயூதரைப்பார்க்கும்போது நானவரைக்கெடுக்க நெடுநாள்செய்த வஞ்சத்தந்திரங்களுக் கசையாமலு நஞ்சினைப்போலப் பூவுலகுள்ளவினியவாழ்வுகளை விரும்பாமலுஞ் சரீரத்தைப்பற்றிவருந் துன்

பங்களின் மனங்குழையாமலுஞ் சொல்லத்தகும் புகழின்மேலாய்க் காட்டிற்செய்யப்படுந்தவநிகராமற் றம்மனத்தையு மைம்பொறிகளையுங் காத்ததவத்தின்மாட்சியையுடையவ ரிருவருந்தானே யாயினும் வானுலகுள்ளோர்முதலா யென்னைப்பகைத்தாலு மாண்டவனுக்கொழிய வெவர்க்குமஞ்சேனனென்க.

20. ஆயினுமன்னயாவு மாயினவழியும்வாயு
மாயினுமறிகிலாநா னனைவருமழைத்தல்செய்தேன்
வீயினுங்கொடியநெஞ்சீர் விளைந்தவித்துயர்வீயாதும்
வீயினும்புரியுந்தன்மை விளம்புதீரென்றான்வேந்தே.

உரை.— இவையெல்லாமிங்ஙனமாகியு மவையெல்லாம்வந்தவழியுந் தன்மையு மாராயினு நான்கண்டறியாமையா லும்மையெல்லாரையுமழைத்தேன், இனிக்கொல்லும்புலியினுங் கொடியநெஞ்சினையுடையோரே வந்தவிவ்விடையூறெல்லாந் தீராதாயினுந் தீர்ந்தாயினுஞ் செய்யவேண்டியகருமஞ் சொல்லிக்காட்டுவீராகவென்றான் பேய்க்கரசனென்க.

21. கடாவியவசனியன்ன கவலைகொள்ளரசைநோக்கித்
தடாவியசரணமேத்தித் தரணியாவையுமேய்த்தேய்க்கப்
படாவியந்தரத்துள்வஞ்சம் பழுத்தகூரறிவின்வல்லான்
சிடாவியனென்னுங்கூளி தீயுமிழ்ந்துரைமுன்கொண்டான்.

உரை.— அங்ஙனஞ்சொல்லி நெஞ்சிலேகடாவினவிடியைப்போலப் பெருங்கவலையுட்கொண்டு நின்றவப்பேய்க்கரசனைநோக்கி யவனடிகளைத்தடவிவணங்கிப் பூவுலகெல்லாமேய்த்துத் தாமேய்க்கப்படாத பேய்களினுண் மிக்கவஞ்சத்தாற் பழுத்ததுபோலக் கூர்ந்தவறிவின்வல்லவனாய்ச் சிடாவியனென்னுமொருபேய்வாய்வழியாக வழலைத்திரளாயுமிழ்ந்து முன்னேயுரையைக்கொண்டானென்க. (வியந்தரமென்பது பேய்தானென்க.)

## III. வேறு

22. குய்யங்கொண்டார்கண்டவையெண்ணிக் குறையெண்ணு
ரய்யங்கொண்டாலாரறிவெஞ்சி யரிதுய்வார்
மொய்யங்குண்டாய்வானிழிநாளின் முரிவென்றோ
வய்யங்கொண்டாரோற்றியகோலின் வலிகொண்டோய்.

உரை.— சிடாவிய னெங்ஙனஞ்சொன்னனென்னில் வஞ்சனையுடையார் கண்டயாவையு மனதிலெண்ணிப் பார்ப்பாரொழிய வவற்றாற்றமக்குக்குறைவந்ததென்றுமயங்கார், அச்சங்கொண்டுமயங்கின லறிவும் மயங்கி யவர்தப்பிப்பிழைப்பதரிது, முன்னாளில் வானுலகத்திலாய போர்முகத்தி னுந்தோற்றுவிழுந்ததினால் வந்தகேடென்ன? அதின்பின்பல்லோ பூவுலகெல்லா முன்னைவணங்காநிற்கப் பெருஞ்சீர்ச்செங்கோலேந்தி வல்லமையோ டாண்டுகொண்டிருக்கின்றாயென்க.

23. மையின்வாயாறம்மறிவெஞ்ச மயனுய்க்கு
மெய்யின்வாயாலீனமலிந்த வினைமாக்கள்
பொய்யின்வாயாற்பொங்கடலாளும்புரிகின்ற
மொய்யின்வாயானிற்பவர்கொல்லோ முரியாதார்.

உரை.— உளத்திருள்மொய்த்தவழியாற் றம்மறிவொளியேகெடும்படி மயக்கத்தைக்கொண்டுவிடு முடலைப்போர்த்ததனுலீனமும் வினையும் நிறையக்கொண்ட மனிதராகையிற் பொய்மையைக்காட்டிய தன்மையிற் பொலிந்த வல்லமைகொண்டு நாமவர்க்குச்செய்யும்போர்முகத் தவரோ முறியாமனிற்பாரென்க. (ஆகையி லெசித்திடைவந்தகேடு மீட்பதெளிதென்பதுகருத்து)

24. ஆய்ந்தாய்ந்தெல்லாநீயறியாதொன் றறைவேனோ
மாய்ந்தான்மைந்தனென்றறிதையன் மனம்வாடக்
காய்ந்தார்துன்பந்தீர்ப்பமகன்றன் கவினொப்ப
வேய்ந்தான்வாய்ந்தோர்நல்லுருவன்பின் வினையாற்றான்.

உரை.— மனிதர்தங்குணத் தீனங்காட்டும்படி சிடாவியன் றன்னுலாகியசிறிதுசெய்தியைச் சொல்லத்துடங்கினான்: மன்னவ நீயெல்லாவற்றையுமாராய்ந்தமையா லறியாததொருசெய்தியு முனக்குநான்சொல்லவோ? ஆகிலுஞ் சிறிதுகேட்பாயாக, முன்னாளிலொருவன் றன்மகனிறந்தானென்று மனத்தைவாட்டிக் காய்ந்ததுன்பமாறுமென்று பிள்ளைமேல் வைத்த வன்பின்றுயனையாற்றும விறந்தமகனழகொப்பவழகியவோருருவத்தைச்சமைத் தலங்கரித்தானென்க.

25. கைக்கண்டேவற்செய்பவர்தாதை கடிதுற்ற
மைக்கண்டுள்ளந்தேறுமெனத்தாம் வழிபாடாய்ப்
பொய்க்கண்டேனும்பூவொடுவாசப் புகைசாத்தி
யைக்கொண்டோர்நற்றெய்வதமென்றா ரறிவற்றார்.

உரை.— இறந்தமகற் குருச்சமைத்தபின்பு கையூழியத்தைப்பற்றித் தகப்பனுக்கேவல்செய்திருந்தவரோவென்னிற் றகப்பன்வருந்திக்கொண்டமயக்கத்தைக்கண்டு அவன்மனமகிழ்ந்து தேறும்படி யவர் தேவபூசையாக மதுமலர்ப்பூவும் வாசம்பொழிபூம்புகையு மவ்வுருமுன்னேகாட்டிப் பொய்யிதென்று தம்மனமறிந்து மதிகெட்டவரா யழகியவோர் தெய்வமிவனென்று சொல்லத்துடங்கினாரென்க.

26. செல்லுந்தன்மைத்தாயவைகேட்டுத் திருவல்லோன்
வெல்லுந்தன்மைத்தையனையேத்த விரிபார்மேற்
சொல்லுந்தன்மைத்தர்ச்சனைவிஞ்சத் துகளாக்க
மொல்லுந்தன்மைத்தோரிறையோனை யொழிகின்றார்.

உரை.— அங்ஙனமிவைநடந்துவருகையில் மகனுக்குத் தகப்பன் செய்தவற்றைக்கேட்டுச் செல்வமிக்கோ னொருவனதிலுஞ் சிறப்புபெறத்

தாணிறந்ததன்தகப்பனுக்குநடத்தியவனைவணங்காநிற்கச் சொன்னதன் மையா ளுள்வட்டத்திலே விரிந்தபூவுலகிற் பலவிடங்களிலே பலவர்க்கா ராதனைமிகவுநடக்கையிற் பாவம்விளையுந் தன்மைத்து மனிதர் துணையிலா மிக்காருமின்றி யொப்பாருமின்றி யொன்ருய்நிற்குமெய்க்கடவுளை மறந் தாரொன்க.

27. எய்யாமாக்கட்டீயுறநானே யெளிதிவ்வாய்
மெய்யாநாதன்றன்னைமறுத்தே வினையுய்க்கும்
பொய்யாவஞ்சத்துய்த்தனபொய்யம் பலதேவர்
கொய்யாவண்ணத்தெங்கணுமேத்துங் குழுகண்டாய்.

உரை.— அங்ஙன மறிவில்லாதமனிதர் நீரகில்விழும்படி நானே யிவ்வழியோடெளிதாய் மெய்யானகடவுளுக்குமாத்திரஞ் செய்யவேண் டிய வாராதனைமறுத்துத் தப்பாமற்றீவினைவிளைவிக்கு மென்வஞ்சத்தி ஞற்கொண்டுவிட்ட பலபொய்யானதேவர்களைவிடாம லிப்பொழு தெங் குங் கூட்டங்கூட்டமாய் வணங்கக்கண்டாயேயென்க.

28. ஊன்ருேய்மாக்கட்டங்குணமிஃதே லுளைவென்றே
கான்ருேய்பைம்பூஞ்சோலையெசித்தார் கசடுற்று
வான்ருேய்மின்போ லால்குபுநின்ருள் வலியேத்த
நான்ருேய்வஞ்சஞ்சால்பெனச்சொன்ஞ னவைமிக்கான்.

உரை.—அங்ஙன முடலைக்கொண்டமாக்கட்குணத்தின மித்தன்மை த்தாயி னிப்பொழு தெசித்திடத்தாயவை கண்டுகுழைவானேன்? வாச மதுமலர்ச்சோலையிற்பொலிந்த வெசித்துநாட்டிலுள்ளயாவருமீளவுந் தீ வினைகொண்டு மின்னலொல்குஞ் சீக்கிரத்துத் தம்மனந்திரும்பியுனதடி வல்லமையைவணங்கும்படி நாஞெருவனுள்ளவஞ்சமே போதுமென்ருன் பாவம்விளைவிக்குஞ் சிடாவியனென்க.

29. என்ருனன்ஞனென்றவைகேட்டா ரினிதென்ருர்
வின்ருனென்பான்விஞ்சியமாயை வினைவல்லா
னின்ருன்முன்பானென்றதிகழ்ந்து நிறைநக்குப்
பொன்ருவின்ஞபூணாசேத்திப் புகலுற்ருன்.

உரை.— அங்ஙனஞ்சிடாவியன்சொல்லச் சொன்னதைக்கேட்டயா வரும் நல்லதென்ருர் வின்ருனென்னு மொருபேயோவென்னில் மாயை வித்தையிற்பொலிந்து வினைவிளைவதற்கு மிகவும் வல்லவஞய் முன்ன வன் சொன்னதைநிந்தையாக மிகவுநகைத்து முடியாததீவினையெல்லா ம ணியாகவணிந்த மன்னவனை வணங்கிச்சொன்ஞனென்க.

## IV. வேறு.

30. கார்நடந்துளிவாவியைக்காத்தபுள்
நீரகன்றுளிநிற்பதுகாண்பரோ

சீரடைந்துளிமானிடர்செய்யறஞ்
சூரடைந்துளிதோமொடுமாற்றுவார்.

உரை.— மனிதரை வெல்லுவதரிதோ வவர்குண மெங்ஙனமென்னில், மாரிகாலத்து நிறைந்ததடாகத்திடத்துக்காத்திருந்தபறவைநீரொல்லாம்போய்வற்றினபின்பு அங்கேசில்லாமற்போவதுபோல மனிதருஞ் செல்வக்காலத்துச் செய்யுந்தருமங்களைத் துன்பக்காலம்வந்தவளவிலே விட்டுப் பாவமாகமாற்றுவாரென்க.

31. மைத்திறத்துயிரேய்த்ததுவண்மையோ
மெய்த்திறத்திறையோன்விறலேய்த்தெனக்
கைத்திறத்துயிர்காத்திடத்தான்செயு
மைத்திறத்துயிர்க்கேடுறவாக்கினேன்.

உரை.— சீடாவியன்சொன்னபடி பாவத்திருளே மொய்த்தவுயிரையுள்ளமனிதரையேய்ப்பது வல்லமையென்பவோ? நானே மெய்யின்வழியா னிகரிலாதிறத்தையுடையகடவுளின் வல்லமைதன்னை யேய்த்தாற்போல வவன்தன்வல்லமைகொண்டு மனுக்குலத்துயிர்களை யிரட்சிக்கும்படி தான் செய்ததைக்கொண்டுநானவ்வுயிர்களுக்குக் கேடுவரும்படிசெய்தேனேயென்க.

32. நிழன்றசோலையெசித்தினைநீக்கிவந்
தழன்றகானுறியூதரறைந்ததீத்
தழன்றசொற்கிறையோன்றருமேவலாற்
சுழன்றராவுயிர்துய்த்தனசால்பரோ.

உரை.— சொன்னதையெங்ஙனஞ் செய்ததென்றுசொல்லத்துடங்கினன்: நிழலிற்பொலிந்த சோலைகணிறைந்த வெசித்துநாட்டைவிட்டுத் தீச்சுடுங்கானத்துவழி யூதர்வருகையிலாண்டவற்குக்குறையாக முறைப்பாடுகளைச் சொன்னதிறலவன்சினந்தேவினபாம்புகள் திரளாய்வந்தவரைக் கடித்து மிகவுங்கொன்றனவென்க.

33. ஓவியேங்கியுளேந்திறைவேண்டினார்
மேவிவேண்டினர்மேவுகின்றண்டகை
யேவிமோயிசனீண்டொருபாந்தளைச்
சாவிலாம்படிதாம்பிரத்தாக்கினன்.

உரை.— ஆண்டவனேவலினல் மொய்த்தபாம்பின் கடியாற் றிரளாயிறப்பதுகண்டு நொந்தேங்கி யாண்டவனை வேண்டினர், அங்ஙனந்தன்னைவேண்டினர் மேலிரங்கின கடவுளேவினதினல் யூதர்க்குதலைவனுகியமோயிசன் சீக்கிரமா யினியொருவருஞ்சாகாதபடி செம்பினு லொருபாம்புருவத்தைச் செய்தானென்க.

34. ஆக்குகின்றவராவொருகம்பமேற்
றாக்குகின்றனன்றாக்கியபாந்தளை

நோக்குகின்றனர்நோயகிநஞ்சினை
நீக்குகின்றுயிர்நீங்கிலருய்வரோ.

உரை.— அங்ஙன மோயிசன்செம்பினாற்செய்தபாம்பினை யொருக
ம்பத்தின்மேலேற்றிவைத்தான், அங்ஙன மேற்றியபாம்பினைப் பார்த்த
மாத்திரத்திற் பாம்புகளாற்கடிபட்ட யாவருங் கடித்தபாம்பினஞ்சுபோ
ய்ச் சாகாமற் பிழைத்தாரென்க.

35. வாய்ந்தநன்றிமறப்பதுதீதென
வாய்ந்ததன்மையராவழியாதுபின்
வேய்ந்ததம்மகர்க்காண்டகைமேவிமுன்
னீய்ந்தநன்றியிதென்றவர்சாற்றுவார்.

உரை.— அங்ஙன மாண்டவன் தமக்குச்செய்த நன்றியைமறப்பது
தீதென்றெண்ணி யதைமறவாதபடி யாண்டவனேவிச் செம்பினாற்செய்ய
ப்பட்ட பாம்பினை யழியாம லவ்விடையூறு போனபின்னும் வைத்திருந்
து பின்காலத்துவந்த தம்மக்கட்கதைக்காட்டி முன்னாளிலே கடவுளதை
க்கொண்டு தமக்குச்செய்த நன்றியின்னதென்று சொல்லிக்காட்டுவாரெ
ன்க.

36. புரைதருந்தடமீதெனப்புக்குநா
னிரைதருங்கடனீதியிதென்றவர்
விரைதரும்புகையும்வெறிமாலையு
முரைதரும்புகழோடிடநாட்டினேன்.

உரை.—இவையெலாங்கண்டு நான்பாவம்நுழையும் வழியிதென்றெ
ண்ணி யுட்புகுந்து நீதிநிறையாமென்று நான்சொல்ல வவ ரப்பாம்புருவி
ன்முன்னே வாசபுகைகளையும் மணமலர்மாலைகளையுஞ்சாத்திப் பலபுகழ்க
ளைப்பாடும்படி முறையைநாட்டினேனென்க.

37. முன்னிருந்தனர்காலமுடிந்தபின்
பின்னிருந்தனர்பேரொழிற்பாந்தளுக்
கென்னிருந்தனிச்சூட்சியினேவலான்
மன்னிருந்தனமந்திரமாக்கினர்.

உரை.—அங்ஙனம் முன்னிக்கதையெலாம் நடந்தகாலத் திருந்தவரிறந்
து பின்னேநின்றவர் நிகராத வென்னரியசூட்சியினேவலினா லவ்வழகுள்
ள பாம்பினுருவத்துக்கோருயர்ந்தபொற்கோயிலைக்கட்டினரென்க

38. மாகநாதன்வினைந்தவைமாற்றியந்
நாகமாக்கியநன்றியதென்றுநா
னாகநாதனெனும்பெயர்நாட்டிக்கே
டாகநாகத்தருச்சனையாயதே.

உரை.—அப்பொழுதுபாயமாய் நானுழைந்து வானநாதனுகிய கடவுளே செய்தநன்றியைமாற்றி யந்நாகந்தானே முன்னேயிரட்சித்துச் செய்த நன்மையிதென்று நாகநாதனென்னும்பெயரு மதற்குநாட்டியதனு லவர்கெடும்படிபாம்பினுராதனை நிலைகொண்டாயிற்றென்க.

39. நாகநாதனைநம்பலினுகவா
யாகமாறுமென்றுகமம்போன்றுநற்
பாகமாய்விடம்மூடியபற்கதை
யாகமாநிலத்தர்ச்சனைநாட்டினேன்.

உரை.—மீளவும் நானப்பாம்புக்கு நாகநாதனென்னும்பெயரை நாட்டினபின்ன ரந்நாகநாதனைநம்பினுற் கடித்தபாம்பினஞ்சு மாறுமென்று சொல்லிச் சருக்கரைமேலேபூசி நஞ்சினைமூடினதன்மையால் வேதநூலாகமம்போலப் பலகதைகளையுங்கொண்டுவிட்டுப் பூவுலகெங்கும் நாகநாதற்காராதனைநாட்டினேனென்க.

40. ஆண்டங்காயிரத்தைம்பத்திரண்டுபோய்
மாண்டகோனைசைக்கியன்மனம்பொறுப்
பூண்டபாந்தளைப்பூழியையாக்கினு
மீண்டவ்வர்ச்சனைபற்பலர்விட்டிலார்.

உரை.—அங்ஙன மாண்டவனேவலினுல் மோயிச னப்பாம்புருவத்தை யுண்டாக்கினபின்ன ராயிரத்தைம்பத்திரண்டுவருடம்போய் யூதர் நாட்டையாண்டிருந்த மாட்சியிற்பொலிந்த வெசைக்கியனென்பவர் அந்தப்பாம்பினைவணங்கினதைக்கண்டு மனம்பொறுமற் கோபித்து மிக்கலங்கரித்த வப்பாம்பினுருவத்தையழித்துத் தூளாக்கினுன், ஆயினுமின்ன மன்றுதொட்டுவந்த நாகநாதனுகிய பாம்பின்வணக்கத்தைப் பலரும்விடாமற் சிலதேசங்களில் வணங்குகின்றுரென்க.

41. அறம்வழங்கிடவன்பொடுநாதனப்
புறம்வழங்கியவின்னவைபொய்யொடு
மறம்வழங்கிடமாற்றியபின்னரொன்
றிறம்வழங்கிலசீருமுண்டோவென்றுன்.

உரை.—அங்ஙனம் நல்லறம்வழங்கும்படி யன்போடுகடவுள் யூதரிடத்துநடத்தின விவையெல்லாவற்றையும் நான்பொய்களைக்கலந்துமாற்றிப் பாவம்வழங்குதற்காரணமாகச் செய்தபின் பெனக்குள்ள வல்லமைக்காகாததுண்டோ வென்றுன் வின்றுனென்க.

42. பித்தனுகமம்பேசியதன்மையி
லத்தனுதுரைகேட்டரும்பட்டிமை
மொய்த்தநாளிமுகத்தரில்முற்றிய
சத்தனுசெனும்பேயிவைசாற்றினுன்.

உரை.— அங்ஙனம் பித்தன் வேத நூலாகமங்களைப்பேசினாற்போல
வின்றானெடுமொழியோடு சொன்னதைக்கேட்டு மனதிலேவஞ்சநிறைந்
த கிழநாய்முகத்துருவெடுத்து நின்றவனைப் பாவத்தின் முற்றியமனத்த
னைச் சத்தனென்னுமொருபேய் சொல்லத் துடங்கினானென்க.

## V. வேறு.

43\. நீரிறவழ்மொக்குளெனநேர்பொருதகான்முன்
றேரிறவழ்சித்தியெனவேறுதிளை சீற்றக்
காரிறவழ்மின்னலெனநேர்கருதினில்லாப்
பாரிறவழ்மன் னுயிர்கடம்பரிசிதன்றே.

உரை.— முன்சொன்னபடி மனிதர்குண மெத்தன்மைத்தோவெ
னில்: நீர்மேலாடுங்குமிழிபோலவு மெதிர்த்துவீசிப்பொருதகாற்றின்முன்
னர் தேரின்மேலாடு மிடக்கியம்போலவு மிடிகளைத்திரளாய்க்கொண்ட
சினத்தோடு மேகத்திடத்துத்தோன்று மின்னல்போலவு மனிதருமொ
ழுங்குபடவொன்றினை நினைத்தகாலத்ததிலே நிலைகொள்ளாமற் றிரும்பி
யாடலே பூவுலகிலுடலோடு தவழுமுயிர்களாகக்கொள்ள வவர்க்குணமி
துவென்றானென்க.

44\. இப்பரிசினையிரமனத்தவரையேய்த்து
மைப்பரிசினெங்குடிலமாயையடல்பொய்யாப்
பொய்ப்பரிசினுமுலகுபுக்கினிதிலாண்டோ
மப்பரிசினிப்பொழுதமைப்பதரிதையா.

உரை.— சொன்னதன்மைத்து நொடிச்சொருமனமாகவாயிரமனமா
ய்த் திரும்பிநிற்கும் மனிதரையேய்த்து மயக்கத்தின்தன்மையால் வல்ல
மைகொள்ளும் நமது கொடியமாயைதப்பாமற்பொய்யின்வழியே நாம்பூ
வுலகிற்புகுந் தினிதிந்நாள்வரைக்கு மாண்டதுள்ளதுதானே யாயினு மி
னி யித்தன்மைத்தாவ தரிதையாவென்றானென்க.

45\. நோமலியவந்தபலநூதனமுநோக்கில்
வீமலியகன்றதலைமேதினியிலண்டாக்
தீமலியிருட்செறியுமித்திசையிலாண்டு
நீமலிநின்வஞ்சனைநிகழ்த்தனலதென்றான்.

உரை— நாமெல்லாரு மிகவும்வருந்தும்படி யிக்காலத்துவந்த பலந
வங்களைப்பார்க்குமிடத்தில் மலைப்பூத்து விரிந்தபூவுலகிலண்டாமற்
செந்தீநிலமா யிருளேநிறைந்த வீவ்விடமாகியநரகத்தி னியாண்டுகொண்
டுன்வஞ்சனையிங்கேதானே நடத்துவது நல்லதென்றானென்க.

46\. நாய்முகனவின்றவைநகைத்திவனைநாளுங்
காய்முகனெடுங்கனுறிநோக்கியகத்தான்

போய்முகமுடன்றெறிபுகைந்தெழுவதிங்கட்
டேய்முகவெயிற்றெதிர்திரங்கரனுரைத்தான்.

உரை.— நாய்முகத்துருவோடு நின்றசத்தனாசு சொன்னதைநகைத்துக் காய்முகத் திவனை யெப்பொழுதும் பகைத்துத்திருகிநோக்குங்கதத்தையுடைய திரங்கரனென்னும் பசாசுபோய் முகத்தி லெரிபுகைந்தெழும்படி மிக்ககோபத்துடனே தேய்ந்தபிறையோடொத்த நீண்டபல்லுகளைக்காட்டிச்சொன்னானென்க.

47. வஞ்சினரொருங்குதொழுமன்னரசமாயை
யெஞ்சினனிளைத்தனனிளைத்தவொருகைமைக்
கஞ்சினனறைந்தவையமைந்தயரவேண்டா
துஞ்சினர்துளங்குவர்கொலென்றுரைதுவைத்தான்.

உரை.— வஞ்சினரெல்லாரும் வணங்குமிராசாவே மாயையில்மெலிந்தவனா யிளைத்தவனா யிளைத்தவொருகைம்பெண்ணுக்கு மஞ்சினனாய் நிற்குஞ் சத்தனாசு சொன்னதற்குப் பொருந்திசெய்யவேண்டாம், அஞ்சிச் சோம்பினவ ரெக்காலும் விளங்குவரோவென்றான் திரங்கரனென்க.

48. என்றலொடுநொந்துமுகிலீன்றவுருமென்னா
நின்றவனிகழ்ந்தெனைநிகர்த்தபிணநீயோ
குன்றவெறிகொள்ளொளிகுணுங்கெனமுளைத்தாய்
வென்றரவளர்ந்தமிடலோயெனவுரைத்தான்.

உரை.—அதைக்கேட்டசத்தனாசு மேகநொந்துயிர்த்தவிடியைப்போலவந்துநின்றுஎன்னைநிந்தைசொல்லும்படியென்னோடொத்தபேய்நீயோ பேயினங்கொண்டகீர்த்தி குறையும்படி பேயாய்முளைத்தாயே முறிந்துமுதுகுதரும்படிமாத்திரம் வல்லமையுடையோனே யென்றானென்க.

49. அரங்கவுமிவற்கவனவற்கிவனெள்ளொத்த
தரங்கமெனவோங்கிவிழிதத்துதழறுக்கத்
திரங்கரனுடன்றுதிருகுஞ்சினமோடார்ப்ப
வுரங்கடிதுகுத்தினனொருங்குடல்பதைப்ப.

உரை.— அங்ஙன மொருவற்கொருவன் மனதிலழுந்தும்படி மிகநிந்தையைச்சொல்லிவைதலிற் கடற்றிரைபோலப்பொங்கக் கண்வழியாகவழலைவீசத் திரங்கரன்வந்துச் சீறியவெகுளியோடார்த்துச் சத்தனாசை மார்பிலே யுடலெலாம்பதைக்கும்படி குத்தினானென்க.

50. பதைத்தவுடல்பத்திருதனைக்குமுயர்பாய்ந்தான்
றுதைத்தவரிதோர்ப்பவெதிர்துள்ளியிருகாலா
னுதைத்தனனுதைப்பவுருமொப்பவவனார்த்துப்
புதைத்தன வெயிற் றிரிவபுண்புனல்கடித்தான்.

உரை.—அப்பொழுது சத்தனு சுடல்பதைக்கும்படி குத்தப்பட்டுத் தானிருபதத்தனை யுயரப்பாய்ந்து மொய்த்தசிங்கத்திலுங் கொடிதாய்த் துள்ளியெதிர்வந் திருகாலாற்றிரங்கரனையுதைத்தான், உதைத்தவளவிலே யவனுமிடிபோலமுழங்கிச்சத்தனுசுடலிற் புதைத்ததன்பல்லின்வழியா யிரத்தப்புனலோடும்படி யவனைக்கடித்தானென்க.

51. கடித்தவுடல்செங்கறையின்மாறிநிறைகால
விடித்தவிருகாரொனவெதிர்த்திருவர்தம்மைத்
துடித்தெழவுடற்குவடமுற்றுறவிறுக்கிப்
பிடித்தனர்கடித்தனர்விழுத்தினர்பிரண்டார்.

உரை.—அங்ஙனங் கடிபட்டசத்தனுசுட லிரத்தமாரியைப்பெய்யாநிற்க விருவரு மிடித்தவிருமேகங்களைப்போலமுழங்கி யெதிர்த்துத் தாமிருமலைகள் குதித்தாற்போல மேற்குதித்தெழவுஞ் செந்தீச்சூழப்பறியவுந் தம்மையிறுகப்பிடித்துக்கடித்துக் கீழேவிழத்தள்ளிப் பிரண்டாரென்க.

52. பிரண்டனர்சுழன்றனர்பிரிந்திலர்பிரிந்தார்
திரண்டனர்திரிந்தனர்சிதைந்திலர்செறிந்தார்
மிரண்டிலர்வெதிர்ந்திலர்மெலிந்திலர்முனைந்தா
ரிரண்டனல்விசும்புமெனமீண்டெதிரொழுந்தார்.

உரை.— அங்ஙனமிருவரும் விழுந்தவிடத்துப் பிரண்டுசுழன்று ஒருவனொருவனை விட்டுப்பிரியாமலுஞ் சிறிதோர்பொழுதுபிரிந்தும் பின்புதிரண்டுகூடித்திரிந்து தோர்வையின்றிநெருங்கியஞ்சாமலுங்கலங்காமலு மெலியாமலும் நெருப்பினைக்கொண்ட விருமேகங்களைப்போலவெழுந்துமீளவுமெதிர்த்துபொருதாரென்க.

53. எழுந்திருவர்வவ்வியமருப்பிணைகைவிள்ளா
வழுந்திருவடிக்கொடுவகத்தினையுதைப்பக்
கழுந்திருகுகொம்பிருவர் கையொடுபெயர்ந்தே
விழுந்திருவர்வீழ்ந்தனருள் வெள்கினர்வெகுண்டார்.

உரை.— அங்ஙனமெழுந்தபின்ன ரொருவற்கொருவ னிருகொம்புகளைச் சிக்கெனப்பிடித்துக் கைவிடா தொருவற்கொருவனிருகாலழுந்தும்படிகுதித்துமார்பிலே யுதைக்கத்திருகிநெருங்கிய வவன்கொம்புகளிவன்கையிலே யிவன்கொம்புகளவன்கையிலேபெயர்ந்துவிட்டக்க விருவரும் விழுந்துவெட்கிமுழங்கிக் கோபியாநின்றாரென்க.

## VI. வேறு.

54. நக்கனகண்டபேய்கள் நக்கனவென்றுவேந்தன்
மிக்கனசினந்துநோக்கி விளைந்தபோர்கையானீக்கித்
தொக்கனபிணங்களஞ்சத் தொகையிலவிடிபோலார்த்துத்
தக்கனவினைகள்கக்கச் சத்தனுசுனைகொண்டானல்.

உரை.—அவ்விருபேய்கள் கொம்புகளின்றிவிழவே கண்டமற்றப்ப சாசுகள் மிகவுநக்கன, பேய்க்கரசனேவென்னிற் றுன்பமிகுதியாற் ருனக்கமாட்டாமலு நக்கமற்றப்பேய்களை மிக்ககோபத்துடனேநோக்கியவ் விருவருள் விளைந்தபோரையுங் கையாணிறுத்தினன், அப்பொழு தங்கே திரண்டிருந்தபசாசுகளெல்லா மஞ்சும்படி மட்டின்றியிடித்த விடிகளைப் போலமுழங்கி மனதிற்கொண்டவினைகளைக்கக்கும்படி சத்தனுசென்னு ம்பேய் மீளவுமுறைகளைக்கொண்டானென்க.

55. வெலத்தொழிலெஞ்சவஞ்சி விதைவையினிளைத்தேனென்
றன்
குலத்தொழில்வஞ்சம்பொங்கக் கூவிடத்தவனுன்செய்த
வலத்தொழிலிருவர்கூற வலியனுமொன்பீரொன்னச்
சலத்தொழிலரசன்மூரற் றந்துமீண்டவன்சொன்னனே.

உரை.—வெற்றியில்லாதபடி நானஞ்சி யொருகைம்பெண்ணினு மிளைத்துப்போனேனென்று திரங்கரன்சொன்னனே, இப்பொழு தவனும் நானும்பேய்க்குலத்துரிய வஞ்சமிகுதியாற் பூவுலகிடத்துச் செய்த வல்லமையின்றொழிலை இருவருஞ் சொல்லிக்காட்டவிருவருள்வலியனுமொன் றுநீங்களே சொல்வீரொன்று சத்தனுசுசொன்னவளவிலே பொய்விளைவிக்கும் பேய்க்கரசன் சம்மதித்ததுபோலப் புன்னகைகாட்டவின் மீளவுஞ் சத்தனுசுசொன்னன்.

56. காசுலாங்கடலினீருங் காருலாம்வரையுஞ்சூழ்ந்து
தேசுலாஞ்சிந்துகீறுந் தேயமேயெனக்குத்தந்தா
யாசுலாங்குடிலத்தங்கண் ணறிவறவிருளையுய்த்து
மாசுலாந்தேயமாக்கி வணக்கமேயுனக்குக்கொண்டேன்.

உரை.—சொன்னமுறையிற் சத்தனுசு தான்செய்தவலத்தொழிலைக் காட்டத்துடங்கினன். மணிகளைக்கொழித்தகடலொருபாலு மேகங்கள்தவழுமலைகளொருபாலுஞ்சூழ்ந்திருக்கப் பொன்னைக்கொழித்த புனல் நடுவேகீறியோடாநின்ற தேசத்தைக்கெடுக்கும்படி மன்னவ நீயெனக்கல்லோதந்தாய், நானேவென்னிற் பாவம்விளைதற்காரணமாகிய வென்வஞ்சனையினு லங்கே யறிவுகெடும்படி யிருளாகியமயக்கத்தைக் கொண்டுவிட்டதை மாசுநிறைந்ததேசமாகச்செய் துன்னைவணங்கவுஞ் செய்தேனென்க.

57. ஏற்றியதேவரொண்ணில் லெண்ணுவர்கலங்குவாரும்
போற்றியதேவரொப்பப் புரிகுவர்புகர்கொள்வாரு
மாற்றியதேவர்காதை யறைகுவர்வெள்குவாருஞ்
சாற்றியதேவர்பூண்ட தகவுளோர்தமைக்கொல்வாரும்.

உரை.— நானங்கேவணங்கச்செய்ததேவரை யெண்ணவேண்டி யெண்ணிக்கையுளடங்காமையிற் கணக்கரெல்லாருங் கலங்கவும் வணங்கிய தேவரொப்ப நடந்தவரெல்லாரும் பாவிகளாகவு மத்தேவர்செய்தவற்றைச்சொல்ல வேண்டின் சொல்லுவரெல்லாரும்நாணவு மீளவு மவர்வண

ங்கியதேவர்க்குள்ள குணத்தின்தன்மைத் தவருக்குள்ளே நடப்பாரைக் கண்டா லவரைக்கொல்லவுஞ் செய்வாரென்க. (ஆகையால் மனிதரிடத்துப் பொறுக்கப்படாத குற்றங்களையுடையவரைத் தேவராகவணங்கச் செய்த வருமையைக் காட்டுவது கருத்து.)

58. புனைநிலாவணியில்லாளைப் போக்கலாலரற்றிமாழ்கல்
மனைவியாலடிபட்டோடல் மனைவியைத்தலையிற்றாங்க
லனையள்கால்பிணிற்றுச்செந்நீ ரணியெனநுதலிற்பூச
லினையெலாம்பூசித்தேவர்க் கியலுமோர்விளையாட்டென்றேன்.

உரை.— மீளவு மழகிய தன்மனையாளைப் போக்கியதனு லழுதுவிம்மி மயங்கலுந் தன்மனைவிகையா லடிபட்டோடலு மவளைத் தன்தலைமேலேசுமத்தலு மவளது சூதகச்செந்நீரை யணியாக நெற்றியிற்பூசலு மிவையெலாம் பலஞாயங்களைச்சொல்லி மறையப்பூசித்தேவர்க் கேற்றவிளையாட்டுகளென்றேனென்க.

59. பொதுமுறைமகளிர்நாடல் புறமனைவிழைதல்தண்ண
மதுமுறைமலருட்புக்கு மதுசகன்கணைவெப்பாற்றல்
விதுமுறைகுனிவிற்கஞ்சி வென்றரவொளித்துநாண
லிதுமுறைமறையினுட்டி யிறையவர்க்கிலீலையென்றேன்.

உரை.— மீளவும் விலைமாதரைத்தேடிச்சேரலும் புறதாரங்களைவிரும்புதலும் மன்மதன் தன்மேல்விட்டவம்புகளாலுள்ளெழுந்த காமவெப்பினையாற்றும்படி குளுமதுமலருட்புகுதலும் பகைவர்தன்மேற் பிறையைப்போலவளைத்த வில்லின்முகத்தஞ்சி முதுகுதந்தொளித்துநாணலு மிவையெலாம் வேதமாகநாட்டித் தேவர்க்கேற்ற விலீலையென்றேனென்க.

60. குய்யமேவிழியாய்த்தாங்கல் குய்யத்துளொளித்தல்கோசம்
வையவேயூழ்த்துவீழ்தல் மருவியகுறியிரண்டுங்
கையமேயாகப்பூணல் காட்டரும்பலவுநாட்டி
யையமேயின்றித்தேவர்க் கானதோர்முறைமையென்றேன்.

உரை.— மீளவுங் கண்ணுகவுடலெலாங் குய்யமாய்த்தோன்றலுமொருவன்வைதுதிட்டியதனுல் கோசமழிந்துவீழ்தலு மிருகுறிகள் புணர்ச்சியுற்றிரண்டுசேர்த்துத் தேவணியாக வணிதலு மித்தன்மையிலுங் காட்டற்கரியபலவற்றையும்நாட்டி யவையெலா மையமொன்றின்றித் தேவர்க்குரியமுறைமையென்றேனென்க.

61. ஈமஞ்சேர்மாலையாக விழிபடக்கழுதைசேர்ந்தோன்
காமஞ்சேர்சங்கத்தொன்றிற் கடந்தவாயிரமாண்டுள்ளோ
னேமஞ்சேர்மனையாளொண்ணீ ராயிரமிழிற்கொண்டோன்
சேமஞ்சேர்வலியிலோங்குஞ் சிறப்பெழுந்தேவனென்றேன்.

62. அன்னையேமனைவியாக வமைந்தவன்றேவனென்றேன்
பின்னையேசுதைதயைப்புல்லப் பெட்டவன்றேவனென்றேன்
றன்னையேயழித்துக்காமந் தணித்தவன்றேவனென்றே
னென்னையேயறைவேனென்ற யாவுமேவழங்கச்செய்தேன்.

இவ்விரண்டொருதுடர்.

உரை.—மீளவுஞ் சுடுகாட்டில் விழுந்தமாலைபோல விகழ்ச்சிபடும்படி கழுதையோடுசேர்ந்தவனு மொருகாமச்சங்கத்திலாயிரம்வருடங்கிடந்தவனும் பதினறுயிரம் பெண்சாதிகளைக் கொண்டவனும் வல்லமையிற் பொலிந்த தேவனென்றேன். மீளவுந் தன்தாயைமனைவியாகவைத்திருந்தவனுந் தன்னிளமகளோடு புணரும்படிவிரும்பி யவளைத் துடர்ந்தவனுங் காமம்பொறுக்கமாட்டாமற் றன்னைத்தா னழித்தவனுந் தேவனென்றேன். மீளவுஞ் சொன்னதெல்லாமென்சொல்வேன் சொன்னயாவும் வழங்கவுஞ் செய்தேனென்க.

63. உடல்வினையினமாக்க ளுணர்கவுநாணுங்காதை
மிடல்வினைகளிப்பிற்செய்தோர் விண்ணின்வாழ்தேவரென்னக்
கடல்வினையரவத்தன்ஞர் களிவிழாவணிகொண்டாட
வடல்வினைவஞ்சத்தங்க ணருமுறைநாட்டினேனே.

உரை.— அங்ஙனங் கொண்டவுடலினு லீனத்தையுடைய மனிதர் நினைப்பதற்குமுதலாய்நாணும்படி யருவருப்புள்ள வபத்தங்களைக் கொழுப்பின் களிப்போடுசெய்தவரை வான்வாழ்தேவரென்றெண்ணி யம்மனிதர்தாமே கடலொலியொத்த வாரவாரத் தக்கதையைப்பற்றித் திருவிழாக்களைக்கொண்டாடும்படி வல்லமையுள்ள வஞ்சத்தா னுனே யெங்குமுறைமை நாட்டினேனென்க.

64. சேண்முகம்புதைத்தகோயிற் றீட்டியதேவர்காதை
வாண்முகம்புதைத்தநீண்கண் மடந்தையர்கண்டகாலை
நாண்முகம்புதைத்தபின்றை நாணமற்றதைச்செய்தோரைப்
பூண்முகம்புதைத்தமையற் பொலிவொடுவணங்கச்செய்தேன்.

உரை.—மீளவும் வான்முகத்திற்புதைத்த கோயில்களிடத்துச் சித்திரமாகவெழுதப்பட்ட வத்தேவருடைய கதைகளை வாளுட்புதைத்த நீண்டகண்ணையுடைய குலத்துமாதர்கள்கண்டால் வெட்கிப்போய்க் கையாலணின தம்முகத்தைப்புதைத்து மூடினபின்பு தாங்காண்பதற்கு நாணுங்காரியங்களை வெட்கமின்றிச்செய்தவரைத் தேவரென்றெண்ணி யவற்றின்மேற்போட்ட வாபரணங்கள் செய்யுமமயக்கமிகுதியாற் கையெடுத் தவரைவணங்கச்செய்தேனென்க.

65. என்வலத்தொழிலிதைய விவனும்வந்தமைத்தயாவுந்
தன்வலத்தொழிலென்ருேதத் தாவரும்வலியோனென்றும் [றி
புன்வலத்தொழிலோனென்றும் பொருத்தலிற்ருேன்றுந்தோன்
மன்வலத்தொழிலோனுன்னல் வரிசைபெற்றுய்வானென்ருன்.

உரை.—அங்ஙனம் நானென்வல்லமையினுற் செய்ததொழிலிதுவையா, இவனும்வந்து தன்வலிமையாற்செய்தயாவையுஞ் சொன்னல் வலியானென்றும் வலிமையில்லாதவனென்று மெதிரிலேதானேதோன்றும், இருவருள்வலியானுன்ருல்வரிசைபெற் ருேங்கக்கடவானென்ருன் சத்தனுனென்க.

66. கூடுடைமாக்கள்காமங் குணமெனநாடிநாடுங்
கேடுடைகாமமூடக் கெழுமியதேவர்காமப்
பீடுடையாரொன்றுன்னல் பெரும்புகழ்பெற்றவாண்மை
யீடுடைதொழிலென்பாயோ வெனத்திரங்கரன்முற்பாய்ந்தான்.

உரை.—சத்தனு னிவையெல்லாவற்றையுஞ் சொன்னதற் கெதிர்மொழி திரங்கரன்சொல்வான்: கொண்டசரீரத்தின்தன்மையால் மிகவுங்காமத்தைக் குணமென்றுமனிதர்விரும்பினதனுற் ரும்விரும்பின கேடுள்ள காம நிந்தையென்றுதோன்ரும லதைமூடும்படி தேவருங்காமத்தமிழ்ந்திப் பெருமைகொண்டாரொன் றம்மனிதர்நினைக்கும்படிசெய்வதுபெரும்புகழ்பெற்ற வல்லமையின் ருெழிலென்பாயோ வென்று தானுந் தன்வல்லமைகாட்டும்படி முன்னேபாய்ந்தான் திரஙகரனென்க.

67. முகிற்கிழித்திடித்தவேற்றின் முகத்தழற்கதத்தவேகத்
துகிர்க்கிழிக்கணிச்சிகாட்டி யுற்றவச்சவத்தைப்பாந்தட்
டுகிற்கிழிக்குணுக்குவேந்தன் சுளித்ததிர்த்ததட்டிப்பாய்ந்த
சிகிக்கிழித்தடத்தகண்ணுன் செப்பலும்விலக்கினுனே.

உரை.—அங்ஙனம் மேகத்தைக்கிழித்திடித்துவிழுமிடிபோல முகந்தழல்புறப்படக்காய்ந்தகோபத்துடனே கீற்றுக்கீற்ரு யானைக்குடாரிபோல்வளர்ந்த நகஙகளைக்காட்டி முன்னேபாய்ந்துவந்த பேயாகிய திரங்கரனைப் பாம்பின்கொடியையேந்திய பேய்க்கரசன்கண்டு கோபித்ததட்டியக்கினிப்படமாகச் சிவந்ததடத்தகண்ணையுடைய திரங்கரன் மறுமொழிசொல்லாதபடி விலக்கினுனென்க.

68. இற்றைநீசெய்தபோதே யெமதுபேரினத்துக்கோனுன்
மற்றைநீதலைவனுகி வாழிசத்தனுசேவஞ்சத்
தொற்றைநீருடையநீயென் ருெற்றைகொம்பளித்தேனென்ன
வற்றைநீடலையினுப்ப ணமைத்துநாட்டினன்பேய்வேந்தே.

உரை.—அஙஙனந் திரங்கரன்பேசாதபடி யமர்த்தினபின்பு பேய்க்கரசன் சத்தனுசைநோக்கி நீயிவையெல்லாவற்றையுஞ் செய்தபோதே பேய்க்கெலாமரசனுனே, நீ தலையனுய்வாழ்வாயாகச் சத்தனுசே, மீளவும் நீ வஞ்சத்திலே நிகரின்றியொற்றையாகையி லதற்கடையாளமாக வொற்றைக்கொம்புனக்குத் தந்தேனென்றுசொல்லிப் போர்முகத்திரண்டு கொம்புகளிழந்த சத்தனுசின்தலைநடுவிலே யொருபெருஙகொம்பினைவைத்துநாட்டினுன் பேய்க்கரசனென்க,

69. எப்புறத்தனைத்துமுன்ன ரியன்றதன்கோலந்நாட்டிற்
கப்புறத்தியலாதென்னு மதற்குளத்துணர்ந்ததன்மை
செப்புறத்தானேகண்ட சிறப்பெனவரசன்கேட்பத்
தப்புறத்தனித்தீவஞ்சச் சத்தனுசறைதலுற்றான்.

உரை.—மீளவு முன்னரெங்குஞ் செல்லாநின்ற தன்கோலினி நரகத்தப்புறத்துச் செல்லாதென்று சத்தனுசுமுன்சொன்னனே, அங்ஙனஞ் சொல்லுதற் கவன் மனதிலேநினைத்த காரணம்வெளியாகும்படி யவன்கண்டவிசேடமென்ன பேய்க்கரசன் கேட்டவளவிலே பாவம்விளையும்படி நிகரில்லாத கொடியவஞ்சனையுடையசத்தனுசு மறுமொழிசொல்லத் துடங்கினனென்க.

## VII. வேறு.

70. வான்விளைவாழ்விழந்திங்கண் மருண்டெரிநாம்விழுங்காலு
தேன்விளைகான்முதன்மகனே தீதுறநாஞ்செயுங்காலு [ந்
மூன்விளையாக்கையினும்மை யொழிப்பலெனவுரைத்திறைவன்
முன்விளையாகுலக்காலந் தானிதெனத்தோன்றுமையா.

உரை.— சத்தனு செங்ஙனஞ்சொன்னனென்னில், வானுலகுள்ள வாழ்வுகளையிழந்து மயங்கி நாந்தள்ளுண் டங்கேநின்று நரகில்விழும்போதுந் தேனைப்பொழிந்த பூங்காவனத்திருந்தவாதிமனிதன் விலக்கினகனியைத்தின்று பாவத்தில்விழும்படி நாஞ்செய்தபோதும் நானவதரித்தினியெடுக்கு மனுவுடலிநின்றுங்களைக் கெடுப்பேனென்று நமக்காண்டவன் சொன்னனல்லோ? அங்ஙன மவனால்வரத்தகுந் துன்பக்காலம்வந்ததென்று தோன்றுமையாவென்க.

71. ஈரொழுவெண்டிங்களுமுன் னீரிருதண்டிங்களுமுன்
போரொழுவெம்பகைசெய்த பொருநந்தலைக்காணுநாங்
காரொழுவெங்கதத்திடிபோற் கடிதிங்கண்வீழ்ந்தடைந்த
சூரொழுவெங்காரணமுந் தோன்றிலதுட்குற்றனமே.

உரை.—ஆண்டவனவதரித்துதித்தானென்பதற்குக் காரணங் காட்டத்துடங்கினன். ஆகையாற் பதினலுமாதமுன்னும் நாலுமாதமுன்னும் நம்மைப்போர்செய்து பகைத்தவனைக்காணும னுமேகத்தினின்றுவிழுந்த விடிகளைப்போலத் துணுக்கெனநரகில்விழுந்துவந்ததுன்பத் தொருகாரணமுந்தோன்றும லஞ்சிக்கிடந்தோமல்லோவென்க (பதினலுமாதமுன்னே திருவவதாரமும் நாலுமாதமுன்னே திருக்குமாரன் பிறந்ததுமாகி முன்சொன்னபடி யவ்விருகாலத்தும் பூவுலகிருந்தபேயெலாம் நரகில்விழுந்தனவென்க.)

72. மீண்டெழுந்துநான்மதிமுன் மேதினியிற்போயங்கண்
மாண்டெழுந்துவந்தநவ மதித்தாய்நதேயன்றிரவி
யீண்டெழுந்துமும்மடங்கா யிலங்கிநிசியிருளஃகி
யாண்டெழுந்துவையமெலா மழகுறிக்கேழ்த்ததுகண்டோம்.

உரை.— நாலுமாதமுன்னே யங்ஙனம் நரகில்விழுந்தவுடனே திரும்பியெழுந்து பூவுலகிற்போ யங்கேமாட்சிபொருந்தி வந்த நாதனமென்ன பார்த்தவிடத்தே யன்று சூரியனுதயகாலத்துமூந்தியெழுந்துமூவத்தனே யொளியைப்பரப்பி யன்றிராக்காலமுங்குறைந்து பூவுலகெல்லாம்பொலிவெய்தியழகுபெற் றிலங்கக்கண்டோமல்லோவென்க.

73. தேன்வயிருர்மலர்பூத்த செழுஞ்சோலைபருவமில
கான்வயிருர்கனிநலமுங் கலந்தன்றுகளிப்பெய்தி
வான்வயிருர்சுவையமிர்தம் மண்ணுலகிற்ருேக்கதென
மீன்வயிரு ருலகொப்ப மேதினியன்றெழக்கண்டோம்.

உரை.— மீளவு மன்றுபருவமில்லாதாயினு நிறைதேன் பொழிமலர்களையும்பூத்து மலரோடுகலந்த வாசமலிந்தகனிகளையுங்காய்த்துப் பல சோலைகள் மகிழ்ந்தனபோலத்தோன்றி வானுலகிடத்து நிறையவோடிய வமிர்தவெள்ள மன்றுபூவுலகில்வந்து திரண்டாற்போலவாகி வானுலகொப்பப் பூவுலகெழுந்து மாட்சியிற்பொலியக்கண்டோமென்க.

74. அருள்காட்டியவதரித்தா ஞண்டகையோவன்றென்ருேந்
தெருள்காட்டிப்பெத்திலத்தோர் சிறுவனுதித்தனனென்றே
னிருள்காட்டிமல்கிரவி லொளித்தெய்தாணிறையென்றீர்
வெருள்காட்டிமீண்டிவையாய்ந் தம்மகன்வான்வேந்தென்ருன்.

உரை.— அவையெலாமாகையி லன்று தயையைப்புரிந்து நாதனவதரித்துவந்தாரோவென்ருேம், அன்று பெத்திலமாநகரிடத்துத் தெளிந்தவொளியோடொருபிள்ளைபிறந்ததென்றேன், அதற்கு நீ ராண்டவனிருண்டவிராநடுவிலேயொளித்து வாரானென்றீர். மீளவும் நாம்வெருவும்படியிப்பொழுதுவந்தவற்றை யாராய்ந்தா லன்றுபெத்திலமிடத்துப் பிறந்தபிள்ளை யவதரித்த நாதன்ருனென்று தோன்றுமென்ருன் சத்தனுசென்க.

75. நாய்முகத்துநின்றனபேய் நவின்றவைகேட்டகீதத்தன்
வீய்முகத்துவியப்பெய்தி விளம்பியதேதிடமென்ருன்
றீய்முகத்துநகைகாட்டிச் சீதாய்வுமறுத்துரைக்கு
நோய்முகத்துவிலங்குறையுண்ணுழைந்திறையோன்பிறப்பாரே.

உரை.—அங்ஙனம் நாய்முகத்துருவாய்நின்ற சத்தனுசு சொன்னவற்றைக்கேட்ட வகீதத்தன் தானெடுத்தவேங்கைமுகத்தில் திசயங்காட்டி யிவன்சொன்னது சத்தியமென்ருன், சீதாய்வென்னும்பேயோவென்னிற் றீமுகத்துநகையைக்காட்டி யவன்சொன்னதை மறுத்துச்சொல்வான், நீ சொன்னபடியன்று பெத்திலநகரிடத்துப்பிறந்தபிள்ளை மிருகமொடுங்குமிடமாகிய குகையிற்பிறந்ததே, அத்தன்மைத் தாண்டவனவதரித்துப் பிறப்பாரோ வில்லையென்ருனென்க.

76. மிடிகொண்டா னுளேந்தழப்பல் வினைகொண்டானிந்தை
யொடும்

படிகொண்டான்பகைகொண்டான் பகர்வரியவனர்கொண்ட
குடிகொண்டான்புறநாட்டிற் கூரிடுக்கண்கொண்டானே
முடிகொண்டாய்மூவுலகோர் மூவிரலாற்கொண்டானே.

உரை. —அங்ஙனம் பெத்திலமென்னுமூரிலேபிறந்தபிள்ளை தரித்திரத்தைக்கொண்டான், நொந்தழும்படி பலவினைகளைக்கொண்டான், இகழ்ச்சியோடு பூமியிலுதித்தான், வுடனே தன்னைப்பகைத்தவரைக்கொண்டான், சொல்லப்படாத துன்பங்களைக்கொண்டவரிடத்திற் பிறந்தான், தன்னூடிழந்து புறநாட்டிற்போயலைந் தரியதுயர்களை மிகுதியாய்க்கொண்டான், இத்தன்மைத்தானே முடியைச்சூழ்ந்து மூவுலகங்களை மூவிரலாற்றாங்காநிற்குமாண்டவனென்ப தல்லவென்றானென்க. ( மூவிரல்களாவன: திற, நீதி, ஞானமென்க )

77. என்றானொத்திசைத்திசைப்ப வெரிப்பலபேய்பேய்க்கரசன்
கன்றாநற்கன்னிவயிற் கடவுளுலகுதிப்பனெனக்
குன்றாமெய்ச்சுருதியதாய்க் கொழுநனுளமரியென்பா
ளன்றாவற்கீன்றமகனு ண்டகையோவன்றென்றான்.

உரை.— ஈதாய் வங்ஙனஞ்சொன்னவளவி லதற்கொத்ததாய்ப் பலவற்றையும் பலபேய்கள்சொன்னபின்பு பேய்க்கரசன்சொல்வான்: குறையாதகன்னிமாறும லொருத்திவயற்றிற் கடவுளவதரித்துப் பிறப்பானென்று தப்பாதவேதத்திற்சொல்லியிருக்கையிற் புருடனையுள்ள மரியென்பவள் சத்தனுசுசொன்னபடி யன்றுபெத்திலநகரிடத்தீன்றபிள்ளையாண்டவனென்னலாமோ வவனல்லவென்றானென்க.

78. கலைபுறங்கண்டொளிர்ஞானங் கடந்திறையோன்கன்னித்
திலைபுறங்கண்டலருயர்த்தோன் கணவனெனவீந்தனகாற் [தாய்க்
கொலைபுறங்கண்டிகற்குணங்கிற் கிவையொளிப்பக்குணித்தனனே
நிலைபுறங்கண்டாண்டகைமுன் னினைத்தபயனின்றுளதால். [னே

உரை.— அங்ஙன மாகையிற் படித்தநூல்களைக் கொண்டொளிரும் ஞானத்தைக்கடந்த வறிவுடையநாதன் தன்னைப்புருடனுதவியின்றிக் கன்னியழியாம லீன்றதாய்க்கு மலர்ந்த பூங்கொடியை யேந்திய சூசையை மணத்துணைவனாகத்தந்தபோது தானவதரித்தசெய்தியைக் கொல்லும்பகையுள்ள பசாசுக்கொளிக்கும்படி நினைத்தம்மணத்தைமுடித்தானல்லோ? அன்றுநாத னிலைக்கும்படிநினைத்தபய னின்றுகண்டதென்க. (மரியென்பவள் புருடனுள்ளவளாகையிற் கன்னியல்லவென்று பசாசெண்ணின தாகையாலவளீன்றபிள்ளையும் நாதனல்லவென்று நிச்சயித்தமையா லாண்டவனினைத்தபயன் கண்டதென்றானென்க.)

79. தேற்றாதோரரும்பொருளை யிருட்டறையுட்டேடுவர்போ
லாற்றாதோர்மந்திரத்தி னலகையினநிலைகாணு
மாற்றாதோர்வெருட்கடலை நீந்தறியாமருண்டலையப்
போற்றாதோர்துயர்விள்ளாப் புகைந்தரசன்புகலுற்றான்.

உரை.— அங்ஙனந் தெளியாதா ரரியதோர்பொருளையிருண்டவறையினுட் டேடினாற்போல வன்றப்பேயெலா முடியாதவாலோசனையைச் செய்து நிலையுங்காணுமல் மாற்றப்படாதவச்சக்கடலை நீந்திக்கடக்கமாட்டாமல் மயங்கியலையாநிற்கத் தன்னுற்காத்து விலகப்படாததுன்பத்தைவிடாமற் புகைந்து சினத்தைக்காட்டிநின்றபேய்க்கரசன் சொன்னானென்க.

## VIII. வேறு.

80. ஐயமீட்பதன் பொருட்டகத்தலைநினைவகன்மின்
வையமீட்பதன் பொருட்டெமால்மலிந்தனவஞ்சப்
பொய்யைமீட்பதன் பொருட்டிறைபிறந்திலனின்ன
மெய்யைமீட்பதன் பொருட்டொருவிளக்குமிலதால்.

உரை.— பேய்க்கரசனெங்ஙனஞ் சொன்னானென்னில், ஆண்டவனவதரித் துலகிற்பிறந்தானே வில்லையோவென்னுஞ்சந்தேகத்தைத்தீர்க்க வலைந்தபலநினைவுகளைவிடுங்கள், பூவுலகிரட்சித்து நம்மால்வளர்ந்த வஞ்சம்பொருந்திய பொய்யைமீட்கும்படி நாதன்மனிதனாய்ப்பிறந்தவனல்ல, இதேமெய், இதைமறுக்கும்படி ஞாயமொன்றுமில்லை யென்றானென்க.

81. திடங்கொடார்புலன் றெளிந்தநாமறிகிலாமனுவாய்த்
தடங்கொடாண்டகை தரணியிலுதிப்பனோவிதுவே
மடங்கொடாயின வழுதெனவந்தநோய்மறுப்ப
விடங்கொடாகுவ தியாதெனவியம்புதீரொன்றான்.

உரை,—மீளவுந் தப்பாதவறிவின்தெளிவுடையநா மறியாமலாண்டவன் வல்லமைகொண்டு மனிதனாய்ப் பூவுலகிற்பிறப்பானோ வில்லை, இது வறியாதார்சொல்லும் பொய்யென்றுநிச்சயித்து நமக்குவந்த துன்பத்தைத்தீர்க்கும்படி யிடம்பொருந்திச்செய்யு முபாயமேதென்று சொல்லுவீராகவென்றான் பேய்க்கரசனென்க.

82. சிரகமாயிரு மருப்பிடைபைத்துயர்செகுத்த
வுரகமாடிய வுருக்கொடுமேழகமுகத்தா
னரகமாதிர நயப்புறவிரகநோய்நல்கும்
விரகவாயுவு வெடிப்பநக்கியம்புதல்கொண்டான்.

உரை.—பேய்க்கரசன் சொன்னதைக்கேட்டுத் தன்னிருகொம்புகளினடுவே தலைச்சீராவொப்பப் படத்தைவிரித்துச் சினந்தாடாநின்ற பாம்பினுருவத்தைவைத்துக்கொண்டு செம்மறிக்கிடாயின்முகத்துநின்றவனுய் நரகத்திற்குநயந்தரும் விரகநோய்விளைவிக்குங்குணத்தவனாய் விரகவாயுவென்னும்பேய் மிகவும் வெடிக்கச்சிரித்துச் சொல்லத்தொடங்கினானென்க.

83. தூமநாடிய வுருவுமொண்கோயிலுந்துகளாய்ச்
சேமநாடெனச் செழுமெசித்திழந்தனசிதைவால்

வீமநாடிய வெருக்கொடுமயங்குவதென்னோ
காமநாடிய காலரிதெமக்குளதுண்டோ.

உரை.— எசித்திடத்தருச்சனையாகப் பூம்புகைசூழ்ந்த வெமதுருவ ங்களு மொளிர்ந்தபொற்கோயில்களுந் தகர்ந்துதூளாகி யெங்காவலாய்நி ன்றவந்நாட்டை நாமிழந்து வந்த துயர்களா லஞ்சிவெருவி மயங்குவா னேன்? காமமொன்றேவழங்கச்செய்தானமக்கரியதொன்றுண்டோ வில் லையென்க.

84. சிலைவல்லார்களுஞ் சிறப்பெழுநெடும்புகழ்திளைநூற் கலைவல்லார்களுங் கடிநிதித்திருக்கொடுபெருங்கோ னிலைவல்லார்களு நிறுவியமற்றவல்லாரு முலைவல்லார்களின் முயலினுன்முரிவிலாருண்டோ.

உரை.—காமத்தின் திறத்தா லாகாததில்லை யென்பதற்குப் போர்மு கத்தஞ்சாதவீரத்து வில்லின்வல்லவருஞ் சிறப்பிற்பொலிந்து நெடியபுக ழையுள்ள நிறைந்த கல்வியின்வல்லவரும் நிதிப்பெருஞ்செல்வத்துயர்ந்த கோலோச்சி யாண்டபூமியில்வல்லவரும் பொலிந்த மற்றயாவருங் காம த்தமிழ்ந்தினகாலத் தவருட்கெடாதவருண்டோவில்லையென்க.

85. காரிழந்திழி துளியெனநாடொறுங்கனலிற் பாரிழந்திழி பல்லுயிரியாவையும்பார்க்கி னீரிழந்திழி நிறைதவிர்காமதரல்லாற் சீரிழந்திழி செயிரினுமெண்ணுவதரிதோ.

உரை.—மேகத்தினின்றுபொழியுந் துளிகளைப்போல நாடோறு ம ட்டின்றிப் பூவுலகினின்று தீநரகில்விழும் பலமனிதருயிர்களைப்பார்க்கு மிடத்தில் நிறைதவிர்ந்த காமத்தமிழ்ந்தியபாவிகளல்லாதே மற்றக்குற்ற ங்களால் விழுமனிதர் கொஞ்சாமாகையி லெண்ணுவதரிதல்ல வென்க.

86. என்னியம்புவ னியானினியிவவொலாமொருங்கு முன்னியம்பிய முரட்டொழிலியாவையுநோக்கிற் கொன்னியம்பினர் காமநாட்டினனெனக்கூறப் பின்னியம்பிடப் பிழைசெயுந்தொழிலியாதுண்டோ.

உரை.— காமத்தால்வருங்கேடுகளைக்காட்டும்படி நானினிவிவரித்துச் சொல்லுவானேன்? முன்பேசின மற்றப்பேய்களெல்லாம் வீணாய்விவரித் துக்காட்டின தம்வலத்தொழிலை யாராய்ந்தவிடத்துக் காமத்தைநாட்டி வழங்கச்செய்தோமென்றொருமொழியா லெல்லாவற்றையுமடக்கிப் பி ன்பு பாவத்தைவிளைவிக்கும் வேறொருதொழிலையுஞ் சொல்லவேண்டு மோ வில்லையென்க.

87. வேட்பதோர்வினை விலக்கினர்மானிடராயின் மீட்பதோர்வினை விழைந்துலகழிக்கும்பற்றொழிலைக் கேட்பதோர்வினை கிடத்திடப்பயனிலாவாசை கோட்பதோர்வினை குணிப்பநாங்கொற்றமாமென்றான்.

உரை.—இவையெலா மங்ஙனமாகையின் மனிதர்காமத்தாசையை வெறுத்தாராயின் மீளவும் பூவுலகினைக்கெடுக்கும்படி யேற்றதொழிலா வதென்றுகேட்பது வீண்தானே, காமத்தின்மேலாசையொன்றே நிறை தவிர்ந்து வளரும்படி யுபாயம்நினைத்துநாஞ்செய்தால் வெற்றியாகுமென் றான் விரகவாயுவென்க.

88. மெய்யெஞ்சாவுரை வியந்துகேட்டலகைகளார்ப்ப
மையெஞ்சாவரை வரையினைத்தழுவியவண்ணம்
பொய்யெஞ்சாவிறை புகன்றவற்பொறைப்புயந்தழுவி
மொய்யெஞ்சாநிறைவஞ்சகமுயல்வினைமொழிந்தான்.

உரை.— விரகவாயுவுசொன்ன தப்பில்லாதவுரைகளை யதிசயப்ப டக்கேட்ட மற்றப்பேய்கள்முழங்காநிற்க மேகங்கள் விடாதுதவழு மு யர்ந்தமலை மற்றொருமலையைத்தழுவினாற்போலக் குறையாதபொய்வல்ல பேய்க்கரசனவையெல்லாவற்றையுஞ்சொன்ன விரகவாயுவின் மலையொ த்தபுயங்களைக்கட்டிக்கொண்டு போர்முகத்துக்குறையாத வஞ்சனைக்கே ற்ற சிறிதுமுயர்ச்சிகளைச்சொல்லத்துடங்கினனென்க.

89. தாங்கரும்பொறை தறிமடுத்தெடுத்தெனவஞ்சத்
தோங்கருந்தொழி லுதவிகொண்டொளித்தவேலெறிந்த
நீங்கரும்பகை நிறையுயிருண்டெனநீயுந்
தீங்கரும்படை யொளித்தியேற்செயிர்புகவெல்வாய்.

உரை.—விரகவாயுவுக்குப் பேய்க்கரசன் வஞ்சனைக்குரியவுறுதிகளை யெங்ஙனஞ்சொன்னானென்னில், தாங்கப்படாதபாரத்தைத் தரையில்க ட்டாயம் போட்டெடுப்பாரைப்போல நீயும்வெல்லும்படி யரியவஞ்சத் தொழில்களை யுதவியாகக்கொள்வாய். மீளவுங் காட்டாம லொளித்தெறி ந்தவேலை மாற்றான்காத்துவிலக்கமாட்டாமற் றப்பாதவனுயிரையுண்பது போல நீயும்பாவமென்றுதோன்றாதபடி பாவமென்னு மாயுதத்தையொ ளித்தாயாகிற் பாவமேவிளைந்துசெயமேகொள்வாயென்க.

90. கொல்வதற்கருங் குணத்துளத்திறையவன்புதைத்த
வெல்வதற்கரு நாணமதொன்றினைவென்று
லொல்வதற்கரு முளமுனக்கமைந்துபாமுகத்திற்
சொல்வதற்கருந் தொடையெனத்துடர்வனதுகளே.

உரை.—அழிப்பதற்கரியதன்மைத் தாண்டவன் மனிதர் மனத்திற் புதைத்துவைத்த வெல்லும்படி யரியநாணமொன்றினை வென்றாயாகிற் பொருந்தியிணங்காதமனமு முனக்கிணங்கிச் சகலபாவங்களும் பாமுக த்திற் றொடைகளைப்போலத்துடர்ந்துவரவுங் காண்பாயென்க.

91. நங்கைநம்பியு நாடியவன்பெனநாட்டிச்
சங்கையம்பல சாதிநன்முறையெனப்புகுத்தி
யங்கையங்கனை பழகினீயகலினுமரிதுன்
வங்கையின்புற வன்னிமுன்வையெனவழல்வாள்.

உரை.— சொன்னநாணத்தை வெல்வதற்குபாயமேதெனில், தங் கைச்சியுமண்ணனும் பற்றிய வன்பென்னும்பெயரைநாட்டித் தம்முட்ச ங்கையென்னுஞ் சாதிமுறையென்னும் பலவிளையாட்டுகளைப்புகுத்தி யங் ஙனம்நாணமழியும்படி பெண்பிள்ளைபழகினளாகி னீயகன்றுபோனலு மு ன்பகைகளிகூரும்படி தீமூன்வைத்தவைக்கோல்போல வவள்காமத்தீயி லேவேகவுங் காண்பாயென்க.

92. மால்கலந்தவா வளரவென்பணியினற்கவிஞர்
நூல்கலந்தவாய் நுனித்ததேனெனத்தருங்காமஞ்
சால்கலந்தபாச் சாற்றவுங்கேட்பவுஞ்செய்வாய்
பால்கலந்தகாற் பருகியநஞ்சுமீட்பரிதே.

உரை.—மீளவும் நாணத்தைவெல்லும்படி மயக்குவிக்குந் தீயவாசை வளரும்பொருட்டுமுன் னென்னேவலினற் கல்விவல்லோ ரரியநூற்படி வாய்மதுப்பொழிந்ததுபோல வினிதாய்ப்பாடிக் காமவிரகநோய்மிகவுங் கலந்து சொன்னபாட்டுகளை மற்றவர்வாயாற்சொல்லவுங் காதாற்கேட்க வுஞ்செய்வாய், பாலோடுகலந்த நஞ்சுகுடித்தாற் றிரும்பாததுபோல வி னியபாவோடு மனதிற்கொண்ட காமத்தாசையு மீளாதென்க.

93. ஒருவருஞ்செயி ருரைப்பவுங்கேட்பவுஞ்செய்தா
லிருவருஞ்செயி ரின்றியுநாணமேவெல்வாய்
மருவரும்புகர் பழகவேவழங்கியமுறையாந்
தெருவரும்புலி சீறினுஞ்சிறுவரும்வெருவார்.

உரை.— மீளவு மங்கங்கே யொருத்தனெருத்திசெய்தகுற்றம் பல ரேசொல்லவுங் கேட்கவுஞ்செய்தாயாகிற் பிறர்குற்றத்தைச்சொன்னவ னும் பொருந்திக்கேட்டவனு மென்றிருவர்செய்யுங் குற்றமுமல்லாதே மற்றவர் நாணமழியும்படி வெல்லுவாய், அதேதெனனிற் கிட்டாதகுற் றமேகிட்டி யண்டையிற்பழகின லிவனவன்செய்ததை நானுஞ்செய்தா லென்னவென்றதுபோல வக்குற்றம்வழங்குமுறையாம், அதெங்ஙனமெ ன்னிற் றெருவேதிரியுங்கொடும்புலி சீறினலும் பழக்கத்தினற் சிறுபிள் ளைகள்முதலா யஞ்சாரென்க

94. அஞ்சினரொனி லமைதிரோர்முறையென்பாய்வஞ்சத்
தெஞ்சிலாயெனி லிணங்குவரிணங்கியபின்றை
நஞ்சிலாநவை நறுமையென்றுணர்ந்துநிற்பவரோ
மஞ்சில்வாழுயர் வரைபெயர்ந்திழிந்தகல்போன்றே.

உரை.—இவையெலாமாகியும் பாவத்துக்கஞ்சினராகி லொருமுறை மாத்திரஞ்சம்மதிப்பீராகவென்பாய், இங்ஙனங் குறையாதவஞ்சத்தோடு பலநாள்சொல்லிக்கொண்டு வருவாயாகி லிணங்குவார், ஒருமுறையிணங் கினபின்பு செய்த வவ்வொருபாவத்தால்வந்த கேடொன்றுங்காணமை யா னஞ்சில்லாதபாவ மின்பமென்றெண்ணி மீளவும் பலபாவங்களில் விழாமனிற்பாரோ வில்லையே, அதெங்ஙனமென்னில் மேகத்துள்வாழு

முயர்ந்தமலையினுச்சியினின்று பெயர்க்கரியபெருங்கல்லும் பெயர்ந்தபின்னரொருவனாலுந் தாங்கப்படாமலுருண்டு விசையோடுவிழுவதுபோலவவருமொரு பாவத்தினின் றொருபாவத்தி லுருண்டுவிழுவாரென்க.

95. நம்பியோடெழி னன்மணத்துணைவியுந்தம்முள்
வெம்பியோர்பகை விளைந்தகாற்காமமும்விளைவாந்
தும்பிசூழலர்த் தொற்கொழுகொம்பிழந்தடுத்த
கொம்பிலேறிய கொழுங்கொடிபோல்வதுகாண்பாய்.

உரை.—மீளவும் புருடனு மழகியமணத்துணைவியு மன்போடுசேராமற் றம்முட்கோபமும் பகையும்விளையச்செய்வாய், செய்தாயாகிற் புறத்துக்காமநாடிப் பாவமும்விளையும். அதெங்ஙனமெனி லின்பமென்று முன்வண்டுகளூடியமலரைப்பூத்த தனது பழையகொழுகொம்பினையிழந்த பூங்கொடி யண்டையிலுள்ளகொம்பின்மே லேறிப்படருந் தன்மையதாகக் காண்பாயென்க.

96. பெண்ணணங்காணியும் பெருமையும்பேரொளிப்பிறப்புந்
திண்ணம்வாழ்க்கையுஞ் சிதையுமென் றிணங்கிலராகில்
வண்ணந்தீர்ந்துளம் விளைந்துதீநசையுறச்செய்வாய்
தண்ணம்வேர்கெடிற் றருவெலாஞ்சாய்தலுமரிதோ.

உரை.— மீளவும் பெண்மைக் கழகியகாணியாகியகற்பும் பெருமையும் பெருங்கீர்த்தியுள்ள குலத்தின்பிறப்பும் வலியிற்பொலிந்த தம்வாழ்க்கையு மிவையெலாம்பாவத்தாற் கெடுவனவென் றொருமுறையாயினும் பாவத்துக்கிணங்காராகிற் குணமிழந்தமனமாகிலுஞ் சோணிப் பொருந்திப்பாவத்தாசையைக்கொள்ளும்படி செய்வாய், செய்தாயாகிலப்பாவத்தை முடிக்கச்செய்வதுமெளியதாம், அதெங்ஙனமென்னிற் குளிர்ந்த வேர் காய்ந்துகெட்டபின்பு மரமெலா மொருங்குடன் தானேசாய்தலு மெளிதென்க.

97. மைமுகத்திவை வகுத்தரும்பழிகொலைகளவும்
பொய்முகத்துறும் புரைபலவினையுமாறுணர்த்தி
நைமுகத்துயிர் நவையுறிக்கேடுறவரசன்
மொய்முகத்தரு முரட்டொழினெடிதுகாட்டினனால்.

உரை.— அங்ஙனம் பேய்க்கரசன் மனிதரைமயக்குவதற்குரியவிவற்றைச்சொல்லி மீளவும் பழிகளுங் கொலைகளுங் களவுகளும் மற்றப்பற்பலபாவங்கள் பொய்வழியாகவிளையுந் தன்மையுமுணர்த்தி மனிதருயிர்கள்குழைந்து குற்றங்களைக்கொண்டு கெடும்படி யரியபோர்த்தொழில்களை நெடிதாய்ச் சொல்லிக்காட்டினனென்க.

## IX. வேறு.

98. கைமுகம்புதைத்தநாகநீன்முகத்தான் கரோதரனக்கிவை
சொல்லும் [யாவு
பொய்முகம்புதைத்தவஞ்சனைத்தொழிலாற் புரையுறவுணர்ந்தவா
மெய்முகம்புதைத்தநூல்விளக்கெய்தி விளங்கினேற்பயனிலாதன்
றோ [ன்றான்.
மைமுகம்புதைத்தபொய்யறங்காட்டல் வடுப்புகும்பெருந்தடமே

உரை.— அங்ஙனம் பலவகைப்பாவங்கள் விளைவிக்கும்படி யெடுத்தவாலோசனைகளைக்கேட்டுக் கையுள்ளநாகமாகிய யானைமுகத்துருவெடுத்துநின்ற கரோதரனென்னும்பேய்நகைத்துச்சொல்லும்: சொன்னபொய்களாலொளித்த வஞ்சனைத்தொழிலைக்கொண்டு பாவம்விளையும்படி நினைத்தவழியெலா மெய்விடாதவேதநூல் விளக்காகக்கொண்டு வெளியாமாகிற் பயனுமில்லதாமல்லோ? நானினைத்தவாலோசனையோவென்னிற் பாவமறைக்கும்படி பொய்யானபுண்ணியங்களைப்படிப்பித்தாலதுவே பாவங்கள்திரளாய்ப்புகும்பெரும் பாதையாமென்றானென்க.

99. நிறைதவிர்தீயகயவருநரகி னிலைதவிர்ந்தின்பவீடடலின்
சிறைதவிர்காலையெய்தலும்விழைவார் செல்கதியெளிதெனக்காட்
முறைதவிரறங்கணம்புளிதாமே மூழ்கியதுகளினுழ்ந்தஞ்சா [டி
மறைதவிரறத்தால்வீடுறவுள்ளி மாய்ந்தெரிநரகிடைவீழ்வார்.

உரை.— பொய்யறங்காட்டல் பாவம்புகும்வழி யெங்ஙனமாமெனில், நீதிநிறைதவிர்ந்தொழுகும்பாவிகள்முதலாய் நரகத்தில்விழாமலின்பவான்வீட்டை யிறக்கும்பொழு தடைதலே விரும்புவாராகையிற் செல்கதியடைத லெளிதென்று பொய்வழியைக்காட்டினேன், முறைதவிர்ந்த பொய்யானவறங்களை நம்பிப் பாவஞ்செய்தாலுங் கரையேறுவோமென்றெண்ணித் தாமேபாவத்தமிழ்ந்தி யஞ்சாமல்வேதவிதிதவிர்ந்த வறத்தின்பயத்தாற் றப்பாமல் வான்வீட்டைச்சேருவோமென்றெண்ணிச் செத்துநரகிலென்றென்றைக்கும் வேகும்படிவிழுவாரென்க.

100. நீர்விளைசிறந்தபற்றுறைமூழ்க னீர்த்துளியிறைத்துயர்வா
ரல் [தல்
பேர்விளையோதல்பெருமணிதரித்தல் பெருஞ்சடைநீடுறவளர்த்
சூர்விளையழலேகொன்றநீறணிதல் துஞ்சினூர்க்கெள்ளமுதிறைத்த
லேர்விளைகதிசேர்வழியெனிற்பாவ மியன்றுறுந்தடமதாமன்றோ.

உரை.— பலவிசேட நீர்த்துறையாடவுங் காலமேயுயர நீரையிறைக்கவும் பலபெயர்களையோதவும் பலவகைப்பெருமணிகளைத் தரிக்கவும் பெருஞ்சடைநீளவளர்க்கவுஞ் சுட்டசாம்பலைப்பூசவுஞ் செத்தவர்க் கெள்ளும்பாலு மிறைக்கவு மித்தொகைப்பட்டவற்றைச் செய்தமாத்திரத்

திற் கோடிபாவஞ்செய்திருந்தாலுந் தப்பாமல் வான்மேற்கதியைச்சேர லாமென்றெண்ணின காலத்துச் சகலபாவந்துடர்ந்துவரும் வழியாமல் லோவென்க.

101. இவ்வழியெளிதிற்புரையெலாந்தீரு மென்றுளிபுரையின் மேற்சாய்ந்து [வேண்டு
செவ்வழியொழிந்தமன் னுயிர்கெடவோர் செயிர்வழிகாட்டவோ
மொய்வ்வழியருவிமுன் னுளவிழிவின் முடுகிவந்தோடவுநாமோ
வவ்வழிகாட்டல்வேண்டுமென் றுரைத்தா னறிவளவருங்கொடுஞ் சடத்தான்.

உரை.—சொன்ன பொய்யானவரத்தின்வழியாற்செய்த வெண்ணப் படாத பாவமெல்லா மெளிதாய்த்தீருமென்று நிச்சயமாய்நினைத்தபின்பு பாவத்தின்மேற்சாய்ந்த குணத்தோடு செவ்வழியைவிட்டொழுகு மனி தரெல்லாருங் கெடும்படி பாவத்தின்வழியைக்காட்டவேணுமோ வில்லை யே, அதெங்ஙனமென்னி லோடிவரும்புனல் தனக்குமுன்னுள்ளபள்ள த்திலேவீழ்ந்து முடுகியோடும்படி நாம்வழியையதற்குக் காட்டவேணு மோ வில்லையென்றான் கூர்ந்தவறிவிறைந்த கொடியவஞ்சனையுள்ள க ரோதரனென்க.

102. சடக்கலியெனும்பேய்மற்றெலாங்களிப்பிற் சருக்கொடுக ருங்கடலோதம்
படக்கலிதளிர்ப்பவுகளிமுன்பாய்ந்தான் படரிருண்முகிறருமசனி
யடக்கலியெடுத்தார்த்தறிவறைபோக்கி யழலறையலகைகாணெ ஞ்சங் [டைகாணேன்.
கெடக்கலியென்றேமருட்டுணர்வென்றே கேதமொன்றெசித்தி

உரை.— இவையெலாமாசையில் மற்றப்பேயகள்களிகூர்ந் தாங் காரமாய்க் கடலிறைலியினுங் கடிதார்த்திருப்பச் சடக்கலியென்னும் பேய்குதித்துமுன்னேபாய்ந்து மேகத்திடியினு முழங்கிச்சொல்லும்: அறி வினிறைமயங்கச் சினத்தழன்றபேய்களே நெஞ்சுபிளந்துகெடும்படி முழ க்கமுமென்ன? மனம்நோகும்படிமயக்கமுமென்ன? எசித்திடத்துநமக்கொ ருகேடும்வந்தது காணேனென்றானென்க.

103. மதிவளருணர்வற்றெசித்தனர்முன்னாள் வதைவளர்நரகி டைவீழ்ந்தார் [ரைக்குந்
நிதிவளர்கோயில்வீழ்ந்துநாம்வீழ்ந்த நிலைமையுஞ்சூசையாங்கு
துதிவளர்மறையுமுணர்ந்தபின்வீழ்ந்து துகளுமெண்மடங்கெழச் சுடவான் [றன்.
பதிவளரிறைவற்கிகழ்ச்சியுநமக்கோர் பரிவளர்களிப்புமாமென்

உரை — இப்பொழுதெசித்திடத் தெமக்குக்கேடுவராமனுந்தேடின பாவத்திலாபமாயிற்று. அதெங்ஙனமென்னில் முன்னாளிலெசித்தா ரறி வின்றிநரகத்தில்விழுந்தார், இனிநமக்குக்கட்டியிருந்த பொற்கோயில்க

ணுந்தகர்ந்து அவர்வணங்கிய தேவராகியநாமும் விழுந்தோடினதன்மையு
மறிந்து அங்கேசேர்ந்தசூசைமாமுனி யவர்க்குச்சொல்லிக்காட்டும் புகழ
ப்பட்ட மெய்யானவேதத்தின்தன்மையுமறிந்து நரகில்விழவே யவரறிந்
து கட்டிக்கொள்ளும்பாவ மெட்டத்தனையதிகமாகி வான்வேந்தனாகியக
டவுளுக் கிகழ்ச்சியும் நாமவர்மேல்வைத்தபழிக்களவாக நமக்குமகிழ்ச்சியு
மாமல்லோவென்றானென்க.

104. ஐவகைப்பொறியும்வாட்டியசூசை யறையுநூலுறுதியா
லன்னார் [சன்
மெய்வகைத்தவத்துநிலைபெறினின்பம் விளையுமோநமக்கெனவர
பொய்வகைச்சடத்துநான்புகுந்தெசித்தார் புளையுறவவன்மொழி
பழித்துச் [ண்டே.
செய்வகைத்திறத்துநிற்பரோவென்னச் செப்பினான்சடக்கலிமீ

உரை.— அவற்றைக்கேட்டுப் பேய்க்கரசன் பஞ்சேந்திரியங்களைவா
ட்டிய சூசைமாமுனி யெசித்திலேசொல்லிக்காட்டும் வேதநூலுறுதியை
க்கொண்டவர் மெய்யிற்றெளிந்து தவத்திலேநிலைகொண்டவராகி லப்பொ
ழுது நீசொன்னபடி நமக்குமகிழ்ச்சியாகுமோ வில்லையென்றான். என்ற
தற்குச் சடக்கலிபொய்யிற்பொலிந்தவஞ்சனைவழியானா னங்கேபோயவர்
மீளவும்பாவத்தில்விழும்படியச்சூசை சொல்லு முறுதிமொழிகளைப்பழி
த்துவருகையி லென்றிறத்தெதிராக விழாமனிற்பாரோவென்று மீளவுஞ்
சொன்னானென்க.

105. கொக்கணிமுடியுங்கொடிச்சடைச்சிரமுங் குண்டலச்செ
வியும்வெண்பலியை
மிக்கணிநுதலும்பொறியடுந்தவத்து மெலிவொடுவாடியமுகமு
மக்கணிமார்புந்தண்டொடுகரக வங்கையுமிவற்றொடுமறையைத்
தொக்கணிவேடமுனிவரனெனநான் றோன்றியாங்கெவரையும்
வெல்வேன்.

உரை.— சூசைசொற்படி யெசித்தார் நன்னெறிநில்லாததற்குச் சட
க்கலிநினைத்தவுபாயஞ் சொல்லிக்காட்டத்துடங்கினான், நானே கொக்கி
றகுகளை முடியாகச்சூடி நீண்டசடையைவளர்த்துச் செவிகளி லிருகுண்
டலங்களும் நெற்றியி னிறைவிபூதியு மைம்பொறிகளைக்கொன்ற தவத்தின்
சாயலாய்மெலிந்து வாடியமுகம மார்பிற்றூங்கிய வக்குமணித்தாவட
முங் கையிற்றண்டுகோலுங்கரமு மிவற்றையொருங்குடன்தரித்து வே
தத்தின் சாயலாய்த்தோன்றிய மகாரிஷியாக நானேயங்கேதோன்றி யெ
ல்லாரையு மேய்த்துவெல்லுவேனென்க.

106. தொல்லையிலளித்ததேவரைநீங்கித் தொழுபவோபுது
விறையென்பே
னெல்லையின்முன்னோரொழுகியநெறியே யிழிவுறும்பழுதோ
வென்பே

ளுல்லையினெடுநாட்டவப்பயன்பேதை யுரைகள்கேட்டொருவ
வோவென்பேன்
கொல்லையின்முளைத்தகளையெனப்புல்லர் கொடுமுறைகொய்மினீ
ரென்பேன்.

உரை.— எசித்தாரையேய்க்கும்படி பழமையிலுங்களை யிரட்சித்து வந்ததேவரைக் கைவிட்டுப் புதிதாய்முளைத்த தேவனொருவனை வணங்க வோவென்பேன், மட்டின்றிமுன்னிருந்தபெரியோர் நடந்தவழி பழு தோவென்பேன், நீங்களேநெடுநாட்செய்ததவத்தினு லடைந்தபலனெ ல்லாமிப்பொழுதொருகணத் தறிவில்லாதொருவன்சொன்னதைக்கேட்டி ழந்துபோகவோவென்பேன், கொல்லையிற் பசும்பயிரிடத்துமுளைத்தக் ளைகளைவெட்டியெறிந்ததுபோல வுங்களிடத்துமுளைத்த நீசரது கொடி யமுறையைப் பிடுங்கிவிடுங்களென்பேனென்க.

107. புற்குலத்துதித்துப்பொலிசையற்றெய்திப் புறத்துநாட்டி
ரந்துசேர்ந்தொருவன் [ன்
சொற்குலத்திழிவிற்பிதற்றியகதைகள் சுருதியோநூன்மலிநாட்டி
னற்குலத்துதித்தநீர்புறநீச நவமுறையொழுகவுநன்றே
தற்குலத்திழிவிதென்றுளமருட்டுஞ் சடத்தொழிற்கரிதுண்டோ
வென்றான்.

உரை.— மீளவுஞ் சூசையைப்பழித்து நீசர்குலத்திற்பிறந்து பிழை ப்பின்றிப் புறநாட்டிலிரந்துவந்த வொருவன்தீர்க்கமா யுங்கள்மொழிக ளையுச்சிரிக்கமாட்டாமற் பிதற்றிக்காட்டியகதைகளை வேதமென்றெண் ணவோ வெல்லாநூலும்பெருந்தியநாட்டின் மேற்குலத்திற்பிறந்தநீங்கள் புறத்துவந்த நீசநவமுறைகளைக்கொண்டு நடப்பதுநல்லதோ விதுவவனை வன் தன்குலத்திற்கீனந்தரும்வழியென்றுசொல்லி யுள்ளமயக்குவிக்கவ ல்ல வென்வஞ்சனைக்கரியதுண்டோ வென்றான் சடக்கலியென்க.

108. பொய்நிறத்துரைத்ததிழிவுறவெளியாய்ப் பூதலத்தொருப்
படப்பிறந்து
மெய்நிறத்துயர்தொல்வேதமதென்றும் விரியொளிமணிமுடிவே
ந்தர் [ட்சி
செய்நிறக்குலத்தோனம்முனியென்றுந் திருப்புகழ்கலைநிறைமா
பெய்நிறத்தவனுடென்றுமாங்குணர்கிற் பிழையுனக்கென்றனன்
வேந்தே.

உரை.—சடக்கலிசொன்னதற்குப் பேய்க்கரசன் சொல்வான், நீபொ ய்யாகச் சொன்னதெல்லாம்வெளியாகி யவ்வேதம் பூவுலகுண்டாக்கப்ப ட்டபொழுது கூடப்பிறந்து பழையமெய்யானவேத மதுவேயென்றும், நீபழித்தசூசை யொளியைப்பரப்பியமணிமுடிசூழ்ந்தவரசர் குலத்திற்பிற ந்தமுனியேயென்று மவன்பிறந்தநாடு செல்வமும்புகழுங் கல்வியும்நீதியு மாட்சியு மிவையெலாம்வளருஞ் சிறப்பிற்பொலிந்தநாடதுவென்று மெ சித்தாரொப்படியாகிலு மறிந்தாராகி லுனக்குக்கேடல்லோவென்றான் பே ய்க்கரசனென்க.

109. எண்வழிதவறியுள்ளியசூட்சி யிதுவெனவெறியெலா மிரட்ட
விண்வழியசனியொலியெழநக்கு வெவ்வினைச்சடக்கலிவிளம்புங்
கண்வழியுற்றவுணர்வின்முன்மாக்கட் காதிடுமுணர்வெவன்செய்யுந் [ருன்.
தெண்வழியுவரிச்சுறவுதன்காதை தெரிகிலேற்கேண்மினேவென்

உரை.—பேய்க்கரசன் சொன்னதற்கொப்ப விதுவெண்ணமற் றவறினைத்தசூட்சிதானென்று மற்றப்பேய்களெல்லா முழங்காலிநிற்கச் சடக்கலிவானிடியிடித்தாற் போல வெடிக்கநக்குச்சொல்லும்: கண்டவை முன் மனிதர்கேட்டது நிற்குமோ தெண்கடல்வாழுஞ்சுறுவின்கதையை யறியீராகி ஞன்சொல்லக்கேளுங்களென்றுனென்க.

110. வெள்ளமேலெதிர்த்தவிளஞ்சுறுக்கூவல் விழவெவணீயெனக்குழிமீன்
கொள்ளமேற்கரையுமளவுமற்றுழ்ந்து கொழுமணிகொழித்தநீண்புணரி [விப்
யுள்ளமேற்சிறப்புக்கூறவிக்குழியோடொத்ததுண்டோவெனநக
பள்ளமேயுறையுங்காலைநீருரைத்த பழியெலாஞ்செல்லுமென்றது [வே.

உரை.— ஒருநாள் வெள்ளமோடிவருகையி லெதிர்த்துவந்தசுறுவின்குஞ்சு பிரண்டவாற்றுநீரோ டொருகிணற்றில்விழுந்ததாம், அங்கேயிருந்தமீன்கள் நீயெவ்விடத்தானென்றுகேட்க வச்சுறு கரையுங்காணுதகன்று அளவுமில்லாதாழ்ந்து விளங்கியமணியினங்களைக்கொழித்த நீண்டகடலிலுள்ள சிறப்பின்மேன்மையைச் சொல்லிக்காட்டினவிடத் தம்மீன்கள்சிரித்து இக்கிணறுபோலச் சிறந்த நீரிடமுண்டோவென்று நகைத்தவளவி லச்சுறு நாணிக்கிணற்றில்விழுந்தமையா ஞனிங்கேகிடக்குமளவுஞ் சொன்னவிகழ்ச்சியெல்லாஞ் செல்லுமல்லோவென்றதென்க. (ஆகையாற் சூசை முடிசூடிய வரசர்குலத்தோனுயினு மவனுரைத்தநூலுலகத்தோடுதுவக்கி மெய்யானவேதமாயினு மவன்பிறந்தநாடு பெருமையிற்சிறந்ததாயினு மவன்புறநாட்டிலிருக்குமளவு மிவையெலாஞ்செல்லாமற் சொன்னநிந்தை செல்லுமென்பதுகருத்து)

111. மீளவுங்கருவித்தழியவுமழியா வெண்ணெயிற்றிரண்டபின்கெடவு [கான்
நீளவுங்கெடாதுபிறந்துமாய்ந்திடவு நின்றுநற்கலைத்துறையுறுங்
மாளவுமாளாநோயிற்றீந்திறவு மக்களைவருத்தின்ஞசெயுங்கா
லாளவுஞ்செய்வேனத்துயர்தீர வருச்சனைவழங்கவுஞ்செய்வேன்.

உரை.— மீளவு மெசித்தாரிடத்துக் கருப்பங்கூடாதபடிவித்தழியவுஞ்செய்வேன், அங்ஙனம்வித்தழியாமல் வெண்ணெய்போலத்திரண்டாலுந் திரண்டபின்பூகெடவுஞ்செய்வேன், அங்ஙனங் கெடாம னெடுநாள்

நின்று பருவத்துப் பிள்ளைபிறந்தாலும் பிறந்தவுடனேசாகவுஞ் செய்வேன், அங்ஙனஞ் சாகாமலிருந்து கல்வியடையும்பருவத்துச்சாகவுஞ் செய்வேன், அங்ஙனஞ்சாகாதாயின் நோயிற்றீந்துமெலியவுஞ்செய்வேன், இவ்வருத்தங்கள்யாவையு மவர்மக்களிடத்து நான்செய்யுங்காலத்து நாமேயங்கேயாளவு மத்துயர்களைத்தீர்க்கும்படி நமக்காராதனை திரும்பி வழங்கவுஞ் செய்வேனென்க.

112. இற்றைநான்செய்யாவாண்டவன்விலக்கி லியன்றுறுநோய்துயரிடுக்கண்
மற்றையாவையுந்தாமொழிந்ததொற்றேவர் மனச்சினத்தயர்ந்தவையென்பே
னற்றைநான்செயுங்காலம்முனியுய்த லரியதாய்வீழ்ந்தவர்ச்சனைகொண்
டொற்றையாழியினீயாளுவாயென்ன வுரைத்தனன்சடக்கலிமாதோ.

உரை.— மீளவு மிவையெல்லாவற்றையும் நான்செய்யாதபடி யாண்டவன்விலக்கினல் மழையின்மை, தீப்பற்றல், பயிரழிவு குடிப்பகைமுதலாகிய பலகாரணத்தியல்போடு தானேவரும்நோய் துன்ப மிடையூறுகளெல்லாவற்றையுந் தாங்கைவிட்டுவணங்காத பழையதேவர் கோபித்துச்செய்ததாகச்சொல்வேன். அங்ஙனம்நானசெய்யும்பொழுதே யம்முனியாகிய சூசை பிழைக்கவுமரிதாகி விழுந்தவாராதனைமீளவுங்கொண்டு நீயேயெதிரின்றித் தனியங்கேயாளுவாயென்று சொன்னன் சடக்கலியென்க.

## X. வேறு.

113. மஞ்சொடுகடலொலி மயங்கவார்த்தபேய்
நஞ்சொடுவளர்சட நடையிலின்னவா
யஞ்சொடும்மதி யளவும்போக்கிவெந்
நெஞ்சொடுவளர்கழி நினைக்குந்தன்மையோ.

உரை.— அங்ஙன மேகத்தொலியுந் தெண்கடலொலியு மயங்கும்படி பேயெலாமுழங்கி நஞ்சோடுவளர்ந்த வஞ்சனைநடையா லாராய்ந்தாராயந் தெண்மாதமும்போக்கிச் சொன்னவாலோசனையி லப்பேய்நெஞ்சிலேவளர்ந்த கொடியபழி நான்நினைக்குந்தன்மையல்லவென்க.

114. இழுக்கியைசெருக்கெழ வின்னயாவையும்
வழுக்கியைகளிப்பொடு கேட்டமன்னவ
னெழுக்கியைசெவிகளை யொதுக்கிக்கொம்பசைத்
தழுக்கியையெயிற்றுவா யவிழ்த்துக்கூறினன்.

உரை.— பின்னுக்கிழுக்குபட வுளத்தாங்காரமெழும்படி யிவையெல்லாவற்றையும் வழுக்குள்ளமகிழ்ச்சியோடு கேட்டபேய்க்கரசன் ஒழுங்குபடநிறுவி நீண்ட தனதுசெவிகளையொலுக்கி யுயர்ந்ததன்கொம்புகளை நயந்தசைத் தழுக்குநிறைந்த வெயிற்றுவாயைத்திறந்து சொன்னானென்க.

115. செயற்கடல்கடந்தவெம் வஞ்சச்சேனைகாள்
மயற்கடல்கடந்தநும் மந்திரத்தரு
ரியற்கடல்கடந்துநா னீந்தியின்புறும்
பயற்கடல்கடந்தெனப் பரிவற்றோங்கினேன்.

உரை.— செய்யுந்தன்மையெல்லாங்கடந்த வஞ்சத்துயர்ந்த வெஞ்சேனைகளே மயக்கமின்றி நீங்கள்சொன்னவாலோசனையாற் றுன்பக்கடலைநீந்திக்கடந்து நானின்பத்தின்பயனையடைந்து குறையின்றியோங்கினேனென்க.

116. காட்சியுங்கருத்தெலாங் கடந்தமாயைதன்
சூட்சியுங்கிளைத்தநீர் துணையெற்காக வென்
மாட்சியுங்கோன்மையு மறுக்கலாவதோ
தாட்சியுங்கலக்கமுந் தணந்தகூளிகாள்.

உரை.— அங்ஙனம் நிறைதெளிந்தகாட்சியுங் கருதப்படாதமாயையின்சூட்சியு மிக்கவடைந்த நீங்க ளெனக்குத்துணையாகநிற்கவே யென்மாட்சியுங் கோன்மையுமழியுமோ தாழ்வுங்கலக்கமுமொன்றில்லாத பேய்களேயென்க.

117. இன்புறப்பாற்கலந் தேதமூட்டுதீர்
துன்புறவெருட்டுதீர் துதியையாடுதீ
ரன்புறவணுகுதீ ரனைவருங்கனற்
பின்புறவருந்துதீர் பிழைப்பெமக்கிதே.

உரை.— அங்ஙன மாலோசனை தீர்ந்தபடிபோ யின்பங்காட்டிப் பாலோடுகலந்த பாவத்தின்மையை யெவர்க்குமூட்டவு மோரோரிடத்தவர் வருந்தும்படி யச்சங்காட்டவு மோரோரிடத்தவர்மகிழும்படிபுகழவு மன்புகாட்டியணுகி யெவரும்பின்பு நரகில்விழும்படிவருந்துவீராக, நமக்குப்பிழைப்பிதேயென்க.

118. உள்ளியவஞ்சனை யுதவவவ்விரு
தெள்ளியவறிவினோர் திறம்பிலாத்தவம்
விள்ளியமுறையொடு வினைகொண்டாலலா
லெள்ளியகசடுகுத் தெசித்திலாளவோ.

உரை.— ஆகிலும் நினைத்தவஞ்சனை வீணாய்ப்போகாம லுதவும்படிய ங்கேயிருக்குந் தெளிந்தவறிவுடைய விருபேருமாகியசூசையுமரியு மென் றுங்குறையாத தந்தவமழிந்து தாம்வினைகொண்டாலொழிய நிந்தைக்கு க்காரணமாகியபாவங்களைச்செலுத்தி நாமெசித்திடத்தி லாளமாட்டோ மென்க.

119. இத்திறத்தாங்குறை யிரண்டுயூதர்கள்
மைத்திறத்துளங்கெடின் வழங்கும்வெற்றியென்
றெத்திறத்திலுமொருங் கியன்றநாமெலாம்
பொய்த்திறத்தவரைமுன் பொருதல்வேண்டுமால்.

உரை.— ஆகையாலங்கேயிருக்கும் முன்சொன்ன விரண்டுயூதராகிய மரியுஞ்சூசையுமயங்கி யுள்ளே கேடுறும்படிசெய்தா லெசித்தெலா மெ ளிதாய்வெல்லலா மென்றமையா லெல்லாரு மொருங்குடன்கூடி யெ த்திறத்தாயினும் பொய்யைக்கொண் டவ்விருபேர்மேலே முந்திப் போ ரைத்துடங்கல்வேண்டுமென்க.

120. அனைவருமோரணி யாகவாகவ
நினைவருமுரத்தொடு நிகர்த்தநீர்மையால்
வினைவருமுகத்தவர் மெலியவென்றபின்
னனைவருமெசித்தெலா நயப்பவெல்லுவாம்.

உரை.— நாமெல்லாரு மங்ஙன மோரணியாக வவர்மே லரியவல்ல மைகொண்டு போரைச்செய்யும்பொழு தவர்வினைகொண் டுளத்துமெலி யும்படி யவரை நாம் வென்றபின்பு மதுமலர்பூத்த வெசித்துநாடெலா மெளிதாய்வெல்லுவோமென்க.

121. புல்வதற்கருஞ்சடம் புணர்ந்தசூட்சியால்
வெல்வதற்கருஞ்சமர் வினைசெய்வார்க்கெலா
மொல்வதற்கரும்பய னுதவுவேனெனாச்
சொல்வதற்கருஞ்சினத் தரசன்சொற்றினன்.

உரை.— அங்ஙன மடைதற்கரிய வஞ்சனைச்சூட்சியால்வெல்லப்ப டாத போரைச்செய்தவரெல்லாருக்கும் நானேகிடைப்பதற்கரிய வரிசைக ளைச்செய்துதவுவேனென்று சொல்லிலடங்காத கோபத்துடனே பேய் க்கரசன் சொன்னனென்க.

122. அழுந்துவிட்டிரளிடி யனையகொம்புகள்
கொழுந்துவிட்டழன்றர சடியிற்கூர்பட
விழுந்துவிட்டிரள்கெட வெறியொருங்குமார்ப்
பெழுந்துவிட்டிரட்டின வெரியுங்கூசவே.

உரை.— பேய்க்கரசன் சொன்னதைக்கேட்டு மற்றப்பேயெலா மொருங்குடன்கூடி யிடிகள்திரளாய் விழுந்தழுந்திணற்போல வரசனடி யின்மேற் றங்கொம்புகள் கொழுந்துவிட்டெரிந்து மிகவுந்தைக்கும்படி யவனடியில்விழுந்து திரண்ட மேகமுழக்கத்திலுங் கொடியதாயார்த்தெ ழுந்து நரகமெல்லாங்கூசும்படி முழங்கினவென்க.

123. கொக்கரித்திரட்டிடக் குதித்துவப்பறு
மிக்கரித்திரட்பட வெற்றிவெற்றியென்
றெக்கரித்தழற்றுளி யிறைத்திறைத்தன
நக்கரித்தெயிற்றெரி நகுத்தபேயெலாம்.

உரை.— அங்ஙனம் நினைத்தவற்றை நிறைவேற்றினாற்போலவன்று பேயெலா மழுக்கினற் பச்சைநிறத் தெயிற்றுவழியாலெரியைக்கொப்ப ளிக்க மிகவுநக்கிக் கொக்கரித்துமுழங்கித்துள்ளி மகிழ்ந்து திரண்டசிங் கங்களினுங் கொடிதாய் வெற்றிவெற்றியென்று கூடப்பிட்டுப் பூமழையா கச் சூழநெருப்பினையிறைத்தனவென்க.

124. புகழ்ச்சிவந்துற்றகாற் பொலிந்தமாண்பிணு
ரிகழ்ச்சிவந்துதிக்குமென் றெண்ணிப்போற்றுவார்
நிகழ்ச்சிவந்துதிப்பது நினைக்கிலாதபேய்
மகிழ்ச்சிவந்துவந்தன கடையின்மாழ்கவே.

உரை.— உயர்ந்தபெருமையுடையோர் புகழப்பட்டகாலத் துள்ளஞ் சிதறும விளியிகழ்ச்சிவருமாக்குமென்றெண்ணி வாராதபடி பாதுகாப் பாரல்லோ? நீசக்குணத்தையுடையபேய்களோவென்னிற் றமக்குக்கே டுவரும்வழியைப் பாராமற் பின்புமுடிவில்மயங்கி மெலியும்படி யன்று மட்டின்றி மகிழ்ந்தனவென்க.

குணுங்குமந்திரப்படலம் முற்றும்.

ஆகப்படலம் – 23 – க்கு விருத்தம்

2126.





# இருபத்துநான்காவது

# சோருதோர்வைப் படலம்.

## I. வேறு.

1. காமலியலர்க்கோலானுங் கன்னியந்துணைவியாளுந்
தாமலிதவத்தினிஞ்சி தளர்ந்திடைக்கதுவிட்டெஞ்சத்
தீமலிகுணுங்கெலாமேழ் செயிர்க்குரியணிகளேழாய்ப்
பூமலிநடுக்கிற்கூசப் புதவொழிந்தனபோரோர்ந்தே.

உரை.— முன்சொன்னபடியே பூங்கொடியேந்திய சூசையுங் கன்னியழியாத வவன்துணைவியாகியமரியு மென்றிருவருடைய நிறைந்ததவமாகிய கோட்டைதளர்ந்து நடுவில்வாய்விட்டிடிந்துவிழும்படியவர்மேற் போரைச்செய்ய நரகத்துள்ள பசாசுகளெல்லா மொருங்குடன்கூடி யேழுபிரதானபாவங்களுக்குரிய வேழணிகளாகப் பூவுலகெல்லாமிகவுமநடுங்கிக்கூசும்படி நரகத்தினைவிட்டொழிந்தனவென்க. (ஏழுபிரதானபாவங்களாவன: ஆங்காரம், உலோபம், காமம், கோபம், காய்மகாரம், ஆகாரப்பொம்மல், அறத்தளர்ச்சி யிவையேழென்க.)

2. வெருவெனுமதத்தயானை வெள்ளமேவளராங்காரத்
தருவெனுங்கொடிஞ்சியோங்கச் சமைத்ததேரிரட்டிகோபச்
செருவெனுங்கலினப்பாய்மாத் தேரினுமிரட்டியாசை
யுருவெனுமெண்ணிற்காலா ளுடையபேய்ப்படைகடோற்றம்.

உரை.— போர்க்குவந்தபேய்ப்படை யெங்ஙனமென்னில், அச்சமென்னுமதத்தயானைகளொருவெள்ளமு மாங்காரமென்று முயர்ந்ததேர்களிருவெள்ளமுங் கோபமென்னுங்குதிரைகள் நாலுவெள்ளமும் பலவாசைகளென்னுங் காலாளுங் கணக்கின்றிக்கூடித்தோன்றின பேய்ப்படைகளென்க.

3. தீய்வினைகாமமம்பாய்ச் சீற்றமேவயிரவாளாய்
நோய்வினைகுரோதம்வேலாய் நொறிக்கரத்துலோபமெஃகாய்
வாய்வினைபொய்நீண்கோலாய் மடிநெடுங்கதையாயேந்திப்
பேய்வினைசமரிற்கைக்கொள் பெரும்படைக்கலங்களன்றோ.

உரை.— அப்பேய் கையிற்பிடித்த வாயுதங்களேதெனில், காமமே யம்பாகவுஞ் சினமேவயிரவாளாகவும் நெட்டூரமேவேலாகவு மடக்கினகை யுள்ளவுலோபமே சக்கரமாகவுஞ் சொல்லும்பொய்யே யீட்டியாகவுஞ் சோம்பலேநீண்டகதாயுதமாகவுமேந்திப் பேய்செய்யத்தகும்போரிற்கை ப்பிடித்த வாயுதவகைப்பலவிவையென்க.

4. நீரணியுலகமாட நெடுங்கடலொடுங்கிப்பொங்கக்
காரணிவானம்விம்மக் காரணமாறியாமாக்கள்
சூரணியுளத்திற்கூசச் சுடுநரகலகையாவும்
போரணியாகச்செல்லப் பேய்க்கரசெழுந்ததன்றோ.

உரை.— அத்தன்மைத்தாகியபடையோடு கடல்சூழ்ந்த பூவுலகாட வுங் கடலொதுங்கிப்பொங்கவும் மேகந்திரியும்வானுலகிரங்கவுங் காரணம றியாமல் மனிதரெல்லாரும்மனதில்வருந்திக்கூசவும் நரகப்பேயெலாம்பெ ரும்படையாக விருபுடையிற்சூழ்ந்துவரப் பேய்கரச னரகினைவிட்டெ ழுந்ததானென்க.

5. எழுந்தழலிடியேறன்ன வெமொழிவாய்கொண்டார்த்துக்
கொழுந்தழல்விழிகடும்மிக் குணுக்கினத்தரசனெஞ்சத்
தழுந்தழன்முனிவின்மற்ற வலகையோடெழுவகண்டு
விழுந்தழலுளத்தூண்டென்ன விண்ணவரிரங்கிநொந்தார்.

உரை.— அங்ஙனம் பேய்க்கரச னரகத்தைவிட்டெழுந்திடியைப் போலத் தன்னேழுவாய்கொண்டு மிகவுமுழங்கிக்கண்வழியா லழற்கொ ழுந்துகளைத்தும்மி நெஞ்சிலேயழுந்திய சினத்திலழன்ற மற்றப்பசாசுக ளோடேபுறப்பட வானவர்கண்டு தம்மனதிலேசெந்தீவிழுந்ததுபோல மிகவும்நமக்கிரங்கிநொந்தாரென்க.

6. ஐவகைப்பொறியின்மொய்த்தவைம்பகைகொலையிற்சூழ்ந்து
மெய்வகைத்திறத்திலீனம் விளைந்துளந்தெளியாமாக்கள்
பொய்வகைச்சடத்திலாண்மை பொலிந்தபேய்திரண்டுசெய்யு
மைவகைச்சமரினிற்பர் வையகத்தெவரோவென்பார்.

உரை.— அவற்றைக்கண்டவானவர் மனிதர்க் கெங்ஙன மிரங்கினு ரென்னில், பஞ்சேந்திரியங்களாகிய வைந்துபகைகளு மோயாம லுயி ரைக்கொன்றுசூழ்ந்திருக்கக் கொண்டவுடலினு லீனங்கொண்டுதெளிவி

ன்றிமயங்கு மனிதராகையிற் பொய்யைக்காட்டியவஞ்சனையோடு மிக்க
வல்லமையுள்ளபேயெலா மொருங்குடன்கூடிமயக்குவித்துச் செய்யும்
போர்முகத்து மனிதருள் ளாரோநிற்பா ரென்பாரென்க.

7. திக்கெலாநடுங்கிஞானந் தெருட்டவமறத்தின்சீல
மிக்கெலாமொதுங்கிநீங்க வெகுண்டவித்தன்மைபாரிற்
புக்கெலாவெறிகள்சேர்காற் பொய்கொலைகளவுகாமந்
தொக்கெலாம்பரந்துமாக்கட் டொகையிலாருய்வரென்பார்.

உரை.— மீளவும்பூவுலகுள்ளதிக்குகளெல்லாம் நடுங்கிஞானமுந்தெ
ளிவுந் தவமு மற்றவறத்தின்சீலங்களெல்லா மப்புறத்தொதுங்கிப்போம்
படி யிங்ஙனம் பசாசெல்லாங்கூடி மிக்கசினத்துடன் பூவுலகில்வந்தகா
லத்துப் பொய்யுங் கொலையுங் களவுங் காமமுமொருப்படப்பரந்துவரு
கையில் மனிதருட்கெடாமற் பிழைப்பவ ராரென்பாரென்க.

8. செவ்வினைநாட்டப்பாரிற் சிறுவனாயுதித்தநாத
னிவ்வினையனைத்துநீக்கி யிரங்கிலான்கொல்லோவென்ன
நவ்வினைவிடாநல்லாளு நறுங்கொடியோனும்வெல்ல
வெவ்வினையுணர்பேய்நோக்கும் வினவெனக்கண்டுநக்கார்.

உரை.— செவ்வொழுக்கத்தைப் பூவுலகினாட்டும்படி யவதரித்துக்கு
ழந்தையாய்ப்பிறந்த நாதனாகிலும் பசாசுநினைத்தபகையைநீக்கி மனிதர்க்
கிரங்கானோவென்று வானவர்வருந்தியிரங்கும்பொழுதே தவத்தைவிடா
த நல்லாளாகியமரியும் வாசமலர்க்கொடியேந்தியசூசையு மென்றிவ்விரு
வரைத்தாம்வெல்லும்படி தீவினையுணர்ந்தபசாசுகள் நினைத்ததென்று
கண்டறிந்தவானவர் மிகவும்மகிழ்ந்து நக்காரென்க.

9. அருண்முகத்துதித்தநாத னவனெனவறியாவண்ணத்
திருண்முகத்துவந்துவெற்றி யெளிதெனவுணர்பேய்சோதி
தெருண்முகத்திரவொத்தாற்றாச் சிதைவுறிவெருவுற்றெஞ்சி
மருண்முகத்தெரியில்வீழ்ந்து மாள்வனவொருங்குமென்பார்.

உரை.— அளவிறந்ததயையோ டவதரித் தங்கவரிடத்துப்பிறந்த
குழந்தை யாண்டவன்றானென்றறியாமையாலல்லோ தெளியாநெஞ்சிலே
யுவந்து வெற்றியெளிதென் றுணர்ந்தபசாசுகள், சூரியன்தன்னொளிமு
கத் திராவிருள்கெடுவதுபோல வப்பசாசுகளுமாற்றாது கெட்டு வெருவி
மெலிந்து மயங்கி நரகில் மீளவும்விழுந்து தாமினி மட்டின்றி மயங்கா
நிற்பனவென்பார் வானவரென்க.

10. மன்றலர்க்கொடியின்வாச மண்ணையைமருட்டுமென்பார்
துன்றலர்க்கோதைகன்னி சுடவெறிமுரியுமென்பார்

என்றலர்ச்சுடிகைசூடி யிருவிசும்பெங்குநிற்பார்
நின்றலர்த்தொடைகளேந்தி நிகர்த்தபேய்த்தோர்வைகாண்பார்.

உரை.— மீளவும் வானவர்மகிழ்ந்து தம்முட்சொல்வார்: இனிச் சூசைமாதவனேந்தியபூங்கொடிவீசுந் தருமவாசனைதானே பசாசுகளைமயக்குவிக்குமென்பார், அவனையடுத்த துணைவியாகிய பூங்கோதையொத்த மரியென்பவளது மாறுதகன்னிநலந்தானே பேய்களைச்சுடச்சுட வப்பேய்ப்படையேமுறியுமென்பார், இவற்றோடுபலவையுஞ்சொல்லி மகிழ்ச்சியாற்பூமாலைகளைமுடியாகச்சூடி யாகாயத்திலெங்குநின்று சூசையும்மரியுங் கொள்ளத்தகும்வெற்றிக்குப் பூமழைபொழியும்படி மதுமலர்மாலைகளையேந்திப் பசாசின் தோர்வையைக்காண நிற்பாரென்க.

11. கான்மலிகொடியிற்கன்னி கடிமலரெனக்கையேந்தும்
வான்மலிமகவின்மாமைவடிந்ததேனுணும்வண்டொப்பத்
தேன்மலிகொடியோனின்பந் திளைப்பவுட்சுவைத்தகாலை
கூன்மலிசடத்தபேய்கள் குணித்தபோர்துடங்கிற்றன்றே.

உரை.— அங்ஙனம் பசாசுகளெல்லா மெசித்துதேசத்திலேபோய் வாசபூங்கொடிபூத்தமலரைப்போலக் கன்னித்தாய் கையிலேந்திய வானுலகுள்ள திருக்குமாரன் தன்னழகிய முகத்தில்வீசியபேரின்பத்தில் வடிந்ததேனை வண்டுண்டாற்போலப் பூஙகொடியோனாகியசூசை நிறையவுட்கொண்டுசுவைத்திருக்கையில் மனக்கோட்டத் தரியவஞ்சனையுடைய பேய்கள் நினைத்தபோர் துடங்கினதென்க.

## II. வேறு

12. ஈங்கொருவிழாவணி யென்னமூவரோ
வீங்கொருமகிழ்வருட் சுவைவிள்ளாமையி
லாங்கொருகாவத மகலநின்றபே
யோங்கொருவயந்தடுத் தொருவிற்றென்னவே.

உரை.— அங்ஙன மிங்கேதிருக்குழந்தையும் மரியுஞ்சூசையு மொரு திருவிழாவின்தன்மையாற் றம்முள்மிகுந்தமகிழ்ச்சியோடு தேவருளினுநந்தசுவையைவிடாம லுட்கொண்டிருக்கையி லங்கே யவர்மேற் போர்செய்யவந்தபசாசுகளொருகாதத்தூரத்துநின்று கிட்டாதபடி மிக்கொரு மேலானவல்லமை யவற்றைத்தடுத்துத் தள்ளினதென்க.

13. அஞ்சலேதப்புறத் தணுகிலாத்திறத்
தெஞ்சலேதிரந்திரு மைந்தரீடிவண்
விஞ்சலேதுலகெலாம் வென்றவஞ்சனை
துஞ்சலேதெனவெறி சுளித்துச்சீறின.

உரை.— தம்மைத்தடுத்த வல்லமை யறியாதபேய்கள்கோபித்து நாமஞ்சுவதேதென்று மப்புறம்போகமாட்டாமலெந்திறத்தினுண்மை குறைந்ததேதென்று மிரந்து திரியுமிரண்டுமனிதர்வல்லமை யிங்கேநமக்கு மிஞ்சுவதேதென்று முலகெலாங்கெடும்படி யிந்நாள்வரைக்கும்வென்றவெமதுவஞ்சனை யிப்பொழுது மெலிந்ததேதென்றுஞ்சொல்லி மிகவுஞ் சினந்து சீறினவென்க.

14. மின்னுளவிடியினார்த் தழல்கண்விட்டதிர்
பின்னுளகுணுக்கினம் பெரிதுதைத்தலின்
முன்னுளவெறியெலா முழங்கியப்புறங்
கொன்னுளவயஞ்செலாக் குலையநின்றவே.

உரை.— அங்ஙன மின்னியிடித்தாற்போலவார்த்துக் கண்வழியாக வழலைக்கொப்பளித்ததிர்ந்து பிறகேநின்றபேய்க ளப்பாற்பெயராது முன்னின்றபசாசுகளை மிகவுமுதைத்ததனா லவைமுழங்கி யப்புறம்போக வீணாய்ப்பிரயாசப்பட்டுத் தமக்குள்ளவல்லமையுதவாம லஞ்சிநின்றனவென்க.

15. காலொடுபிணித்தபல் லுழுவைகாய்கதச்
சாலொடுதொடர்கடித் தலறித்தாவின
பாலொடுமெப்புறம் பாயலாற்றிலா
மாலொடுவெகுண்டபேய் சமர்வளர்த்தவே.

உரை.— அப்புறம் போகக்கூடாமையாற் றாணேடுகட்டின பல கொடுவேங்கைகள் மிகக்காய்ந்தசினத்தோடு சங்கிலியைக்கடித்தலறிச் சூழத்தாவினதன்மையா லப்பேய்களுமப்பாற்பாயமாட்டாமையால் மயங்கிச்சினந்து அங்கேநின்று போர்வளரும்படி துவக்கினவென்க.

16. பரியுருத்தகருருப் பகடுருப்பகைக்
கரியுருக்கரத்துருக் கவியுருக்கதத்
தரியுருக்கரடிகோட் டரிகணாய்வரி
திரியுருத்தோற்றின சினந்தபேய்களே.

உரை.— அப்போர்துடங்கும்படி குதிரைகள் போலவுங்கிடாய்கள் போலவுங் கிடாக்கள்போலவும பகைத்தமதயானைகள்போலவுங் கழுதைகள்போலவுங் குரங்குகள்போலவுஞ் சினந்தசிங்கங்கள்போலவுங் கரடிகள்போலவும் பன்றிகள்போலவும் நாய்கள்போலவும் புலிகள்போலவும் பலவுருவங்களையெடுத்துக்காட்டிநின்றன வப்பேய்களென்க

17. ஈட்டமும்வேறுமாய் யேந்தும்வேலெலாம்
வாட்டமும்வெருவுமாய் வையமாடவுட்
கோட்டமும்வினைகளுங் குணித்தபேய்கள்போ
ராட்டமுமுழக்கமு மளவற்றாயதே.

உரை.— அங்ஙனந் தோன்றினபசாசுக ளொருங்குடன்கூடியுந் தனித்தனித்துந் தாமேந்தியவாயுதங்களெல்லாவற்றையு மெலிவும் பயமு முட்கொண் டிலகெலாமாடும்படி மனக்கோட்டமுந் தீவினையும் வளரும் பொருட்டு நினைத்ததன்மையாற் போராட்டமும் முழக்கமு மளவின்றியா யிற்றென்க.

18. ஒளிமுகத்திடமுநீ ருலகுநீ றுமென்
றிளிமுகத்தெங்கணு மெரிசெந்தீயெழச்
சுளிமுகத்ததிர்ந்தபேய் தொடுத்தவேலெலாம்
வெளிமுகத்திடையினீ ருகவீழ்ந்தவே.

உரை.— வானுலகும் பூவுலகும்நீறுமென்றுற்போல வெங்குமிணங்கிச் செந்தீயெழும்படி சினந்ததிர்ந்தபேய்க ளெறிந்தவாயுதங்களெல்லாம் நடுவழியாகாயத்தி னீருகவழிந்துவிழுந்தனவென்க.

19. சுரதமேகவசமாய்த் தேவதூய்தயை
யிரதமேயெழுந்தவவ் விருவர்தம்புடை
விரதமேகதுவிடாப் புரிசைமேற்படப்
பிரதமேவெறியுறப் பிதிர்ந்தவேலெலாம்.

உரை.— அப்பொழுது மரியுஞ்சூசையுமென்றிருவர் கல்வியின்காட்சியைக்கவசமாகக்கொண்டு கடவுளவர்க்குச்செய்யுந் தேவதயையை யிரதமாகவேறிநின்று தம்மைச்சூழ்ந்த வாய்விடாதகோட்டைமதிளாகத் தவத்தைத்கொண்டு போரிலெறிந்தவேலெலா மக்கோட்டைமதிளிற்பட்டுப் பாசாசுகள் கலங்காநிற்கும்படி கீழேயுதிர்ந் தழிந்தனவென்க.

20. புறத்தளவகல்திருப் புதல்வனுண்மையா
லறத்தளவுயரியோ ரழிவுற்றெஞ்சுக
திறத்தளவறிவுள பேய்கள்செய்ததீ
மறத்தளவமர்வகை வரைவிலாயதே.

உரை.— அங்ஙனம் புறத்துவமையின்றி யத்திருக்குமாரன்கொண்ட வளவிறந்தவல்லமைகொண்டு அறத்தின்தன்மையா லுயரியகுணத்தோராகிய மரியுஞ்சூசையு முள்ளழிந் தறமெலிவடைதற்பொருட்டாக மிக்கதிறத்தினளவோ டறிவின்கூர்மையுள்ள பசாசுக ளென்றுதம்பகைக்களவாகச் செய்தபோர் பலவகைகளும் மட்டொன்றில்லனவென்க.

21. உள்ளியசமரொலா மொழிந்துளங்கெட
வெள்ளியகுணுக்கின மேங்கிவிம்மவுந்
தெள்ளியமரபினோர் செருவெண்ணுதுளம்
விள்ளியமகிழ்வுறு விளங்கினூரரோ.

உரை.— அங்ஙனம் பசாசுகளாராய்ந்தெடுத்த பலபோர்வகையெலா முதவாமலொழிந்து தாமுட்கெட்டு நிந்தைபட்டேங்கி விம்மாநிற்கும்படி

காட்சியிற்றெளிந்தகுணத்து மரியுஞ்சூசையும் பேய்செய்தபோரைச் சற்றுமெண்ணுமலு மனமலர்ந்துட்கொண்ட மகிழ்ச்சிவிடாமலும் விளங்காநின்ருரென்க.

## III. வேறு.

22. மின்னியம்புயக்கண்ணுதி வென்றவைம்பொறியைக்காத்
வன்னியம்பகையிற்பொங்கி வஞ்சகவெறிகளார்த்துத் [தோர்
துன்னியம்புயிர்த்ததீயாற் றுகளுருக்கதுவிடாத
கன்னியம்புரிசைசூழ்ந்த கதவடைத்தரணைப்போன்ருர்.

உரை.— அங்ஙனம் மரியுஞ்சூசையும் விளங்கிய தந்தாமரைக்கண்முதற் பஞ்சேந்திரியங்களைக் காத்தவராகி யப்பேய்கள் வஞ்சங்கொண்டு வெம்பகையிற்பொங்கி யார்த்து மொய்த்தெய்தவம்புகள் விட்டவழலாற்ரும்வடுப்படாமல் வாய்விடா தழியாதமதிளுள் கதவடைத் தசையாத கோட்டையைப்போலநின்ருரென்க.

23. கருவிஞற்கலங்கத்தெண்ணங் கயங்கெடத்தெளிவற்றன்ன
செருவிஞற்கலங்கவுள்ளந் தெளிவறப்பங்கமாமென்
றுருவிஞற்கலங்கத்தோன்றி யுடன்றபேயுளத்திலன்னர்
வெருவிஞற்கலங்கத்தம்முள் விளைத்தனவரும்போரன்றே.

உரை.— அங்ஙனம் மரியுஞ்சூசையுந் தம்மேற்பசாசுகள்செய்தபோர்முகத் தசையாதிருப்பதுகண்ட பேய்கள் தெண்ணீரும் யாதொருகருவிஞற்கலக்கிஞ லதுதெளிவுபோக்கிப் பங்கமாகிய சேருவதுபோலப் பசாசுசெய் போர்முகத்து மனிதருள்ளங்கலங்கிஞற் றெளிவுபோய்ப் பங்கமாகியபாவமாகுமென்று கலக்கமாதற்குரிய வெருட்டுருவங்களைக்காட்டியபேய்க ளவ்விருவர்மன மஞ்சிக்கலங்கும்படி யவர்காணத் தம்முள் ளரியமாயப்போரைவிளைத்துக்காட்டினவென்க.

## IV. வேறு.

24. கடமாறிலவெஞ்சினவேழமொடுங் கனமீருகொடிஞ்சிவிமானமொடு [ல்
மிடமாறியுகண்டனவாசியொடும் மெரியூறியவெங்கதமார்விழியா
விடமாறிலவெஞ்சிலையாதியொடும் விளைபோருரிவாள்வளைவேல்கவருந் [யே.
தடமாறிலவண்கரவீரரொடுஞ் சலராசியிரேன்றியதோர்படை

உரை.— அங்ஙன மும்மதமாருத வெஞ்சினயானைகளுமேகங்களையறுக்குமுயர்ந்தகொடிஞ்சியின்தேர்களு மொருநிலைநிற்கமாட்டாமற் குதித்துப்பாயும்புரவிகளும் நெருப்புப்பெயர்க்குமுற்றதாகி யெரிந்தகண்ணே

டுநின்று மாறுதகஞ்சினைக்கொப்பளிக்கும் வில்லுமுதல் வாளுஞ் சக்கர மும்வேலு மென்றிவற்றோடு மற்றப்படைக்கலங்களைத் தடக்கையிலேந் தியவீரருங் கணக்கின்றித்தோன்றிக் கரைகாணாத கடலோடொத்த தோர் பெரும்படைதோன்றினதென்க.

25. புழுவாய்வழிகண்வழிகைவழியும் புனலொத்தவெரித்திரளு
ற்றுறநீண் [க்
மழுவாய்வழிவேல்வழிவில்வழியும் மலியக்கிபுகைப்பமதத்தவுவா
கெழுவாய்வழிபாய்பரிவாய்வழியுங் கிழிபட்டகனத்திடியொத்தெ
ரிதீ [னவே.
விழுவாய்வழிமண்வழிவான்வழியும் வெருவுற்றழலச்சமர்காட்டி

உரை.— அங்ஙனம் புழுத்தவாயும் விழித்தகண்ணும் பொருதகையு மூற்றுகள்போல வாறுகச்செந்தீத்திரளாய்க்கொப்பளிக்கவு மழுவும் வே லும் வில்லு மிக்கழலைவிட்டுப்புகையவும் மதயானைகளும் பாய்பரிகளுங் கி ழித்தமேகத்தின்வாயினின் றிடிவிழுந்தாற்போலத் தம்வாயினின்றழல் திரளாய்ப்புறப்படவு மிப்பலவழிவிழுந்த தீமிகுதியால் வானுலகும் பூவு லகும் வெருவிவேகும்படிதோன்றிக் கொடியபோரை யப்பேய்கள் காட் டினவென்க.

26. மேகங்கள்மெலிந்தறவேகுமெனு மேகந்துறுகின்றிடிவேகு
மெனு [னு
மாகங்களடங்கிலும்வேகுமெனு வானின்றிரிவெஞ்சுடர்வேகுமெ
நாகங்களொடும்புனல்வேகுமெனு நால்வம்பலொடுங்கடல்வேகு
மெனு [பொருவார்.
வேகங்களுணர்ந்துளம்வேகுமெனு வேகங்கொடுவெந்திசையோர்

உரை.—அங்ஙனம் மேகங்களும் மேகத்திடிகளும் வானமண்டலங்கள் யாவும் வானிற்றிரியுஞ்சூரியனும் மலைகளோ டவற்றினின்றிழிந்தோடு மரு விகளும் பூவுலகாற்றிசைகளுங் கடலுமென் றிவையெல்லாம் வேகுமென் றுதோன்றி யவ்வேகத்தைநினைத்தமனமும்வேகும்படி முன்சொன்ன பலவகைத்தீயின் வேகத்தைக்காட்டித் தீநிலத்தோராகியபசாசுகள் தம் முட் போர்பொருதனவென்க.

27. தொடையுற்றவெயிற்றழலீட்டியபேய் தொடவொற்றை
சரத்தையடற்றனுகோர்த்
திடையுற்றசதச்சரமாகிவிடு மிடையாயிரமாய்வெளியிற்படருங்
கடையுற்றசரத்தொடைகோடியுமாய்க் ககனத்திலழற்றியமாரி
யெனு [வாம்.
மிடையுற்றவழற்கிளர்நீத்தமெனு விரிதிக்குகள்முற்றுமெரித்தன

உரை.— ஓயாமல் நெடும்பல்லின்வழியா யழலைக்கொப்பளித்தபேய்க்கூட்டமோரம்பினையெடுத்து வில்லிற்கோர்க்கும்போது நூறுகவும்மெய்யும்போ தாயிரமாகவு மெய்தவம்பாகாயத்திற்போகிறபோது கோடியாகவும் விட்டவம்புகளக்கினிமாரியாகத்தோன்றி யம்மாரியானிறைந்த வக்கினிவெள்ளமோடித் திசைகளெல்லாம் முழுதுமெரிந்தனவென்றுதோன்றினதென்க.

28. களிவீசியமும்மதம்வீசியமால் கரிவாரினரந்தரம்வீசினரோ
வெளிவீசியசிந்துரமார்த்தலற விசையோடுசுழன்றுசுழன்றுலவத்
துளிவீசியமேகமொடுங்கிடவுஞ் சுடரோன்வெருவிக்கடிதோடிடவும்
வளிவீசியவூழியிலேயெருடுவீழ் மழைபோனிலமாடவும்வீழ்ந்தனவே.

உரை.— மீளவு மப்பேய்கள் களியின்மிகுதியால் மும்மதமாருதயானைகளைக் கையால்வாரிக்கொண்டு வீசி யாகாயத்திலெறிவன, அங்ஙனமெறிந்தயானைகள் மிகவுமுழங்கி யலறிவிசைப்படச்சூழச் சுழன்றுலாவினதனுற் றுளிபெய்மேகங்களொதுங்கவுஞ் சூரியன்வெருவிச் சீக்கிரமாயோடவும் யுகமுடியுநாளிற் காற்றின்முகத்தி லிடியோடுமேகங்கள் கீழ்விழுந்தன்மையா லந்தயானைகளும் பூமிநடுங்கியாடும்படி விழுந்தனவென்க.

29. சிறையோடுபறந்தபறம்பெனவோ திறலோடுபடர்ந்தவிசும்பெனவோ
வுறையோடுகலந்திருவிண்டிடையூ ருருளோடுதிரிந்திரதந்திரளே
மிறையோடுவிரிந்தனபொய்யெனவோ விசைவோடுபடர்ந்துபொதிர்ந்துபொரக்
கறையோடுமிடைந்தெரியுந்தழலக் கதமோடுசரந்தொடுவெஞ்சமரோ.

உரை.— பொருததேரோவென்னி லிறகோடுமலைகள்பறந்தனபோலவோ விடி வலியோடு மேகங்கள்படர்ந்தனபோலவோ நிலத்திற்படாமல் மழைத்துளி மேகத்திடத் துருளையூர்ந்துதிரியு மிரதங்கடிரள் குற்றம்விளையப் பரந்தபொய்யைப்போலச் சீக்கிரமாயோடிப்படர்ந்து நெருங்கிப்பொரவே யிரத்தமுமழலுங்கலந்தெழும்படி சினங்கொண்டு பகழிமாரியைவிட்டுவிளைந்தது வெம்போரென்க.

30. தொடையொன்றுசரஞ்சதமொன்றிடுவார் துறுகின்றிரதங்கொடெதிர்ந்திரிவார்
புடைநின்றுமிடைந்துதிரிந்தகல்வார் பொதிர்கின்றுபுழுங்கியுடன்றெறிவா
ரிடைநின்றுசுழன்றெவணுந்தழலா ரொரிகின்றிடியென்றுசரந்தொடுவார்
மிடைநின்றிரதங்கொடிழிந்தெழுவார் மிலைகின்றுபிரண்டுபுரண்டுருள்வார்.

உரை.— மீளவு மந்நரகத்திசையோ ரொவ்வொருதொடையா லம்புகணூறுமெய்வார், ஏறினவிரதங்க ளெதிர்ந்துநெருங்கும்படிதிரிவார், தம்முண்ணெருங்கியபின் விலகி யகல்வார், அங்ஙனநெருங்கிச்சினந்து போர்பொருதழலாலெரிவார், மீளவுந் தம்முட்சுழன்று சூழவெங்குமெரியுமிடிகளைப்போலவம்புகளையெய்வார், ஏறினதேரோடு கீழேவிழுந்தெழுந் திரண்டிரண்டுருண்டு பொருவாரென்க.

## V. வேறு

31. ஒருபுடையிலிற்றையாவுமிவரலி னுருவமுடனுட்குவீசவணியணி [மர்
யிருபுடையினுற்றசோகுமொலிதர வெதிருமெதிருற்றயாவுமறவ
தருபுடையில்முற்றிவேகுமழலெழத் தகுதியிலகற்றமாயவினையொடு [செய்வார்.
வருபுடையில்மற்றியாருமிணையற வடுவனொடுமைத்தன்வீரவமர்

உரை.— இவையெலா மொருமுகத்தாகையில் வெருவிடுமுருவத்தைக்காட்டி யணியணியாயிருபக்கத்துநின்ற மற்றப்பசாசுகள் முழங்காநிற்க வடுவனென்றும் மைத்தனென்றுமிருபேய்கள் தமக்கெதிர்வந்ததெல்லாமழிந்துகெடும்படி தம்முட்பொருதவிடத்து மிக்கழலெழ மட்டின்றிப்படித்தமாயவித்தையோடு மற்றப்பேய்களைக்காட்டிலும் வீரப்போராகப்பொருதாரென்க.

32 கரிகளைநிகர்த்தவீரமுனிவொடு கடியகதமொய்த்தநாளிமுகமுட
னரிகளையிசைத்ததேரினெழவெழு தழனுசரமைத்தனேவிவருகையி [டு
லெரிகளைநகைத்தகோபமெரிநெடி தெயிறுகடுதைத்தசீயமுகமொ
வரிகளையமைத்ததேரினுயரொழும் வடுவனெதிருற்றுலாவமலைகுவார்.

உரை.— மதயானைகளையொத்த கோபத்துடனே சினந்தகொடியநாய்முகமாய்ச் சிங்கங்களைப்பூட்டிய தேரின்மேற்றோன்றினமைத்த னம்புகளையெய்துவருகையி லழலினுமழன்று நீண்டுநெருங்கியவெயிறுள சிங்கமுகத்தோடு புலிகளைப்பூட்டிய தேரொழுந்தவடுவ னவற்கெதிராவந் துலாவிப்பொருதாரென்க.

33. அழலெழவளைத்தசாபநிமிரிலவனைநொடிமுடித்திலாதுவிடுகணை [ணி
நிழலெழமருட்டுவானமிருளுற நிரைநிரையெதிர்த்தகூளியணிய
புழலெழவுதைத்தவாளிவழிவழி புனலெனவிரத்தமோடமலைமுதல்
சுழலெழவுயிர்ப்புவீசிமெலிவில சுனகமுகன்முட்டிநீடுமுனைகுவான்.

உரை.— நாய்முகனாகியமைத்தன் றீமேற்பறிய வளைத்தவில்லு நிமிராமலரைநொடிநேரமுடியுமுன்னே விட்டவம்புகள் நிழலாம்படி மறைத்தவான விருளைக்கொள்ளவும் நிரைநிரையாயெதிர்நின்றபேய்க ளணியணியாய்ப்பட்டபுண்வாய்நுழைந்தவம்புகள்வழியாக வழிந்தபுனலைப்போல விரத்தமிகவுந்திரண்டோடவும் மலைகள்முதலாய்ச் சுழலும்படிபெருமூச்சுகளைவிட்டு முட்டி நெடிதாய்க்கோபித்துப்பொருதானென்க.

34. நெடுமலைதிரட்டிநீளவமைவன நெடியசிலையுற்றவீரவடுவனுங் [டத்
கொடுமலைசுருட்டியாயவிருபுயக் குவடெழவளைத்தசாபமழைவி
தொடுமலையுயர்த்தநேமியுருவவுந் துறுவிசையின்மைத்தனேவுகணையொடு
கடுமலையிழைத்தசாபமிறுவது கடிதிலவனக்குநீடுகுமுறவே.

உரை.—அங்ஙனம் மைத்தன் பொருதுவருகையில் வீரவடுவனும் நெடியமலையைத்திரட்டிச்செய்த நெடியவில்லைக்கொண்டு கொடியதோரிருமலைகளைச்சுருட்டிவைத்தாற்போல வுயர்ந்ததன்னிருபுயங்கள் எழும்படியெய்தவம்பின்மாரி மலைகளையேந்தியபூமியு முருவினவாகி மைத்தனெதிராய் விசையோடுவிட்டவம்புகளால் மலையாற்செய்தவடுவன்வில் விற்றொடிந்ததே மைத்தன் மிகவு நக்கு நெடிதுமுழங்காநிற்பவென்க.

35. சினமொடுமுடற்றிநீடுகையிலிடிச் சினைமுகில்பறித்துநேமியெனவெறிந் [னே
தினமொடுமெதிர்த்தகூளிவெருவுற விடியொடுசுழற்றிவீசவடுவமனமொடுபழுத்ததீயையுமிழ்வன வடியகணைமைத்தனேவியெழுதினன் [லியவே.
கனமொடுமெரித்தவேறுதுகளெழக் கடறிரைசுருட்டியோடிமெ

உரை.—வடுவன் தன்வில்லொடிந்ததுகண்டு சினத்தோடுடற்றியார்த்து நீண்டகையாற் சூலாகவிடிகளைக்கொண்டவொருமேகத்தைப்பறித்துச் சக்கராயுதமாகவெறிந்து கூட்டமாயெதிர்த்த மற்றப்பேய்கள்வெருவும்படி யிடிகளோ டம்மேகத்தைச்சுழற்றி மைத்தன்மேலேவீசினன், மைத்தனேவெனிற் றன்மனத்திற்பழுத்தகொடுந்தீயையுமிழுங் கூர்ந்தவம்புகளை யெதிராயெய்தமாத்திரத் தம்மேகமு மம்மேகத்துள்ளவிடிகளுந் தூளாய்ப்பறந்து கடலும்வெருவித் திரைகளைச்சுருட்டி மெலியாநின்றதென்க.

36. புடவியையனைத்தும்வேரோடசைவன புதவமுல்கொளுத்து சூலமிருகையிற்
றடவியிறுகக்கடாவியுழுதன சடைவடுவனிட்டகாலையெதிர்வன
நடவியவயத்ததேருமெறியின நகுவவமுல்பற்றிநீறமுகில்புழையிடவிரைவின்மைத்தன்மீதிலெழவிடி யெனமுனர்குதித்துவீழவுறுமினன்.

உரை.— அதைக்கண்டவடுவன் பூவுலகினை வேரோடசைக்கவும் நரக த்தீயைத்தூண்டவும் உருவியகொடுஞ்சூலத்தை யிருகையாலிறுகப்பிடித் தெறிந்தவளவி லெதிர்நின்ற மைத்தனடத்தினதிண்டோ ரெங்குஞ்சூழ ம ற்றப்பேய்கள் நகும்படியழல்பற்றி நீருகவேகாநிற்க மைத்தன்மேகங்க ளைத்துளைத் தாகாயத்தில் பாய்ந்தபின்ன ரிடிவிழுந்தாற்போல வடுவன் முன்பாகக்குதித்துவிழுந்து முழங்கினனென்க.

37. உறுமியுருமொத்தவீரன்வடுவனுந் துயருமிரதத்தைவாரி முகிலறத் [தாரத்
துறுமிசைசுழற்றிவீசுவிசையொடு துறுவியழல்பற்றிவேகவெறி
தெறுமிடியினத்துவேகவினமுகில் திசைதிசையணைத்தும்வேக
விருவிழி
யிறுமெரியழற்றிவேகவெரிமழையெனவிழுசினத்தசீயவதனனே.

உரை.— அங்ஙன மிடியைப்போல முழங்காநின்றமைத்தனே வடு வனேறிய வுயர்ந்தயிரதத்தைக்கையால்வாரிக்கொண்டு மேகங்களறும்ப டி மேலேசுழற்றி வீசினவிசையினுலழல்பற்றி யவ்விரதம்வேகும்படி யெறிந்தான், எறிந்தயிரதம்வெந்தவழலா லிடிகளோடு மேகங்கள்வேக வுஞ் சூழ வெண்டிசைகள் வேகவுஞ் சினந்தசிங்கமுகனுகியவடுவன் தன் ளிருகண்களைக்கிழித்ததீ யழன்றுவேகவு மக்கினிமழைபொழிந்ததுபோ ல நெருப்பினைச்சிந்திக் கீழேவிழுந்தானென்க.

## VI. வேறு.

38. அழலமதகரியழலவயபரி யழலவுருளொடுதிகிரிக
ளழலவிரிசிலையழலமுனிகணையழலவடியயிலழலவா
ளழலவிருவிழியழலமறமன மழலவிருசெவியழலவா
யழலவடையனுமழனுமிருவரு மழனுமிருகதையொடுபொர.

உரை.— அங்ஙனந் தேரொரிந்துவிழுந்தமைத்தனும் வடுவனு மிரு கதாயுதங்களைக்கொண்டுபோர்செய்தார், அழன்றவிருவரு மழலைப்பறியு மிரு கதாயுதங்களைவீசலில் சூழத்தோன்றினயானைகளுங் குதிரைகளுந் தேர்களுமெரிந்தழியவும் மற்றப்பேய்கள்பிடித்த வில்லுகளு மம்புகளும் வேல்களும் வாள்களும் யெரிந்தொழியவும் பார்த்தவிழியுஞ்சினந்தமன முங் கேட்டசெவியும் முழங்கினவாயு மெரிந்துபுகையவும் பொருதாரெ ன்க.

39. திரிவருகளுவரணுகியகலுவர் திமிரவிருபுயமுறுமுவர்
பிரிவர்மிடைகுவர்புரளவெருளுவர் பிராளவுருளுவர்குருதிகள்
சொரிவருளைகுவர்சுழலுகதையொடு சுசியின்வெகுளுவர்தொனி
யெழ
முரிவரொரிகுவர்முனியவதிர்குவர் முனையிலெதிரிலர்முனைவரோ.

உரை.— அங்ஙனந் திரிந்து குதிக்கவுங் கிட்டியகலவு மிருபுயங்களோ ங்கி முழங்கவும் பிரிந்துநெருங்கவும் புரண்டுவெருளவும் பிரண்டுருள வுங் குருதிகளைத்திரளாய்ச் சொரிந்துவருந்தவு மிரு கதாயுதங்களைச்சுழற் றித் தீப்போலவெகுளவு மார்த்துமுறிந்துவேகவும் முனிந்துமிக்கதிரவும் போர்முகத்தெதிரின்றிப் பொருதாரென்க.

40. உயரமதகரிசுழலவெறிகுவ ருழுவையுருவொடுமுகளுவர்
பெயரவவர்கவர்வயிரநெடுவரை பிளவவுரமுழுதெறிகுவ
ரயரவிரிகுவர்குருதிமலியன வலையைமுழுகுவர்சினமலி
துயரமுகமொடுதசையையுணவுண வுதிரமுமிழுவர்சொரியவே.

உரை.— மதயானைகளையாகாயத்திற் சுழலும்படி விசையோடெறிய வும் வேங்கையுருவமெடுத்துப்பாயவும் வயிரநெடுமலைகளைப்பெயர்த்துக் கையாற்பிடித் தெதிர்நின்றவர் மார்புமுழுதும் பிளக்கும்படியெறியவு ம ங்கங்கேயயர்ந்துதிரியவு மோடினவிரத்தததினலையினுள்முழுகவுஞ் சி னங்கலந்த துன்பமுகத்துத் தசையைநிறையவுண்டுசொரியும்படி யுதிரத் தையுமிழவுங் கொடிய மாயப்போர்காட்டினவென்க.

41. முறையிலொலியொடுமுரசுமுருடொடு முழவுகடமொடு
மொலியெழும்
பறையினொலியொடுமிரதவுருளொடு பரிகள்கரியொடுமொலியெ
ழக்
[பொழி
கறையினொலியொடுமுவணியயிலொடு கதைகள்சிலையொடுசிலை
யுறையினொலியொடுமுகிலினொலியொடு முவரியொலிமெலிவன
வெனு.

உரை.—முறையொன்றின்றி முரசுமுருடு முழங்கவுங் கடமு மற்றப்ப டைவாத்தியங்கள் முழங்கவு மோடினதேர்களும் பாய்ந்தபரிகளும் மதத் தயானைகளும்முழங்கவுஞ் சிந்தினவிரத்தமும் வீசினவாள்களு மெறிந்த வேல்களுஞ் சுழற்றினகதாயுதங்களும் வளைத்தவில்லுகளும் வில்லுகளை ய்தவம்புமாரியுமுழங்கவு மிவற்றின்முன் மேகமுழக்கமுங் கடலின்முழ க்கமு மெலிந்தனவென்க.

42. பிழையின்வழிவழிதுயரின்மலியன பெருவில்வழிவழிகணை
யதின்
புழையின்வழிவழிகுருதிமலியன பொறையின்வழிவழிபுனலென
மழையின்வழிவழியிடியின்மலியென படையின்வழிவழியெரிம
னத்
துழையின்வழிவழிவெகுளிமலியன வுழையின்வழிவழியிணையிலா.

உரை.— பாவத்தின்வழியாக மலியவளருந் துயர்களைப்போல வில் லுகளின்வாயால் மட்டில்லாதசரங்க ளோயாமற் புறப்படவு மெய்தவம் புகள்செய் துளைவழியாய் மலையினின்றிழிந்தோடுமாறுபோலக் குருதி

யோடவும் மேகத்தினின்று விழுமிடிகளைப்போலப் பலபடைக்கலத்துவ ழியாற் றீமலியப்பறியவும் பசாசுகள்மனதிற்கொண்டகோபம் மேன்மே லழன்று மிகவுஞ் சொல்லா லொப்பில போராயிற்றென்க.

43. இனையவடையனுநரகவெறியின மியலவிடையிடையடலம
ரனையவலியொடுபுரியவளனுட னரியதுணைவியும்வெருவுருச்
சினையசனிமுகில்மெலியவெரிவெறி சினவியெழுவெழவரிதிடர்
புனையவுளைவனபுகையவெருவனபொருதல்வெறிதெனமெலியன.

உரை.— அங்ஙன மிவையெல்லாவற்றையும் நரகத்தினின்றுபுறப்ப ட்டபேய்களெல்லா மொருங்குடன்கூடி யன்றுகாட்டி யரும்போர்த்த ன்மையிற்றமக்குள்ளவல்லமையெல்லாஞ் செலுத்திச்செய்தாலுஞ் சூசை யு மவன் துணைவியாகியமரியு மனதிலேசற்றுங்கலங்காம லஞ்சாதிருப்ப தைக்கண்டு சூலாகவிடிகளைக்கொண்ட மேகமுழக்கத்திலு மார்த்துச்சின ந்து குதித்தபேய்கள் மனதி லருந்துன்பத்தைக்கொண்டு நொந்துபுகைந் துள்ளஞ்சிக் காட்டினபோர் வீணென்றுகண்டு மெலியாநின்றனவெ ன்க.

## VII. வேறு

44. இன்னியாவையுமுளத் திரங்கிமூவரு
மின்னிலாவமரரும் விழித்துற்றுரலாற்
றுன்னியார்கலியுடை சூழ்ந்தபாருளோ
ரன்னியாவையுமொருங் கறிந்திலாயினர்.

உரை.— இவையெல்லாவற்றையுமனதிலிரங்கி மரியுஞ்சூசையுந் தி ருக்குமாரனுமென்னுமூவரு மின்னியவானவருங் கண்டறிந்தாரொழியக் கடலையுடுத்தபூமியிலுள்ளமனிதருள் ளொருவனுமினு மறிந்தவனல்லவெ ன்க.

45. பொன்வளர்வயிரநற் பொருப்பிற்போன்றுளம்
மின்வளருணர்வினுல் விளங்குமாதவன்
கொன்வளர்வஞ்சகக் குணுங்கின்மாயைகண்
டின்வளரிரக்கமிக் கெண்ணியோதினன்.

உரை.— அங்ஙனம் வயிரப்பொன்மலையொத்த வசையாதமனத்திற் றெளிந்தவுணர்வினையுடைய மாதவன்சூசை வீணாய் வஞ்சனைசெலுத்தி மாயவித்தையாற் பசாசுகள்காட்டினதைக்கண்டு மனிதர்க்கிரங்கிச் சொ ன்னனென்க.

46. ஒழுங்கியமருப்பினை யொறுக்கியெந்தையான்
மழுங்கியவயத்தபேய் வஞ்சமாறிலாப்

புழுங்கியகடையுகம் பொருவப்பாரொலாம்
விழுங்கியதெனமுனை விளைத்தவீடிதோ.

உரை.— நிறுவிநீண்ட கொம்புகளையொலுக்கி யாண்டவனால் வல்ல மைகுறைந்த பசாசுகள் தம்வஞ்சனைகுறையாம லுலகமுடியுங்கடையுகம் போலத் தாம்பூவுலகெல்லாத்தையு மிழுங்கினதன்மையாற் போர்செய் தவல்லமை யிதுதானோவென்றானென்க.

47. மின்முதல்முகிலொடு விசும்பியாவையும்
பொன்முதல்மணிகிளர் புணரியாவையுங்
கன்முதலீங்கெலாங் கனன்றுசுட்டெனப்
புன்முதல்சிதைந்ததோர் பொருளிங்காயதோ.

உரை.— அப்பேய்கள் பொருததன்மையால் மின்னலுமேகங்களுங் கூடி ஆகாயமெல்லாத்தையும் பொன்னுமணியுங்கொழித்த கடலெல் லாத்தையுங் கல்லுமுதலாய்ப் பூவுலகுள்ளவெல்லாவற்றையுமழித்துச் சு ட்டாற்போலத் தோன்றியபின்பு பசும்புல்லொன்றுமுதலா யிங்கேயழி ந்ததுண்டோ வில்லையென்றானென்க.

48. விண்ணின்வேல்வைத்தநன் றிழந்தவெம்பழி
மண்ணின்மேல்வைத்தமன் னுயிரின்வைத்தபேய்
கண்ணின்மேல்வைத்தமா சென்னக்காட்டிய
வெண்ணின்மேல்வைத்தவுட் கியற்றுமாயமே.

உரை.—வானுலகிலுள்ளநன்மைகளையிழந்தமையாலுட்கொண்டபழி யைப் பூவுலகுள்ள மனிதர்மேலேவைத்தபசாசுகள் கண்ணின்மேல்வைத் தமாசுபோல மனிதரைக்கெடுக்க வெண்ணப்படாதவகையா லவர்க்குப் பயம்வருத்துவித்துக் காட்டின மாயத்தொழி லிதேயென்க.

49. மாற்றரும்வஞ்சக மாயவித்தையா
லாற்றரும்வெருவுட னகங்கலங்கவே
போற்றரும்பழிவெறி புரைபுகுத்தலாற்
றேற்றருமழிவுறிச் சிதையும்பாரொலாம்.

உரை.— அங்ஙனமாற்றப்படாத வஞ்சகமாய வித்தைகளா லாற்றாத வெருவோ டுள்ளங்கலங்கும்படி காத்துவிலகுதற்கரிய பழியையுள்ள பசாசுகள் பாவங்களைவிளைவித்துத் தேறாதவழிவோடு பூவுலகெல்லாங்கெ ட்டதென்க.

50. இத்திறத்திறலன்றோ விருள்விரும்பிய
மைத்திறத்தடல்கொளு மண்ணைகங்குலிற்
பொய்த்திறத்துகுத்ததீக் கனவைப்பூத்தவர்
மெய்த்திறத்துணர்வற விளைக்குந்தீமையே.

உரை.— இங்ஙனமல்லோ விருளைவிரும்பி மயக்கத்தால்வல்லமை கொள்ளும்பேய்க ளிராவிலே பொய்யைக்காட்டித்தோற்றுவித்த கனு வைக்கண்டவர் மெய்யிற்றெளியாம லறிவுகெட்டுப் பாவங்கள்விளைவன வென்க.

51. ஆசைசெய்சேயர்கொன் றலக்கண்செய்குவேன்
மாசைசெய்நலமற மிடிவகுக்குவேன்
பூசைசெய்தெனைவணங் கிலாதபோதெனு
வோசைசெய்யுவரிபோ லுரைக்கும்பேய்களே.

உரை.— அங்ஙனம் வெருவிக்குங் கனுவைக்காட்டி விரும்பின வுன் மக்களைக்கொன்று வருத்தம்விளைவிப்பேனென்றுஞ் செல்வங்களைமாற் றித் தாரித்திரத்தைவருத்துவிப்பேனென்றும் பூசைகொண்டென்னைவ ணங்காயாகி லென்றும்வீணுயிரைக்குங் கடலொலிபோலப் பசாசுகளுங் கனுவிலேசொல்லி மனிதரைமயக்குவிக்குமென்க.

52. ஒலித்தலாலெவன்செயு முவரிபேயினங்
கலித்தலாலெவன்செயுங் கடவுள்சார்ந்தகாற்
சலித்தலாலெவன்செயும் பிணித்ததன்மையின்
வலித்தநாய்கடிக்குமோ மருவிலாமையே.

உரை.— உலகெலா மிழுங்கவேணுமென்றதுபோல வெப்பொழுது மிகவுமுழங்காநின்றதனு னெடுங்கடல்தன்கரையின்மேற்பொங்கிச் செய் வதுண்டோ வில்லையே. அங்ஙனமாண்டவன் பாதத்தைச் சேர்ந்தகாலத் து வெருவிடும்படிகூப்பிட்டாலும் பசாசுகளா லாவதொன்றுமில்லை. மீ ளவுங் கட்டப்பட்டநாய்குலைக்குமே யொழிய வென்னசெய்யும், கிட் டாதகாலத்துக் கடிக்குமோ வில்லையே, அங்ஙனம்பசாசுகளென்க.

53. பிணிப்பருங்குணத்தொடு பிணிபெயர்த்தறக்
குணிப்பருநலந்தருங் கொள்கைபேசுமால்
துணிப்பருந்துயர் துடைக்கலாற்றிலாத்
தணிப்பருநரகழற் றழலத்தாழ்ந்தபேய்.

உரை.—மீளவும் முடியாததந்துன்பங்களை மாற்றித் துடைக்கமாட் டாமற் றணியாச்செந்தீநரகி லெக்காலத்தும்வேகும்படி விழுந்துகிடக்கி ன்றபேய்களே மனிதர்கொண்டதீராதவியாதிகளைத்தீர்க்கவும் நினையாத நன்மைகளைத்தரவுஞ் செய்வோமென்று சொல்வனவென்க.

54. சுட்டிடைநரகுழி புதைத்தசோகுவா
னட்டிடைதளர்ந்தனர்க் குறுதிநல்கலே
நெட்டிடைநெறிகளி லுதவிநேடினர்க்
கட்டிடைகரவர்வந் தமைதல்போலுமே.

உரை.— மீளவுந் தம்மைவணங்கினவர்க்குப் பரமகதிவாழ்க்கையைத்தருவோமென்று பேய்கள்சொல்லி மனிதரையேய்த்தன வாகையாற் றீயெரிநரகிற் புதைக்கப்பட்டபசாசுகள் வான்கதிசேரும் வழியிற்றளர்ந்தவர்க்குத் தாமுதவிசெய்வ தெங்ஙனமென்னில், நெடும்வழித்துணையைத் தேடினவர்களைக் கொன்றுபறிக்குங்கள்ளர் துணையாகவமைந்த தன்மைபோல வாகுமென்க.

55. வெம்பியவஞ்சனை விளங்கிலாமையாற்
பம்பியபுரைபுனைந் தேய்த்தபாருளோர்
நம்பியவெறியொடு நரகில்வீழ்வபொன்
றம்பியகொடியினோ னழுதிரங்கினான்.

உரை — அங்ஙனஞ் சினங்கொண்டுபசாசுகள் செய்யும்வஞ்சனையுணராததன்மையா லேய்க்கப்பட்டமனிதர் விடாமற் பாவங்களைக்கொண்டு தாம்நம்பினபேய்களோடு நரகத்திலேவேகும்படி விழுவாரல்லோவென்று முன்சொன்னபடி பேய்கள்போர்செய்துவருகையில் மதுமலர்க் கொடியேந்தியகுசை யிங்ஙனமழுது மனிதர்க்கிரங்காநின்றானென்க.

## VIII. வேறு.

56. நற்றிறத்துநரர்க்குமினைந்தபின்
செற்றிறந்தொலிசீறியபேய்கெட
விற்றிறத்துவியன்றவமேந்தியம்
பிற்றிறத்திலறந்தொடையேற்றினான்.

உரை.— அங்ஙனஞ் குசைதயைபொருந்தி மனிதர்க்கிரங்கினபின்னர் மேகமுழக்கத்தோடு சீறிப்பொருதினபேயெலாங்கெட்டுமுறியும்படி தன்னருந்தவத்தை வில்லாகவேந்தி யதிலேயம்பின்றொடையாகப் பலவறங்களையேற்றா நின்றானென்க.

57. கடிநடுக்கியகள்ளவிழ்கானலர்க்
கொடிநடுக்கியகோடிலமாதவன்
படிநடுக்கியவெம்பழிப்பேயெலா
மடிநடுக்கியவாண்மையினோக்கினான்.

உரை.— அங்ஙனம் பசாசுகள் நடுங்குதற்காரணமாகிய வாசமதுமலர்க்கொடியையசைத்தேந்திய குற்றமில்லாமாதவன்குசை பூவுலகெல்லாநடுங்கும்படி கொடியபழியைக் கொண்டபேயெலா மடியோடுகெட்டு வெருவிநடுங்க வவற்றைவீரங்கொண்டு நோக்கினானென்க.

58 நோக்கினான்கழுதாண்மையை நூறினான்
றாக்கினானறவெஞ்சரப்பற்றொடை

போக்கினான்கடிபோக்கியவேலெலா
நீக்கினானிமிர்வச்சிரநெஞ்சினான்.

உரை.— அங்ஙன முயர்ந்தவச்சிர நெஞ்சினையுடையசூசை யப்பேய்களைநோக்கினவளவிலே யவைகொண்ட வல்லமைமெலியும்படிகெடுத்தப்போராகத்தாக்கியெதிர்த்து முன்றவமாகிய வில்வாயேற்றிய பலவறங்களாகிய பலவம்பின்றொடைகளைவிட்டெய்து பசாசுகள் தனக்கெதிர் விட்டவாயுதங்களெல்லாவற்றையும்நீக்கி விலக்கினானென்க.

59. மேவிவான்றொழுந்தன்றவவில்லினாற்
றாவினாலெனக்கெட்டதிர்சோகெலா
மோவிநாணவொருங்கிருகாற்கொடு
பூவிறேய்த்ததுபோலவொடுக்கினான்.

உரை.— அங்ஙனஞ் சூசை வானுலகும்விரும்பி வணங்குந் தன்றவமாகியவில்லைக்கொண்டு தான்கெடுத்துத் தூளாயெறிந்ததன்மையாற் கெட்டழிந்ததிர்ந்த வப்பேயெல்லாம் நொந்துநாணும்படி யவற்றையொருங்குட னிருகாலாற் பூமியோடு தேய்த்தாற்போல வென்றழித்தொடுக்கினானென்க.

60. புரிந்தநின்றயைப்பொற்பொடஞ்சேனையா
விரிந்தமன்னுயிர்வேண்டியிப்பேயெலா
மெரிந்ததீப்புதைத்தோட்டனவின்னொளி
சொரிந்தபூமுகத்தோன்றலைவேண்டினான்.

உரை.— அங்ஙனஞ் சூசை பசாசுகளையொடுக்கி வென்றபின்பு மனிதர்க்கிரங்கித் தேவதிருக்குமாரனை நோக்கிச் சொல்வான்: ஐயா நீயெனக்குச்செய்த தயையின்மிகுதியா லஞ்சாதிருப்பேனாயினும் விரிந்த பூவுலகிலுள்ள மற்றமனிதரைவேண்டி யிரக்கமபுரிந்து கூடினவப்பேயெல்லாவற்றையுந் தீயெரிநரகிற்புதைத்துத் தள்ளியோட்டுவாயென்று வினிதிளங்கதிரைவீசும் பூமுகத்தவதரித்து நின்றதேவகுழந்தையை வேண்டினானென்க.

61. மீன்முகத்துணர்காட்சியின்மேன்மையா
னூன்முகததிலோராண்டுரையாதபின்
கான்முகத்தலர்வாய்கனிவிண்டுரை
வான்முகத்தமுதூறிவழங்கினான்.

உரை.— சூசை வேண்டினதற்குத் திருக்குமாரன் தான் மீனினும் விளங்கி யுணாவெலாங்கடந்த காட்சியின்மேன்மையையுடையவனாயினுமவதரித்தெடுத்த வுடலின்வகையா லறியாதமற்றக்குழந்தைகளைப்போல வந்நாள்மட்டுந் தான்பிறந்தொருவருடமாகி யொன்றும்பேசாதிருந்தான். அன்றேயென்னில் வாசம்பொழிந்து மலர்ந்ததாமரைவாயா லினிதாய் வானுலகுள்ள தேவாமிர்தத்தை யூற்றதாகக்கொப்பளித்து மழலைச்சொற்களைவழங்கத் துடங்கினானென்க.

62. மின்னித்தாரகைநோக்கெனவெண்மலர்
துன்னித்தாங்கியசூசையைநோக்கினன்
கன்னித்தாய்கமலக்கரத்தாசனத்
துன்னித்தானினிதெந்தையென்றோதினன்.

உரை.— திருக்குமாரனெங்ஙனம் பேசத்துடங்கினனென்னில், இ ட்டப்பூங்கொடியேந்தினின்றசூசையை வான்மீன் மின்னிப் பார்த்தா ற்போல நோக்கிக் கன்னியாயிருந்து தன்னை யீன்றதாயின் தாமரைக்கை யாகிய வாசனத்தெழுந்தருளிக் கருத்துடன் தானவனை அப்பாவென்று ரென்க.

63. சிந்தைநீடெழச்சீர்த்திவைகேட்டனன்
முந்தைநீயுளமூவுலகிற்கெலாந்
தந்தைநீதனிக்கன்னிதனையனீ
யெந்தைநீயெனையென்றனையோவென்றான்.

உரை.— தானுள்ளே மிகமகிழும்படி திருக்குமாரன்சொன்ன வார் த்தையைக்கேட்டசூசை வெருவினாற்போல வதிசயித்து மறுமொழிசொ ல்வான்; என்னாண்டவனே யெல்லாப்பிதாக்களுக்கு முந்தினபிதாவுநீயே, உலகமூன்றினையு முளவாக்கினதகப்பனுநீயே, அவதரித்துமணிதனாயின விடத்தும் புருடனுதவியின்றிக் கன்னிமாறுததாயின் பிள்ளையுநீயே, நீயித்தன்மைத்தாகையி லென்னை அப்பாவென்றாயோ வென்றனெ ன்க.

64. அருளின்மாகடன்மூழ்கவருந்தவன்
மருளின்மாகடன்மூழ்கியமண்ணைகள்
வெருளின்மாகடன்மூழ்கிவிழுந்தெரி
யிருளின்மாகடன்மூழ்கினவென்னவே.

உரை.— அங்ஙன மருந்தவனாகியசூசை யினிதா யருளின் கடலில் முழுகி மகிழா நிற்கத் திருக்குமாரனுச்சரித்த அவ்வொருசொல்லின் வல்லமையால் மயங்கினபேயெலாம் வெருவி விழுந் துருண்டு தீயெரி யிருணிலமாகிய நரகத்தில் துன்பக்கடலின் முழுகியமிழ்ந்தினவெ ன்க.

65. கெலிப்படக்கனியெந்தைகிளைத்தசொற்
கலிப்படக்கலங்கிக்கடியீட்டமே
வலிப்படக்கனங்காலிடிமானவார்ப்
பொலிப்படக்கனலூடுறவீழ்ந்ததே.

உரை.— அங்ஙனஞ் செயங்கொள்ளும்படியினிதா யவதரித்தநாத னுச்சரித்தவொருசொல்லின் சத்தமே பட்டதன்மையாற் பேயெலாங் கலங்கி மேகத்தினின்று முழங்கிவிழுமிடிகளைப்போல மிகவுமார்த்துக்க தறித் தீயெரிநரகினுள்ளேவிழுந்தனவென்க.

# சந்தங்களின்

## அட்டவணை.



| பக்கம். | விருத்தம். | |
|---|---|---|
| 40 | 91 | காய், காய், தேமா, காய். |
| 42 | 98 | விளம், விளம், மா, கூவிளம்.<br>விளம், விளம், விளங்கனி. |
| 43 | 110 | விளம், மா, தேமா, விளம், மா, தேமா. |
| 49 | 123 | கருவிளம், கருவிளம், கருவிளம், கருவிளம்.<br>† (இடைமடக்கு.) |
| 50 | 126 | விளம், விளம், மா, கூவிளம்.<br>விளம், விளம், விளங்கனி. |
| 50 | 129 | மாங்காய், தேமா, மாங்காய், தேமா, மாங்காய், தேமா, புளிமா. |

---

## 15-வது. சோசுவன்வெற்றிப்படலம்.

| | | |
|---|---|---|
| 55 | 1 | காய், காய், காய், காய். |
| 57 | 8 | மா, மா, காய், மா, மா, காய். |
| 60 | 19 | மாங்கனி, கூவிளம், கூவிளங்காய்.<br>மா, புளிமா, புளிமா, புளிமா. |
| 65 | 41 | விளம், மா, தேமா, விளம், மா, தேமா. |
| 70 | 57 | விளம், கூவிளம், கூவிளம், கூவிளங்காய்.<br>கூவிளங்காய், புளிமா, புளிமா, புளிமா. |
| 74 | 73 | கருவிளம், கருவிளம், புளிமா, கூவிளம், கருவிளம், கருவிளம், புளிமா, கூவிளம்.<br>தனதன, தனதன, தனன, தானன, தனதன, தனதன, தனன, தானன. |
| 78 | 82 | விளம், மா, தேமா, விளம், மா, தேமா. |
| 80 | 90 | மா, கூவிளங்காய், மா, கூவிளங்காய், மா, கூவிளங்காய், விளம். |
| 83 | 99 | விளம், கூவிளம், கூவிளம், கூவிளம், விளம், கூவிளங்காய். |

† அந்தந்த விருத்தத்துக் கடைசியடியினுலாஞ்சீர் புளிமாவென்றறிக.

| பக்கம். | விருத்தம். | |
|---|---|---|
| 86 | 109 | கருவிளம், புளிமா, தேமா, கருவிளம், கருவிளம், புளிமா, தேமா, கருவிளம். |
| | | தனதன, தனத்த, தான, தனதன, தனதன, தனத்த, தான, தனதன. |
| 88 | 114 | புளிமாங்காய், கருவிளங்காய், புளிமாங்காய், கருவிளங்காய், புளிமாங்காய், புளிமா, புளிமா. |
| | | தனதான, தனதனன, தனதான, தனதனன, தனதான, தனன, தனனு. |
| | | புளிமாங்காய், கருவிளங்காய், புளிமாங்காய், கருவிளங்காய், புளிமாங்காய், கருவிளங்கனி. |
| | | தனதான, தனதனன, தனதான, தனதனன, தனதான, தனததந்தன. |
| 90 | 119 | விளங்காய், கூவிளங்காய், விளங்காய், கூவிளங்காய், விளங்காய், கூவிளங்காய், தேமா. |
| | | விளங்காய், கூவிளங்காய், விளங்காய் கூவிளங்காய், விளங்காய், தேமா, புளிமாங்காய். |
| 95 | 131 | விளம், விளம், மா கூவிளம். |
| | | விளம், விளம், விளங்கனி. |
| 97 | 142 | மாங்கனி, புளிமாங்கனி, புளிமாங்கனி, புளிமா. |
| 100 | 151 | தனததந்தன, தனததந்தன, தனததந்தன, தனதனு. |
| | | கருவிளங்கனி, கருவிளங்கனி, கருவிளங்கனி, கருவிளம். |
| | | புளிமா, கூவிளம், புளிமா, கூவிளம், புளிமா, கூவிளம், கருவிளம். |
| 102 | 158 | புளிமா, கூவிளம், கருவிளம், கருவிளம், புளிமா, கூவிளம், கருவிளம், கருவிளம். |
| | | கருவிளங்கனி, கருவிளம், கருவிளம், கருவிளங்கனி, கருவிளம், கருவிளம். |
| | | தனததந்தன, தனதன, தனதன, தனததந்தன, தனதன, தனதன. |

| பக்கம். | விருத்தம். | |
|---|---|---|
| 106 | 168 | விளம், கருவிளம், விளம், கருவிளம். |
| 108 | 179 | விளம், மா, தேமா, விளம், மா, தேமா. |
| 110 | 183 | கருவிளம், கருவிளங்காய், கருவிளம்,கருவிளங்காய். |
| | | தனதன, தனதனனு, தனதன, தனதனனு. |
| 111 | 186 | விளம், மா, தேமா, விளம், மா, தேமா. |

16-வது. சேனையோன்வெற்றிப்படலம்.

| | | |
|---|---|---|
| 114 | 8 | விளங்கனி, விளம், விளம், மா, மா, கூவிளம், விளம், விளம், மா. |
| 116 | 16 | மாங்கனி, கூவிளம், கூவிளம், தேமா, தேமா. மாங்கனி, கூவிளம், கூவிளம், கூவிளங்காய். மாங்கனி, கூவிளங்காய், புளிமாங்காய், தேமா. மா, புளிமா, புளிமா, புளிமாங்காய், தேமா. |
| 119 | 24 | விளம், விளம், மா, கூவிளம், விளம், விளம், விளங்கனி. |
| 120 | 30 | மா, கூவிளங்காய், மா, கூவிளங்காய், மா, கூவிளங்காய், விளம். |
| 123 | 39 | விளம், மா, தேமா, விளம் மா, தேமா. |
| 127 | 52 | மா, காய், மா, மா, காய். |

17-வது. காசைசேர்படலம்.

| | | |
|---|---|---|
| 130 | 1 | விளம், விளம், மா, கூவிளம், விளம், விளம், விளங்கனி. |
| 133 | 13 | விளம், மா, தேமா, விளம், மா, தேமா. |
| 137 | 27 | காய், காய், மா, மா, காய். |
| 141 | 40 | மா, கூவிளம், கூவிளம், கூவிளம், விளங்கனி, கூவிளம், கூவிளம். |

| பக்கம். | விருத்தம். | |
|---|---|---|
| | | 18–வது. சீனயிமாமலைகாண்படலம். |
| 145 | 1 | விளம், விளம், மா, கூவிளம், விளம், விளம், விளங்கனி. |
| 148 | 13 | காய், காய், மா, மா, காய். |
| 151 | 24 | விளம், மா, தேமா, விளம், மா, தேமா. |
| 154 | 34 | விளம், மா, விளம், மா, விளம், விளம், மா. |
| 157 | 43 | மா, கூவிளம், கூவிளம், கூவிளம், விளங்கனி, கூவிளம், கூவிளம். |
| | | 19–வது. பாலைபுகுபடலம். |
| 162 | 1 | விளம், புளிமாங்காய், விளம் புளிமாங்காய், விளங்கனி, தேமா, விளங்கனி, தேமா. |
| 163 | 6 | விளம், மா, தேமா, விளம், மா, தேமா. |
| 167 | 18 | வெண்பாப்போல வந்தவிருத்தம். (இடைமடக்கு.) |
| 167 | 21 | விளம், கருவிளம், கருவிளம், மா, தேமா, விளம், கருவிளம், கருவிளம், கருவிளம், விளங்காய். |
| 169 | 26 | மா, மா, காய், மா, மா, காய். |
| 172 | 36 | விளம், விளம் மா, கூவிளம், விளம், விளம், விளங்கனி. |
| | | 20–வது. சித்திரக்கூடப்படலம். |
| 177 | 11 | மா, காய், மா, மா, காய். |
| 179 | 18 | காய், காய், மா, தேமா, காய். |
| 183 | 30 | விளம், மா, தேமா, விளம், மா, தேமா. |

| பக்கம். | விருத்தம். | |
|---|---|---|
| 190 | 55 | மா, காய், காய், காய். |
| 193 | 66 | விளம், மா, விளம், மா, விளம், விளம், மா. |
| 199 | 82 | மா, கூவிளம், கூவிளம், கூவிளம், விளங்கனி, கூவிளம், கூவிளம். |
| 203 | 97 | விளம், மா, தேமா, விளம், மா, தேமா. |
| 209 | 120 | விளம், விளம் மா, கூவிளம், விளம், விளம், விளங்கனி. |

21–வது. நீர்வரமடைந்தபடலம்.

| | | |
|---|---|---|
| 214 | 1 | விளம், மா, தேமா, விளம், மா, தேமா. |
| 218 | 14 | மா, கூவிளக்காய், கூவிளம், தேமா, விளங்காய், புளிமா, புளிமாங்காய். |
| 220 | 24 | மாங்கனி, புளிமாங்கனி, புளிமாங்கனி, புளிமா |
| 223 | 35 | மா, கூவிளம், கூவிளம், கூவிளம், விளங்கனி, கூவிளம், கூவிளம். |

22–வது. எசித்துசேர்படலம்.

| | | |
|---|---|---|
| 224 | 1 | மா, கூவிளங்காய், கூவிளம், தேமா, மா, கூவி ளங்காய், கூவிளம், தேமா. |
| 225 | 4 | மாங்கனி, கூவிளம், கூவிளங்காய், மா, புளிமா, புளிமா, புளிமா. |
| 227 | 12 | விளம், மா, தேமா, விளம், மா. தேமா. |
| 230 | 24 | விளம், விளம், மா, கூவிளம், விளம், விளம், விளங்கனி. |

23–வது. குணுங்குமந்திரப்படலம்.

| | | |
|---|---|---|
| 234 | 1 | மா, மா, காய், மா, மா, காய். |
| 237 | 10 | விளம், மா, தேமா, விளம் மா, தேமா. |

| பக்கம். | விருத்தம். | |
|---|---|---|
| 240 | 22 | தேமா, தேமா, கூவிளம், தேமா, புளிமாங்காய். |
| 242 | 30 | மா, கூவிளம், கூவிளம், கூவிளம், விளங்கனி, கூவிளம், கூவிளம். |
| 246 | 43 | விளங்காய், கூவிளங்காய், கூவிளங்காய், தேமா. |
| 248 | 54 | விளம், மா, தேமா, விளம், மா, தேமா. |
| 253 | 70 | காய், காய், காய், காய். |
| 256 | 80 | மா, கூவிளம், விளம், விளம், மா, விளங்கனி, விளம், விளம், மா. |
| 261 | 98 | விளம், மா, விளம், மா, விளம், விளம், மா. |
| 266 | 113 | விளம், விளம், மா. கூவிளம், விளம், விளம், விளங்கனி. |

24-வது. சோகுதோர்வைப்படலம்.

| | | |
|---|---|---|
| 270 | 1 | விளம், மா, தேமா, விளம், மா, தேமா. |
| 273 | 12 | விளம், விளம், மா, கூவிளம், விளம், விளம், விளங்கனி. |
| 276 | 22 | விளம், மா, தேமா, விளம், மா, தேமா. |
| 276 | 24 | மாங்கனி, கூவிளம், கூவிளங்காய், மாங்கனி, கூவிளம், கூவிளங்காய். |
| 279 | 31 | கருவிளம், புளிமா, தேமா, கருவிளம், கருவிளம், புளிமா, தேமா, கருவிளம். |
| | | தனதன, தனத்த, தான, தனதன, தனதன, தனத்த, தான, தனதன. |
| | | கருவிளங்காய், தேமா, தேமா, கருவிளம், கருவிளங்காய், தேமா, கதமா, கருவிளம். |
| 281 | 38 | புளிமா, கருவிளம், புளிமா, கருவிளம், புளிமா, கருவிளம், கருவிளம். |
| | | தனன, தனதன, தனன, தனதன, தனன, தனதன, தனதன. |

| பக்கம். | விருத்தம். | |
|---|---|---|
| 283 | 44 | விளம், விளம், மா, கூவிளம், விளம், விளம், விளங்கனி. |
| 286 | 56 | மா, கூவிளம், கூவிளம், கூவிளம், விளங்கனி, கூவிளம், கூவிளம். |

---

விவரம். இவ்வட்டவணையிற் குறித்திருக்கிற குறிப்புகளுமன்றி யிக்காப்பியத்தில் மற்றவையுமுண்டு. உதாரணம்: சோசுவன் வெற்றிப்படலம்–91–ம் விருத்தம்.

தனதனந்ததன, தனதனந்ததன, தனதனந்ததன, தனதன.



66. எல்லின்மாரியுமேந்தியவான்புகழ்ச்
சொல்லின்மாரியுந்தூய்மலர்மாரிஞ்
செல்லின்மாரியின்வானவர்சிந்தலின்
வில்லின்மாரியினுதன்விளம்பினுன்.

உரை—. அங்ஙனந் தோர்த்தபேய்கள் நரகில்விழுந்தவளவிலே ஆகாயத்தெங்கும்நின்றவானவரொளியின்மாரியும்உயர்ந்தபுகழ்ச்சியுரைத்த சொல்லின்மாரியும்மதுமலர்மாரியும் மேகங்கள் பொழியுமாரியைப்போல வழங்கத் தூவிவருகையில் மீளவுந்திருக்குமாரன் சூசையைநோக்கி மாரியாகமுகத்திற்கதிரைவீசிச் சொல்வானென்க.

67· எந்தைநீதவத்தேந்தியவில்லினு
னிந்தையாய்வெறிவென்றனைநின்பெயர்ச்
சிந்தையாலவையாவருஞ்சீக்கவும்
வந்தையாய்வரமேவகுத்தேனென்றான்.

உரை.— திருக்குமார னெங்ஙனஞ்சொன்னுனென்னில், என்பிதாவே நீயுன் தவத்தின்வில்லாற் பேய்களெல்லாவற்றையும் நிந்தைபடுத்தி வென்றாயே, ஆகையா லினிமற்றமனிதரு முன்பெயரையவணக்கத்தோடு நினைத்தமாத்திரத்தி லப்பேய்களைக்கெடுத்து வெல்லும்படி பெருமைபெறவுனக்குவரந்தந்தேனென்றானென்க. (தன்னைவளர்த்தவனுகையி லென்பிதாவென்றானென்க.)

68. என்றநாதனையேந்திவியப்புளத்
தொன்றநீடுதுதிப்பவுணர்வெலாங்
குன்றவாசியைக்கூறினன்கூளியை
வென்றமாதவத்தாண்மையின்வீரனே.

உரை.— அவ்வரந்தந் தவற்றைச்சொன்னநாதனை மிகவும்வணங்கியுளத்திலதிசயித்து நெடியதுதிகளைச்சொலி நமதுணர்வெல்லாவற்றையுங்கடந்தமுறையி லவனைப்புகழ்ந்தான் பேய்களைவென்ற தவத்தினுண்மையிற் சிறந்தவீரனுகிய சூசைமாமுனியென்க.

சோகுதோர்வைப்படலம் முற்றும்.

ஆகப்படலம் – 24 – க்கு விருத்தம்

2194.

தேம்பாவணி 2–ங் காண்டம் முற்றிற்று.



# பொருளட்டவணை.





